ஸ்ரீ:

# வள்ளுவருள்ளம்






ஆக்கியோர்

ரா. கேசவ அய்யங்கார், M.A., B.L.,

இந்திய உவரிநீதிமன்ற

முது வழக்கறிஞர்



தபால்கூலி வேறு] [விலை. ரூ. 40/-

ஶ்ரீ:

## வள்ளுவருள்ளம் பொருள் நிரல்

பக்கம்

### முதலத்தியாயம் 1

பக்கம்

பக்கம்

பக்கம்

சுபம்

## வள்ளுவருள்ளத்தில் மேற் கோளாக எடுத்துள்ள ஆசிரியர்களின் அகராதி.

## வள்ளுவருள்ளத்தில் மேற்கோளாகக் கொண்ட நூல்கள்

த



தா



தி



தூ



தெ



தே



தை

பி



பு



பூ



பெ



பே



பொ

---

ஶ்ரீ :

# முன்னுரை

திருவள்ளுவரைப்பற்றிக் கட்டுரை ஒன்று எழுத வேண்டும் என்ற அவா சில ஆண்டுகட்குமுன் எழுந்தது. பின்னர் அது ஒருநூலாயிருத்தல் சிறக்கும் என்று கருதி இது நூற்கப்பெற்று அச்சிட்டு வெளியிடப் பட்டுள்ளது.

திருக்குறள் சூத்திரம் போன்றது: ''கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக், குறுகத் தறித்த குறள்'' என்று இடைக்காடர் பாடல் காட்டித்தந்தது. இங்குச் கடல் என்றது பனுவற் பொருளை என்க. பனுவற்றுணிவு என்று திருவள்ளுவர்தாமே கூறியுள்ளார். ''மிருதி யாரிடம் பனுவல் தந்திரம்'' என்று நிகண்டு படித்தது. மிருதி என்பது ஸ்ம்ருதி என்னும் ஆரியத்தின் தமிழ் வடிவம். இருடிகள் தாம் கண்ட வேதத்தை நினைத்து (ஸ்மரித்து)ப் பணித்தது ஸ்ம்ருதி (மிருதி) என்னப்படும். அந்த ஸ்ம்ருதி(மிருநி) பனுவல் என்றும் அதன் துணிவு பனுவல் துணிவு என்றும் கூறப்படும். அவ்வாறே ஆரிடம் என்பது ஆர்ஷம் என்னும் ஆரியத்தின் தமிழ் வடிவம். ருஷி(இருடி) பணித்தது ஆர்ஷம் (ஆரிடம்) என்னப்படும். அந்த ஆரிடம் பனுவல் என்றும் அதன் துணிவு பனுவல் துணிவு என்றும் கூறப்படும். இருடிகள் பணித்த ஆரிடத்(பனுவல்) துணிவே திருக்குறள் துணிவு என்ற உண்மையைத் திருக்குறள்தானே காட்டித் தந்தது. இருடிகள் பணித்த பனுவல்களுள்ளும் பேரிருடிகளாகிய வான்மீகி முனிவர் பணித்த சரணாகதி வேதமாகிய இராமாயணமும் வியாசமுனிவர் பணித்த ஐந்தாம் வேதமாகிய பாரதமும் திருவள்ளுவர் சிறப்பாக மேற்கொண்ட திருப்பனுவல்களாம். இவ்வுண்மை இந்நூலுள் பொதுவாக எல்லா அத்தியாயங்களுள்ளும் ஆங்காங்கும் சிறப்பாக நாற்பத்தைந்தாம் அத்தியாயத் துள்ளும் விளக்கப்பட்டுள்ளது. ஆதலின் இராமாயணம் பாரதம் முதலிய முந்துநூல்கள் கொண்டுதான் திருக் குறளின் மெய்ப்பொருள் அறிதற்காகும். முன்னூல்கள் எதற்காக மேற்கோள்கள் எதற்காக தாமே தமது

அறிவைக் கொண்டு குறட்பொருளை அறிந்து கொள் வதற்காகும் என்று கூறுதல் தகாது. முன்னூற்சான்று கொண்டே முன்னோர் நூற்பொருளை அறிய வேண்டும் என்பது சான்றோர் முறை. அது தான் உரிய சீரிய முறை. முடவன் நடைகொண்டாற்போல் தாந்தோன்றி களாய் முன்னூற்பொருள் கூறுதல் தகாது என்பது ஆன்றோர் கோட்பாடு. அஃதே திருவள்ளுவர் கோட் பாடு. அக்கோட்பாட்டை மேற்கொண்டு மும்மொழி மேற்கோள்கள் பல இந்நூலுள் எடுத்துக் காட்டித் திரு வள்ளுவருள்ளம் விளக்கி உரைக்கப் பட்டுள்ளது. அவை அனைத்தையும் திருக்குறள் வேண்டி நிற்றலைத் திருக் குறள் தானே காட்டி நின்றது. ஆரியப் பயிற்சி யில்லாதார் இடர்ப் படாமைக்கு ஆரிய சுலோகங்கள் பெரும்பாலும் தமிழ்ச் செய்யுட்களாக ஆக்கப்பட்டும் தமிழ் செய்தது என்று காட்டப்பட்டும் உள்ளன. பிராகிருத சுலோகங்களும் அவ்வாறே தமிழ் செய்யப் பட்டுள்ளன. அவை கூறும் பொருளைத் திருக்குறள் உட்கொண்டுள்ள உண்மைக்குத் திருக்குறளே சான்றாம். அவையின்றி அதன் உரிய பொருள் அறிதற்கு இயலாது என்ற உண்மையை அவைகள் நன்கு காட்டித்தரும்.

''நாண்பெரியோ மல்லோம் நாம் நன்றும் தீதும், நமக்குரைப்பார் உளரென்று நாடுவோமே'' என்று வேதாந்ததேசிகர் அருளிச் செய்ததை உபதேசமாகக் கொண்டு ''புல்லாணித் தென்னன் தமிழை வட மொழியை'' என்று மங்கையர் கோனுக்குத் திவ்விய திருக்காட்சி யருளிய தெய்வச்சிலைக் கருணாகரப் பெருமான் கொண்டருளும் குற்றேவல் என்று இது நூற்கலாயிற்று.

சுபம்

*ரா. கேசவ அய்யங்கார்*

*62 தெள்ளிய சிங்கப் பெருமாள் கோயில் தெரு:*
*திருவல்லிக்கேணி மதறாஸ் 5.*
*ரக்தாக்ஷி வருஷம்*
*திரு ஆடிப்பூர நன்னாள்*
*31-7-1984*

ஶ்ரீ:

# வள்ளுவருள்ளம்

## முதலத்தியாயம்

### வாழ்த்து

ஆன்றதூ மறையி னுச்சி யாதரித் தோது மாதி
தான்திரு நார ணன்பேர் தானவன் தான்ம றுத்த
நான்றுடன் மடிய ரக்கர் நாத்திகம் பாற்றி மெய்யே
தோன்றுதூ ணப்ப னேயுன் துணையடி போற்றி போற்றி.

மாமலர்க் கோயில் மங்கை மகிழ்ந்துறை மார்பன் செந்தாள்
தூமலர் முடியிற் சூடித் துயர்களற் றுயிர்க ளுய்ய
ஆமுத லருளின் தோற்றத் தாயதாய் மறைப கர்ந்த
நாமுதற் குருகை நாதன் நலங்கழல் வணங்கு வாமே. 2

வேத மென்பன வெவ்வெவை யுள்ளவோ
ஆதி யவ்வவைக் காந்திரு வாய்மொழி
சோதி வாய்திறந் தோதிய மாறனும்
போத நாயகன் பொன்னடி போற்றுவாம். 3

தால மீரடி யாலளந் தாரருள்
நீல மேக நெடுந்தகை யாந்திரு
மாலின் மங்கல மாணடி சேர்மகிழ்
மாலை மன்னன் மலர்ப்பதம் மன்னுவாம். 4

அருமறை யாமறி வாதி மாமொழி
நிரனிறை யாயிரங் கிளைக ணீளறம்
தரைமிசை நாறுபொற் கற்பகந் தரும்
குருமகிழ் மாறன்பல் லாண்டு கூறுவாம். 5

எண்ணெனுந் துறைகள் மேலு மெண்ணினிற் பெருக்கு
மின்பப்
பண்ணெனும் பகவர் வேதப் பசுந்தமிழ் பகர்ந்த மாறன்
எண்ணெழுந் தோற்ற மேவு மெழினலம் பொலியக்
காண்பார்
விண்ணெனும் பதியு ளோரின் சீரியர் விளங்கு வாரே. 6

மூலப்பர முதலென்றிடு மோலக்கரி மடுவில்
காலப்பர விறை தோன்றிடு காவற்பர விரைவின்
கோலப்பர னடியார்குல பதியாய்வரு பொருநற்
கூலப்பர னெழிலற்புத குணநற்கழல் தொழுவாம். 7

நகர்காட்டு துறை மாறன் மறைகாட்டு திருவிண்
ணிகர்காட்டு நெடியோனங் கிரிகாட்டு மதியம்
பகர்காட்டு மணிசோலை மலிதூப்புல் வருதே
சிகர்காட்டு திருமாற னருள்காக்கும் நிலையே. 8

கந்தரங் குலவு மம்பூங் காவளங் கிளருந் தூப்புல்
வந்துவேங் கடவன் சந்தம் மிகுதமிழ் மறையோ னன்று
முந்தையொண் கிளையின் சுத்த முத்தமிழ் புரந்த
மெய்யன்
எந்தைவே தாந்த தேசி கேசன்தா ளேத்து வாமே. 9

ஆயதன் னுலகு மாயோ னளந்தருள் வளர்ந்த வாய்மை
தாயுமாய்ச் சேயு மாகித் தானுமாய்த் தமரு கந்த
தூயமும் மொழிகொள் வேதத் துணிபொருள் சுவைத்த
செவ்வாய்
பாயமு தளித்த தூப்புற் பரனடி வணக்கம் செய்வாம். 10

மாதவன் கோயில்கொள் மாமன நாவன்
பாதுக வாயிரம் பாடிய வாயன்
சாதுகு ழாம்புகழ் சாற்றுயர் நாமன்
ஓதிரு வேதமு டிக்குரு நாதன். 11

நாரணன் தாட்சர ஞுகதி யொன்றே
தாரணி உய்வணந் தானது வென்றே
ஆரண வள்ளல் முழங்கி வழங்கிப்
பேரணி வேங்கட மோங்கிட நின்ருன் 12

தனுவரக் கரனெரு தனியறத் தனுவினிற்
கனைகழற் றனையடைக் கலமடை பவர்முனை
வினையறுத் தருடரும் விரதநல் லடியின் பேர்
புனையறத் தநுமனும் புனிதனைப் பரவுவாம். 13

மூலமெ னும்பர மூர்த்தியிருங்
கோலவ ராககு ருப்பரனுய்
ஞாலமு யர்த்திய நாயகனற்
பாலருள் வான்புகழ் பாடுவமே. 14

முனைவனுய்ப் புவன மேனி முகில்வனுய்ப் பரவை நீரில்
நினைவனு யமிழ்ந்த நேமி நிமிர்வனு யெடுத்து கந்து
புனைவனுய்ப் புவன முய்யப் புரிவனு யருண லண்ணல்
மனைவனு யிதமு ரைத்தான் மலரடி மனத்துவைப்பாம்.

மாணப்பழ மறைமுன்னறை யிறைமன்னெழில்
பொலியக்
காணப்புவி யொருதானுடை யிருமானுட வரிமா
பேணெப்பொரு திருநின்றருள் தரவேவரு பெருமான்
தூணப்பன திணைமாணடி துணையாம்படி துணிவாம்.

ஆலமர் வித்தின ருங்குற ளாய
நீலநி றத்துநெ டுந்தகை யண்ணல்
நாலென நின்றந லந்திகழ் வேத
வாலறி வாதிய ளந்துல காண்டான். 17

எண்ணலப் பெருக்கில் வெற்றி யெழுஞ்செழு மறைகள்
போற்றப்
பண்ணலக் குயிலின் கீதப் பகவர்மெய்ப் புகழ்கள் பாடக்
கண்ணலங் கவரு மேனிக் கருணையங் கடலின் வண்ணத்
தண்ணலங் கிரியு லோக மளந்தருள் சுரந்த தோர்வாம்,

கற்பாரி ராமபிரா ஞர்கருணைக் கழலேயலால்
கற்பாரோ மற்றெதுவும் மெய்யிறைமை காண்பவர்கள்
புற்பாவோ டுளயாவும் வாசியறப் புல்முதலா
நற்பாலுக் குய்த்தருள்தா னல்குதிரு நாயகனே. 19

ஆதாரக னகிலம்பரி யகரம்பகர் பகவன்
பூதாவிய பரிவண்புகழ் புரியங்கிரி விமலன்
மாதாபிது வுயிர்கட்கொரு தானய்வரு பெருமான்
சீதாபதி யபயந்தரு மிருதாட்சர ணடைவாம். 20

ஏரி காத்தவி ராமனெ னும்பெயர்
பாரி லோங்கிடு மாறய ஞட்டதி
காரி காணுறு கார்முகி லாரருட்
பேரி ராமபி ரானையி றைஞ்சுவாம். 21

பாங்கவன் வரிகொள் செங்கற் பட்டுமா வட்டு வந்தாற்
காங்குளங் கவரு மத்தன் ஞண்டருண் மேனி காட்டி
ஓங்குசொல் லேரி காத்த வுத்தம நாமத் தண்ணல்
தாங்குவில் லிறையின் வண்ணத் தண்ணளி பொலிகின்
றனே.

ஊதிக்குழல் விழைகோவிய ருளமன்னெழில் பொழிவான்
ஓதிக்கழ லடைவாருயு முயிர்வாழருள் புரிவான்
கீதைக்குரு வுருவத்தொரு கிருபைப்பெயர் தெரிவான்
சோதிக்கரு முகிலின்னளி தெளியொண்கழல் தொழுவாம்

மாமறை நூலவை மாசறவாய்ந்
தாமறை கூறற மேயறையுந்
தூமன வள்ளுவ னுள்ளுபொருள்
வாமன னீளருள் தாள் நலமே. 24

எள்ளள வும்மறை யேவல் வழா
வள்ளுவ னுள்ளம றிவரிதென்
றுள்ளிய வன்குறள் கூறுபொருள்
தெள்ளிய வைதிகர்க் கெண்ணுதலாம், 25

அன்றது வென்ருெரு சாரரவர்
இன்றுவெ குண்டறை கின்றதிழுக்
கென்றறிகி ன்றில ரேதமறுத்
தொன்றிதி யாந்தரு மொண்பொருளே, 26

உய்வகையெவ் வுயிர்கட்கு முறுதன்ருட் பற்றுதலும்
மெய்விரதந் தனக்கவரைப் பேணியுயிர் காத்தலுமென்
றெய்வரிவில் லிறையருளி லியம்பியவப் பெருந்தவமே
உய்வணமொன் றென்றறையுங் குறளுறுதி காண்பாமே.

கருணு கரநாம னலங் கழல்சேர்
சரணு கதிநாம மறைச் சரதம்
அரணு கவறைந் தவருங் குறளின்
வருணு திவலந்த நலந் தெரிவாம். 28

ஆறலை யளக்க ராழு மாதுரர்க் குய்ய வேருேர்
ஆறிலை நிலம ளந்த வாதிதா ளாறு தானும்
பேறது சேர்மி னென்றே பேணுநான் மறைமு ழங்கும்
வீறது தேறும் வாழ்த்துக் குறணலம் விளம்பு வாமே.

கொள்ளவோர் குறைவி லாத குணக்கடல் கோதி
லாதார்
உள்ளுவார் காண்ப ரெல்லா முத்தம னுடைமை
யென்றே
தெள்ளிய மறைகள் போற்றுந் திருக்குற ளப்ப ணுதி
வள்ளல்தாள் வெற்றி போற்றி வள்ளுவன் விளங்கி
ஞனே. 30

மேதாவி யாமி தெமதோரு மேதை யறியத் தெரித்த
நெறியென்
ருதார வேத வறநன்றி கொன்ற வவர்கூற் றவங்க
ளிரியப்
பூதாவி யண்ண லடியாதி யோது புகலென் றறைந்த
புகழோன்
மாதாநு பங்கி யெனுநாம னேறு மதிநாறு வீறு
பொலிவான். 31

முத்தமிழ்த் துறையின் தூய்மை முதுமறை யறத்தின் வாய்மை
ஒத்தெழில் திகழ வேதப் பொருள்விரி குறளின் செவ்வி
எத்திற மென்று சான்ரே ரெண்ணியே போற்றுமேற்றம்
உத்தம னுலகளந்த திருவடி தொழுது ரைப்பாம். 32

---

ஆரிய மறையும் தமிழ்மறையும் என்றுமே ஒன்றிய வோர் திருமறையாய்த் திகழும் உண்மையைக் கண்டு இன்புற்ற பெருந்தகையாளர் தோன்றிப் பொலிந்த நன்னுடு தமிழ்நாடு. அது கண்ணிரண்டு காட்சியொன்று, செவியிரண்டு கேள்வியொன்று, கையிரண்டு அஞ்சலி யொன்று—என்னும் உண்மைபோன்றதோர் உண்மை. அவ்வாறே ஆரியம் தமிழ் என்னும் இரு மொழிகளும் என்றுமே ஒன்றி நிலவிவரும் திருமொழிகள். அவை மூல மூர்த்தியும் உற்சவமூர்த்தியும் போல் நிகழும் நிலையும் நடையும் கொண்டுள்ள திவ்விய செவ்விய நலங்கிளர் மொழிகள். நம் தமிழகத்து இருமறையும் இருமொழியும் ஒரு மறையாயும் ஒரு மொழியாயும் இரண்டற ஒன்றி நிலவும் நலத்தை இருந்தமிழிறைவரும் இரு மறைப்பகவருமாகிய முத்தமிழ் வள்ளல்களின் தெய்வத் திருப்பாடல்கள் கண்களில் தெரியக்காட்டித்தரும்

> ''வையந் தகளியா வார்கடலே நெய்யாக
> வெய்யகதிரோன் விளக்காகச்—செய்ய
> சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொல்மாலை
> இடராழி நீங்குகவே யென்று'' (முதற்றிருவந். 1)

என்று முதலாழ்வார்களுள் முதல்வராகிய பொய்கைப் பிரானுடைய முதற்பாடல் வையவிருள் தீர நடை கொண்ட சீரின் நலத்தைக் கண்டுணர்க. உலகளந்த உத்தமன் (இருள் தீர்த்தவன்) சேவடியும் பொய்கைப் பிரான் பாவடியும் வையவிருள் தீர நடந்தருளிய நீர் மையை ஒப்புநோக்குக. அது வாச்சிய நடை, இது அதற்கொத்த வாசக நடை. அது பூவடியின் நடை,

இது பாவடியின் நடை. இருநடையும் வையவிருள் தீர நடந்த நடை. ''திரண்ட மரர்தொழுதேத்தத்திரு மால் நின்செங்கமல இரண்டடியால் மூவுலகும் இருள் தீர நடந்தனையே'' (சிலப். மதுரை. ஆய்ச் 34) என்ற இளங்கோவடிகளின் தீங்கவியை இங்கு நோக்குக. இம் முதற்பாடலின் எடுப்பு ஒன்றே பொய்கைப்பிரான் ஞானத்தமிழ் விளக்கேற்றிய திருவருளின் வண்ணத்தையும் திருவுள்ளத்தின் வண்மையையும் திருமறைவாயார்வத்தையும் காட்டித்தரும். அத்திறப் பெருந்திருமனப் பெருமான் பொய்கைப்பிரான் என்று அறிக. ''அருள் மிகுத்த தொரு வடிவாய்க்கச்சிதன்னில், ஐப்பசிமாதத் திருவோணத்து நாளில், பொருள் மிகுத்த மறைவிளங்கப் புவியோருய்யப், பொய்கைதனில் வந்துதித்த புனிதா!'' (தேசிக: ப்ரபந்த 2) என்று வேதாந்த தேசிகர் போற்றி யுகந்து புந்தியிற் கொண்டு மகிழ்ந்தார். ''வருத்தும் புறவிருள் மாற்ற வெம்பொய்கைப் பிரான் மறையின், குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையுங்கூட்டி யொன்றத்திரித்தன்றெரித்ததிருவிளக்கு ''(இராமாநுச நூற். 8) என்று திருவரங்கத்தமுதனுர் போற்றிப் புகழ்ந்து பூரித்தார். உடலே உயிர் என்னும் மருளாகிய புறவிருளைப் பொய்கைப்பிரான் நீக்கியருளினுர் என்று பொருள். மருள் இருவகைத்து. உடலே உயிர் (தேஹமே ஆத்துமா) என்னும் மருள் ஒன்று. இதைத் தேஹாத்ம ப்ரமம் என்பர். மருள் எனினும் ப்ரமம் எனினும் ஒக்கும். தானே இறைவன் (சுதந்திரன்) என்னும் மருள் மற்றென்று. இதை ஸ்வதந்த்ராத்மப்ரமம் என்பர். கண் கொண்டு காணும் தூல உலகமாகிய புறப்பொருளைப் பற்றிய மருள் ஒன்று. அது புறவிருள் என்னப்பட்டது. ஆதலின் அதைப் பற்றிய தனது என்னும் பற்று புறப் பற்று என்னப்படும். கண்கொண்டு காண இயலாத உயிர்ப்பொருளாகிய அகப்பொருளை (அஹம்பதார்த் தத்தை)ப்பற்றிய மருள் மற்றென்று. அது அகவிருள் என்னப்பட்டது. ஆதலின் அதைப்பற்றிய தான் என்னும் பற்று அகப்பற்று என்னப்படும். தான் என்னும் இந்த

ஹிரணியன் —

சுதந்திராத்தும மருளாகிய அகவிருளை அடுத்துப் பாடி யருளிய பூதத்திருவடிகள் நீக்கினர். ''அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக, இன்புருகு சிந்தை இடுதிரியா— நன்புருகி, ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு, ஞானத்தமிழ் புரிந்த நான்'' (இரண்டாந்திருவந். 1). என்று பூதத்திருவடிகள் மெய்ஞ்ஞானத்தமிழ் விளக் கேற்றியருளினர். இது அகவிருள் தீர நடந்த திருப் பாடலின் நடை. இப்பொருளை—''இறைவனைக் காணு மிதயத்திருள் கெட ஞான மென்னும், நிறை விளக் கேற்றிய பூதத்திருவடி'' (இராமாநுச நூற் 9) என்று திருவரங்கத்தமுதனர் காட்டியருளினர். பூதத்திருவடிக ளின் இத் திருப்பாடலில் ஞானத்தமிழ் புரிந்த நான் என்ற விடத்து'' ஞானத்தமிழ் புரிந்த ஞான்'' என்று நகரம் ஞகர மாக விருத்தல் சிறக்கும். அஃதே பாடம் என்பது எமது கருத்து. மோனைச் சீருக்கும் அந்தாதித் தொடைக்கும் ஏற்றதாதலானும் பொருள் தெளியத் தோன்றுதலானும் ஞான் என்னும் பாடம் பெரிதும் சிறக்கும். ஞான என்னும் சீரை நோக்க ஞான் என்பது பெரிதும் மோனை நயமுடைத்தாதலால் மோனைச் சிறப்பு. அடுத்த பாடல் ''ஞானத்தால் நன்குணர்ந்து'' (இரண்டாந்திருவந்.2) என்று தொடங்குதலால் அந்தாதித் தொடைக்கு ஞான் என்னும் பாடம் பெரிதும் ஏற்கும். ஆதலின் ஞான் என்னும் பாடத்தின் யாப்பின் சிறப்பு நன்கு காணலாம். பாடற் பொருளை நோக்க ஞான் என்னும் பாடம் பின்னும் சிறக்கும். ஞான் (ஞ:) என்பது ஆரியம். அறிபவன் என்பது அதன் பொருள்: ''ஞோzத ஏவ'' (2.3.19) என்பது வியாச முனிவர் பணித்த பிரம சூத் திரம். ''ஆதலின் (உயிர்ப் பொருள்) அறிபவனே'' என்பது அதன் தமிழ். உயிர்ப்பொருளாகிய (அஹம்ப தார்த்தமாகிய) சீவாத்துமாவை ஞ: (அறிபவன்) என்று வியாச முனிவர் சித்தாந்தம் செய்தருளினர், 'அறிகின்ற வனே இவன் புருடன்'' (தமிழ் செய்தது) என்று வேதம் ஓதிற்று. அறிகின்றன் (ஜாநாதி) ஆதலால் ஞ: (ஞன்) என்பது இலக்கண முறை. ஆரியத்தில் ஞ: (ஞன்) என்று குறில். தமிழில் ஞான் என்று நெடில். மேற்கூறியபடி

அறிபவன் என்பது அதன் பொருள். ஞான்று நான்று போல் ஞான் நானும் ஞகர நகர பரியாயத்தால் என்பது காண்க. இதனுல் நான் என்பதும் ஞான் என்பதும் இருவடிவத்தொருபொருட்கிளவி என்று அறிக. பூதத்திருவடிகள் தம்மை "யானே, இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சொன்னேன், பெருந் தமிழன் நல்லேன் பெரிது" (இரண்டாந்திருவந்.74) என்று விளம்பினுர். பெருந்தமிழன் பெரிதும் நல்லேன் என்று பேரார்வப் பூரிப்பில் பாடியருளிய இவரது பெருமன வள்ளன்மைக்கு ஆட்படுக. இத்துணைப் பெருமனமில்லாதார் தமிழரல்லர், நல்லாரல்லர் என்பது அருத்தாபத்தியாற் பெறப்படும்.

புறவிருளும் அகவிருளும் பொய்கைப் புனிதரும் பூதத்திருவடிகளும் ஏற்றிய ஞானத்தமிழ்விளக்கால் நீங் கியவுடன் மூன்ருமவராகிய பேயாழ்வார் "திருக்கண் டேன்" என்று தாம் கண்களாரக் கண்ட இறைத்திருக் காட்சியைப் பாடத் தொடங்குகின்ருர். இருவர் திரு விளக்கேற்றிய தேவர். ஒருவர் திருக்கண்ட தேவர். இப் பொருளை "மன்னிய.பேரிருள் மாண்டபின் கோவலுள் மாமலராள், தன்னெடு மாயனைக்கண்டமை காட்டுந் தமிழ்த்தலைவன்" (இராமாநுச நூற். 10) என்று திரு வரங்கத்தமுதனுர் பாடியருளினுர். தேகாத்ம மருளாம் இருளை மன்னிய இருள் என்ருர். சுதந்திராத்ம மருளாம் இருளைப் பேரிருள் என்ருர். இவ்வீரிருளும் நீங்கியவுடன் தமிழ்த்தலைவராகிய பேயாழ்வார் இறைத்திருக்காட்சி அருளப்பெற்ருர்.

முதலாழ்வார்களாகிய இம்மூவரும் மும்மறையண் ணல்களாயும் முத்தமிழ் வள்ளல்களாயும்திகழும் சால்பை அவர்கள் பாடிய திருவந்தாதிகள் காட்டித்தரும், இவ் வாழ்வார் பெருமான்களின் பாட்டுக்கு உரிமையையும் பாட்டின் பெருமையையும்:—"பாட்டுக்குரிய பழைய வர் மூவரைப்பண்டொருகால், மாட்டுக் கருடரு

மாயன் மலிந்து வருத்துதலால், நாட்டுக்கிருள் செக நான்மறை யந்தி நடை வீளங்க, வீட்டுக் கிடைகழிக்கே வெளி காட்டுமிம் மெய்விளக்கே''. (தேசிக அதிகார 50) என்று வேதாந்தம் செகவிருள் தீரச்செந்தமிழ் நடை கொண்ட பேரெழிலே வேதாந்ததேசிகர் கண்டமை காட்டித்தந்தருளினர். அது இருமறையும் இருமொழி யும் ஒன்றென நிகழும் நன்றெழில் நான்மறைத்திருக் காட்சி. ''இருக்கலந்த வேதநீதியாகி நின்ற நின்மலா!'' (திருச்சந்த. 103) ''இருக்குவாய் முனிக்கணங்களேத்த நானுமேத்தினேன்'' (ஷை 109) ''விதையாக—நற்ற மிழை வித்தியென்னுள்ளத்தை நீ விளைத்தாய், கற்ற மொழியாகக் கலந்து'' (நான்முகன் 81) என்று மழிசை யர் கோனும், ''உடன்மிசை யுயிரெனக்கரந்தெங்கும் பரந்துளன் சுடர் மிகுசுருதியுள்'' (திருவாய் 1.1.7) ''மறையாய நால் வேதத்துண்ணின்ற மலர்ச்சுடரே'' (திருவாய். 3.1.10) ''மிக்கார் வேதவிமலர் விழுங்கு மென்னக்காரக்கனி'' (ஷை 2.9.8) ''வேதியர் முழுவேதத் தமுதம்'' (ஷை 3.3.5.) ''வேதமயன்'' (ஷை 2.7.2) ''வேதநீரன்'' (ஷை1.8.10) ''முதுவேதமுதல்வன்'' (ஷை 1.6.2) ''பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவுமா யிரம்' (ஷை1.5.11) என்று சடகோபரும் (நம்மாழ்வாரும்) ''அருளினனவ்வருமறையின் பொருள், அருள்கொண்டா யிரமின் தமிழ்ப்பாடினன், அருள்கண்டீரிவ் வுலகினில் மிக்கதே'' (கண்ணிநுண், 8) 'மிக்க வேதியர் வேதத்தினுட் பொருள் நிற்கப்பாடி யென்னெஞ்சுணிறுத்தினன்'' (ஷை 9) என்று மதுர கவியாழ்வாரும், ''தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கத் திருப்பதியின் மேல், மெய்ந்நாவன் மெய் யடியான் விட்டு சித்தன் விரித்த தமிழ்'' (பெரியாழ்வார் திருமொழி 4-9-11) ''நால்வேதக் கடலமுதை மேலி ருங் கற்பகத்தை வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தன'' (ஷை 4-3-11) ''இருக்கெசுச்சாமவேத நாண்மலர் கொண்டுனபாதம் நண்ணுநாளவைதத்துறுமாகில் அன்றெனக்கவை பட்

டினி நாளே'' (ஷை-5-1-6) ''தமிழ்மாலை தங்கிய நாவுடையார்'' (ஷை 4-7-11) என்று பெரியாழ்வாரும், ''ஆயரேற்றை அமரர்கள் தம் தலைவனை அந்தமிழினின்ப ப்பாவினை அவ்வடமொழியைப் பற்றற்றார்கள் பயிலரங் கத்தரவணையிற் பள்ளிகொள்ளுங் கோவினை'' (பெருமாள் திருமொழி 1.4)என்று குலசேகரப்பெருமாளும் ''செந் திறத்ததமிழோசை வடசொல்லாகி'' (திருநெடுந். 4) ''செந்தமிழும் வடகலையுந்திகழ்ந்த நாவர்'' (பெரிய திருமொழி (7-8-7)'' மன்னுமறைநான்குமானானைப் புல்லாணித் தென்னன் தமிழை வடமொழியை'' (பெரிய திருமடல் 72) ''செந்தமிழ் பாடுவார்'' (பெரிய திரு மொழி 2-8-2) என்று திருமங்கையாழ்வாரும் பாடியரு ளினார்கள். இப்பொருள்களைச் சேரப்பாடி யருளிய திரு வரங்கத்தமுதனார் பாடல்கள் சில வருமாறு:—

''சீரிய நான்மறைச் செம்பொருள் செந்தமிழாலளித்த பாரியலும் பொருள் பாண் பெருமாள்'' (இராமாநுச நூற். 11) ''செந்தமிழிற் பெய்யும் மறைத்தமிழ் மாலையும் பேராத சீரரங்கத்தய்யன் கழற்கணியும் பரன்'' (ஷை 13) ''குறையல்கலைப் பெருமான் ஒலிமிக்க பாடல்'' (ஷை 88) ''தென்குருகைப்பிரான் பாட்டென்னும் வேதப்பசுந்தமிழ'' (ஷை 29) என்பன. ''ஏற்றி மனத்தெழில் ஞானவிளக்கையிருளனைத் தும், மாற்றியவர்க்கொரு கைம்மாறு மாயனுங்காண கில்லான், போற்றியுகப்பதும் புந்தியிற் கொள்வதும் பொங்கு புகழ்ச்சாற்றி வளர்ப்பதுஞ் சற்றல்லவோ முன்னம் பெற்றதற்கே.''. (தேசிகமாலை. அதிகார. 38) ''அந்தமிலா வாரண நாலாகி நின்ற, அதன் கருத்தை ஆழ்வார்களாய்ந்தெடுத்துச், செந்தமிழாலருள் செய்த வகை தொகையுஞ், சிந்தாமலுலகங்கள் வாழ வென்று, சந்தமிகு தமிழ்மறையோன் தூப்புல் தோன்றும் வேதாந்தகுரு மொழிந்த ப்ரபந்த சாரம்'' (ஷை ப்ரபந்த. 18), ''அந்தமில் சீரயிந்தை நகரமர்ந்த

நாதன், அடியிணை மேலடியுரையாலம்ப தேத்திச், சிந்தைகவர் பிராகிருத நூறு கூறிச்; செந்தமிழ் மும்மணிக் கோவை செறியச் சேர்த்துப், பந்து கழலம்மானை யூச லேசல் பரவு நவமணி மாலை யிவையுஞ் சொன்னேன், முந்தைமறை மொய்யவழி மொழி நீ யென்று முந்த னருள் தந்தபயன் பெற்றேனனே'' (ஷை நவமணி 10) ''செய்ய தமிழ்மாலைகளுந் தெளிய வோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே'' (ஷை அதிகார. 1) ''துன்பற்ற மதுரகவி தோன்றக் காட்டுந்தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே,'' (ஷை ஷை 2.) ''அணி குருகை நகர்முனிவர் நாவுக்கமைந்தன'' (ஷை ஷை 51) ''பாவளருந்தமிழ் மறையின் பயனே கொண்ட பாண் பெருமாள் பாடியதோர் பாடல்பத்து'' (ஷை அமிர்தா 35) ''ஆதிமறையென வோங்கு மரங்கத்துள்ளே அருளாருங் கடலைக் கண்டவனென்பாணன், ஓதியதோரிரு நான்கு மிரண்டுமான ஒருபத்தும்...... வேதியர்தாம் விரித் துரைக்கும் விளைவுக்கெல்லாம் விதையாகுமிது வென்று விளம்பினோமே.'' (ஷை ஷை. 36) ''துய்ய தமிழிருபத்து நான்கிற் பாட்டின் தொகை நாலாயிரமுமடியோங்கள் வாழ்வே'' (ஷை ப்ரபந்த. 17) ''மந்திரமும் மந்திரத்தின் வழியுங்காட்டி வழிப்படுத்தி வானேற்றி யடிமை கொள்ளத், தந்தையென நின்ற தனித்திருமால் தாளில் தலை வைத்தோம் சடகோபனருளினாலே'' (ஷை அமிர்தா 28) என்று வேதாந்த தேசிகர் அருளிச் செய்தார்.

''தென் சொற்கடந்தான் வடசொற்கலைக்கெல்லை தேர்ந்தான்'' (இராமாவ. அயோத்தி நகர் நீங்கு 140) ''என்றுமுள தென்தமிழியம்பியிசை கொண்டான்'' ''வேதியர்கள் வேதமொழி வேறு பல கூறி'' (ஷை அகத் திய 47-48) ''ஓதியோதியுணருந்தொறு முணர்ச்சியுத வும் வேதம்'' (ஷை ஆரணிய 1) ''அவரென்பர் கைவிலேந்தி, இலங்கையிற் பொருதாரன்றே மறைகளுக் கிறுதியாவார்'' (ஷை சுந்தர 1) ''வேதங்களறைகின்ற

வுலகெங்கும் விரிந்தனவுன், பாதங்களிவையென்னிற் படி வங்கெளப்படியோ, ஓதங்கொள்கடலன்றி யொன்றினே டொன்ருெவ்வாப் பூதங்கடொறு முறைந்தாலவையுன் ஊனப் பொறுக்குமோ'' (ஷை ஆரணிய விராத. 48) ''ஓயாத மலரயனே முதலாகவுளராகி, மாயாதவான வர்க்கும் மற்ருெழிந்த மன்னுயிர்க்கும், நீயாகின் முதற் ருதை நெறிமுறையாலீன்றெடுத்த, தாயாவார் யாவரே தருமத்தின் தனி மூர்த்தி'' (ஷை 53) ''திருவுறையு மணிமார்ப நினக்கென்னை [செயற்பால, ஒருவினையுமில் லார் போலுறங்குதியாலுறங்காதாய்'' (ஷை ஷை 57) ''இப்பிறவிக் கடல்கடந்தேனினிப் பிறவேனிருவினையும் துப்புறமு நீர்த்த சுடர்த்திருவடியாற்றுடைத்தாய் நீ'' (ஷை ஷை 61) என்பன கம்பநாடுடைய வள்ளலின் அரும் பாடல்கள்.

இங்கு எடுத்துக்காட்டிய பாடல்களும் அவை போல் வனவும் பேரருளாளர்களாகிய செந்தமிழ்ப் பெருமனச் செல்வர்கள் செய்தருளிய மாரிமுழக்கம். 'கைம்மாறு வேண்டாகடப்பாடுமாரிமாட், டென்ளுற்றுங் கொல்லோ உலகு'' (குறள் 211) என்ற திருக்குறளை உள்ளத்துக் கொள்க. அவ்வுள்ளத்தால் திருவள்ளுவருள்ளம் காண் பாம்.

துறப்பதே தொழிலாகத் தோன்றிய தூமறைப்பர மர்க்கும் தூமொழிப்பகர்வர்க்கும் முதல்வராய்த்திகழும் சந்தமிகு தமிழ்மறை வள்ளலாகிய சடகோபர் (நம்மாழ் வார்) போன்ற முத்தமிழண்ணல்களால் தமிழும் தமிழ் கூறும் நல்லுலகும், நலமும், நிறமும் பெற்று நிகழ்கின் றது என்ற உண்மையை எண்டிசையுமறிய இயம்புவாம், ''செய்ந்நன்றி குன்றேன்மின்'' (பெரிய திருமொழி 11-6-1) என்ற மங்கையர்கோன் அறிவுதரும் பெரிய திருமொழியை இங்கும் நோக்குக. கூழுக்குப் பாடுவா ராலும், அரசைப் பாடிப்பரிசு பெறுவாராலும் மொழி

யும் நாடும் நலமும் நிறமும் பெருது என்ற உண்மை தெளிக. இவ்வுண்மையைச் ''சொன்னால் விரோதமிது'' (திருவாம் 3.9.1.) என்று தொடங்கும் திருப்பதிகத்தில் திருவாய்மொழித் தேவராகிய சடகோபர் விளங்க வைத்துள்ள நலத்தைக்கண்டுணர்க. ''கொள்ளும் பயனில்லைக் குப்பை கிளர்த் தன்ன செல்வத்தை வள்ளல் புகழ்ந்துநும் வாய்மையிழக்கும் புலவீர்காள் !'' (ஷை 3.9.5) ''மாரியனைய கை மால்வரை யொக்கும் திண்டோளென்று பாரிலோர் பற்றையைப்பச்சைப் பசும் பொய்கள் பேசவே'' (ஷை 3.9.7) என்பன ஊட்டும் வாய்மையை உண்டின்புறுக. ஒத்தார் மிக்காரையிலையாயமாமாரு!. என்னக் கடவதிறே, இத்திருப்பதிகம் உணர்த்தும் உண்மையை வேதாந்த தேசிகர் வைராக்ய பஞ்சகம் நன்கு வலியுறுத்தியது. ''என்னாவிலின்கவி யானொருவர்க்கும் கொடுக்கிலேன்'' (திருவாய் 3.9.1) என்ருர் சடகோபர். 'மாலையில் மலருமல்லி மணங்கழ் வாக்காற்புல்லும் தாலமீதாளும் வேந்தர் மாட்டியாம் வேண்டமாட்டோம்' (வைராக்ய 3. தமிழ் செய்தது) என்ருர் வேதாந்த தேசிகர். அத்திற விரத்தித் திருமூர்த்திகள் மேற்காட்டிய பாடல்களைப் பணித்தருளிய பெருந்தமிழ்ப் பெருமாஞர்கள்.

கம்ப நாட்டரழ்வான் தானும் அத்திற விரத்தித்திருமூர்த்தியே. வெற்றரசை வெறுத்தொழித்து வீட்டரசாளும் கழிபெருங்கவிச் சக்ரவர்த்தி கம்பர் என்ற உண்மை காண்க. ''தாட்செய்தகமலத்தானே முதலினர் தலைபத்துள்ளாற் காட்செய்கின்ருர்களன்றி யறஞ் செய்கின்ருர்கள் யாரே.'' (இராமாவ, ஆரணிய, சடாயுவுயிர் 209) என்று விளம்பியபேரறவீரர். நீத்தார் செல்வத் திருமூர்த்தி என்ற அவரது திருத்தோற்ற நுட்பம் தேறுக. சிங்கப்பிரான் திருவருளால் கருவிலே திருவுடையராய்த் தோன்றி அப்பிரானடியார் என்பதே தமது சொரூப நிருபகமென்பது தோற்ற அவன் திருநாமத்தையே (கம்பன் என்பது தூணப்பஞகிய தெள்ளிய

சிங்கப்பிரான் திருநாமம்) பூண்டு அவனால் உயிரளிக்கப் பெற்று அவன் திரு மகுடம் சாய்த்து அட்டகாசம் செய்து உகந்தருளும்படி கவி பாடிய செந்தமிழ்ப்பாற்கடல் கம்ப நாட்டாழ்வான் என்ற உண்மையை.உணர்க. ''திசை திறந்தண்டங்கீறிச்சிரித்தது செங்கட்சீயம்'' (இராமாவ. உயுத். இரணியன் 127) என்ற கம்பர் பாடலையும் ''கம் பத்தினிடையிற் பிறந்திட்டதாற் கம்பனென்னப் பெயர் உம்பர்க்கு மெய்தாத பேருன பிள்ளைக்கு வந்தோதினர்'' (புலவர் புராணம் கம்பர்) என்ற புலவர் புராணப்பாடலை யும் இங்கு நோக்குக. ''வெங்கண் சிவந்து வெடிவால் முறுக்கி வெகுண்டெழுந்தென், அங்கம்பிளக்கவரும் புலியே! அன்றிரணியனைப், பங்கம்படப்பட வள்ளுகிராலு ரம்பற்றியுண்ட, சிங்கமிருக்கின்றது கண்டு கொள்வா யென் சிந்தையுள்ளே'' என்ற பாடலால் இவர்பாற் புலியை ஏவிய கொடுமையைச் சிங்கப்பிரான் தீர்த் தொழித்து இவரை அங்கப்பொழுதே காத்தருளிய வரலாறு தெரியலாம். ''மங்கிய வல்வினை நோய் காள் உமக்குமோர் வல்வினை கண்டீர், இங்குப்பு கேன்மின் புகேன்மின் எளிதன்று கண்டீர், சிங்கப் பிரானவனெம்மான் சேருந்திருக்கோயில் கண்டீர், பங்கப்படாதுய்யப்போமின் பண்டன்று பட்டினங் காப்பே'' (பெரியாழ். திரு 5-2-4) என்ற பெரியாழ் வார் மந்திரத்திருமொழியை அநுசந்தானம் செய்த வாற்றாற் கம்பர் காத்தருளப் பெற்றார் எனக் காண்க. அரசைப்பாடாச் செந்நாமன்னர் கம்பர். அது காரணமாக வெற்றரசரும் குற்றரசரும் அவரையண்டிப் பிழைத்த கூழுக்குப்பாடிகளும் கம்பரை ஒழிக்கச்செய்தசதி அது என்ப. பிரகலாதாழ்வான் திருமனத்திற்போல் கம்ப நாட்டாழ்வான் தூமனத்துக் கோயில் கொண்டருளிய திரு நரசிங்கப்பிரான் அங்கப்பொழுதே அப்புலிவீயத் தோன்றிக் காத்தருள் புரிந்தான். கம்பரின் வீரத்தியின் வீறும் பத்தியின் சீரும் எப்பெற்றித்து என்பதை இதனால் அறியலாம்.செவிகளாரத் தேவரும் பருகச் செய்த கம்பர் கவிகள் திவ்விய தீங்கவிகளாம். அவை என்றுமுள தென்

தமிழ். தேன் தமிழ். உண்ண உண்ணத் தெவிட்டாத அக்காரக்கனி. பூண்கட்டிக்காக்கும் விள்ளுறு வெள்ளரிப் பழம் போன்றதோர்காப்பைக் கம்பர் கவி வேண்டா, அதை அறவே பொரு. செந்தமிழுலகுக்குப் பகலவன் போல் ஆயிரங்கரங்களோச்சிச் செங்கோல் செலுத்தும் கவிச்சக்ரவர்த்தியாய்க் கம்பர்திகழ்கின்ற உண்மை ஞானக்கண்படைத்தார்க்குக் கண்கூடு. ''மீனுடையெயிற் றுக்கங்குற் கனகனை வெகுண்டு வெய்ய. கானுடைக் கதிர்கனென்னு மாயிரங்கரங்களோச்சித், தானுடையுதய மென்னுந் தமனியத்தறியுணின்று, மானுடமடங்க லென்னத் தோன்றினன் வயங்கு வெய்யோன்'' (இராமாவ. பால. பூக்கொய் 1) என்ற திருப்பாடல் கம்பரையும் குறிக்கத் தட்டில்லை. ''அல்லிமாதர் புல்க நின்ற ஆயிரந்தோளன்'' (பெரிய திருமொழி 1.7.9) என்று மங்கையர்கோன் சிங்கவேள்குன்றத்திருப்பரனாகிய சிங்கப்பிரானை ஆயிரந்தோளன் என்று பாடியருளியதைக் காண்க.

கம்பர் தீங்கவிகளில் திருவள்ளுவருள்ளம் எழில் காட்டும் பெற்றியை ஓர்ந்துணர்க. ''காவிய விசுவரூபம் காட்டினன் கம்பநாடன்'' என்று தொடியோள் பௌவத்தில் கூறினேம். அவ்வுண்மை வள்ளுவருள்ளத்திலும் விளங்கு மாற்றை வள்ளுவர் நெஞ்சினுல் நோக்கிக் கண்டு கொள்க. பேரிலக்கியம் கொண்டு பேரிலக்கிய மெய்ப்பொருள் உணரப்படவேண்டும். அவ்வுணர்வே ஒண்மையும் சிறப்பும் நலமும் உடையதாம். கம்பர் பின் தோன்றியவராதலால் முன்தோன்றிய முத்தமிழ் வள்ளல்களின் சீரிய உள்ளத்தை உள்ளவாறு கண்டு கண்டவாறு சுவைத்துப்பாடி இன்புற்ற பெருந்தகையாளர். கவியுள்ளம் கவிக்குத்தான் தெரியும். பாம்பின் கால் பாம்புக்குத் தான் தெரியும் என்பது போல். உரைகாரர்கள் ஒரளவிற்குத் தான் உரைத்தற்காகும். உரைகாரர்கள் பாம்பாகார். தாம்பே யாவார். முதனூலின் போலியே உரைநூல் என்னற்கேயாம். கவியன்மையின்

உரை தாம்பு போன்றதோர் பாம்பின் போலியாயிற்று. இது உரைகாரர்களைக் குறைத்துக் கூறியதன்று. அவர்கள் நன்கு கற்றுணர்ந்த அறிஞர்களே. அவர்களுரையில்லையேல் முதனூற் பொருள் பலவிடங்களில் காண அரிதாகும். அரிய பயிற்சி முயற்சியின் பயனாய் அவர்களுரை அமைந்துள்ளது. ஆயினும் அது ஓரளவுக்குத் தான் பயன்படும். பேரிலக்கியங்கள் அவையனைத்துக்கும் மேனின்று மெய்ப்பொருளைத் தெரியக்காட்டித்தரும் தகைமையுடையன என்ற பேரிலக்கிய உணர்வின் சிறப்பும் பயனும் இங்கு வலியுறுத்தப்பட்டன என்று அறிக. இதை நஹி நிந்தா நியாயம் என்பர். இதுகாறும் இங்குக் கூறியது இந்நூலுக்குப் புறவுரை எனக் கொள்க. இனி வள்ளுவருள்ளத்தைக் காண்பாம்.

---

## இரண்டாமத்தியாயம்

மாதாநுபங்கி என்பது திருவள்ளுவர் திருநாமம். தேவர், முதற் பாவலர், தெய்வப்புலவர், நான்முகனுர், நாயனுர், செந்நாப்போதார், பெருநாவலர் என்பனவும் திருவள்ளுவர் திருநாமங்கள். அவற்றுள் மாதாநுபங்கி என்பது சிறப்பாகவும் பிற பொதுவாகவும் வள்ளுவரை உணர்த்துதலை நோக்கிக் காண்க, தேவர், தெய்வப் புலவர் முதலியன திவ்விய நூல் படைப்பாரை உணர்த் தும் இயல்பு உடையன. வேதம் தமிழ்செய்த காரி மாறப்பிரானும் திருக்கண்டதமிழ்த்தலைவராகிய பேயாழ் வாரும் தேவர் என்னும் திருநாமம் உடையவர்கள். ''தேவுமற்றறியேன்'' (கண்ணிநுண். 2) என்ருர் மதுர கவிப்பெருமான். திருவாய்மொழித் தேவர் என்னும் பிர சித்தியைக் கல்வெட்டும் காட்டித்தரும். பேயாழ்வாரைத் "திருக்கண்டேனெனவுரைத்த தேவு'' (தேசிகமாலை ப்ரபந்தசாரம் 4.) என்ருர் வேதாந்ததேசிகர். சிந்தாமணி பாடிய திருத்தக்க தேவரைத் தேவர் என்பர். மாக்கவிகளை நான்முகன் எனக் கூறுவது மரபு. இருவர்செயலும் படைப்பாதலின் அவ்வாறு வழங்கலாயிற்று. இருவர் படைப்பும் யாப்பாதலின் என்க. ''கவியவன் படைப்போ னென்பான்" (யாதவாப்யுதயம் 1-5 தமிழ் செய்தது) என் ருர் வேதாந்த தேசிகர். ''கரையிலாக்காவிய ஸம்ஸாரத் தில் கவியே நான்முகன்'' (தமிழ்செய்தது) என்பது ஆரிய வழக்கு. ''அபாரே காவ்யஸம்ஸாரே கவிரேவ ப்ரஜா பதி:'' என்பது அவ்வழக்கைக் கூறும் சுலோகம், அவ் வழக்குப்பற்றி ஆன்ரோர் வள்ளுவரை நான்முகன் என் ருர். ஆதிகவி (முதற் பாவலர்) என்பது வான்மீகி முனிவர் திருநாமம். அவ்வாறே மாதாநுபங்கி என்னும் நாமமொன்ரெழிந்த திருவள்ளுவர் நாமங்கள் பிறவும் என்க.

வள்ளுவர் என்ற சொல்லால் எப்பொருள் கூறப் பட்டது என்றதை ஆய்வாம். வள்ளுவன் என்ற சொல்லுக்குப் பொருள் பல கூறுகின்றனர். மன்னற்குள் படு கருமத்தலைவன் என்று நிகண்டு கூறுகிறது. (பிங்கல 5.118) வருங்காரியம் சொல்வோர் கருமத்தலைவர் என்னப்படுவார். திருவள்ளுவர் எம் மன்னனுக்கும் உள் படு கருமத்தலைவராயிருந்ததாகத் தெரியவில்லை. ஐதிகங் கள் பலபல கற்பனை செய்யப்பட்டு மலிந்து வரலாயின. திருக்குறட்பாக்களையே பற்றி அவற்றைப் பகரும் அவ் வள்ளலின் வைதிகப் பெருமனப் பண்பையே இங்கண் யாங் கூறுவது என்பதை இங்குக் குறிப்பாம். வள்ளுவர் யாரோ ஒரு மன்னனுக்கு உட்படு கருமத்தலைவரா யிருந்தார் என்பது பொருந்தாது. அது அவரைப்பற்றிய மெய்யுணர்வுமாகாது. அறவே சிறவாது. அரசரைத் தொழாது அறத்தையே பேணும் விரதமுடையவர் என்பதைத் திருக்குறள் காட்டித்தரும். ''ஏந்திய கொள் கையார் சீறினிடை முரிந்து, வேந்தனும் வேந்து கெடும்'' (குறள் 899) ''ஒப்புரவினால் வருங்கேடெனினஃதொரு வன், விற்றுக் கோட்டக்கதுடைத்து'' (ஷை. 220) ''அந் தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய், நின்றது மன்னவன் கோல்'' (ஷை 543) ''அறத்தான் வருவதேயின்பம் மற் றெல்லாம், புறத்த புகழுமில'' (ஷை 39) ''ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர், காவலன் காவா னெனின்'' (ஷை 560) ''நகுதற்பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண், மேற்சென்றிடித்தற் பொருட்டு'' (ஷை 784) ''வகுத்தான் வகுத்த வகையல்லாற்கோடி, தொகுத் தார்க்குந்துய்த்தலரிது.'' (ஷை 377) ''ஐந்த வித் தானாற்றலகல் விசும்புளார் கோமானிந்திரனே சாலுங் கரி'' (ஷை 25) என்பன வள்ளுவருடைய மறையற வீரப் பாட்டைக் காட்டித்தரும். சொல்லிய தொன்று செய்த தொன்று என்பது இழிவு. ஆதலின் வள்ளுவர் பாரிலோர் பற்றையைப் பச்சைப்பசும் பொய்கள் பேசியவரல்லர் என்பது தேறி நிற்கும்.

வள்ளுவன் என்னும் சொல்லுக்குச் சகுனம் அல்லது நிமித்தம் சொல்பவன் என்னும் பொருளும் உள்ளது. நிமித்திகரை அமைச்சருள் அடக்குவதும் வழக்கு. இதைச் சிந்தாமணியுட் காண்க. (சீவக. 200,204) ''மந்திரிக் கழகு வரும் பொருளுரைத்தல்'' என்னும் பழமொழியை யும் நோக்குக. ''கோத்தநித்திலக் கோதைமார்பினுன், வாய்த்தவந்நிரை வள்ளுவன் சொனுன்'' (சீவக. 419) என்ற திருத்தக்கதேவர் பிரயோகத்தைக் காண்க. நிமித் தங்கள் கொண்டு வருங்காலகாரியங்கள் கூறுபவன் வள்ளுவன் என்பதை இதனுல் அறியலாம். திருவள்ளுவர் ஓர் நிமித்திகன் என்பது பொருந்தாது, அதற்குச்சான்று மில்லை, பிரசித்தியுமில்லை. வள்ளுவர் என்னும் சொல் முரசு அறைவார்க்கும் பெயர் என்பதை ''உள்ளத்தாலு மிழவேண்டாவுறுபடை வந்துகூட, வள்ளுவார் முரசு மூதூரறைகென அருளினுனே' (சீவக. 2149) என்று தேவர் பின்னும் பாடினுர். வள்ளுவர் என்பார் படை திரள முரசறைபவர் என்பது இதனுற் புலனுகும். இங்கு வள்ளுவார் என்றதைப் பெயர்த்திரிசொல் என்ருர் நச்சினுர்க்கினியர். ''என்புழி வள்ளுவரியானை மீமிசை, நன்பறையறைந்தனர்'' (இராமாவ. பால. திருவவதார. 116)என்ற கம்பர் பாடலையும் நோக்குக.

குறளாசிரியர் நாடு யாது காலம் யாது வள்ளுவர் என்ற சொல்லின் பொருள் யாது என்பதைப்பற்றிக் கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. வள்ளுவ நாடு என்று மலை நாட்டின் ஒரு பகுதிக்குப் பிரசித்தப் பெயர் உள்ளது. ஆதலின் வள்ளுவர் அந்நாட்டவர் என்பர் சிலர். வள்ளுவர் பாண்டிநாட்டார் என்பர் சிலர். மயிலைப்பதி யினர் என்பர் வேறு சிலர். இவர் காலத்தைப் பற்றிப் பலர் பலபடியாகக் கூறுகின்றனர். பேய்த்தேரே போன்றதோர் கால ஆராய்ச்சியில் யாமிறங்குவதில்லை. பொதுவாகக் கால ஆராய்ச்சியாளர் தத்தம் மனம் போன போக்குக் குத் தகச் சிலரை முன்னே இழுக்கின்ருர்கள். சிலரைப் பின்னே தள்ளுகின்ருர்கள். அவர்கள் கூற்றுக்கு நியதியு

மில்லை. அவதியுமில்லை. ஆதலால் தெய்வப்புலமைத் திருவள்ளுவர் நிமித்திகர் என்றோ, பறை அறைபவர் என்றோ, பொருளுடைய வள்ளுவ நாமத்தரல்லர் என்பது தேறலாம். தெய்வப்புலமை என்ற அடைக்குத் தகப் பொருள் கூறுதலே ஏற்கும் என்பதும் தெளியலாம்.

ஸ்ரீவல்லபர் என்னும் பெயர் திருவள்ளுவர் என நின்றது என்று கூறுவர். அகர உகரத்திரிபாலும் லகர ளகர அபேதத்தாலும் அவ்வடிவம் ஏற்கும். இப்பொருள் பொருந்தும் சிறக்கும், பிரசித்தியும் உடையது. ஆதலின் நன்கு கொள்ளற்காகும். இதைத் திடப்படுத்தும் வரலாறு ஒன்றைக்கூறுவாம். பெரியாழ்வார் காலத்தில் வல்லபதேவன் என்னும் பாண்டிய மன்னன் இம்மைச் செல்வம் முற்றும் பெற்றுக் குறையொன்றுமிலனாய் ஆட்சி புரிவானாயினும் வீட்டுச் செல்வம் பெற விடாய்த்தவனாய்ப் பரதத்துவம் யாது? என்னும் உறுதி வேண்டியவனாய்த் தனது புரோகிதராகிய செல்வ நம்பி என்பாரை அது பற்றிக் கேட்க, அவரும் புலவர் அவையொன்றைக் கூட்டி அவ்வாயிலாய் அது தெளிதற்காகும் என்ன, அவ்வாறே மன்னனும் செல்வ நம்பியைக் கொண்டு அவை கூட்டிச் சுற்கமாகப் பொற்கிழி கட்டிப் பரதத்துவத்தை அவ்வவையில் நிர்ணயம் செய்து நிலை நாட்டுபவர்க்கு அக்கிழி உரியதாம் என்று விளம்பரம் செய்து புலவரவையொன்று கூட்டினான். அவ்வவையிற் பெரியாழ்வார் வந்து தோன்றச் செல்வ நம்பியும் வேதாந்தம் உணர்த்தும் பரதத்துவத்தை நிர்ணயம் செய்தருள வேண்டும் என்று ஆழ்வாரை வேண்டிக் கொள்ள ஆழ்வாரும் அவ்வவையில் அகாரவாச்சியனாகிய அலர் மேல் மங்கையுறை மார்பனே பரதத்துவம் என்று புலவரனைவரும் ஒரு முகமாய் ஏற்க நிர்ணயம் செய்து கிழியறுத்தருளினார். வல்லபதேவன் என்னும் பாண்டிய மன்னனுக்குச் செல்வநம்பி என்ற புரோகிதர் இருந்தார் என்பதை இதனால் அறியலாம். இங்குப் புரோகிதர் என்றது குருவை என்க. தயரதற்கு வசிட்டர் போல்

எனக் கொள்க. வள்ளுவன் என்ற சொல்லுக்கும் புரோகி தன் என்ற பொருளும் உள்ளது. பேரகராதியிலும் கூறப் பட்டு உள்ளது: (பக்கம் 666) ''அல்வழக்கொன்றுமில்லா அணிகோட்டியர் கோன் அபிமானதுங்கன், செல்வனைப் போலத்திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்'' (பெரியாழ் திருமொழி 1.1.11) என்று பெரியாழ்வார் தாமே போற்றியிருத்தலால் திருமாலுக்குப் பழவடியார் என்று உகந்து புகழ்வதற் கொத்த "செல்வர்'' என்னும் பெருந்தகையாளர் ஒருவர் இருந்தார் என்பது தெளிய லாம். அபிமானதுங்கன் செல்வன் என்றதால் ஸ்ரீமான் என்னும் பொருளதோர் பெயருடையராயிருத்தல் வேண்டும் என்பது புலனாகும். ஸ்ரீமான் எனினும் செல்வன் எனினும் ஒக்கும். "செல்வன்'' (திருவாய். 1.10.7) ''செல்வநாரணன்'' (ஷை 1.10.8) ''திரு நாரணன்'' (ஷை 4.1.1;9.8.3) ''திருவின்மணாளன்'' (ஷை.4,9.1) ''வண்புகழ் நாரணன்'' (ஷை. 1.2.10) ''வாழ்புகழ்நாரணன்'' (ஷை. 10,9.1) என்ற சடகோபர் திருவாய்மொழியாலும் ''திருமகளோடினிதமர்ந்த செல்வன்'' (பெருமாள் திருமொழி. 10.7) என்ற குல சேகரப் பெருமாள் திருமொழியாலும் ''திருவுக்கும் திரு வாகிய செல்வா!'' (பெரிய திருமொழி 7.7.1) என்ற மங்கையர் கோன் பெரிய திருமொழியாலும் ''செயிர் தீர் செங்கட் செல்வ!'' (பரிபாடல் 4.10) என்ற பரி பாடலாலும் செல்வ நம்பி என்றது ஸ்ரீவல்லப நம்பி என்று கொள்ளத்தகும். "திருவின்மணாள''நம்பி என்னவுமாம். நம்பி என்றதால் இப்பொருள் பின்னும் திடனுறும். ஸ்ரீவல்லபர் எனினும் செல்வநம்பி எனினும் திருவள்ளுவர் எனினும் பொருள் ஒன்றே. ஆதலின் ஸ்ரீ வல்லபர் என்பது திருவள்ளுவர் என்று வழங்கி வரலாயிற்று என்பது நன்கு பொருந்தும். ''பருப் பதத்துக் கயல் பொறித்த பாண்டியர் குலபதி போல், திருப்பொலிந்த சேவடியென் சென்னியின் மேற் பொறித் தாய்'' (பெரியாழ்வார் திருமொழி 5.4.7) என்ற பெரி யாழ்வார் திருமொழியால் இப்பொருள் பின்னும் வலி

யுறும். பாண்டிய மன்னன் குருவாகிய செல்வ நம்பி என்னும் வேத நல்வாயர்க்குத் திருவள்ளுவர் என்று பெயர் என்பது பெரிதும் பொருந்தும். செல்வ நம்பி என் பவர் வேருெருவராயிருப்பினும் ஸ்ரீவல்லபர் என்னும் பெயருடைய குறளாசிரியர் திருவள்ளுவர் என்னப்பட் டார் என்று கொள்ளத்தட்டில்லே. இப்பொருள் "உப்பக்க நோக்கி' என்ற வள்ளுவமாலேப் பாடற் பொருளேக் கீழே விளக்குமிடத்துச் சாலத் தெளியும்.

வரலாறு ஒன்று விஞேதரசமஞ்சரியிற் கூறப் பட்டுள்ளது. திருக்குறளேப் பணித்த பின் திருவள்ளுவரும் ஔவையாரும் இடைக்காடரும் சந்தித்த போது திருக் குறள் எத்தன்மைத்து என்றதைப் பற்றி அவர்கள் முறை யே பாடிய பாடல்கள் வருமாறு "குறுமுனிவன் முத்தமி ழும் என்குறளும் நங்கை, சிறு முனிவன் வாய்மொழியின் சேய்'' என்று திருவள்ளுவர் பாடினர். அது கேட்ட ஔவையார் "ஐம்பொருளும் நாற்பொருளும் முப்பொரு ளிற்பெய்தமைத்த, செம்பொருளே எம்மறைக்கும் சேட் பொருளேத்-தண்குருகூர்ச், சேய்மொழியதென்பர் சிலர் யானிவ்வுலகின், தாய்மொழியதென்பேன் தகைந்து'' என்று பாடினர். அது கேட்ட இடைக்காடர் "சேய் மொழியோ தாய்மொழியோ செப்பிலிரண்டு மொன்றவ், வாய்மொழியை யாருமறையென்ப—வாய் மொழிபோ, லாய்மொழிகள் சாலவுளவெனினுமம்மொழி யின், சாய்மொழியென்பேன்யான் தகைந்து'' என்று பாடி னர். இவ்வரலாறு கம்பர்க்கு உடன்பாடு என்பதை "ஆயி ரமாமறைக்கு மலங்கார மருந்தமிழ்க்குப் பாயிரம் நாற் கவிக்குப்படிச்சந்தம்பனுவற்கெல்லாம், தாயிரு நாற்றி சைக்குந்தனித்தீபம் தண்ணங்குருகூர்ச் சேயிருமாமரபுஞ் செவ்வியான் செய்த செய்யுட்களே" (சடகோபரந்தாதி 9) என்ற பாடலாற்காணலாம். அம்மூவர் பாடற் சொற்களே இப்பாடலில் அமைத்து அனுவதித்துள்ள நயம் காண்க. விஞேதரசமஞ்சரி கூறிய இவ்வரலாற்றை இப்பாடலுரை யில் உரைகாரர் எடுத்துக்காட்டியுள்ளார். சடகோபர்

திருவாய்மொழி தாய்மொழியாம் என்னும் பிரசித்தியைச் ''சந்தங்களிங்கோருகாந்தத்து நந்தச், சிந்திக்கு மையங் கள் சேதித்துநற்பா, துந்துன்னி ரேகைக்கனென்றென்று நோக்கித், தந்தந்த வேதங்கள் தாயோலை நீயே'' (பாதுகாஸஹஸ்ரம். 820 தமிழ் செய்தது) என்று வேதாந்ததேசிகர் பாடியருளினர். இங்கு ஒரு ''திருக் குறட்பாவையும் எடுத்துக் காட்டுவாம். "ஊருணி நீர் நிறைந்தற்றேயுலகவாம், பேரறிவாளன் திரு'' என்றது அக்குறட்பா. உலகவாம் பேரறிவாளன் திரு என்று ஒரு பேரறிவாளரைப் பேரார்வத்தால் போற்றிப் பாடியிருத் தல் கண்கூடு. அவர் திருவாய்மொழித் தேவராகிய சட கோபர் என்பதற்குச்சான்றோருள்ளமே சான்றும். ''அருள் கொண்டாடுமடியவரின்புற, அருளினனவ்வருமறையின் பொருள், அருள்கொண்டாயிரமின் தமிழ்ப்பாடினனருள் கண்டீரிவ்வுலகினில் மிக்கதே'' (கண்ணிநுண். 8) என்று மதுரகவிப்பெருமான்அருளிச்செய்ததை இங்குநோக்குக. உலகு உய்யச்செந்தமிழுபநிடதமாயிரம் அந்தாதித் தொடையில் பாடியருளிய நாவீறுடையபிரான் சடகோ பராம் ஓரொருவர்என்றஉண்மையை இக்குறள் முழங்கு மாற்றைக் கண்டுணர்க. காலத்தால் எவர் முந்தியவர். எவர் பிந்தியவர் என்ற வெற்றுராய்ச்சி கொண்டு ஐயம் எழுப்புவதற்காகாது. முக்காலமெய்ஞ்ஞானியரின் ஞான ஒளி முன்னும் பின்னும் ஒக்கவே வீசிப்பரந்து விளங்கும் எழிலுடையது. "பாலேய் தமிழரிசை காரர் பத்தர்பரவுமா யிரம்'' (திருவாய் 1-5-11) என்ற சடகோபர் திருவாய் மொழியையும் இங்கு நோக்குக. ஆதலின் உலகவாம் பேரறிவாளன் திரு என்றதால் திருவாய்மொழி உணர்த் தப்படுதற்குத் தட்டில்லை. திரு என்றும் சொல்லால் வேதம் கூறப்பட்டது. இது வேதம்தானே கூறியபொருள். ' இருக்குகள் சாமங்கள்எசுக்கள். அஃதே நல்லாருடைய அமுதமாம் திரு''(தமிழ் செய்தது) என்று வேதம் தானே ஓதிற்று. ஸாஹிஸ்ரீ: அம்ருதாஸதாம் (வேதம்). வேதம் ஸ்ரீ:என்றது. குறள் திரு என்றது. அது திருவாய்மொழி ஆதலின் வள்ளுவர் தாமே வாயாரப் போற்றிப் புகழ்ந்த

''பேரறிவாளன் திரு'' என்றது திருவாய்மொழி எனக் கொள்ளுதல் வாய்மையும் பொருத்தமுமுடையதொன்று கும். அதை வள்ளுவர்நெஞ்சினுல் நோக்கிக் காண் பார்க்குக் காணலாகும். கண்ட உண்மையை விண்டு விளங்கினுர் என்ற உண்மை தெளிக. வள்ளுவர் வேத நெறி நின்று விளங்கியவர் என்பதற்கு ஈதுமோர் சான்ருகும்.

'ஊருணி நீர்' என்று தொடங்கும் இக்குறள் முதலாழ் வார்களையும் குறிக்குமாறு காண்க. 'ஊருணி உலகவாம்' என்றது வையந்தகளியா என்று தொடங்கும் முதற்றிரு வந்தாதி பாடியருளிய பொய்கைப்பிரானையும், 'பேரறி வாளன்' என்றது ஞானத்தமிழ் விளக்கேற்றினேன் பெருந் தமிழன் நல்லேன் பெரிது என்று இரண்டாம் திருவந் தாதி பாடியருளிய பூதவேந்தையும், 'திரு' என்றது திருக் கண்டேன் என்று தொடங்கும் மூன்ருந்திருவந்தாதி பாடியருளிய தமிழ்த் தலைவராகிய பேயாழ்வாரையும் குறித்து நிற்றல் ஓர்ந்துணர்தற்காகும். பரதத்துவ நிர்ண யம் செய்து வேதமறிந்த பகவர்களால் போற்றப் பெற்ற பெரியாழ்வாரையும் குறித்தற்காகும். பெரியாழ் வார் பட்டர்பிரான் ஆதலின் பெரிதும் பொருந்தும். ஆபஸ்தம்ப முனிவர் நூற்றருளிய கல்ப சூத்திரத்துக்குப் பெரியாழ்வார் விருத்தியுரை அருளிச் செய்திருக்கிருர். தூர்த்தஸ்வாமி பாடியம் இட்டருளியிருக்கிருர். பெரி யாழ்வார் உரை அருளிச் செய்திருப்பதை ''கல்ப சூத்ர வ்யாக்யாதாவான (உரை வகுத்தவரான) பெரியாழ்வார் அருளிச் செய்தார்'' (ரஹஸ்யத்ரயஸாரம். புருஷார்த் தகாஷ்டாதிகாரம்.) என்று வேதாந்த தேசிகர் கூறியிருக் கிருர். இவ் விருத்தியுரை அரியதோர் சீரிய ஆரிய நூல். செந்தமிழிற்போல் ஆரியத்திலும் பெரியாழ்வார் வல்லார் என்பதை இந்நூல் காட்டித்தரும். இவ் விருத்தியுரையை சூத்திரபாடியங்களுடன் மைசூர் பல்கலைக்கழகத்தார் 1945-ம்வருடத்தில் அச்சிட்டிருக்கிருர்கள். பெரியாழ்வாழ்

வாரைப் போல் ஆழ்வார்கள் பிறரும் செந்தமிழும் ஆரிய மும் திகழ்ந்த நாவர்கள் என்று அறிக.

'உலகவாம்' என்றவிடத்து உலகு என்றதால் ஆரியமறை போலாது உலகத்தோர் அனைவர்க்குமே வாசியற உதவும் சிறப்பு உணர்த்தப்பட்டது. ''பேரறி வாளன் திரு' என்றதால் இப் பொருள் திடப்படும். ஆதலின் சடகோபர் கண்டருளிய திருவாய்மொழி மறையை ''சடகோபர் கண்ட அனைவர்க்குமுதவும் வேதம்'' (த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்னவளி 10 தமிழ் செய்தது.) என்று வேதாந்த தேசிகர் போற்றினர். ''அருள் கொண்டாயிர மின் தமிழ்ப்பாடினனருள் கண்டீ ரிவ்வுலகினின் மிக்கதே" (கண்ணி நுண். 8) "ஒண்டமிழ்ச் சடகோபனருள்'' (ஷை 7) ''செந்தமிழாலருள் செய்த'' (தேசிக மாலை, ப்ரபந்தசாரம் 18) என்பனவவற்றின் பொருள் இக்குறளில் விளங்குதல் காண்க. உலகு என்பது உயர்ந்தோரை எனக் கொள்ளவுமாம். முழுதுணர் நீர்மை யினோராகிய வேதம் வல்லார்களை என்றபடி. ''செய்ய தமிழ் மாலைகளுந் தெளிய வோதித், தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே'' (தேசிக. அதிகார 1) என்ற வேதாந்த தேசிகர் பாடலையும் ''தோன்றுவுப நிடதப் பொருள் தோன்றலுற்றார் தமக்குஞ்சான்றுமிவை யென்றபோது மற்றென்'' (சடகோபரந்தாதி 6) என்ற கம்பர் பாடலையும் நோக்குக.

திருவள்ளுவர் பாண்டி நாட்டார் என்பது சிலர் கருத்து என்று மேலே கூறினோம். இங்குக் கூறிய பொருள் அதைத் திடப்படுத்தும். ஊருணி (குறள் 215) பெற்றம் (குறள் 273) முதலிய சொற்கள் பாண்டி நாட் டில் வழங்கி வரும் சொற்கள். ''பெற்றம் மேய்த்துண் ணுங்குலத்திற் பிறந்த நீ'' (திருப்பாவை. 29) என்ற கோதைப் பிராட்டியார் பிரயோகம் காண்க. திருவள்ளுவ மாலைப் பாடல் ஒன்றில் ''செந்நாப் போதார், புனற்

கூடற்கச்சு'' (21) என்று கூறப்பட்டுள்ளது. இப் பாடற் பொருள் கீழே விளக்கப் பெறும். இது திருவள் ளுவர் பாண்டி நாட்டார் என்ற உண்மைக்கு அச்சாணி போன்றதாம்.

இதுகாறும் கூறிவந்த பொருளாலும் அகச்சான்ரு லும் விஞேதரச மஞ்சரி வரலாற்ருலும் ஐதிகத்தாலும் கவி குறிப்பாலும் பொருத்தத்தாலும் முதலாழ்வார்கள், சடகோபர், பெரியாழ்வார், செல்வ நம்பி, திருவள்ளுவர், இடைக்காடர், ஔவையார் முதலாயிஞேர்க்கு ஏதோ ஒருபடி தொடர்பு இருந்துள்ளது, அவர்கள் ஒத்த கருத்து டையவர்கள், வேதம் அறிந்தவர்கள், வள்ளுவர் பாண்டி நாட்டார், என்று துணிதற்காம். வேதம் திரு (ஸ்ரீ;) ஆத லால் வேதம் வல்லவரைத் திருவள்ளுவர் (ஸ்ரீவல்லபர்) என்று கூறுதல் நன்கு அமையும். ஜடா வல்லபர் என்று வழங்கி வருதலைக்காண்க. எம்முறையிலும் ஸ்ரீவல்லபர் என்றது திருவள்ளுவர் என நின்றது என்பது தக்கதும் பொருத்தமுடையதுமாம். பிரசித்தியும் உடையது. இது பின்னும் கீழே உரைக்கப்படும்.

மாதாநுபங்கி என்னும் பெயர்திருவள்ளுவரை ஐய மறச் சிறக்க உணர்த்தி நிற்கும் வலிமை உடையது. மாதாநுபங்கி என்னும் சொல் ஆரியம், அளத்தல் என் னும் பொருளை உணர்த்தும் மா என்னும் வினைப்பகுதி த்ருச்விகுதி ஏற்று ஆண்பால் ஒருமையில்அளப்பவன் என் னும் பொருளில் மாதா என்னும் வடிவம் பெறுகிறது. பூசித்தல் என்னும் பொருளை உணர்த்தும் மாந என்னும் வினைப்பகுதி த்ருச்விகுதி ஏற்று நகரம் கெட்டுப் பெண் பால் ஒருமையில் தாய் என்னும் பொருளில் மாதா என்னும் வடிவம் பெறுகிறது. (உணுதி. 2.95) மாதாநுபங்கி என்றதில் மாதா என்னும் சொல் அளப்பவன் என்னும் பொருளில் ஆண்பால் ஒருமைப் பெயர். ''மாதாரம் மாதரம் ச லோகாநாம்'' (லக்ஷ்மீஸஹஸ்ரம்.ப்ராரம்ப. 2) என்று ஆரிய மாக்

கவிஞர் வேங்கடாத்வரி பாடினார். உலகனைத்தையும் அளந்தவனையும் (மாதாரம். திருமாலையும்) ஈன்றவளையும் (மாதரம். திருமகளையும்) மனத்துக்கொள்வாம் என்பது இச் சுலோகப் பொருள். இங்கு அளந்தவன் ஆண்பால் (மாதாரம். நெடில்) ஈன்றவள் பெண்பால் (மாதரம். குறில்) என்றது விளங்கக் காட்டப்பட்டது. ஆதலின மாதாநுபங்கி என்றதில் மாதா என்றதற்கு உலகளந்த திருமால் என்பது பொருள். அநு என்னும் சொல் ஒத்த என்னும் பொருளை உணர்த்தி நின்றது அநுருப என்பது போல். பங்கி என்னும் சொல் நடை அடிமுறை என்னும் பொருளை உணர்த்தி நின்றது. நடை அடி என்னும் பொருளை 'வசோபங்கீ: ஏதா:', (பாதுகாஸஹ்ஸ். 1007) என்ற வேதாந்த தேசிகர் பிரயோகத்திற் காண்க. சொல்லின் நடை அடி என்றது 'வசோபங்கி' என்றதன் பொருள். இங்கு வேண்டிய உரிய பொருளை இப்பிரயோகம் காட்டித்தந்தது. நெடியோன் அளந்தது பாதபங்கி வள்ளுவர் அளந்தது அதற்கொத்த வசோபங்கி என்றவாறு. 'ஸ்துதிவசந பங்கீம்' (ஸ்தோத்ர. 59) என்ற ஆளவந்தார் பிரயோகம் காண்க. ஜைநர்கள் சிறப்பாகக் கொண்டுள்ள ஸ்யாத்வாத முறையைக் கூறும் தருக்கத்துக்கு ஸப்தபங்கி என்று பெயர். ஆதலின் மாதாநுபங்கி என்னும் சொல்லுக்கு உலகை அளந்த அடியனை (சேவடி) ஒத்து அளந்த அடியன் (பாவடி) என்பது உரிய பொருள். ஈரடியும் இரண்டடி. அது குறளடி என்றவாறு. இப்பொருளை ''மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால், ஞாலமுழுது நயந்தளந்தான்—வாலறிவன், வள்ளுவருந் தங்குறள் வெண்பாவடியால் வையத்தா, ருள்ளுவவெல்லாமளந்தாரோர்ந்து'' (வள்ளுவமாலை. 6) என்று பரணர் பாடினார். ''மாணடி'' (குறள். 3) ''வாலறிவன்'' (குறள் 2) என்ற திருக்குறள் உலகனைத்தையும் அளந்தருளிய திருநெடியோன் திருவடிப் பரப்பையும் உலகனைத்தையும் வாசியற

ஒக்கவே அளந்துகொண்ட திருவுள்ளப் பரப்பையும் உணர்விக்கும் ஆர்வத்தை இப்பாணர்பாடல் விளங்க வைக்கும் சால்பை நோக்கிக் காண்க. ஆதலின் இங்குக் கூறியதே மாதாநுபங்கி என்னும் பெயரின் உரிய மெய்ப் பொருள் என்பதும், அது திருவள்ளுவருடைய சிறப்புப் பெயர் என்பதும் தெளிய விளங்கும்.

உப்பக்க நோக்கி உபகேசி தோள்மணந்தான்
உத்தரமாமதுரைக்கச் சென்ப—இப்பக்கம்
மாதாநுபங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற்கச்சு. (வள்ளுவமாலை 21)

இது நல்கூர் வேள்வியார் பாடியதென்பர். இப்பாடலில் வடமதுரைக் கண்ணபிரானுக்கும் கூடல் வள்ளுவருக்கும் ஒரு புடை ஒப்புமை நோக்கி வடமதுரைக்குக் கண்ணபிரான் அச்சு கூடற்கு வள்ளுவர் அச்சு என்ருர். இது பெயரடியாகக் கூறிய ஒப்புமை என்க. பாவடியாகப் பரணர் ஒப்புமை கூறியதுபோல் பெயரடியாக வேள்வியார் ஒப்புமை கூறினர். அப்பெயர் திருவல்லபன் என்பதாம். மாதாநுபங்கி என்று கூறியதால் இது பின்னும் திடப்படும். மானுரியால் திருமார்வத்துத் திருமகளை மறைத்து வந்ததால் ஸ்ரீ (திரு)வல்லபன் என்பது வலியுறுத்தப்பட்டதாயிற்று. கண்ணனும் மாதா (அளந்தவன்) திருவல்லபன். வள்ளுவனும் மாதா (அளந்தவன்) திருவல்லபன். (திருவல்லபன் நாமம் புனைந்தவன்). அளந்ததாலும் பெயராலும் ஒப்புமை. மாதாநுபங்கி என்னும் சொல் இப்பாடற்கு அச்சு. சேவடியால் அளந்த திருவல்லபன் அம்மதுரைக்கு அச்சுப்போல் பாவடியால் அளந்த திருவல்லபன் (திருவல்லபன் நாமம் புனைந்தவன்) இம்மதுரைக்கு அச்சு என்பது இப்பாடற் பொருள். அடி நல்லான் பெயரை நல்லடியார் புனைதல் நல்லார்மரபு. அதை தாஸ்ய நாமம் என்பர். அது பற்றி நல்லடியாரை அடி நல்லானேடு உவமித்தல்

அடிநல்லான் தானே பெரிதும் உகந்ததோர் நல்லடி யார் மரபு. ஆதலின் உவமை. உவமானமாகக் கூறப் பட்டவன் வல்லபன். அவனைத் தோள் மணந்தான் என்றார். அத்தோளுடையாளை உபகேசி என்றார். உபகேசி என்னும் சொல் ஆரியம். ஒத்தகுழலாள் என்பது அதன் பொருள். ஒப்பற்றகுழலகழனை ஒத்த குழ லழகி என்பது உபகேசி என்னும் சொல் உணர்த்தும் பொருள். கேசவன் என்பது அக்குழலழகன் பெயர். மநோஜ்ஞா; கேசா: அஸ்ய ஸந்தி இதி கேசவ: (அழகிய குழல் இவனுக்கு உள்ளது என்னலால் கேசவன்) என்பது கேசவன் என்னும் சொல்லின் வியுற்பத்தி: இது சொல் லின் யோகசக்தி என்னப்படும். வடமதுரைக் கண்ண பிரான் இச் சொல்லால் தனித்து உணர்த்தப்படுபவன். இது சொல்லின் ரூடி சக்தி என்னப்படும். அதாவது அவன் ஒருவனே அச்சொல்லுக்கு உரியன். பிறரை விலக்கி அவன் ஒருவனையே உணர்த்தும் சக்தி உடை யது என்றவாறு. கேசவன் என்னும் நாமம் ஆயிரநாமத் துள் (ஸஹஸ்ரநாமத்துள்) ஓதப்பட்டுள்ளது. அதற்கு பட்டர் உரை செய்தருளியிருக்கிறார். அவ்வுரையழகில் கேசவன் குழலழகைக் காண்க. இப்பொருளை வேறிடத்து விரித்து உரைத்துள்ளோம். ''மாயன்குழல் விள்கின்ற பூந்தண்துழாய் விரை நாறவந்து என் உயிரைக் கள் கின்றவாறு அறியீர்!'' (திருவாய். 7.7.9.)என்றது சட கோபர் அநுபவம். ''குழலழகர்'' (நாச்சியார். 11.2) என்றது கோதைப்பிராட்டி அநுபவம். அத்திறக்குழலழ கன் உள்ளத்தையும் கள்கின்ற வாசநறுங்குழலழகி நப் பின்னைப்பிராட்டி என்றதை ''வம்பவிழ் கோதை பொருட்டா மால்விடையேழு மடர்த்த'' (திருவாய் 3.5.4) என்றார் சடகோபர். இத்திருவாய்மொழியில் கோதை என்றதற்குக் குழல் என்பது பொருள், ''அறு பதமுரலுங்கூந்தல் காரணம்'' (திருவெழுகூற்றிருக்கை) என்றார் திருமங்கையாழ்வார். ''வாசப்பூங்குழல் பின்னை'' (திருவாய். 6.4.2) என்று சடகோபர் தாமே பாடியருளி னார். சொற்சக்தியாலும் பொருள் நயத்தாலும் இலக்கி

யப்பிரசித்தியாலும் கேசவனும் (குழலழகனும்) கோதையும் (குழலழகியும்) ஒருவரையொருவர் பக்கநோக்கு அறியாது நோக்கி நின்று ஒன்றித்திகழும் நலம் காண்க. உத்தரமாமதுரை என்றதாலும் மாதாநுபங்கி என்றதாலும் கண்ணபிரான் கூறப்பட்டான் என்பது கண்கூடு. உபகேசி என்பது அதைப் பின்னும் திடப்படுத்தும். உபகேசி என்னும் சொல்லில் உப என்னும் உபஸர்க்கம் (அடையுருபு) ஒத்தமையை உணர்த்தி நின்றது. உபமாநம் என்ற இடத்திற் போல். 'பாலேதிணையே' என்னும் செய்யுளில் நேமிநாத உரைகாரர் இவ்வள்ளுவமாலைப் பாடலை எடுத்துக்காட்டி இதனுள் உபகேசியார் நப்பின்னைப்பிராட்டியார் என்று உரைத்துள்ளது காண்க. (நேமிநாத. சொல் 5 உரை) தமிழ் லெக்ஸிகனிலும் உபகேசி என்றதற்கு நப்பின்னை பொருள் என்று கூறி நேமிநாத உரை எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. "வாசப் பூங்குழல் பின்னை தோள்கள் மணந்ததும்" (திருவாய் 6.4.2) என்றார் சடகோபர். "ஏர்ப்பின்னை தோள் முன் மணந்தவன்" (திருக்கோவையார் 273) என்றார் மணிவாசகப் பெருந்தகையார். இப்பேரிலக்கியங்களால் வள்ளுவமாலையில் கூறிய உபகேசி நப்பின்னையே என்பது தான நியாயத்தால் சித்தமாம். ஆதலின் உபகேசி என்பாள் நப்பின்னை என்பதே உரியபொருள் என்று தெளிக.

இவ்வள்ளுவமாலைப் பாடலில் உபகேசி என்றதால் உமாதேவியும் சிவபிரானும் விலக்கப்பட்டார்கள். சிவபிரானுக்குக் கேசம் (குழல்) இல்லாமையாலும் அதன் ஒத்தமை (உப) உமாதேவிக்கு இல்லாமையாலும் அவர்கள் கூறப்படவில்லை என்பது திண்ணம். சிவனுக்குக் குழல் இல்லை. சடையே உள்ளது. கபர்தம் என்பது சிவபிரான் சடைக்குப் பெயர். அஃதுடைமையால் கபர்தி என்பது சிவபிரான் பெயராயிற்று. சடையால் ஏந்திய கங்கை சிவன் சடைக்குகையில் நெடுங்காலம் அடங்கி வெளிப்பாய இயலாது ஆப்புண்டிருந்தது என்று

இராமாயணம் கூறியது (பால. 43-89) அத்திறச்சடைத் திறல் உடையவன் சிவன் என்பது இதனுல் உணர்த்தப் பட்டது. சிவன் கேசவன் ஆகான். ஆகையால் உமை உபகேசி ஆகாள். சடையண்ணலாகிய சிவபிரானை நோக்க உமாதேவியை உபகேசி (ஒத்தகுழலாள்) என்பத தற்காகாது. நப்பின்னைப்பிராட்டியே உபகேசி என்னப் பட்டாள் என்று அறிக.

வல்லப என்னும் சொல் இதைமேலும் திடப்படுத்தும். வடமதுரைப் பிறந்தான் ஸ்ரீ வல்லபன். ''பாற்கடற்பள்ளி கொள்வானுகிய இந்தத் திருவல்லபன் நாராயணன் பள்ளிக் கட்டிலாம் அரவை (நம்பி மூத்தபிரானை) முன் அனுப்பி மதுரை நகர் வந்தான்'' (ஹரிவம்சம். விஷ்ணு. 55-59. தமிழ் செய்தது) என்று ஹரி வம்சம் கூறியது. ஏஷ நாராயண ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:| நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகநோ மதுராம் புரீம்|| என்பது அங்குள்ள ஆரிய சுலோகம். ஸ்ரீமான் என்றதால் வந்தவன் திருமகள் வல்லபன் என்பது உணர்த்தப்பட்டது, ''கண்ணபிரான் என்னமுதம் சுவையன் திருவின் மணுளன் என்னுடைச் சூழலுளானே'' (திருவாய், 1-9-1) என்ருர் சடகோபர். திருவின் மணுளனே ஸ்ரீவல்லபன். திருவின் வல்லபன் என்றது போல் மதுரை வந்த கண்ணபிரான் நப்பின்னை வல்லபனுமாம். திருமகளின் அம்சமாகிய நப்பின்னை க்ருஷ்ணவதாரத்தில் திருமகளே போல்வாள். ''நப்பின்னை நங்காய் திருவே துயிலெழாய்'' (திருப்பாவை 20) என்ருள் கோதைப் பிராட்டி. ''வம்பவிழ் கோதை பொருட்டா மால்விடையேழுமடர்த்த, செம்பவளத் திரள்வாயன் சிரீதரன் தொல்புகழ் பாடிக், கும்பிடு நட்டமிட்டாடிக் கோகுகட்டுண்டுழலாதார், தம்பிறப்பால் பயனென்னே......'' (திருவாய் 3-5-4) ''பின்னை நெடும்பணைத் தோள் மகிழ் பீடுடை, முன்னை அமரர் முழுமுதல் தானே'' (திருவாய்- 1-7-8) ''வாய்க்கும் பெரும் புகழ் மூவுலகீசன் வட

மதுரைப் பிறந்த, வாய்க்கும் மணிநிறக்கண்ணபிரான்'' (திருவாய். 7-10-4) ''வாழ்துணையா வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே, வீழ்துணையாப் போமிதனின் யாதுமில்லை மிக்கதே.'' (திருவாய்- 9-1-8) "வடமதுரைப் பிறத்த தாதுசேர்தோள் கண்ணனல்லால் இல்லை கண்டீர் சரணே'' (திருவாய், 9-1-9) ''இம்மாஞாலம் பொறை தீர்ப்பான் மதுவார் சோலை உத்தரமதுரைப் பிறந்த மாயனே'' (திருவாய். 8-5-9) என்று சடகோபர் பன்னிப்பணித்தருளினர். "திருமதுரையுள் சிலைகுனித்தைந்தலைய. பைந்நாகத் தலைப்பாய்ந்தவனே உன்னைப் பல்லாண்டு கூறுதுமே'' (பெரியாழ்வார். 1-1-10) என்ரூர் பெரியாழ்வார். ''மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத், தூய பெருநீர் யமுனைத் துறைவனை .............. தூயோமாய் வந்து நாம் தூமலர்தூவித் தொழுது, வாயினுற் பாடி மனத்தினுற் சிந்திக்கப், போய பிழையும் புகுதருவா நின்றனவும், தீயினிற்றூசாகும்'' (திருப்பாவை 5) என்ருள் கோதைப்பிராட்டி. ''பின்னை மணாளனைப் பேரில் கிடந்தானை ...... முன்னையமரர் முதல் தனி வித்தினை என்னையுமெங்கள் குடிமுழுதாட் கொண்ட மன்னனை வந்து குழல் வாராயக்காக்காய்'' (பெரியாழ். திருமொழி. 2-5-1) என்ரூர் பெரியாழ்வார். இது கண்ணன் குழல்வாரக் காக்கையை வரப் பாடிய திருப்பதிக முதற்பாடல், 'பின்னை மணாளனை' என்று தொடங்கிற்று. நப்பின்னை நங்கை உபகேசி என்பது இதனுல் சுவையுறக் குறித்துள்ள நயம் காண்க.

திருவின் மணாளனுன நாராயணன் வடமதுரையில் கண்ணபிரானுய்த் திருவவதாரம் செய்தருளினுன். அவனே பின்னையின் மணாளன். பின்னையே உபகேசி. அவன் ஒருவனே உலகுக்கெல்லாம் சரண் என்று மேற் கூறிய மறை நூல்களும் பேரிலக்கியங்களும் காட்டித் தந்தன. ஆதலின் அவனை நல்கூர்வேள்வியார் உத்தர மாமதுரைக்கு அச்சு என்ரூர். அவனே கூடற்கும் அச்சு. கூடலழகனுய்த் திகழா நின்ற வண்ணம் காண்க. ஸ்ரீ

வல்லபன் என்னும் அவன் திருநாமம் தாங்கித் திகழ்ந் தவர் திருவள்ளுவர். வாலறிவனுகிய உலகளந்த ஸ்ரீ வல்லபன் (கூடலழகன்) நற்ருளே சரண் என்று தேறித் தாமும் மனக்கவலே மாற்றிப் பவம் கடத்தும் அத் தாளேச் சரணம் அடைந்து அத்தாளின் பால் தம்மை நீத்த வை திகப்பெருந்தகையாளராய் விளங்கிய திருவள்ளுவர் கூடற்கு அச்சு என்று போற்றப்பட்டார். இறைவனுக் கும் இறைவனடியார்க்கும் நாம சாமியத்தால் உவமை கூறுதல் இறைவன் தானே உகந்த ஆன்ருேர் மரபு இது மேலே கூறப்பட்டது. அதுவும் மதுரை. இதுவும் மதுரை. அவனும் ஸ்ரீவல்லபன், இவரும் ஸ்ரீவல்லபன். (ஸ்ரீவல்லபன் நாமம் புனேந்தவர்). அம்மதுரைக்கு அவன் அச்சு. இம் மதுரைக்கு (கூடற்கு) இவர் அச்சு என்று நாமசாமியம் அடியாகப் பாடிய பாடல் ஈது என்று அறிக. அந்நாமம் ஸ்ரீவல்லபன்.

இவ்வள்ளுவமாலேப் பாடற்கு ஆறுமுக நாவலர் திருக்குறட்பதிப்பில்:—

"உப்பக்கம்: இடைக்காடர் அரசன் தன் பாடலே அவமதித்தமைபற்றிப் பிணங்கிச் சென்ற பக்கம். உப் பக்க நோக்கியென்றது வினேயாலணேயும் பெயர். கேசி திருமால். இது அக்கடவுள் சகசிரநாமத்திற் கண்டது. கேசிக்குப் பின்னே பிறந்தவள் உபகேசி யென்ருயது. உபேந்திரனென்பது போல. மாதா அனுபங்கி மாதாவை நிகராகக் கொண்டு நடக்கின்ற ஒழுங்கினனெனப்படுத லின் அவள் பிள்ளே மேலே போல் இவர் உலகத்தார் மேல் அருள் செய்தல் சொல்லப்பட்டதாயிற்று. நாப் போதென்றதற்கேற்பப் புலமையிலே தேன் ஆரோபிக்கப் பட்டது. அச்சுப் போற்ருங்குதலால் அச்சென்ருர். நாயனுராலே திங்கட்குடையுடைச் சீர்சால் வழுதியுஞ் சங்கப்புலவருந்தழைத்தினி தோங்கிய மதுரைக்கு உண் டான சிறப்புச்சொல்லியபடி" என்று உரையும் "உபகேசி நப்பின்னே என்றும், அவள் தோள் மணந்தான்கண்ண பிரான் என்றும், உத்தரமாமதுரை அவன் அவ்தரித்த

வடமதுரை யென்றும், மாதாநுபங்கி செருக்கொழித்த லுடையான் என்றும் பொருள் கொண்டு இச்செய்யுட்குப் பிறிதோருரை கூறுவாருமுளர்'' என்று அடிக்குறிப்பும் காணப்படுகிறது.

இவ்வுரையில் கேசி திருமால் அது அக்கடவுள் சக சிர நாமத்திற் கண்டது என்று கூறியது மருள். திருமால் சகசிரநாமத்திற் கேசி என்ற நாமம் இல்லை. கேசிஹா என்ற நாமமே உள்ளது. அது அறுநூற்றைம்பத்தைந் தாம் திருநாமம். கேசி என்பான் கொடிய ஓர் அசுரன். அவனைக் கண்ணபிரான் கொன்றான். ஆதலின் கண்ண பிரானுக்குக் கேசிஹா (கேசியைக் கொன்றவன்) என்பது திருநாமமானது. கண்ணபிரான் கேசியைக் கொன்ற வரலாறு பாகவதத்துள் கூறப்பட்டுள்ளது (பாகவதம் 10.37) கேசிஹா என்னும் திருநாமத்திற்கு முன் கேசவ என்னும் திருநாமம் ஓதப்பட்டுள்ளது. குழலழகன் என் பது அதன் பொருள். கேசிக்குப் பின்னே பிறந்தவள் ஆதலால் உமாதேவி உபகேசி என்னப்பட்டாள் என்றால் கேசி என்னும் அசுரனுக்குப் பின்னே பிறந்தவள் என்று தான் பொருள் படுதற்காகுமாதலானும் திருமாற்குப் பின்னே பிறந்தவளென்று பொருள்படுதற்காகாதாத லானும் அவ்வுரை மருளும் அசம்பாவிதமுமாம் என் றது தானே தோன்றும். மாதாநுபங்கி என்ற சொல்லுக் குப்பொருள் உரைத்ததும் அத்தகைய மருளே என்க.

இனி இவ்வள்ளுவமாலைப் பாடற்குச் சைவ சித் தாந்த நூற்பதிப்புக்கழகப்பதிப்பில் ''வடமதுரைக்கு அப் பக்கத்தைக் குறித்துச் சென்றேனாகிய உமாதேவியினது தோளை மணந்த கடவுளை ஆதாரமென்று சொல்லுவர். நீர் வளத்தையுடைய தென்மதுரைக்கு இப்பக்கம் மாதா நுபங்கியெனப்படுகின்ற குற்றமற்ற புலமையாகிய தேனைச் சொரிகின்ற செவ்விய நாவாகிய மலரையுடைய வரை (வள்ளுவரை) ஆதாரமாகக்கூறுவர். உபகேசி நப்பின்னை யென்றும், அவள் தோள் மணந்தான் கண்ண

பிரான் என்றும் உத்தரமாமதுரை அவன் அவதரித்த வடமதுரையென்றும் மாதாநுபங்கி செருக்கொழிதலு டையான் என்றும் பொருள் கூறுவர்'' என்று உரை காணப்படுகிறது. வடமதுரைக்கு அப்பக்கத்தைக் குறித்துச் சென்ருேனுகிய கடவுளை என்ற உரை போலி என்க. அப்பக்கத்தைக் குறித்துச் சென்றவனை இப்பாடல் கூறவில்லை. உப்பக்கம் என்றே இப்பாடல் கூறியது ஆதலின் அப்பக்கம் விலக்கப்பட்டதாயிற்று. உகரச் சுட்டு சேய்மையும் அண்மையுமல்லாத இரண்டுக்கு மிடைப்பட்ட பக்கத்தைக் குறித்து நின்றது. இதை ஆரிய நூலார் அதூரவிப்ரக்ருஷ்டம் என்பர். சேய்மை யுடையது. அப்பக்கம். அண்மையுடையது இப்பக்கம். ''அவள் இவள் உவள், அவர் இவர் உவர், அது இது உது'' (திருவாய் 1.1.4) ''கண்ணன் வெஃகாஉதுஅம்பூந் தேனிளஞ்சோலை அப்பாலது எப்பாலைக்குஞ் சேமத்ததே'' திருவிருத்தம் 26 இது நகர்காட்டுதுறைப் பாடல். இப் பாடற் கருத்தையும் பெரிய திருமொழி (10.1.2ன்) கருத் தையும் இத்நூல் வாழ்த்துப்பா ஒன்று அடியாகக் கொண்டுள்ளது.) என்ற சடகோபர் பிரயோகம் காண்க. அன்றியும் வடமதுரை மைந்தனும் வடமதுரைக்கு அச்சு ஆனவனுமே கூறப்பட்டான். அவன் வடமதுரைக்கு அப்பக்கத்தைக்குறித்துச் சென்றவன் ஆகான். மேலும் அப்பக்கத்தைக்குறித்துச் சென்றவன் என்ருல் அது எப் பக்கம்? சென்றவன் கருத்து யாது? பயன் யாது? சென்றவன் கதி என்ன? சென்றவன் நின்றதற்கு அச்சு ஆகான். மாதாநுபங்கி என்ற சொல்லுக்கு நாவ லர் பதிப்பிற் போல் செருக்கழிதலுடையான் என்று பொருள் இவ்வுரையிலும் காணப்படுகிறது. இது அசங் கதம் என்க. மாதாநுபங்கி என்னும் சொல்லின் உரிய மெய்ப்பொருள் மேலே விளக்கப்பட்டுள்ளது. இதைப் பின்னும் பரக்கச் சிறக்க விளக்குவாம்.

திருமால் உலகனைத்தையும் அளந்தான். நூலனைத் தையும் அளந்தான். உலகனைத்தும் பொருள். நூல

னைத்தும் சொல். உலகும் நூலும் பொருளும் சொல்லும் தன்கருத்தில் நின்று தன் கருத்தால் நிகழ்கின்றன என்ற உண்மை காணுமாறு அளந்தளித்தான். பொருளனைத்துக்கும் தானே ஆதி. ஆதியாகிய தன்னை உணர்த்தும் அகரம் சொல் அனைத்துக்கும் ஆதி. அகரம் உணர்த்தும் ஆதி தானொருவனே என்று காணுமாறு நூலனைத்தையும் அளந்தான். அளவு என்பது வரையறை. இச்சொல்லுக்கு இது பொருள். இப் பொருளுக்கு இது அறம், இவ்வறத்துக்கு இது பயன்-என்று சொற்பொருள் வரையறைகளையும் அறப்பயன் வரையறைகளையும் அளந்தான். அளக்கப்பட்ட சொற்பொருள்கள் யாவுக்கும் தானே உள்ளுறையிறைப் பொருளாய் நின்று அவற்றைத் தன்னுடைமைகளென்று அளந்து இடம் பொருள்களையும் மனமொழிகளையும் கடந்து அருளும் ஞானமும் நெடியனுய்த் தாளிறையண்ணல்தானே என்று காட்டித்தந்தான். அளக்கப் பட்ட சொல்லுலகு பொருளுலகுகள் அளவற எண்ணிறந்தவைகளேயாயினும் அவையாவும் அளந்திடும் தன்னுடைய நல்லிறைத்தாளில் மிக்க நுண்ணிய தோர் சிற்றணுவாய் ஒடுங்குமாறு ஓங்கி வளர்ந்தளந்தான். இவ்வுண்மையைப் "பன்னூல் அளந்தானைக் கார்க் கடல் சூழ் ஞாலத்தையெல்லாம் அளந்தானவன் சேவடி" (இரண்டாந் 91) என்று பூதவேந்தும், "வன்காற்றறைய வொருங்கே மறிந்துகிடந்தலர்ந்த, மென்காற் கமலத்தடம் போற் பொலிந்தன மண்ணும் விண்ணும், என்காற்கு அளவின்மை காண்மினென்பானொத்து வானிமிர்ந்த, தன் காற்பணிந்த வென்பாலெம்பிரான் தடங்கண்களே" (திருவிருத்தம். 42) "மதியினுற்குறள் மாணுய்" (திருவாய் 1-4-3) என்று சடகோபரும். "அளந்ததாட்கமலத்திம்மூவுலகணுவெனவொடுங்க" (ஸ்ரீரங்கராஜ உத்தர. 57, தமிழ் செய்தது) என்று பட்டரும்" நின்றகால்மண்ணெலாநிரப்பியப்புறம், சென்று பாவிற்றிலே சிறிது பாரெனு, ஒன்றவானகமெலா மொடுக்கியும்பரை, வென்ற கால் மீண்டது வெளிபெரு

மையே'' ''உலகெலா முள்ளடியடக்கியோரடிக் கலகிலா தவ்வடிக்கன்பன் மெய்யதாம், இலேகுலாந்துழாய் முடியே கநாயகன் சிலேகுலாந்தோளிஞய் சிறியன் சாலவே'' (இராமவ.பால. வேள்வி· 36.37) என்று கம்பரும் காட் தந்தார்கள். ஞாலத்தையும் ஞானத்தையும் ஒக்கவே ஒரு சேர அளந்தோங்கிய உயர்வறவுயர் நல உத்தம ஞானப் பெருஞ்சுடர் விளக்காய் விளங்கிய நிறையிறை மாட்சி இதனுல் விளக்கப்பட்டது. ஞாலமளந்த நாயகனுயும் ஞானமளந்த நாயகனுயும் ஓங்கி நின்ற இறைவீறு அவ் வாறு என்று இவ்வாற்ருல் அறிக. மூவுலகத்தோர் ஞான மும் உலகளந்த உத்தமன் ஞானத்தில் நுண்ணியதோர் பொடியென ஒடுங்கலுற்றது. அவ்வாறு ஒடுங்கலுற்ற உலகத்தோர் ஞானம் முற்றுமே அளந்த நெடியோன் ஞானத்தை நோக்க ஞானமன்று என்றே அறிதற் கொத்ததாயிற்று. அவனுடைய ஞானம் அத்துணே இறைமை நிறைமை பொலிந்து விளங்கியது. ''இறை வன் ஞானமுடையவன். உயிர்ப்பொருள் ஞானமற்றது. இறைவன் ஆட்சியுடையவன். உயிர்ப்பொருள் ஆட்சி யற்றது'' (ச்வேதாச்வ. 1. தமிழ் செய்தது). என்று உப நிடதம் ஓதியது. அந்த ஞானமாமலேயான வானமாமலே யின் நல்லடிவாரத்தில் (திருவடிவாரத்தில்) அணுவென அவியா அடைக்கலத்தவச்சுடற் பொறிச்சேடர்களாய் அமர்ந்து அலேயா நிலே கோடலே மெய்ஞ்ஞானியரின் இயலும் செயலுமாம் என்றது வேதமுடிபு. ஈதே வியாஸ முனிவர் பிரமசூத்திரம் தேறிய திண்ணம். ''வண்புகழ் நாரணன் திண்கழல்சேரே'' (திருவாய் 1-2-10) ''திண் ணம் நாமறியச் சொன்னேம்'' (ஷை 10-2-5) என்று திருவாய்மொழி தேறிய திண்ணம். இத்திண்ணத்தைத் திருக்குறளப்பன் தானே சேவடியால் அளந்து மெய்ப் பித்தான். திருக்குறளாசிரியர் பாவடியால் அளந்து மெய்ப்பித்தார். ஆதலால் திருவள்ளுவருக்கு மாதாநு பங்கி என்னும் பெயர் உரிய தொன்ருயிற்று. ஞாலமளந்த இறைமையிலும் ஞானமளந்த இறைமையில் ஈடுபட்டு அவ்வீடுபாட்டின் செயு

லாகத் திருக்குறளப்பனை வாலறிவன் என்றும், அவன் தாளை நற்றுள் என்றும் போற்றி மகிழ்ந்தார். பன்னூ லளந்த நெடியோனே வாலறிவன். அஃதளந்த அவன் தாளே நற்றுள் அத்தாளைச் சரணம் அடைதலே உயிர் களுக்கு உய்வுபாயம். சரணம் அடைவார்க்கே வீடென் னும் மீளாத பேரின்பப் பேறு என்றது திருக்குறட்சாரம். இது பின்னர் விரித்துரைக்கப்படும். வாலறிவன் என்ற விடத்து வால் என்பதற்குப் பெருமையும் தூய்மையும் பொருள். ''வெண்ணிறம் பெருமை தூய்தோகையும் வாலே'' (பிங்கல. 10-1028) என்றது நிகண்டு. ''புயற் கருநிறத்தனன் பெருநிலங்கடந்த நல்லடிப் போது'' (திருவாய். 1-3-10) என்றது சடகோபர் தூமறை. ''நீணிலங்கடந்த நெடுமுடியண்ணல் தாள்தொழுதகை யேன்'' (மதுரை. காடுகாண். 148) என்றது இளங்கோ தீங்கவி. அஃதே வள்ளுர் பாவடி. ஆதலின் வள்ளுவர் மாதாநுபங்கி என்ற உண்மை தெளிக.

---

## மூன்ருமத்தியாயம்

### முதற் குறள் விளக்கம்

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு 1

வேதம், கீதை, இராமாயணம், பாரதம், பாகவதம் முதலிய மறைகளையும் மறைநூல்களையும் மாநவம் முத லிய அறநூல்களையும் தருக்க வியாகரண மீமாஞ்சை நூல்களையும் மற்றும் பொதுவாக வேண்டிய காமந்தக சுக்கிர பிருகற்பதி முதலிய நீதிநூல்களையும் வாற்சாய நீயம் முதலிய காமநூல்களையும் பொருள்நூல்களையும் ஓதியும் கற்றும் நோக்கியும் அறிந்தும் தெளிந்தும் விளங்கிய வைதிகப் பெரியார் திருவள்ளுவர். இது ஆன்ருேர் கண்டு விளம்பிய உண்மை. இவ்வுண் மையை இயம்பும் பாடல்கள் சில வருமாறு:—

''எப்பொருளும் யாருமியல்பினறிவுறச், செப்பிய வள்ளுவர் தாஞ் செப்பவரு — முப்பாற்குப், பாரதம் சீராம கதை மனுப்பண்டை மறை, நேர்வனமற் றில்லை நிகர்'' (திருவள்ளுவ மாலை. 30) என்று பாரதம் பாடிய பெருந்தேவனரும், ''பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புநதம் ஆவிற்கருமுனியாயானைக் கம ரரும்பல், தேவிற்றிருமாலெனச் சிறந்த தென்பவே, பாவிற்கு வள்ளுவர் வெண்பா'' (ஷ 36) என்று கவி சாகரப் பெருந்தேவனரும் ''ஆரியமுஞ்செந்தமிழுமா ராய்ந்திதனிது, சீரியதென்ருென்றைச் செப்பரிதா—லாரி யம், வேதமுடைத்துத் தமிழ் திருவள்ளுவனு, ரோது குறட்பாவுடைத்து'' (ஷ 43) என்று வண்ணக்கஞ்சாத் தனரும் ''வேதப் பொருளை விரகால் விரித்துலகோரோ தத்தமிழாலுரை செய்தாராதலால், உள்ளுநருள்ளும் பொருளெல்லாமுண்டென்ப, வள்ளுவர் வாய்மொழி

மாட்டு'' (ஷை 42) என்று செயலூர் கொடுஞ்செங்கண்ணனும் ''அறமுப் பத்தெட்டுப் பொருளெழுபதின்பத் திறமிருபத்தைந்தாற்றெளிய — முறைமையால், வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனுரோதவழுக் கற்றதுலகு'' (ஷை 37) என்று மதுரைப் பெருமருதனும் ''ஏதமில் வள்ளுவரின் குறள் வெண்பாவினு, லோதிய வொண்பொருளெல்லா—முரைத்ததனல், தாதவிழ்தார் மாறதாமே தமைப்பயந்த வேதமேமேதக்கன'' (ஷை 32) என்று பெருஞ்சீத்தனும் ''செய்யாமொழிக்கும் திருவள்ளுவர் மொழிந்த பொய்யாமொழிக்கும் பொருளொன்றே—செய்யா, வதற்குரிய ரந்தணரேயாராயினேனையிதற்குரியரல்லாதாரில்'' (ஷை 23) என்று வெள்ளிவீதியாரும் ''சாற்றிய பல்கலையும் தப்பாவருமறையும் போற்றி யுரைத்த பொருளெல்லாம்—தோற்றவே, முப்பான் மொழிந்த முதற்பாவல ரொப்பா, ரெப்பாவலரினுமில்'' (ஷை 18) என்று ஆசிரியர் நல்லந்துவனும் பாடியவை காண்க. வேதப்பொருளை விளக்கி நிற்கும் முப்பாற்பனுவல் திருக்குறள் என்ற உண்மையை இப்பாடல்கள் இயம்பும் திறம் கண்டு திருக்குறள் வைதிகம் திருவள்ளுவர் வைதிகர் என்பது முத்தமிழ் மாண்பர் மரபு என்ற உண்மை காண்க.

இனித்திருக்குறட்பாக்கள் சிலவற்றை உரைத்து இவ்வுண்மையை விளக்குவாம். யாமுணர்த்தும் வள்ளுவர் உற்ற வைதிக வள்ளுவர். அற்ற ஐதிக வள்ளுவரன்று. போலி ஐதிகங்கள் மலிந்து வள்ளுவரைப் பற்றிய உண்மை மறைக்கப்பட்டுள்ளது என்றதைத் திருக்குறட்பாக்களே காட்டித் தரும்.

திருக்குறள் முப்பாற்பொதுமறை என்றது மேலே கூறப்பட்டது. முப்பால் என்பது தமிழ். த்ரிவர்க்கம் என்பது ஆரியம். அறம் (தருமம்) பொருள் (அருத்தம்) இன்பம் (காமம்) என்பன அம்மூன்று (மநு- 2-224) முப்பால் என்பது வேதத்தின் முற்பாகமாகிய கருமபாகம்

உணர்த்தும் பொருள். கருமம் எனினும், தருமம் எனினும் ஒக்கும். கருமத்தின் (தருமத்தின்) சிறப்பு நோக்கிக் கரும பாகம் என்னப்பட்டது. வீடு (மோக்கம்) என்பது வேதத்தின் மேற்பாகமாகிய பிரமபாகம் உணர்த்தும் பொருள். பிரமத்தின் சிறப்பு நோக்கிப் பிரம பாகம் என்னப்பட்டது. அது வேதாந்தம் (மறைமுடி) என்னப்படும். முற்பாகம் உணர்த்தும் முப்பால் பொதுவாக மக்கள் அனைவர்க்கும் உரியது. பொதுவாக மக்களெல்லாம் முப்பாற்கே உரியவர். வீட்டுக்கு உரியவர் ஒரு சிலரே ஆவார். ஆதலின் முப்பாற்பனுவலாகிய குறணூல் பொதுநூல் பொதுமறை என்னப்பட்டது. மறை உணர்த்தும் முப்பாற் பொருளைக் கூறுதலால் அப் பெயர் பெற்றது. மக்கட்பொது என்றவிடத்திற் போல் பொது என்றதன் பொருள். பொதுமகள் என்ற விடத்திற்போலன்று. குலமகளுக்கும் விலைமகளுக்கும், மெய்யர்க்கும் பொய்யர்க்கும், நல்லார்க்கும் பொல்லார்க்கும், பகவர்க்கும் பதகர்க்கும், ஆத்திகர்க்கும் நாத்திகர்க்கும் பொதுநூல் என்று பொருளன்று. இப்பொருள்படுமாறு இன்றொரு சிலர் குறட்பொது நூன்மையைக் கூறுதல் திருக்குறட்கும் திருவள்ளுவருக்கும் இழிவு பயப்பதாம் என்பதை அறியாராயினர். மறைமாட்சியையும் செய்தொழிற்பாகுபாடுகளையும் குலதருமங்களையும் தருமத்திட்பநுட்பங்களையும் வெட்டொன்று துண்டிரண்டு என்று ஐயப்பாடறகாட்டித்தரும் வீறுடைப்பாவலர் வள்ளுவர் என்பது பின்னர் விளங்கும். இங்குப் பொது என்றது வீடு என்னும் சிறப்பை நோக்கி வீடு என்றது முப்பால் என்னும் பொதுவை நோக்கி என்று அறிக. ''சிறப்பீனும் செல்வமுமீனுமறத்தினூஉங், காக்கமெவனோ உயிர்க்கு'' (குறள். 31) என்ற குறளை நோக்குக. திருக்குறள் முதலதிகாரம் சிறப்பின்பாற்படும் என்ற உண்மை இனி விரிக்கப்படும்.

''அகர முதல எழுத்தெல்லாமாதி, பகவன் முதற்றேயுலகு'' (குறள். 1.) என்பது திருவள்ளுவர்

துணிபு. இக்குறள் ஓர் ஆலமர்வித்தின் அருங்குறள். திருக்குறளின் சாரமும் சுருக்குமாம். உலகு ஆதிபகவனை முதலாக உடையது. அது எது போலெனில் எழுத்தெல்லாம் அகரத்தை முதலாக உடையது போல் என்பது இக்குறட்பொருள். இக்குறளில் முதல் என்னும் சொல் காரணம் என்னும் பொருளை உணர்த்தி நின்றது. முதல் எனினும், காரணம் எனினும், பகுதி எனினும் ஒக்கும். இங்கு முதல் என்றது பகுதியை. ஆதி எனினும் அப்பொருட்டே. ''காரணத்வேந சாகாசாதிஷு யதாவ்யபதிஷ்டோக்தே:'' (1-4-14) ''ப்ரக்ருதிச்ச ப்ரதிஜ்ஞாத்ருஷ்டாந்தாநுபரோதாத்'' (1-4.23) என்ற பிரம சூத்திரத்தால் காரணம் ப்ரக்ருதி (பகுதி) என்று முதற்பொருள் உணர்த்தப்பட்டுள்ளது காண்க.

இக்குறள் முதற்குறள். கடவுள் வாழ்த்து என்னும் முதலதிகாரத்தின் முதற்பா. முதற்பொருள் (காரணப் பொருள்) தொழப்படவேண்டும் என்று உபநிடதம் ஓதிற்று. (அதர்வசிகா; 2-17) ஆதலின் குறளாசிரியர் வாழ்த்து என்னும் முறையால் காரணப் பொருளைத் தொழுதெழுகின்றார். இது வேதமுறையாற் புரிந்த வழிபாடு. உவமாநம் காட்டிக் காரணப்பொருளை உணர்த்தினர். உவமாந உவமேயங்களின் பொருத்தமும் நலமும் தேற உணர்தல் வேண்டும். எழுத்தெல்லாம் என்று கூறியதால் ஆரியமும் தமிழும் அகரத்தைப் பகுதியாக உடையன என்பதையும் ஒன்றிய சீர்மையில் நிலவுந்தன்மையையும் உணர்த்தினர். பாகதம் (பிராகிருதம்) ஆரியத்துள் அடங்கும். ஆரியத்தைப் பகுதி (ப்ரக்ருதி)யாக உடையதாதலால் அது பாகதம் (ப்ராக்ருதம்) என்னப்பட்டது. ஆதலின் ஆரியம் (சங்கதம்) தமிழ் பாகதம் ஆகிய மூன்றுமொழிகளும் இங்கு உணர்த்தப்பட்டவாறு அறிக. சங்கதம் பாகதம் அவப்பிரஞ்சனம் என மொழி மூவகைத்து. (முத்து வீரியம் 1-26). சங்கதம் என்றது தமிழ்வடிவம். ஸம்ஸ்க்ருதம் என்றது அதன் ஆரியவடிவம். செம்மை செய்யப்பட்டது என்பது

அதன் பொருள். ஆரிட இலக்கண வரம்பால் செம்மை செய்யப்பட்டுள்ளதால் சங்கதம் (ஸம்ஸ்க்ருதம்) என்னப் பட்டது. ''எல்லா நாட்டிலும் இயல்வது பாகதம்'' (முத்து வீரியம் 1,29. இது பேரகத்தியச் சூத்திரம் என்பர்). ஆதலால் ஆரியம் தமிழ் பாகதம் என்னும் மும் மொழிகளும் சங்கதங்கள். பிற அவப்பிரஞ்சனமாம். ஆரிட இலக்கணவரம்பால் செம்மை செய்யப்பட்ட தமிழாதலின் செந்தமிழ் என்னப்பட்டது. பாகதம் அவப் பிரஞ்சனமன்று, அது சரசுவதி தேவியின் விலாஸ மொழி என்று சம்புரகசியம் போற்றிற்று. ''சுயம்பு கேஹிணி விலாஸவாஹித்திமயீ'' (அச்சுத சதகம். 2; பாகதப் பாடல்) 'ப்ராயேணலௌல்யாத் அதிக்ருத்ய கிந்நா விதிப்ரியாவ்யாஹரதாந்ய பாஷா: ||' (யாதவாப் யுதயம் 12—19 ருக்மிணி விவாஹப்ரகரணம்) என்று வேதாந்த தேசிகர் பாடினர். ஆரியம் செந்தமிழ் பாகதம் என்பன சங்கதம் என்று அறிக.

இம்மும்மொழிகளிலும் அகரத்துககு இறைவன் என்பது பொருள். ஆரியம் தெய்வமொழி. வேத மொழி. திசைச் சொல் அன்று என்பது இதனல் காட் டப்பட்டது. அகரம் என்ற ஆரியத்தை வழங்கி (பாணிநி ஸூத்திரத்தில் வார்த்திகம் — 3-3-108 வர்ணாத் கார:) அது எழுத்துக்கெல்லாம் முதலாயதுபோல் அஃ துணர்த்தும் பொருள் உலகுக்கெல்லாம் முதலாயது அவன் ஆதிபகவன் என்ற ஆரியத்தை வழங்கி விளம் பிய வள்ளுவரின் வைதிக உள்ளத்தை நோக்கிக் காண்க. இக்குறளின் அமைப்பே இவ்வுண்மையைத் திடப்படுத் தும்.

எழுத்துக்கள் உயிர் மெய் என இருவகைப்படும். ''ஔகார இறுவாய்ப்பன்னீரெழுத்தும் உயிரென மொழிப'' ''னகார இறுவாய்ப்பதினெண்ணெழுத்தும் மெய்யென மொழிப'' '(தொல். எழுத். 8, 9) ''அம்முதலீ ராருவிகம் முதன் மெய்ம்மூவாறென விளம்பினர் புலவர்'

(நன்னூல் 63) என்பன இலக்கணம். உயிர் எனினும் ஆவி எனினும் ஒக்கும். மெய் எனினும் உடல் எனினும் ஒக்கும். உயிரெழுத்தை 'அச்' எழுத்தென்றும், மெய்யெழுத்தை ''அல்'' எழுத்தென்றும் கூறுவர். அச்சு அல் (ஹல்) என்பன பாணிநிப்ரத்யாஹாரசூத்திரமடியாக வந்த சங்கேதச்சுட்டுக்கள். இருமொழிகளும் ஒன்றி நிகழும் நீர்மைக்கு ஈதுமோர் அடையாளம். ''கடவுளால் ஆவி மெய்என்று அமைத்த பெயர்க்காரணம் உயிர்களால் முற்றுமுணர்தற்கு அருமையும் கடவுணூலுணர்ந்தோர் வழிச்செல்லுந்தமது பெருமையுந்தோற்ற 'விளம்பினர் புலவர்' என்ருர்'' (நன்னூல் 63) என்று சூத்திரக் கருத்தைச் சங்கர நமச்சிவாயர் உரைத்தார். இங்குக் குறளாசிரியர் அகரம் என்றும் ஆதிபகவன் என்றும் கூறி எழுத்தெல்லாம் என்று பிற எழுத்தனைத்தையும், உலகு என்று பிற பொருளனைத்தையும் ஒக்கத் தொடுத்த நயத்தையும் நுட்பத்தையும் ஓர்க. உயிரெழுத்துக் களேயாயினும் அகரத்தை நோக்க அவை மெய்போல்வன உயிர்ப் பொருள்களேயாயினும் ஆதிபகவனை நோக்க அவை சடம் போல்வன என்னும் மறைமுடி நுட்பம் இதனுல் குறிக்கப்பட்டதாம். ''உயிருமுடலுமுடலாக வோங்கித் தயிர் வெண்ணெய் தாரணியோடுண்டான்'' (தேசிகமாலை. அமிர்த. 5) என்று வேதாந்த தேசிகர் இந்நுட்பத்தை விளக்கினர். இறைப் பொருளின் ஒப்பற்றதோர் சிறப்பும் ஆட்சியும் மாட்சியும் அத்தகையன என்னும் நுட்பம் அது. அறிபவன் ஆதிபகவன், அறியான் சிற்றுயிர், ஆட்சியுற்றவன் ஆதிபகவன், ஆட்சியற்றவன் சிற்றுயிர் என்று உபநிடதம் ஓதிற்று (ச்வேதாச்வ. 1). இறைமாட்சி அப்பெற்றியது என்றவாறு. இறைப் பொருளுக்கும் சிற்றுயிர்ப் பொருளுக்கும் உற்ற வேற்றுமையுண்மையையும் இறைப்பொருளுக்கே உற்ற ஆட்சிமாட்சிகளின் உண்மையையும் உணர்த்தியவாறு என்று அறிக. சிற்றுயிர்ப்பொருள்களும் இறைப்பொருளுக்கு உடல் போல்வன ஆதலின் அவ்வாறு கூறினர் என்க. ''உலகு நின்னெடொன்றி

நிற்க வேறு நிற்றி'' (திருச்சந்த. 12) என்ற மழிசையர் கோன் திருச்சந்த விருத்தத்தை நோக்குக.

உயிரெழுத்துக்கள் உயிர்ப்பொருள்கள் போல்வன. மெய்யெழுத்துக்கள் சடப்பொருள்கள் போல்வன. உயிர்ப் பொருள் உணர்வுடையது, சடப்பொருள் உணர்வற் றது. உயிர்ப்பொருள்கள் சடப்பொருள்களினும் வேறு பட்டிருப்பினும் அவை அனைத்துமே இறைப்பொருளை (அகரப்பொருளை) முதலாக (பகுதியாக) உடையன. உடல் போன்றது மெய்யெழுத்து உயிர் போன்றது அகரமொழிந்த உயிரெழுத்து. அகர மொன்றுமே இறையெழுத்து. அகாரவாச்சியனுன ஆதி பகவன் இறைப்பொருள். ஆதலின் சடம் உயிர் இறை என்னும் தத்துவமும்மை உணர்த்தியதாயிற்று. அகரம் இறை. ஏனைய உயிரெழுத்து சிற்றுயிர். மெய்யெழுத்து சடம். அகரம் பிற உயிரெழுத்துக்கும் மெய்யெழுத்துக் கும் முதல் (பகுதி). ஆதலின் அகரம் எழுத்தனைத்துக்கும் பகுதி. அது உவமாநம். ஆதிபகவன் பொருளனைத் துக்கும் பகுதி. இது உவமேயம். முதற்றே என்ற சொல் இக்குறட்கு அச்சாணி போன்றது. ஆதிபகவன் முதற்றே என்ற விடத்து ஏகாரம் பிரிநிலை தேற்றம் என்ற இரண்டின் கண்ணும் வந்தது. உலகு தன்னெடொன்றி நிற்கத்தான் வேறு நிற்றலால் பிரிநிலை. ஆதிபகவன் ஒரு வனே எல்லாக்காரணமுமாம். காரணம் (முதல்) பிறி தேதுமன்று என்று தேறி நிற்றலால் தேற்றம். ஆகும் முதல்வனும் ஆக்கும் முதல்வனும் ஆதிபகவனும் ஒரு வனே என்பது அத் தேற்றம்.

காரணம் என்பது மூவகையாம், ஆகும் காரணம், ஆக்கும்காரணம், துணைக்காரணம் என்பதாம். குடத்தை நோக்க மண் ஆகுங்காரணம். குயவன் ஆக்குங்கார ணம். தண்டு சக்கரங்கள் துணைக்காரணம். இதை ஆரியத்தில் உபாதாநகாரணம், நிமித்தகாரணம், சக

காரிகாரணம் என்பர். துணைக் காரணம் நிமித்தத்துள் அடங்கும். உலகு ஆதிபகவன் முதற்றே என்றதால் ஆதிபகவன்தானே ஆகும் முதல்வன் ஆக்கும் முதல்வன் உதவும் முதல்வன் என்னும் மூவகை முதன்மையும் ஒன்றிய ஒரு தனிமுதல்வன் என்று துணிந்தார். இவற்றுள் எம்முதன்மையும் மறுத்தற்கொண்ணுது. மறுப்பார் திருக்குறள் அறையும் ஏகாரத் தேற்றத்தை மறுப்பாராவார். ஆதலின் உலகுக்கும் ஆதிபகவனுக்கும் உற்றுள்ள சம்பந்தம் குடத்துக்கும் குயவனுக்கும் உற்றுள்ளதோர் சம்பந்தம் போன்றதன்று என்ற நுட்பம் உணர்த்தப்பட்டது. குயவன் குடத்துக்கு மண்போன்ற முதலன்று. குயவன் குடமாவதில்லை. குடத்தை ஆக்குபவனே. அவ்வாறே குடம் ஆக்கும் முதலன்று. மண் தன்னைத் தானே குடமாக்கிக்கொள்ளும் முதலன்று. குயவன் ஆக்குமுதல், மண் ஆமுதல் ஆதலின் உலகுக்கெல்லாம் முதன்மையாவது ஆமுதன்மை ஆக்குமுதன்மை என்னும் இருமுதன்மையும் ஒன்றிய ஒரு தனிமுதன்மை. அஃதே இறைமை. அந்நிலையே இறைநிலை. இவ்வுண்மையை வேதம் ஒன்றே உணர்த்தி நின்றது.

அகர முதல என்றதால் வேதத்தைக் குறித்தார். அஃதுணர்த்தும் இறைநிலை உண்மையை ஆமுதன்மையும் ஆக்குமுதன்மையும் ஒன்றிய ஆதிபகவன் முதன்மை என்று துணிந்தார். இவ்வுண்மையை ''உடன்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன் சுடர்மிகு சுருதியுள்'' (திருவாய். 1-1-7) ''எவையும் யவரும் தன்னுள்ளே ஆகியும் ஆக்கியும் காக்கும் அவையுள் தனிமுதலெம்மான் கண்ணபிரான் என்னமுதம் சுவையன் திருவின் மணாளன்'' (ஷ 1-9-1) ''ஆமுதல்வனிவனென்று தற்றேற்றி என், நாமுதல் வந்து புகுந்து நல்லின் கவி தூமுதல் பத்தர்க்குத், தான் தன்னைச் சொன்ன என் வாய் முதலப்பனை என்று மறப்பேனோ'' (ஷ 7—9—3) ''முதல் தனிவித்தேயோ! முழுமூவுல

காதிக்கெல்லாம் முதல் தனி உன்னை'' (ஷ 10—10—9) ''யாவையும் யவருந்தானாய்'' (ஷ 3-4-10) ''மூவுல கங்களுமாய்'' (ஷ 6-3-5) என்ற சடகோபர் திருவாய் மொழியை நோக்குக ஆமுதல்வனென்று தற்றேற்றி யருளப்பெற்ற திருவாய்மொழித் தேற்றமே ஆதிபகவன் முதற்றே என்ற திருக்குறள் தேற்றம் என்பது தேறுக. உடலுமுயிரும் போல் தன் உலகொடுதான் ஒன்றி நிற்ற லும் வேறு நிற்றலும் ஒன்றி நிற்கும் நிலை இறைநிலை என்பது இதனால் உணர்த்தப்பட்டது. அஃதே இறை நிலையொருமை. குயவன் போன்றதோர் முதலுமன்று. மண்போன்றதோர் முதலுமன்று. குயவனும் மண்ணும் ஒன்றினாற்போன்றதோர் மறை உணர்த்தும் இறைநிலை முதன்மை என்று உணர்த்தியவாறு,

இவ்வுண்மையைச் சிலந்தியை உவமை காட்டி வேத மும் பாகவதமும் விளங்கவைத்தன. (முண்டக. 1-1-8 ப்ருஹதாரண்யக 4-1-20; ச்வேதாச்வ. 6; பாகவதம் 2-5-5). சிலந்தி தன்வலையைத் தன்னின்று தானே உமிழ்ந்து விரிக்கின்றது. தன்னுள் தானே உறிஞ்சி இழுத்துக்கொள்கின்றது. தன்னின்று விரித்தல் தன் னுள் ஒடுக்கல் இரண்டையும் தானே செய்கின்றது. விரிப்பைப் படைப்பு என்றும் (சிருட்டி) இழுப்பை ஒடுக்கம் என்றும் (பிரளயம்) வேதம் உணர்த்திற்று. அவ்வாறே முதல்வன் உலகத்தைத் தன்னின்றே விரித்தும் தன் னுள்ளே ஒடுக்கியும் கொள்கின்றான் என்று வேதம் ஓதிற்று. விரித்தலை உமிழ்தல் என்றது. ஒடுக்கலை உண்ணல் என்றது. (கடோப நிஷத். 1-2-25) ''உண் பவன் சராசரங்களை இழுத்துக்கொள்தலால்'' (பிரமசூத் திரம் 1-2-9 தமிழ் செய்தது) என்று வியாசமுனிவர் பிரமசூத்திரத்திற் பணித்தார். ''உலகமுண்ட பெரு வாயா'' (திருவாய்மொழி 6-10-1) ''காரணன் தானே'' ''தானே உலகெல்லாம் தானே படைத்திடந்து தானே உண்டுமிழ்ந்து தானே ஆள்வானே' (ஷ 10-5-3) 'ஞாலமுற்று முண்டுமிழ்ந்த நாராயணனே''

(ஷி 4—3—6) என்றார் சடகோபர். ''மூவுலகுண்டு மிழ்த்த முதல்வ!'' (திருமாலை. 1) என்றார் தொண்ட ரடிப்பொடியாழ்வார். ஆதலின் முதற்றே உலகு என்றதால் உலகனைத்தையும் உண்டுமிழும் முதலாய் அபிந்நநிமித்தோபாதாநகாரணனாய் (நிமித்தமாயும் உபாதாநமாயும் ஒன்றிய ஓர் முழுமுதற்காரணனாய்) நிற்கும் ஒப்பார் மிக்காரையிலதாய உணர்தற்கரிய இறைநிலை இயல்பு துணியப்பட்டது காண்க. ''உணர்ந் துணர்ந்துணரிலும் இறைநிலை உணர்வரிது உயிர் காள்'' (திருவாய் 1-3-6) ''உடன் மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன் சுடர்மிகு சுருதியுள்'' (ஷி 1-1-7) என்றுவேதம் ஒன்றேதான் இறைநிலை உண் மையை உணர்த்தவல்லது என்று சடகோபர் உயிர் களுக்கு உபதேசம் செய்தருளிய ஆர்வத்தையும் அருண் மையையும் உணர்க. 'தனக்குந்தன் தன்மை அறிவரி யான்'' (திருவாய். 8-4-6) என்னும் ஆர்வம் அது. "அவன் தானும் அறிவானோ அறியானோ'' ஸோ அங்க வேத யதிவா நவேத; (வேதம். தமிழ்செய்தது) என்னும் ஆர்வம் அது. ''தனக்கும் தன்னிலையறியவருமொரு தனித்தலைவன்'' (இராமாவ. இரணியன் வதை. 33) என்னும் ஆர்வம் அது. இறைநிலை உணர்தற்கு அரிது என்ற உண்மையை வலியுறுத்தியவாறு.

இக்குறளில் முதல் என்பது பகுதிப் பொருட்டு, அது சிறப்புப் பொருளதோர் மறைச் சொல். ''மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வன்'' (திரு மாலை.1) என்றவிடத்திற்போல். ஆதி, காரணம், யோநி, பகுதி என்பன ஒருபொருட் சிறப்புச் சொற்கள். ''ஆதி யஞ்சோதி'' (திருவாய் 3.4.4) ''ஆதியம்பகவன்'' (ஷி 1.3.5) ''காரணன்'' (ஷி 10.5.2) "விஜ்ஞாநாதி'' (ப்ரஹ்மசூத்ரம் 2.2.41) ''காரணம் (அதர்வசிகா 2.16) ''காரணத்வேந'' (ப்ரஹ்மசூத்ரம் 1.4.14) "யோநி'' (ஷி 1.4.28) ''பூதயோநிம்'' (முண்டக. 1-6 ''ப்ரக்ருதி'' (பகுதி) (ப்ரஹ்மசூத்ரம் 1.4.23) ''ப்ரக்ருதி

லீநஸ்ய'' (தைத்திரீய. 10.24) முதலியன காண்க. எழுத்துக்கெல்லாம் அகரம் பகுதியாவது போல் உலகுக்கெல்லாம் ஆதிபகவன் பகுதி என்று இக்குறள் உணர்த்திற்று. ஆதலின் உவமான மெய்ப்பொருள் கண்டாலல்லாது உவமேய மெய்ப்பொருள் காணவொண்ணுது. உவமானப் பொருள் அத்திறப் பிரசித்தியும் வலிமையும் உடையது. இக்குறள் முதற்குறள். முதற்பொருள் தொழப்படவேண்டும் என்று வேதம் 'காரணம் துத்யேய: (அதர்வ 2. 17) ஓதிற்று. அதலின் அகரம் எழுத்துக்கெல்லாம் பகுதி. அஃதுணர்த்துபவன் பொருளுக்கெல்லாம் பகுதியாகிய ஆதிபகவன். அவனே வாழ்த்துவாம் (தொழுதெழுவாம்) என்று அகரத்தின் முதன்மையை உவமை காட்டி அஃதுணர்த்தும் ஆதிபகவன் பொருள் முதன்மை விளங்க முதற்குறளைத் தொடங்கினர். இதனல் எழுத்துக்கெல்லாம் அகரம் பகுதி; அவ்வாறே அஃதுணர்த்தும் ஆதிபகவன் பொருளுக்கெல்லாம் பகுதி என்பது துணியப் பட்டது. எவ்வாறு எனின் கூறுவாம்.

உகாந்தத்தில் பல்வேறு சிற்றுயிர்களும் அவைகட்கிட்ட பூட்டுக்களாம் சடப்பொருளின் விகாரப்பாடுகளாகிய பொருள்களும் எல்லாம் பேருருக்கள் (நாமரூபங்கள்) ஒழிந்து, உயிர் சடம் என்னும் இயல்புகண்டு, பிரித்துப் பேரிட வொண்ணுவாறு எண்ணரிய நுண்ணியதொரு நிலைமையை அடைந்து இறைப்பொருளின்கண் ஒடுங்குகின்றன. அந்நிலையில் உள்ளது என்று மட்டிலுமே சொல்லுதற்காமேயன்றி வேறு எவ்வாற்ருனும் சொல்லுதற்கியலாவாறு நுண்ணியதோர் ஒடுக்க நிலையை அடைந்துள்ளன என்று உபநிடதம் ஓதிற்று. ''ஊழ்கொண்டசமயத்தன்னுனுருவு கண்டாரை யொத்தார்'' (இராமாவ. பால. உலாவியற்.19) என்று இப்பொருளைக் கம்பர் பாடியவாறு. ஆதலின் அந்நிலையில் பொருள்கள் இது அது, இவன் அவன், இவள் அவள் நின்றனர், நடந்தனர், கிடந்தனர், நின்றன, நடந்தன, கிடந்தன என்று பிரித்து அறிதற்கும் மொழிதற்கும்

ஆகாவாறு உருவற்றுச்செயலற்று ஒடுங்கிப்போந்தன. அவ்வொடுக்க நிலையை ப்ரளயம் என்பர். நன்கு ஒடுங்கியது என்பது ப்ரளயம் என்னும் சொல்லின் பொருள். இறைப்பொருளின்கண் உயிர்ப் பொருள்களும் உடற் பொருள்களும் (சடப்பொருள்களும்) பேருருவொழிந்து மிக்க நுண்ணிய நிலையை அடைகின்றன என்றவாறு. பின்னர்ப்படைப்பில் அவை இறைப்பொருளால் பல்வேறு பேருருக்களில் யாக்கப்பட்டுப் பலவாக விரிகின்றன. விரிந்து உளவாகிய ப்ரபஞ்சம் என்னும் நிலையை அடைகின்றன. இறைப் பொருளின் கருத்தால் உயிர்ப் பொருள்கள் அவ்வவற்றின் வினைக்குத்தகச் சடத்தோடு பிணைக்கப்பட்டுப் பல்வகைப் பிரிவினில் விரிந்து நிகழும் நிலை அது. அந்நிலையை ப்ரபஞ்சம் என்பர். நன்கு விரிந்தது என்பது ப்ரபஞ்சம் என்னும் சொல்லின் பொருள்.

பொருள்களுக்குப்போல் எழுத்துக்களுக்கும் ப்ரளயமும் ப்ரபஞ்சமும் உற்றுள்ளன. அவற்றின் ஒடுக்கநிலை எழுத்துப்ரளயம், விரிந்தநிலை எழுத்து ப்ரபஞ்சம் என்னப்படும். ப்ரளயத்தில் மெய்யெழுத்துக்களும் உயிரெழுத்துக்கள் பிறவும் உருவிழந்து எண்ணுதற்கரிய நுண்ணிய நிலையெய்தி இறையெழுத்தாகிய அகரத்தில் ஒடுங்குகின்றன. பின்னர்ப் படைப்பில் அகரத்தினின்றும் விரிவுற்று ப்ரபஞ்சம் என்னும் தூல நிலை எய்திப் பல்வேறு வடிவங்களில் விரிந்து உளவாகி நிகழ்கின்றன. இது வர்ணசர்க்கம் என்னப்படும். (பிரம சூத்திரம். 1.3.27-29; அதிகரணஸாராவளி 121) பொருட்படைப்பைப் பூதசர்க்கம் என்றது போல் எழுத்துப்படைப்பை வர்ணசர்க்கம் என்றவாறு. இம்முறையால் அகரம் எழுத்துக்களுக்கெல்லாம் பகுதியாக விருத்தலை ஆதிபகவன் உலகுக்கெல்லாம் பகுதியாக விருத்தற்கு உவமையாகக் காட்டினர். வாசகத்தை வாச்சியத்துக்கு உவமையாகக்காட்டிய சீரும் வீறும் திருவள்ளுவரின் வைதிக மாண்புக்குத் தக்க சான்றாகும். ஒன்று சப்தப்பிரமம். மற்றொன்று

பரப்பிரமம். இரண்டும் பிரமம் (ப்ரஹ்மம்) ஆதலின் உவமையின் வைதிக நலத்தையும், பொருத்த நயத்தையும் ஓர்ந்துணர்க. சப்தப்ரஹ்மம் வேதம். அது வாசகம். பரப்ரஹ்மம் ஆதிபகவன். அவன் வாச்சியன். வாசகம் என்பது உணர்த்தும் சொல். வாச்சியம் என்பது உணர்த்தப்படும் பொருள். சொல்லுக்கும் (சப்தத்துக்கும்) பொருளுக்கும் (அர்த்தத்துக்கும்) உணர்த்தல் உணர்த்தப்படுதல் என்பதோர் சம்பந்தம் இயல்பாக என்றுமுற்றவொன்ருகும். மாந்தர் சங்கேதத்தால் இன்று நேற்று ஆக்கிக்கொண்டதொன்றன்று. படைப்புக் காலம் தொடங்கி இறைவன் நித்ய சங்கற்பத்தால் நிலையுற்றதோர் உண்மை என்பது ஆன்ருேர் துணிபு, வாசகமுணர்த்துமதே வாச்சியம். வாசகவயத்ததே வாச்சியம் என்பது வேதநெறி. ஆதலின் இறைவனே சாஸ்த்ரயோநி (ப்ரஹ்ம சூத்ரம் 1-1-3) என்று வியாச முனிவர் சூத்திரம் பணித்தருளினுர். அத்திறமறை நெறியின் வலிமை தோற்ற வள்ளுவர் வாசகத்தை (அகரத்தை) வாச்சியத்துக்கு (ஆதிபகவனுக்கு) உவமையாகக் கூறினுர். இரண்டினுடைய இயல்பும் அப்பெற்றியது என்று அவற்றின் தன்மையை உணர்த்தியவாறு. இதனுல் உவமையின் சீர்த்தியும் பிரசித்தியும் எத்திறச் சிறப்புடையது என்பது அறியலாம்.

அகரம் எழுத்துக்கெல்லாம் பகுதி. ஆதிபகவன் பொருளுக்கெல்லாம் பகுதி. ஆதலின் அகரம் இறையெழுத்து. ஆதிபகவன் இறைப் பொருள். அகரத்தைப் பிரகிருதி (பகுதி) யாகவுடைய எழுத்துக்களெல்லாம் அகரத்தின் பிரகாரங்கள். அகரம் அவற்றின் பிரகாரி. அதுபோல் ஆதிபகவனைப் பிரகிருதி(பகுதி) யாகவுடைய பொருள்களெல்லாம் ஆதிபகவனின் பிரகாரங்கள். ஆதிபகவன் அவற்றின் பிரகாரி. அவ்வகரம் அவ்வாதிபகவனை உணர்த்தும் சக்தி உடையது என்பது முதற்குறளின் துணிபு. அகரத்துக்கும் எழுத்துக்களுக்கும் ஆதிபகவனுக்கும் உலகுக்கும் உற்றுள்ள பிரகாரிப் பிரகார சம்பந்த உண்மையையும், அவ்வுண்மையை உணர்த்தும் அகரத்

தின் சக்தியையும் துணிந்து விளம்பிய வள்ளுவரின் வைதிக வீறு எத்திறச் சிறப்புடையது என்பதை ஓர்ந்துணர்க. இத்துணிபின் வைதிகச் சிறப்பைச் சிறிது விரித்து உரைப்பாம்.

எவற்றின் தோற்றமும் நிலைபேறும் ஒடுக்கமும் எதன் கண்ணே அது அவற்றின் பிரகிருதி; அவை அதன் பிரகாரம். இது எழுத்துக்கும் பொருளுக்கும் ஒத்தது "எது வேதத்தின் முதலில் சுரம் (ஸ்வரம் ப்ரணவம்) என்று சொல்லப்பட்டதோ வேதத்தின் முடிவில் நிலையுற்றதோ அது (ப்ரணவம்) எழுத்துக்கெல்லாம் பிரகிருதியில் (அகரத்தில்) ஒடுங்குகின்றது. அதற்கு இறைவன் பொருள்" (தைத்திரீய 10.24 தமிழ் செய்தது) என்று இறையெழுத்தாகிய அகரத்தின் பிரகிருதி உண்மையையும் ஏனைய உயிருடலெழுத்துக்களின் பிரகார உண்மையையும் தைத்திரீய உபநிடதம் ஓதிற்று. "நாவினுணின்று மலரும் ஞானக்கலைகளுக்கெல்லாம் ஆவியுமாக் கையுந்தானே" (திருவாய். 6.9.8) என்ற திருவாய் மொழியை நோக்குக. அவ்வாறே "இப்பூதங்கள் எதனின்று தோன்றுகின்றனவோ, எதனுல் வாழ்கின்றனவோ, எதன்கண் ஒடுங்குகின்றனவோ அதை அறிய விரும்பு. அது பிரமம் (இறை)" (தைத்திரீய 3.1 தமிழ் செய்தது) என்று உபநிடதம் இறைப்பொருளின் பிரகிருதி உண்மையையும் உயிருடற்பொருள்களின் பிரகார உண்மையையும் உணர்த்திற்று. உயிர்ப் பொருளும் உடற்பொருளும் இறைவனுக்கு உடல் போல்வனவாம் பிரகாரங்கள் என்ற நுட்பம் காண்க. பூதங்கள் பூதயோநி என்றதன் உண்மை தெளிக. "கடல் வண்ணன் பூதங்கள்" (திருவாய். 5-2-1) "மாதவன் பூதங்கள்" (ஷை 5-2-2) "தடங்கடற் பள்ளிப் பெருமான் தன்னுடைப் பூதங்கள்" (ஷை 5—2—3) "வைகுந்தன் பூதங்கள்" (ஷை 5—2—5) என்று சடகோபர் பன்னிப் பணித்தருளினர். "உடன் மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன் சுடர்மிகு சுருதியுள்" (திருவாய் 1-1-7)

''காயமும் சீவனும் தானே'' (ஷை 1—9—6) ''ஊழி தோறூழி உருவும் பேரும் செய்கையும் வேறு வையங் காக்குமாழி நீர்வண்ணன்'' (ஷை 7—3—11) என்ற திருவாய்மொழியில் இப்பொருள் பின்னும் தேற விளங்கும். இதனால் எழுத்துப்பிரகிருதியாகிய அகரம் பொருட்பிரகிருதியாகிய ஆதிபகவனை உணர்த்தி நிற்கும் சக்தி விளக்கப்பட்டது.

மூலப் பகுதியும் உயிர்ப்பொருளும் அநாதி. அவை இறைப்பொருளில் ஒன்றுதல் ஒடுங்குதல் என்னப்பட்டது. உயிர்ப்பொருள் ஞான சொரூபன். ஞான குணத்தனுமாம். ஒடுக்க விரிவுகள் ஞானசொரூபத்துக்கல்ல. ஞானகுணத்துக்கே ஒடுக்க விரிவுகள் உறுதற்காம். அவை உறுதற்குரிய ஞானகுணவாயிலாக உயிர்ப் பொருளுக்கு ஒடுக்கவிரிவுகள் கூறியவாம். அவ்வாறே உயிர்ப் பொருளுக்குப் பிறப்பு இறப்பு என்பதில்லை. ஆக்கை சேர்தலைப் பிறப்பு என்றும் ஆக்கை நீங்குதலை இறப்பு என்றும் கூறியதாம். இம்முறையால் ஒடுக்கம் விரிவு என்றதன் பொருளையும் பிறப்பு இறப்பு என்றதன் பொருளையும் அறிக. இனி இப்பொருளைச் சிறிது விளக்கிக் கூறுவாம்.

மேற்கூறியவாறு சடம் உயிர் என்னும் இரண்டுக்குமே ஒடுக்கமும் விரிவும் உள்ளன. சடப்பொருளின் ஒடுக்க விரிவுகள் அவற்றின் சொரூபத்தில் நிகழும் விகாரப்பாடுகளாம். அவ்விகாரப்பாடுகள் அவற்றின் சொரூபத்தைப்பற்றியவாம். ஒருபேருரு (நாமரூப) நிலையை விட்டு மற்றொரு பேருரு நிலையை அடைதல் அது. அது சொரூபத்தில் விகாரப்பாட்டை அடைந்து நிற்கும் நிலை. தீயின் விகாரம் நீர், அது சொரூப விகாரம். தீ என்னும் சொரூபத்துக்கு நிரூபகமாகிய வெம்மை என்னும் குணம் ஒழிந்து, நீர் என்னும் சொரூபத்துக்கு நிரூபகமாகிய தண்மை உடையதாய்ப் பேரும் உருவும் மாறிய நிலை. ஆதலின் அது சொரூப விகார நிலை. தீயின் நிரூபகமாகிய வெம்மைக் குணத்துக்கு நீரின்

நிருபகமாகிய தண்மைக் குணம் முரணுதலின் நீர் தீயின் சொரூப விகாரம். ஆதலின் சடப் பொருள்களின் தோற்றமும் மாற்றமும் சொரூபத் தோற்றமும் மாற்றமுமாம். உயிர்ப் பொருளின் ஒடுக்க விரிவுகள் அதன் குணமாகிய உணர்வில் (ஞானத்தில்) நிகழும் ஒடுக்க விரிவுகளாம். சொரூபத்தில் எவ்வகை விகார முமின்றி ஞான சொரூபனுயும் ஒடுக்க விரிவுகள் உறுதற்குரிய ஞான குணத்தனுயும் நிற்கும் இயல்வினன். கருமவயமாக உயிர்ப்பொருளுக்கு இறைவன் பூட்டும் பஞ்சபூத விகாரமாகிய யாக்கையில் கட்டப்படுதல் பிறப்பு. அப்பூட்டு ஒழிதல் இறப்பு என்னப்படும். ஞான சொரூபனுய் என்றுமுள்ள உயிர்ப் பொருளுக்குப் பிறப்பு மில்லை. இறப்புமில்லை. பிறப்பு இறப்பு என்பது ஆக்கைப்பூட்டுறலும் ஆக்கைப்பூட்டறலுமாம். உயிர்ப் பொருளாகிய சீவன் சொரூப விகாரம் அற்றவன். உற்றது அவன் வினைக்குத் தக அவ்வவ்வாக்கைகளில் கட்டுப்படுதலும், அவ் வினையொழிந்தவாறே அக்கட்டு ஒழிதலுமாம். வினையின் பயனும் வடிவமும் ஆக்கை. ஆக்கை வினையடியாக வந்தொழிதலை ''குடம்பை தனித்தொழியப் புட் பறந்தற்றே, உடம்போடுயிரிடை நட்பு'' (குறள் 338) என்று குறளாசிரியர் தெளிய விளக்கினுர். இங்குக் குடம்பை என்றது முட் டையை. புட்கூட்டையன்று. நீடம் என்னும் ஆரியத் துக்கு முட்டை, கூடு என்று இரண்டு பொருள்கள் உள்ளன. ஆரியத்தில் பறவைக்கு நீடஜம் அண்டஜம் என்று பெயர். முட்டையில் தோன்றுதலால் அப் பெய ருடையது. நீடம் அண்டம் என்றதற்கு முட்டை என்று பொருள். ஜம் (ஜாதம்) என்றதற்குத் தோன்றியது என்று பொருள். நீடம் என்னும் சொல்லுக்குக் கூடு என்ற பொருளும் உள்ளது. இக்குறளில் கூடு என்பது பொருளன்று. முட்டை என்பதே பொருள். ''இறக்குங் காலிவனே வேதம், இறகுதான் முளைத்தவாறே, பறந் திடும் புட்கள் போலப், பறந்துடனெழிய நீங்கும்'' (வஸிஷ்டஸ்ம்ருதி. 6.3 தமிழ்செய்தது.) ''ஆசாரஹீநம்

ந புநந்தி வேதா: யத்யப்யதீதா: ஸஹ ஷட்பிரங்கை: சந்தாம்ஸ்யேநம் விஜஹத்யந்தகாலே நீடம் சகுந்தா இவ ஜாதபக்ஷா:'' என்பது அங்குள்ள சுலோகம். பிறப்பொழுக்கம் கெட்ட பார்ப்பானை வேதங்கள் சுத்தம் செய்ய மாட்டா. அவன் இறக்குங்கால் அவன் ஓதிய வேதங்களெல்லாம் சிறகு முளைத்த பறவைகள் முட்டையை விட்டுப் பறந்தொழிவது போல் அவனை விட்டு ஒழிந்து போம்—என்பது இச்சுலோகப் பொருள். ஜாத பக்ஷா: என்பதைப் பறந்தற்றே என்பதனோடும் நீடம் விஜஹத்யந்தகாலே என்பதைக் குடம்பை தனித்தொழிய என்பதனோடும் சகுந்த என்பதைப்புள் என்பதனோடும் ஒப்பு நோக்கி அவற்றின் ஒருபொருண்மை காண்க. ஆதலின் அஃதே உரிய சீரிய பொருள் என்பது தெளிவு. ''இனிக் குடம்பை என்பதற்குக் கூடென்றுரைப்பாருமுளர். அது புள்ளுடன் தோன்றாமையானும் அதன்கண் அது மீண்டு புகுதலுடைமையானும் உடம்பிற்கு உவமையாகாமையறிக'' என்று இவ்வருங்குறட் கருத்தைப் பரிமேலழகர் விரித்த உரையின் சீர்மையைக் காண்க. உடம்பு வினைப் பயன். வினைகழிய உடம்பொழியும் என்ற வேதப் பொருளை விளக்கும் அருங்குறள் ஈதென்பதை விளங்கக் காண்க. ஆதலின் சொரூபத்தில் எவ்வித விகாரப்பாடுமின்றியிருக்கச்செய்தே வினைவயத்தாற் பூட்டப்பட்ட உடம்பின் கூட்டால் வந்த உயிரின் தரும பூதஞானத்தின் ஒடுக்க விரிவுகளாகும் குணவேறுபாடுகளால் உறும் வேறுபாடு உயிருக்குள்ளது. அவ்வுடற்பூட்டின் உறுதலையும் அறுதலையும் நோக்கி உயிர்ப்பொருளுக்குப் பிறப்பும் இறப்பும் கூறப்பட்டது. உயிர்ப்பொருளுக்குப் பிறப்பு இறப்பு என்னும் விகாரப்பாடு இல்லை என்பது வேதத்துணிபு. இதைச் சொரூப விகாரமன்று, சுபாவவேறுபாடு என்பர். ''அலங்கலில் தோன்றும் பொய்ம்மையர வெனப் பூதமைந்தும் விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம். கலங்குவதெவரைக் கண்டாலவரென்பர் கைவிலேந்தி, இலங்கையிற் பொருதாரன்றே மறைகளுக்

கிறுதியாவார்'' (இராமாவ. சுந்தர.1) என்று கவிச்சக்ர வர்த்தி இப்பொருளை அழகுறக் குறித்தார். சடப்பொருளை நோக்கப்பஞ்ச பூதவிகாரப்பாடு, உயிர்ப்பொருளை நோக்க வேறுபாடு, அவ்விரண்டாலாகிய வீக்கம் உலகாகிய தூலப்பிரபஞ்சம் என்னும் பவக்கடல், அவ்வீக்கமாகிய பவக்கடலை ஒழித்து உயிர்களுக்கு வீடு என்னும் பேரின்ப மாவீட்டை அருளுமவன் மறைமுடி அறையும் இறைப் பொருளாகிய தெய்வச்சிலைப் பரமனுய்த் திகழும் இராம பிரான் என்று காட்டினர். இப்பாடலில் அவர் என்னும் சொல் அகாரவாச்சியர் அகரம் உணர்த்தும் பரமனர் ஆதிபகவனர் என்னும் பொருளை உணர்விக்கும் நயம் காண்க. என்பர் என்றது இதைப் பின்னும் திடப்படுத்தும். ஆதிபகவன் இராமபிரான் என்றவாறு.

இங்கு ப்ரஸக்தானுப்ரஸக்தி முறையால் பின்னும் சிலபொருள் கூறவேண்டி வருகிறது. அவற்றைக் கூறிப் பின்னர் இங்குக்கூறிவரும் பொருளைத்தொடர்ந்து கூறுவாம். மேலே கூறிய 'குடம்பை தனித்தொழிய' என்ற குறளையும், 'ஒழுக்கம் குன்றியவனை வேதம் தூய்மை செய்யாது. இவன் இறக்குங்கால் சிறகு முளைத்த பறவை போல் இவன் ஓதிய வேதம் இவனை விட்டு ஒழிந்துபோம்' என்ற மேற்கூறிய வசிஷ்ட ஸ்ம்ருதி சுலோகத்தையும் ஒப்புநோக்கிக் குடம்பை என்றதற்கு முட்டை என்பது பொருள் என்று காட்டப் பட்டது. அச் சுலோகம் ''மறப்பினுமோத்துக் கொள லாகும் பார்ப்பான் பிறப்பொழுக்கங்குன்றக் கெடும்'' (குறள் 134) என்ற குறளின் உரிய பொருளை உணர்தற்குப் பெரிதும் உதவுதலின் அது கொண்டு இக்குறட் பொருள் இங்கு விளக்கப்படுகிறது. இவ் விளக்கம் இங்குக் கூறிவரும் பொருளுக்கும் வேண்டி யிருத்தலால் தொடர்பருமையும் பெறப்படும். பார்ப்பான் தான் முன்பு ஓதிக் கொண்ட வேதத்தை மறந்தாலும் பின்பு அவ்வேதம் மீண்டும் ஓதிக் கொள்வதற்கு ஆகும். மறப்பினும் வேதம் கெடாது; ஆனல் அவன்

பிறப்பொழுக்கம் குன்றிடில் அவன்பால் ஓதிய அவ் வேதம் கெடும் என்பது இக்குறட் பொருள். எதைக் கொளலாகும். என்றுரோ அதையே கெடும் என்றுர். அது ஓத்து. ஓத்து என்பது வேதம். ஓதியே வேதம் கொள்ளப்பட வேண்டும். அது அத்தியயநம் என்னப் படும். வரிப்பாட்டால் கொள்வதற்காகாது என்னும் முறை இதனுல் உணர்த்தப்பட்டது. வேதம் என்பது வாய்மொழி. அது எழுதாக் கிளவி. வாயோத ஓதியே கொள்ளப்படவேண்டும். ''வாயோது வேதம்'' (பெரிய திருமொழி 3.2.2) என்றுர் மங்கையர் கோன். ஓதிக் கொண்ட வேதத்தை மறக்கக்கூடாது, மறந்தால் அது ஓத்து மறத்தல் (அதீதவிஸ்ம்ருதி) என்னும் தப்பு ஆகும். பின்னும் ஓதிக் கொள்ளல் அதற்குக் கழுவாயாகும், வேதம் தன்னை ஓதிக்கொண்டவனைத் தூய்மை செய்யும் இயல்புடையது. மறந்த வேதம் மீண்டும் ஓதிக்கொள்ளப்பட்டாலும் அதன் தூய்மை செய்யும் இயல்பு கெடாது. ஆனுல் ஓதிக்கொண்ட பார்ப்பான் பிறப்பொழுக்கம் குன்றினுல் அவன் ஓதிக் கொண்ட வேதம் அவனைத் தூய்மை செய்யும் தன்மை கெட்டு அவன் இறக்குங்கால் அவன் பால் எவ்வித நலனும் பயத்தற்கியலாது அவனை விட்டுப் பறந்தொழியும். முற்கூறியது வேதத்தின் தூய்மையாக்கும் தன்மையை வலியுறுத்தற் பொருட்டு. பிற்கூறியது ஒழுக்கம் கெட்ட பார்ப்பான்கண் அத்தன்வை கெடுமாற்றை வலியுறுத்தற்பொருட்டு. வேதம் தன்னை ஓதிக்கொண்டவனைத் தூய்மை செய்யும் தன்மையைப் பிறப்பொழுக்கம் குன்றிய பார்ப்பான்பால் இழத்தலால் கெடும் என்றுர். பிறப்பொழுக்கம் கெட்ட பார்ப்பான் கெட்டேயொழிந் தானுதலின் அவன் பின்னும் கெடுதற்கில்லை. அவ்வாறு கெட்டொழிந்த பார்ப்பான்கண் வேதம் தூய்மை செய்யும் தன்மையை இழத்தலால் அவ்விழவை நோக்கி வேதம் கெடும் என்றுர். தான் கெட்டதுமன்றிச் சந்த்ர புஷ்கரணியையும் கெடுத்தான் என்றது போல், கொளலாகும் கெடும் என்றது.ஓத்தை. பார்ப்பானையன்று.

ஆவதும் கெடுவதும் ஒத்தே. ஆகும் என்றவிடத்து அதன் தூய்மை செய்யும் தன்மை கெடாமையும், கெடும் என்றவிடத்து அத்தன்மை கெடுதலும் உணர்த்தப்பட்டன. கெடாமையும் கெடுதலும் ஒத்துக்கே. பிறப்பொழுக்கம் குன்றுதவன்கண் கெடாமையும், குன்றியவன்கண் கெடுதலுமாம். இப்பொருளை ''எப்படித் தலையோட்டில் தோயமும் நாய்த் தோலில் நீரும் இடத்தின் தோடத்தால் கெடுமோ அப்படியே ஒழுக்கம் கெட்டவனிடத்தில் ஓதிய வேதம் கெடும்'' (பாரதம். சாந்தி 35-42 தமிழ் செய்தது,) என்று பாரதம் கூறியது. ''குன்றுதன்னொழுக்கத் தோன்மாட்டோதிய வேத மெல்லாம், துன்று நாய்த்துருத்தி நீர் போல் தூய்மையைச் செய்யமாட்டா'' (அதிகரணஸாராவளி. 278 தமிழ் செய்தது) என்று வேதாந்த தேசிகர் விளக்கமுறக்கூறினார். ஒழுக்கம் கெட்டவனிடத்தில் வேதம் தூய்மை செய்யும் தன்மையை இழந்து கெடும் என்றது அவ் விளக்கம். மறப்பினும் என்ற குறளின் மெய்ப்பொருள் மேற்கூறிய பாரத அதிகரணசாராவளி சுலோகங்களில் விளங்குதல் காண்க.

நீர் தூய்மை செய்யும் இயல்பு உடையதே. ''நீர் தூய்மை செய்க'' (வேதம் தமிழ் செய்தது) என்று வேதம் ஓதிற்று. ஆயினும் அது நாய்த் துருத்தியில் பட்டக்கால் அந்த இயல்பை இழந்துவிடும். ஆதலின் அது கெட்டது ஆயிற்று. அவ்வாறே வேதம் தன்னை ஓதிக்கொண்டவனைத் தூய்மை செய்யும் இயல்பு உடையதே. ஆயினும் ஒழுக்கம் கெட்ட பார்ப்பான்கட்பட்டக்கால் அந்த இயல்பை இழந்துவிடும். ஆதலின் அது கெட்டது ஆயிற்று. தூய்மை செய்யும் தன்மை கெட்டது என்றவாறு. நாய்த்துருத்திக்கட்பட்ட நீர் உவமானம். பிறப்பொழுக்கம் கெட்ட பார்ப்பான்கட்பட்ட வேதம் உவமேயம். நீர் பட்டது நாய்த்தோலில் வேதம் பட்டது ஒழுக்கம் குன்றிய பார்ப்பான் தோலில். ஒன்று நாய்த் தோல், மற்றொன்று நரத்தோல். இரண்

டும் தோலே. ஒன்று உயிர் பொன்றலில் கெட்டதோல் ஒன்று ஒழுக்கம் குன்றலில் கெட்டதோல். பிறப்பொழுக்கம் குன்றிய பார்ப்பான் ஓதிக்கொண்ட வேதம் கெடும் என்ற உண்மை இதனால் விளக்கப்பட்டது. ''ஒழுக்கத்தினின்று வழுவிய பார்ப்பான் வேதப்பயனைப் பெறமாட்டான்'' (மநு. 1.109 தமிழ் செய்தது) என்றார் மநு.

''உணங்கல் கெடக் கழுதை உதடாட்டம் கண்டென் பயன்'' (திருவாய் 4-6-7) என்ற திருவாய்மொழியையும் இங்கு நோக்குக. இது வெறிவிலக்குத்துறைப் பாடல்- முறை கெட அணங்காடும் வெறியை விலக்கும் துறை. முறைமை கெட்டவர் ஓதல் பாடல் முதலியன கழுதை வாய் வைத்துக்கெட்ட உணங்கல் போல்வன என்றார். கழுதையின் உதடாட்டத்தால் (வாயிற்பட்டதால்) உணங்கலின் தூய்மை கெட்டு உண்பதற்குத் தகாததாயிற்று. அவ்வாறே முறைமை கெட்டாரின் நாவாட்டத்தால் (ஓதல் பாடல்களால்) ஓத்தின் தூய்மை கெட்டுப் பயன் பயத்தற்கியலாதொழியும் என்றபடி. உணங்கல் போல் வேதம், கழுதை உதடாட்டம் போல் ஒழுக்கம் கெட்டார் நாவாட்டம். ஓராட்டத்தால் உணங்கல் கெட்டது. மற்றோராட்டத்தால் ஓத்துக்கெட்டது என்றபடி. உதடாட்டத்தால் கழுதை கெடவில்லை. உணங்கலே கெட்டது. நாவாட்டத்தால் பார்ப்பான் (வருணம்) கெடவில்லை. ஓத்தே கெட்டது. இத் திருவாய்மொழியில் கெட என்றதற்கும் இத் திருக்குறளில் கெடும் என்றதற்கும் பொருள் ஒன்றே. கெடுமவை உணங்கலும் ஓத்தும் என்பது அப்பொருள். முன்னூற்றுணிபொருளாதலின் ஈதே உரிய பொருள் என்று அறிக. பார்ப்பானை நோக்க ஒத்து மறத்தலும் ஒழுக்கம் குன்றலும் ஓத்தை நோக்கக் கொளலாதலும் கெடுதலும் என்று நேர்படப் பொருள் கொள்க. பார்ப்பானை நோக்கக் கெடுதல் என்று பொருள் கொள்ளுதல் மாறுபடக் கொள்ளுதலா

கும். ஆதலின் கற்ற வேதத்தை மறந்தானுயினும் அவ் வருணம் கெடாமையின் பின்னும் அஃதோதிக் கொள் ளலாம். அந்தணனது உயர்ந்த வருணம் தன்னெழுக்கங் குன்றக்கெடும் என்று பொருளுரைத்தல் பொருந்தாது என்க. வேதத்தின்பால் திருவள்ளுவருக்கு உள்ள பற்றும் பத்திமையும் அவரது வைதிகவீறும் எத்துணை மாட்சித்து என்பதற்கு இக்குறள் ஒன்றே போதிய சான்ருகும். இக்குறளில் பிறப்பொழுக்கம் என்ற பாடத்தை இன்ஞெரு சிலர் திரிக்கப்பார்க்கின்ருர்கள். அதைத் திருக்குறள் பொருது என்பதை அவர்கள் அறியாராயினர்.

இனி மேலே கூறிவந்த பொருளைத் தொடர்ந்து கூறுவாம். அகரம் எழுத்துக்களுக்கெல்லாம் பிரகிருதி எழுத்துக்களெல்லாம் அகரத்தின் பிரகாரங்கள். அவ் வாறே ஆதி பகவன் பொருள்களுக்கெல்லாம் பிரகிருதி பொருள்களெல்லாம் ஆதிபகவன் பிரகாரங்கள். அகரத் தால் உணர்த்தப்படுபவன் ஆதிபகவன் என்பது மேற் கூறி வந்த பொருள். எழுத்து வாசகம். பொருள் வாச்சியம். எழுத்துக்கெல்லாம் அகரம் பிரகிருதியாதல் போல் பொருளுக்கெல்லாம் ஆதிபகவன் பிரகிருதி. வாசகமனைத்துக்கும் பிரகிருதியாகிய அகரம் வாச்சிய மனைத்துக்கும் பிரகிருதியாகிய ஆதிபகவனை உணர்த்தி நின்றது என்பது இக்குறட்பொருள்.

இனி அகரமுணர்த்தும் பொருள் ஆதிபகவன் என் பதை விளக்கிக் கூறுவாம். பகவான் என்னும் சொல் ஆரியம். பக என்னும் சொல் மதுப் விகுதி ஏற்றுப் பகவான் என்னும் வடிவம் பெறுகிறது. பக என்னும் சொல் பரிபூர்ணமான ஆறு திருக்குணங்களை உணர்த் தும். மதுப் விகுதி அந்த ஆறு திருக்குணங்களையும் உடையவன் என்னும் பொருளை உணர்த்தும். அந்த ஆறு திருக்குணங்களையும் உடையவனுக்குப் பகவான் என்பது பெயர். அது பரப்பிரமமாகிய வாசுதேவனையே

உணர்த்தும் சக்தி உடையது. பிறர் எவரையும் உணர்த்தாது. அக்குணங்கள் ஒரு சிறிதளவு பிறரிடத்தில் இருப்பது காரணமாக அவர்கள் பூசிக்கத் தக்கவர்கள் என்பது கொண்டு உபசாரவழக்காக அவர்களைப் பகவான் என்று குறித்தற்காகும் என்று பராசரமுனிவர் பணித்தார்.'' எல்லாக் காரணங்களுக்கும் காரணமாகும் பொருளைப் பகவான் என்னும் சொல் உணர்த்தும். சம்பர்த்தா பர்த்தா என்னும் இரண்டு பொருளையும் பகரம் உணர்த்தும். நாயகன் நடத்துபவன் படைப்பவன் என்னும் பொருளைக்ககரம் உணர்த்தும். பக என்னும் சொல் பூரணமான ஐசுவரியம் தருமம் புகழ் செல்வம் ஞானம் பற்றின்மை ஆகிய இவ்வாறும் பக என்னப்படும். பூதங்களனைத்துக்கும் ஆத்துமாவான அந்தப் பூதாத்துமாவினிடத்தில் பூதங்கள் வசிக்கின்றன, அவன் பூதங்களனைத்தினிடத்திலும் வசிக்கின்றான். இது வகரம் உணர்த்தும் பொருள் ஆதலின் அவன் வீவிலன். இவ்வாறு இந்தப் பெருஞ் சொல்லாகிய பகவான் என்பது பரப்பிரமமாகிய வாசுதேவனுக்கு உரியது. பிறரை உணர்த்தாது. பூசிக்கத்தக்க பொருள் என்னும் உரியபொருளை உணர்த்தும் சால்பை உடையது. அவன்பால் உபசாரவழக்கன்று; பிறரிடத்தே உபசார வழக்கு. பூதங்களுடைய தோன்றுதலும் ஒடுங்குதலும் வருதலும் செல்லுதலும் இவனிடத்திலே. ஆதலின் அவன் பகவான் என்னப்படுவான். தீய குணங்கள் முதலியன இல்லாமல் ஞானம் சக்தி பலம் ஐசுவரியம் வீரியம் தேசு ஆகிய ஆறுகுணங்களும் பரிபூர்ணமாயிருத்தலால் அவைகளை உடையவன் பகவான் என்னும் சொல்லுக்கு உரியபொருள். பரமாத்துமாவாகிய அவனிடத்தில் பூதங்களெல்லாம் வசிக்கின்றன. பூதங்களனைத்தின்கண்ணும் அனைத்துக்கும் ஆத்துமாவாகிய அவன் வசிக்கின்றான். ஆதலின் அவன் வாசுதேவன் என்று ஓதப்படுகின்றான்'' (விஷ்ணுபுராணம். 6-5.72-80. தமிழ் செய்தது) என்று பராசர முனிவர் பகவான்

என்னும் சொல்லின் உரிய பொருளை விளக்கியருளினர். இப்பொருளே மெய்ப்பொருள் என்று வேதம் கண்டார் களும் வேதம் வல்லார்களுமாகிய மெய்ஞ்ஞானியர்கள் மேற்கொண்டு உவந்தருளினர்கள். ''நாராயணுக்யோ பகவாந்'' (வி. பு, 1-3-4; நாராயணநாமனுகிய பகவான் தமிழ் செய்தது) ''ஓம் நமோ வாசுதேவாய தஸ்மை பகவதே நம:'' (ஷை 1—9—78 வாசுதேவ னுக்கு ஓம் நமோ. அந்த பகவானுக்கு நமோ. தமிழ் செய்தது), ஆவிர்பபூவ பகவாந் பீதாம்பரதரோ ஹரி:'' (ஷை 1—20—14 பகவானுகிய பீதகவாடை உடுத்திய அரி தோன்றினன். தமிழ் செய்தது) ''நாராயண: ப்ரப்ரஹ்மஸ்வரூபீ பகவாந்'' (ஷை 1—4—4 நாராயணன் பரப்பிரமசொரூபி பகவான், தமிழ் செய்தது) ''பகவாந் பரமேச்வர:'' (ஷை 5—1—59 பகவான் பரமேசுவரன் தமிழ் செய்தது) என்பன பராசர முனிவர் பின்னும் பணித் தருளியவை.

பகவான் உபதேசித்தருளிய பஞ்சராத்ரம் (அஞ்சல்) என்னும் மறைநூலுக்குப் பகவத் சாஸ்த்ரம் என்று பெயர். பகவான் உபதேசித்தருளிய நூலாதலாலும் பகவானையும் அவன் வழிபாட்டையும் உணர்த்தும் நூலா தலாலும் அது பகவத் சாஸ்த்ரம் என்னப்பட்டது. அதில் ஓதிய முறையால் பகவானை வழிபடுவார்க்குப் பாகவதர் என்பது பெயராயிற்று. பாகவதர் என்பார் பகவானு டைய (திருமாலுடைய) அடியார்.

பகவான் தானே (கண்ணபிரான்தானே) பாடி யருளிய உபநிடதத்துக்குப் பகவத் கீதை என்பது பெயர். பகவான் கண்ணபிரானுய்த் திருவவதாரம் செய்து பார்த் தனுக்கு உபதேசித்தருளிய உபநிடதமாதலால் அதற் குப் பகவத் கீதோபநிஷத் என்னும் பெயர் உற்றதும் உரியதுமாயிற்று. ஸ்ரீபகவான் மொழிந்தான் (ஸ்ரீபக வாந் உவாச) என்று கீதைதானே பன்னி ஓதுதலால் கீதை ஸ்ரீ பகவான் தானே பொருளாக ஓதியருளிய உப நிடதம் என்று கீதையே காட்டித்தந்தது.

பகவான் தெய்வத்திருச் சரிதையைப் பாடியருளிய சுகமுனிவர் திவ்வியபுராணத்துக்குப்பாகவதம் என்பது திருநாமமாயிற்று. பகவான் விஷயமாகப் பாடிய மறை ஆதலால் அது பாகவதம் என்னப்பட்டது. பகவத: இதம் (பகவானுடைய இது) என்று அதன் வியுற்பத்தி (சொற் புணர்ச்சி இலக்கணம்) பகவானுடைய சொரூபம் ரூபம் குணம் ஐசுவரியம் முதலியன உணர்த்தப்படுதலான் பாகவதம் என்றபடி. அதனுள் பகவான் என்பவன் வாசு தேவன் நாராயணன் பரமாத்துமா ப்ரஹ்மம் ஆதி என்று பன்னி உரைக்கப்பட்டுள்ளது. ''வாசுதேவே பகவதி 1-2-7; "வாசுதேவனுகிய பகவானிடத்தில்'' தமிழ் செய்தது) ''பகவான் ஸாத்வதாம் பதி: (1-2-14 சாத் துவர்களின் பதி ஆகிய பகவான், தமிழ் செய்தது) ''கவ யோநித்யம் பக்திம் பரமயாமுதாவாசுதேவே பகவதி குர் வந்தி'' (1-2-14 ஞானிகள் ஆர்வப்பெருக்கில் வாசுதேவ ஞகிய பகவானிடத்தில் பத்திமைசெய்கின்ருர்கள். தமிழ் செய்தது.) ''ப்ரஹ்மேதி பரமாத்மேதி பகவானிதி சப்த்ய தே'' (1-2-11 ப்ரஹ்மம் என்றும் பரமாத்துமா என்றும் பகவான் என்றும் சொல்லப்படுகின்ருன். தமிழ் செய் தது) ''வாசுதேவபரா வேதா:'' (1-2-28 வாசுதேவனே வேதத்துக்குப் பொருள். தமிழ் செய்தது) ஏஷவை பகவாந்ஸாக்ஷாத் ஆத்யோ நாராயண: புமாந்'' (1-9-18 இவனே ஸாக்ஷாத் பகவான் ஆதி. நாராயணன் புருடன், தமிழ் செய்தது) ''தஸ்மை பகவதே நம: ய ஏஷ ஆத்ய: புருஷ: கல்பே கல்பே ஸ்ருஜத்யஜ:'' (2-6-37—38 யாவனொருவன் ஆதிபுருடனே பிறப் பிலியாய்க் கற்பம்தோறும் படைக்கின்ருனே அந்த பகவானை வணங்குகின்றேன்- தமிழ் செய்தது) இங்கு ஆதியபகவான் என்று ஓதியுள்ளது காண்க. பாகவத ஆதியபகவானே திருக்குறள் ஆதிபகவன் என்பது காண்க. ''பகவதி சாத்வதபுங்கவே'' (1-9-32; சாத்து வர்பதியாகிய பகவானிடத்தில்: தமிழ் செய்தது) ''நாரா யணபராவேதா:'' (2-5-15 நாராயணனே வேதங்களுக் குப் பொருள்: தமிழ் செய்தது) ''நாராயணே பகவதி''

(2-6-30 நாராயணனுகிய பகவானிடத்தில் தமிழ் செய்தது) ''பகவாந் தர்மயோநி: ஜநார்தந;'' (3-8-35 பகவான் தரும முதல்வன் ஜநார்தனன், தமிழ் செய்தது) ''பகவாந் தேவகீசுத;'' (10-33-7) பக வான் தேவகிமைந்தன். தமிழ் செய்தது) என்பன காண்க.

திருமாலின் ஆயிர நாமத்துள் பகவாந் என்பது ஐந் நூற்றறுபத்து மூன்றும் திருநாமம். பன்னீரக்கரத் திரு மாலின் திருமந்திரத்தில் பகவாந் என்றது திருமந்திர மாய் ஓதப்பட்டுள்ளது. மந்திரமாதலின் அது திருமாலுக் கே உரியது. திருமாலேயே உணர்த்தும் சக்தி உடையது என்னும் உண்மைக்கு எவ்விதத் தடையும் எழுப்புதற் காகாதென்று அறிக. ''வ்யக்தம் ஹி பகவாந் தேவ; ஸாக்ஷாத் நாராயண: ஸ்வயம்'' (நாரதீய. 1,32,) ''வேத வேத்யோஹி பகவாந் வாசுதேவ: ஸநாதந;'' (கூர்ம) ''பகவாந் இதி சப்தோ யம் ததா புருஷ இத்யபி நிருபாதீ ச வர்த்தேதே வாசுதேவே ஸநாதநே'' (நார ஸிம்ஹ) முதலிய புராண ப்ரசித்தியும் காண்க.

''பிணக்குடை யறுவகைச் சமயமும் நெறியுள்ளி யுரைத்த கணக்கறுநலத்தனன் அந்தமிலாதியம் பகவன்'' (திருவாய் 1.3.5) என்று சடகோபர் ஆதியம் பகவன் என்றது திருமாலின் உரிய திருநாமம் என்ற உண்மை யை விளங்கக் காட்டித் தந்தார். ஆதியம் பகவன் என்ருர் சடகோபர். ஆதியபகவாந் என்ருர் சுகர். ஆதி பகவன் என்ருர் வள்ளுவர் இம்மூவர் உள்ளமும் ஒன்றே என்றதை இதனுல் காண்க. அது மறைமுடி உள்ளம். அஃதே அகர முதல என்றதன் உள்ளம். ஆதி என்ற சொல்லே முன் வைத்து ஆதியம் பகவன் என்று சடகோப ரும், ஆதியபகவாந் என்று சுகரும், ஆதிபகவன் என்று வள்ளுவரும் பணித்துள்ளது உபசாரப் பொருளை விலக்கி உரிய முழுமுதற் பொருளாகிய திருமாலே உணர்த்தி நிற்கும் வாய்மையை யாப்புறுத்தற் பொருட்டு என்று

அறிக. ஆதலின் பகவான் என்றும் சொல் திருமாலுக்கே உரியது. திருமாலே அச்சொல்லுக்கு உரியவன், பிறர் உரியரல்லர். பிறர்பால் அச்சொல் வழங்கப்படுதல் உபசார வழக்கு என்னும் உண்மை இதனுல் விளக்கப்பட்டது. ''அடியாரும் பகவரும் மிக்கதுலகே'' (திருவாய். 5.2.9) என்ற திருவாய்மொழியிலும் "பண்ண மருந் தமிழ்வேதமறிந்த பகவர்களே'' (தேசிகமாலே. அதிகார 22) என்ற தேசிகமாலேயிலும் பகவர் என்னும் சொல் பூசிக்கத் தக்கவர்கள் என்ற பொருளில் உபசாரமாக வழங்கப்பட்டுள்ளது காண்க. அவ்வாறே "வால்மீகி: பகவாந் ரிஷி:'' (ராமாயணம். பால. 3.37) ''வஸிஷ்ட்டோ பகவான் ரிஷி:', (ஷ அயோத். 5. 3) ''அகஸ்த்யோ பகவாந் ரிஷி:'' (ஷ ஆரணிய 12.23) என்று இராமாயணமும் இவ்வுபாசார வழக்கை உணர்த்திற்று.

இவ்வுண்மையைத் தமது கீதா பாஷ்யத்தில் சங்கராசாரியர் பன்னிப் பணித்துள்ளது காண்க. தொடக்கத்தில்:—''நாராயணன் பரன்... அந்த பகவான் இவ்வுலகைப் படைத்து அதன் நிலே பேற்றைச் செய்ய விரும்பி மரீசி முதலியோரை முன்னம் படைத்து வேதம் ஓதிய ப்ரவ்ருத்தி லக்ஷணதருமத்தை (முப்பால் அறத்தை) பிரஜாபதிகளுக்கு உணர்த்தி யருளினுன். பின்னர்ச் சநகர் சநந்தநர் முதலிய பிறரைப் படைத்து ஞானவைராக்ய லக்ஷணமுடைய நிவ்ருத்தி லக்ஷண தருமந்தை (வீட்டு அறத்தை) அவர்களுக்கு உணர்த்தியருளினுன்.

''வேதம் கூறும் தருமம் இருவகைப்பட்டது. அது உலகு நிலே பெறுதற்கு ஏதுவாகிய ப்ரவ்ருத்தி லக்ஷணம் நிவ்ருத்தி லக்ஷணம் என்னப்பட்ட இருவகை. ஒழுகுவார் காமமடியாக ஞானம் குன்றவே தருமம் வாடி அதருமம் தலேயெடுத்து வளர்வது நோக்கி உலகத்தின் நிலேயைக் காத்தற்கு அந்த ஆதிகர்த்தா நாராயண நாமனுகிய விஷ்ணு ...தேவகி வசுதேவரிடத்தில் க்ருஷ்ணன்

என்னும் அம்சத்தால் அவதாரம் செய்தான் ... அந்த பகவான் ஞான ஐசுவரிய சக்தி பல தேசுகள் நிறைந்த வனுய்...உலகத்துக்கு அருள்புரிந்து கொண்டு பிறந்த வன் போலக் காணப்படுகின்ருன்'' என்ருர். (கீதை 1.1 அவதாரிகை, தமிழ் செய்தது) பகவானே இருவகை அறத்தையும் வகுத்து அவற்றின் திட்ப நுட்பங்களை உணர்த்தியருள்கின்ருன். ஆதலின் அவ்விருவகைத் தருமமும் (ப்ரவ்ருத்தியாம் முப்பாலும் நிவ்ருத்தியாம் வீட்டுப்பாலும்) பகவானே வகுத்த வகை. அதற்குத்தக்க ஒழுக்கத்தினுல் உலகு நிலைபெறுகின்றது என்ற உண்மை இதனுல் விளக்கப்பெற்றதாயிற்று. முப்பால்ப்ரவ்ருத்தியா தலின் பொது; வீட்டுப்பால் நிவ்ருத்தியாதலின் சிறப்பு. இரண்டும் தருமம். அதை உணர்த்தும் நூல் வேதம். அதன் வழிச் சென்று ஒழுகுவார்க்கே இன்பம் உறும் என்றவாறு. "வகுத்தான் வகுத்தவகையல்லாற் கோடி தொகுத்தார்க்கும் துய்த்தலரிது'' (குறள் 377) ''சிறப் பீனும் செல்வமுமீனும் அறத்தினூஉங்காக்க மெவனோ வுயிர்க்கு'' (ஷை 31) ''அறத்தான் வருவதேயின்பம் மற் றெல்லாம் புறத்த புகழுமில'' (ஷை 29) ''அந்தணர் நூற்கும் அறத்துக்கும் ஆதியாய் நின்றது. மன்னவன் கோல்'' (ஷை 543) முதலிய திருக்குறட்பாக்களை இங்கு நோக்குக. ''பகவாந்'' (7.13;8.11) ''பகவத்பக்தி'' (9.13) பகவான் பகவத்சரணு: (9.23) ''பகவத: விஷ்ணோ: பரமேச்வரஸ்ய'' (12.20) ''பகவதா ஸ்வேநைவ உக்த:'' (13.32: பகவான் தன்னுலேயே கூறப்பட்டது. தமிழ்செய்தது) என்று பின்னும் கீதாபாஷ்யத்தில் சங்க ராசாரியர் போற்றிப் பணித்துள்ளது காண்க. பஞ்சராத்ர வழிபாட்டை மேற்கொண்டவர்களைப் பாகவதர் என்று பிரம்மசூத்திர பாஷ்யத்தில் காட்டித்தந்தார் (2.2.39) பகவான் என்னும் சொல் திருமாலை உணர்த்தும் சக்தி உடையது. பாகவதர் என்னும் சொல் திருமாலடியாரை உணர்த்தும் சத்தி உடையது என்பதன் வாய்மையையும் பிரசித்தியையும் இவ்வாற்ருல் அறிக.

யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் சற்றேறத்தாழத் தொண்ணூறு ஆண்டுகட்கு முன் பதிப்பித்த திருக்குறளில் முதற்குறட்குக் குறிப்பு வரையப்பட்டுள்ளது இங்கு நோக்கத்தக்கது. ''ஐசுவரியம் வீரியம் புகழ் திரு ஞானம் வைராக்கியம் என்னுமாறுக்கும் பகம் என்னும் பெயருண்மையால் பகவன் என்பதற்கு இவ்வறு குணங்களையுமுடையோனென்பது பொருள்'' என்று அங்குள்ள குறிப்பு, அப்பதிப்புக் காலத்துக்குப்பின்னரே ஒரு சிலர் ஐதிகங்களைக் கற்பனை செய்யத் தலைப்பட்டுப் போலிப் பொருள்களை ஏற்று வாராயினர் என்பது நன்கு காணலாம். ஆதலின் ஆதிபகவன் என்ற சொல்லுக்கு மேலே உரைத்த பொருளே உரிய சீரிய நேரிய ஆன்றோருணர்த்திய மெய்ப் பொருள் என்பது கண்கூடாம்.

இனி ப்ரணவமும் அகரமும் உணர்த்தும் உரியமுழுமுதற்பொருளை விரித்து விளக்குவாம், ''எது வேதத்தின் முதலில் சுரம் (ஸ்வரம்) என்று சொல்லப்பட்டதோ வேதத்தின் முடிவில் நிலையுற்றதோ அது (ப்ரணவம்) அதன் பிரகிருதியில் (அகரத்தில்) ஒடுங்குகின்றது. அது உணர்த்தும் பொருள் இறைவன்', (தைத்திரீய 10.24 தமிழ் செய்தது) என்ற இப்பொருள் மேலே கூறப்பட்டது. வேதத்தின் முன் ஓதப்படுதலின் அது மூலம் என்னப்படும். அது எல்லா வேதத்தின் சுருக்கு. ஆதலின் அது முன் ஓதப்பட்டு வேதம் தொடங்கும். ஓதி முடிந்த பின் அது (பிரணவம்) பின்னும் ஓதப்பட்டு ஒத்துத் தலைக் கட்டும். இது வேதம் தானே காட்டிய முறை. ''ஓமென்று முதலில் சொல்ல வேண்டும்.'' (வேதம் தமிழ் செய்தது) ''மூன்றெழுத்துடைய ப்ரஹ்மம் (ப்ரணவம்) ஆதி. அதில் வேதம் நிலையுற்றுள்ளது'' (மநு. 11.266 தமிழ் செய்தது) என்றும் ''ப்ரணவத்தை ஒத்தின் தொடக்கத்திலும் முடிவிலும் ஓதல் வேண்டும். அவ்வாறு ஓங்காரம் செய்யப்படாத அது நிலை கொள்ளாமல் பிதிர்ந்துபோம்'' (மநு. 274 தமிழ் செய்தது) என்று மநு கூறினர். இதனால் ப்ரணவப் பொருளே வேதப்பொருள் என்பது

உணர்த்தப்பட்டது. அந்த ப்ரணவம் தனக்கும் அகரம் பகுதி என்று வேதம் ஓதிற்று. ப்ரணவமும் அகரமும் உணர்த்தும் முழுமுதற்பொருள் திருமால் என்பதை வியாகரணம் நிகண்டு வேதம் ஸ்மிருதி இதிகாசம் புராணம் முதலிய மறைநூல்கள் விளக்கிக் காட்டியுள்ளவாற்றை விரித்துக் கூறுவாம்.

ப்ரணவம் மூன்றெழுத்து என்றும் ஒற்றையெழுத்தென்றும் ஓதப்பட்டுள்ளது. இரண்டுக்கும் பொருள் ஒன்றே. அகார உகார மகார இதி (அகாரம் உகாரம் மகாரம் என்று, தமிழ் செய்தது) என்று மூன்றெழுத்தும் ''ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம'' (ஓம் என்று ஒற்றையெழுத்துப் ப்ரஹ்மம். தமிழ்செய்தது) என்று ஒற்றையெழுத்தும் வேதத்துள் ஓதப்பட்டுள்ளது. ''மூலமாகிய ஒற்றையெழுத்தை மூன்று மாத்திரையுள்ளெழ வாங்கி, வேலை வண்ணனை மேவுதிராகில் விண்ணகத்தில் மேவலுமாமே'' (பெரியாழ். திரு. 4-5-4) ''மூன்றெழுத்ததனை மூன்றெழுத்ததனால் மூன்றெழுத்தாக்கி மூன்றெழுத்தை, ஏன்று கொண்டிருப்பார்க்கிரக்க நன்குடைய எம்புருடோத்தமனிருக்கை மூன்றடி நிமிர்ந்து மூன்றினிற்றோன்றி மூன்றினின் மூன்றுருவானான், கான்றடம் பொழில் சூழ் கங்கையின்கரைமேற் கண்ட மென்னுங்கடி நகரே'' (பெரியாழ். திரு. 4-7-10) என்று வேதப் பயன் கொள்ளவல்லபெருமானும் கல்பசூத்ர வ்யாக்தாவாயும் (ஆரியக்கல்ப சூத்திரத்துக்கு உரை வகுத்தவராயும்) பொலிந்து நின்ற பட்டர்பிரான் திருமொழிகொண்டும் ''ஐயமொன்றின்றி அகலிடம் முற்றவும் ஈரடியேயாகும் பரிசுநிமிர்ந்ததிருக்குறளப்பன்'' (திருவாய். 7-10-2) என்ற குருகைப்பிரான் செந்தமிழாரணத் திருவாய்மொழிகொண்டும் ''அங்கையால் அடி மூன்று நீரேற்று அயன் அலர் கொடு தொழுதேத்தக் கங்கைபோதரக்கால் நிமிர்ந்தருளிய கண்ணன்'' (பெரிய திருமொழி 4-2-6) என்றுவையமெலாம் மறைவிளங்க வாள்வேலேந்தும் மங்கையர்கோன் பெரியதிருமொழி கொண்டும் திருக்

குறட்பிரணவமும் திருக்குறட்பரமனும் ஒக்க நிமிர்ந்து சொல்லனைத்தையும் பொருளனைத்தையும் அளந்து கொண்டருளும் இறைமாட்சியைக் கண்டுணர்க. இதனுல் திருக்குறணூலும் அவ்வாறே என்பது தெரியக் காணலாகும். நூற்பெயர் திருக்குறள், நூற்பொருள் திருக்குறளப்பனன்று என்பது முரண் என்னும் உண்மை காண்க. மூன்றெழுத்துப் பிரணவம் காக்கப்படும் மகாரவாச்சியச் சிற்றுயிரெல்லாம் காக்கும் அகாரவாச்சிய இறைப் பரனுகிய திருமாலுக்குச் சேடங்களாய் உரியவை என்று திருமாலின் இறைமைத் தன்மையையும் சிற்றுயிரின் உடைமைத் தன்மையையும் உணர்த்தும் இயல்புடையது. "தூவலம் புரியா மென்றிற் றுவக்கமா வண்ணமொன்றிற், காவலென் றகரத் தாவாய்க் கருத்துறக் காண்மி னீரே'' (தேசிகமாலை. திருமந்திர-1) என்றும் ''விளக்குமவ் வெழுத்தில் நாலாம் வேற்றுமை யேற்றி வாங்கித் துளக்கமி லடிமை பூண்டு தூயராய் வாழ்மி னீரே'' (ஷை ஷை. 2) என்றும் வேதாந்த தேசிகர் விளக்கியருளினர். இது மூன்றெழுத்துப் பிரணவ வாக்கியப் பொருள்.

ஒற்றையெழுத்துப் பிரணவமும் அப்பொருளதே. காத்தல் என்னும் பொருளை உணர்த்தும் அவ என்னும் வினைப்பகுதி டவ்விகுதி ஏற்று அ என்னும் வடிவம் பெறுகிறது. ஆதலின் அகரம் காக்கும் இயல்வினை உணர்த்தும் இயல்பு உடையது. ஒற்றையெழுத்துப் பிரணவப் பொருளும் அஃதே ''அவதேஷ்டிலோப: ச'' (உணுதி. 1) என்ற உணுதி சூத்திரம் அப்பொருளைக் கூறிற்று. அவ என்னும் அதே வினைப்பகுதி யடியாக மந் விகுதிக்கு டிலோபம் வந்து ஓம் என்னும் வடிவம் கொள்கிறது. இங்கு ம் என்னும் ஈறு "மோऽநுஸ்வார:'' (8-3-23) என்ற பாணிநிசூத்திரத்தால் மகாரம் என்னும் மெய்யெழுத்தாம் தன்மை ஒழிந்து அநுஸ்வாரம் என்னும் பரிணமம் உற்று ஒகாரத்துடன் ஒன்றி ஓம் என்னும் ஒரெழுத்தாய் நின்றது. அந்நிலையில் அது ஓங்காரம் என்னப்படும்.

அது அகாரம் இகாரம் உகாரம் என்ருற்போல். அது காக்கும் இயல்வினனுகிய திருமாலே உணர்த்தி நிற்கும். ''நீ ஓங்காரம்'' (ராமாயண. யுத்த. 120.20 த்வமோங் கார:) என்று நான்முகனே முன்னிட்டுச் சிவனுள்ளிட்ட தேவரனைவரும் இராவணசங்காரம் செய்தருளிய இராம பிரானைத் தொழுதேத்தினுர்கள். ''திரண்டமரர் தொழு தேத்த'' (மதுரை, ஆய்ச். 34) என்ற சிலப்பதி காரம் இங்கு நோக்கத் தக்கது. ''நீ ஓங்காரம்'' (விஷ்ணு. புரா 1.4.22) "திடமாகிய ஒற்றை யெழுத்து ப்ரம்ஹம் (பிரணவம் ஓம் என்றே நிலை யுற்றது'' (விஷ்ணுபுரா:3.3.22.23 தமிழ் செய்தது. த்ருவ மேகாக்ஷரம் ப்ரஹ்ம ஓமித்யேவ வ்யவஸ்திதம், என்றது அங்குள்ள ஆரிய சுலோகம்) ''எவனிடத்தில் எல்லாம் ஒன்றி நிற்கின்றனவோ எவன் எல்லாவற்றினின்றும் வேறு நிற்கின்ருனே அந்த வாசுதேவனுன பகவானுக்கு என்றும் ஓம் நம:'' (விஷ்ணுபுரா 1.19.78 தமிழ் செய் தது) ''எவனிடத்தில் எல்லாமோ எவனின்று எல்லாமோ எல்லாவற்றுக்கும் ஆதாரமாகிய எவன் எல்லாமோ அந்த விஷ்ணுவுக்கு ஓம் நம; மேலும் மேலும் நம:'' (ஷை 1.19. 84 தமிழ் செய்தது) என்ற பிரகலாதாழ்வான் திருவாக்கு இங்குக் கூறிய பொருளனைத்தையும் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் பாங்கு காண்க. "அகாரம் பகவானைக் கூறும்'' (தமிழ்செய்தது. அகாரோ பகவத்வாசீ என்று வேதாந்த தேசிகர் ப்ரதாந சதகத்தில் எடுத்துக் காட்டிய புராண சுலோகம்) "ஓம் என்னும் ஒற்றை யெழுத்து ப்ர ஹ்மத்தை (ப்ரணவத்தைச்) சொல்லிக் கொண்டு என்னை நினைத்துக்கொண்டு எவனெருவன் உடம்பை விட்டு இறக்கின்ருனே அவன் பராங்கதியை அடைகின்ருன்'' (கீதை 8.13 தமிழ் செய்தது) என்று இறைவன் தானே அருளிச் செய்தான். இக் கீதை சுலோகத்தை மாபார தம் யாக்கியவற்கியம் முதலிய மறைநூல்களை எடுத்துக் காட்டி விளக்கியுரைத்து ப்ரணவம் திருமாலே உணர்த்தி நிற்கும் இயல்பையும் ப்ரணவத்தை உச்சரித்துக் கொண்டு உடலே விடுபவன் மாவீடு பெறுகின்ருன் என்ற

உண்மையையும் வேதாந்த தேசிகர் தாத்பர்ய சந்த்ரிகை யில் காட்டியருளினுர். அவ்விரிவை அங்குக் கண்டு கொள்க.

இங்குத் தொடர் ஒன்றை மட்டிலும் எடுத்துக் காட்டுவாம். ''மஹா பாரதத்தில் மஹேச்வரவசநம். ''ஓம் என்றே என்றும் ஓதுங்கள், கேசவனைத் தியாநம் செய்யுங்கள். ப்ரணவம் என்பது பரதேவதையின் தியாநம் என்று ஓதப்பட்டது. ஆராதனை செய்ய விரும்புபவன் அதை விஷ்ணுவின்பால் பத்தியோடு செய்கின்ருன்'' என்று பகவான் யாக்கியவல்கியர் கூறுகின்ருர்'' என்பது அத்தொடர் (கீதை 8.13) இந்த கீதை சுலோகத்துக்கு ''ஓங்காரத்தை உச்சரித்துக் கொண்டு அதன் பொருளாகிய இறைவனுன என்னை (கீதாசாரியனுன கண்ண பிரானை) தியாநம் செய்து கொண்டு எவன் இறக்கிருனே அவன் பராங்கதியை அடைகின்ருன்'' (தமிழ் செய்தது) என்று சங்கராசாரியர் பாடியம் பணித்தார். ''எழுத்துக்களுள் நான் ஓரெழுத்து'' (கீதை. 10.15 தமிழ் செய்தது) அது ப்ரணவம் ''ப்ரணவம் எழுத்துக்கு முதல்'' தமிழ் செய்தது). ப்ரணவோ ஹ்யக்ஷரம் பரம், என்ற சுலோகம் ப்ரதாநசதகத்தில் எடுத்துக் காட்டப்பட்டது. ஆதலின் அது ''ஆதிமறை'' (தேசிகமாலை, அமிர்தாஸ் 35) ''செழுமறையின் முதலெழுத்து'' (ஷை அதிகார. 42) என்று வேதாந்ததேசிகர் பாடியருளினுர். ஆதிமறை உணர்த்துமவன் ஆதிபகவன் என்ற உண்மை காண்க. இதனுல் ஓங்காரவாச்சியனும் அகாரவாச்சியனும் ஒருவனே. அவன் காக்கும் இயல்வினனுகிய திருமால் அவன் ஆதிபகவன் என்றது தேறி நின்றது.

''காக்குமியல்வினன் கண்ண பெருமான்'' (திருவாய். 2-2-9) என்று சடகோபர் ஓதியருளினுர். இது அகரப்பொருளை உணர்த்தும் மறை இலக்கியம். காத்தல் என்னும் பொருளைக் கூறும் அவ என்னும் வினைப்பகுதி டவ்விகுதி ஏற்று அ என்னும் வடிவம்

கொள்கின்றது; ஓம் என்பதும் அவ்விளேப் பகுதி யடியாகத் தோன்றியது என்றது மேலே விளக்கப் பட்டது. அவ்விலக்கணங்களுக்கு இத் திருவாய்மொழி பேரிலக்கியம். அகரம் உணர்த்தும் காக்கும் இயல்வினன் கண்ணபெருமான். அவன் ஆதிபகவன். காக்கும் இயல்வினனுகிய ஆதிபகவனே உணர்த்துதல் அகரத்தின் இயல்பு. "எழுத்தெல்லாம் அகாரம்'' (தமிழ் செய்தது.) 'அகாரோ வை ஸர்வா வாக்' என்று வேதம் ஓதிற்று. அஃதே முதற்குறளில் அநுவதிக்கப் பட்டது. ''அது (அகாரம்) பரிச ஊடுமங்களால் விரி வுற்றுப் பல்வேறு வடிவங்கள் கொள்கின்றது'' என்றும் ''அகாரத்தால் திருமால் சொல்லப்படுகிருன்'' (வேதம்) என்றும் கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையில் (கீதை 10. 33) வேதாந்த தேசிகர் விளக்கியருளினுர். அங்குள்ள ஆரியத்தொடரின் தமிழ் வருமாறு: ''அகாரமே எல்லா வாக்கும். அது ஸ்பர்ச ஊஷ்மங்களால் விரிந்து பல்வேறு உருவம் பெறுகிறது (இருக்கு ஆரணம் 2. ப்ரச்நம் 2 அநுவாகம் 2.) அ என்பது ப்ரஹ்மம் (பஹ்வ்ருசோப நிஷத்) ''அகாரத்தால் விஷ்ணு சொல்லப்படுகிருன்'' (கடச்ருதி. "அகாரேணேச்யதே விஷ்ணு)''என்பது. ரஹ ஸ்யத்ரய ஸாரத்தில் மூலமந்த்ராதிகாரத்தில் இப் பொருளேச் சான்றுகள் பல எடுத்துக் காட்டிப் பின்னும் விரித்து விளக்கியருளினுர். அதன் பரப்பை அந்நூலுள் அவ்வதிகாரத்திலும் வேறு அதிகாரங்களிலும் கண்டு கொள்க. இங்கு வேண்டிய ஒரு தொடரை மட்டிலும் எடுத்துக் காட்டுவாம். "அகாரத்தாலே எல்லாப் பொரு ளுக்கும் ஆதாரனுன பரமாத்மா சொல்லப்படுகிருன். எல் லாச் சொற்களுக்கும் மூலமாயிருத்தல் அகாரத்தின் இயல்பு. எல்லா பொருள்களுக்கும் மூலமாயிருத்தல் பிரமத்தின் (இறைப்பொருளின்) இயல்பு. ஒத்த அவ்வியல்பினடியாக வாச்சியத்துக்கும் வாசகத்துக்கும் உற்ற சம்பந்தம் உணர்த்தப்படுகிறது என்று ஸ்ரீவராஹ புராண வசனத்தாலே எல்லா வாசகத் திரளுக்கும் பிர கிருதியான (பகுதியான) முதலெழுத்துக்கு எல்லா வாச்

சியத் திரளுக்கும் பிரகிருதியான (பகுதியான) நாரா யணன் வாச்சியன் என்று பிரசித்தமான அருத்தத்தை வேதார்த்த ஸங்க்ரஹத்திலே (இராமாநுஜர்) அருளிச் செய்தார். இத்தாலே காரண வாக்கிய சித்தமான எல்லா உலகுக்கும் நிமித்த உபாதாந காரணத்துவமும், அத்தா லே ஆக்ஷிப்தங்களான (அவாய் நிலையால் வந்த) எல்லாம் அறியும் தன்மையும் எல்லாம் வல்லனாய் இருக்கும் தன்மையும் இங்கே சித்தமாயிற்று. இவ்வக்ஷரம் (அகாரம்) பகவத் வாசகம் (பகவானை உணர்த்தும் சொல்) என்னுமிடம் 'அ நிஷேதே புமாந் விஷ்ணௌ' (அ என்பது விலக்கையும் ஆண்பாலில் திரு மாலையும் சொல்லும். நிகண்டு, தமிழ் செய்தது) என்றும் அகாரோ விஷ்ணு வாசக: (அகாரம் திருமாலைச் சொல் லும், தமிழ் செய்தது) "அ இதி பகவதோ நாராயணஸ்ய ப்ரதமாபிதாநம் அபிததா கிம் நாம மங்கலம் ந க்ருதம்'' (அ என்னும் பகவான் நாராயணனுடைய முதற் பெயரை ஓதியவரால் செய்யப்படாத மங்கலம் யாது கொலோ, (தமிழ் செய்தது) என்றும் நிகண்டுகளி லும் பிரயோகங்களிலும் பிரசித்தம்'' என்பது அத்தொ டர். அத்தொடரின் விளக்கம் கருதி ஆரிய மேற்கோள் களையும் மணிப்பவள ஆரியத்துட் சிலவற்றையும் இங்குத் தமிழ் செய்துள்ளது.

அத்தொடர்க்குப் பின்னர்க் காக்கும் தன்மை விரித்து விளக்கப்பட்டுள்ளது. "எப்பொருட்கும் இறை வனாகிய அரியை ஒழிந்த எவர்க்கும் காக்கும் தகைமை இல்லை'' (விஷ்ணுபுரா. 1.22.21) தமிழ் செய்தது என்று பராசர முனிவர் பணித்தார்'' என்பது அவ் விளக்கம். இது கொண்டு அகரம் காக்கும் இயல்வின னாகிய பகவானும் திருமாலைக் கூறும் இயல்புடையது, பிறரைக்கூறாது என்னும் உண்மை எத்துணை வலிமையும் சான்றும் பிரசித்தியும் உடையது என்பதை அறிக. இத் திற நிகண்டு ஆரிட இலக்கண இலக்கிய வேதப் பிரசித் திக்கு முரணாக ஏற்றப்பார்க்கும் எப்பொருளையும் அகா

ரம் பொருது என்னும் உண்மை காண்க. இப்பிரசித்தி யை ''எழுத்துக்களுள் நான் அகாரமா யிருக்கிறேன்'' (கீதை. 10.33. தமிழ் செய்தது) "வேதங்கள் அனைத் தாலும் உணர்த்தப்படுபவன் நானே'' (ஷை. 15.15. தமிழ் செய்தது) என்று அகாரவாச்சியனுன ஆதிபகவன் தானே கீதையில் அருளிச் செய்தான். இக் கீதைப் பொரு ளே முதற்குறளில் உணர்த்தப்பட்டுள்ள உண்மை திரு வள்ளுவர் கண்கொண்டு நோக்கிக் காண்பார்க்குக் கண் கூடாம். ''எல்லா வேதங்களும் எவன் பதத்தை எண்ணு கின்றனவோ... அந்தப் பதத்தை உனக்குச் சுருங்கச் சொல்கின்றேன், அது ஓம் என்பது'' (கடோபநிஷத் 2 15 தமிழ் செய்தது) அப் பதத்தை ''அவன் (உபாசனை வழியால் ஏகுபவன் அதன் உபாசனையின் கரையாகிய அந்த விஷ்ணுவின் பரமமான பதத்தை அடைகின்ருன்'' கடோபநிஷத் 3.9. தமிழ் செய்தது) என்று திருமாலின் பதம் என்று காட்டித் தந்தது.

''அகர முதலவுரை கொண் மங்கைகணவனுக்களித்த னைஅவனிமருவு திருவயிந்தை யடியவர்க்கு மெய்யனே.'' (தேசிகமாலை. நவமணி 2.)என்ற வேதாந்ததேசிகர் பாட லில் அகர முதல என்று வேதத்தைக் கூறியிருத்தல் இங்கு நோக்கத்தக்கது. உரைகொள் மங்கையாகிய சரசு வதி தேவியின் கணவனுகிய நான்முகக்கடவுளுக்கு அகர முதல வாகிய வேதங்களை அருளினுய் என்பது இப்பாடற் பொருள். அகரத்தை பகுதியாக உடையன ஆதலால் வேதங்களை அகர முதல என்ருர். எவ்வாறு பகுதி என்பது மேலே உரைக்கப்பட்டது. இதனுல் அகர முதல என்ற திருக்குறளில் வேதம் குறிக்கப்பட்டுள்ள நலமும் சிறப் பும் நன்கு காணலாம். திருமால் நான்முகனை உந்திக் கமலத்தில் பயந்தான். அவனுக்கு வேதங்களையும் பயந் தான் என்று திருமாலின் காரணமுதன்மையும் குரு முதன்மையும் இதனுல் உணர்த்தப்பட்டவாறு அறிக. "எவன் நான்முகனை முற்பயந்தானே எவன் அவனுக்கு வேதங்களை அருளினுனே மதிநலம் அருளும் அந்தத்

தேவனை நான் வீடு பெற விரும்பிச் சரணம் அடைகின் றேன்'' (ச்வேதாச்வ. 6. தமிழ் செய்தது) என்று உபநிட தமும் ''நான் முகற்குப் பூமேல் பகர மறை பயந்த பண்பன்'' (முதல் திருவந். 33) என்று பொய்கையாழ் வாரும் ''பண்புடை வேதம் பயந்த பரன்'' (திருவாய். 6-6-5) ''மேவித் தொழும் பிரமன் சிவ னிந்திர னுதிக் கெல்லாம் நாவிக் கமல முதற்கிழங்கு'' (ஷெ 10-10-3) என்று சடகோபரும் ''பன்னுகலை நால் வேதப்பொருளை யெல்லாம் பரிமுகமா யருளிய எம் பரமன்'' (பெரிய திரு மொழி. 7-8-2) ''வசையில் நான்மறை கெடுத்த அம் மல ரயற்கு அருளி முன் பரிமுகமாய் இசை கொள் வேத நூலென் றிவை பயந்தவன்'' (பெரிய திருமொழி 5-3-2) என்று மங்கையர்கோனும் ஓதியருளியது காண்க. உப நிடதம் ஓதிய படி ஆதிபகவனை முதற்குறளிற் கூறிப் பிற்குறள்களில் அவனைச் சரணம் அடைதலைக் கூறிய குறளின் வைதிகப் பண்புடைமையை ஓர்ந்துணர்க.

வேத எழுத்துக் கொண்டு இறைவன் உலகத்தைப் படைத்தான் என்று வேதத்துள் ஓதப்பட்டுள்ளது. முதற் குறளில் இப் பொருளை நோக்கிக் காண்க. ''பரனே உலகாய்ப் பல்குவனுனென் றெருதான் தானே நோக்கினு னன்றே'' (சாந்தோக்ய 6-2-3, தமிழ் செய்தது) என்று உபநிடதம் ஓதியது. இறைவன் அருள் கூர்த்து உல காகப் பல்குவேன் என்று தன் கருத்தால் தானே பலவா குமாறு இதனுலும் இதுபோன்ற உபநிடதங்கள் பிற வாலும் உணர்த்தப்பட்டது. வேதமொழிகளைக் கொண்டு நாமரூபப்ரபஞ்சத்தை (பேருருவுலகை)த்தகப் படைக்கின்றுன் என்பதை ''வேதமொழி கொண்டு பல பேருரு படைத்தான்'' (மநு. 1-21; விஷ்ணு புரா. 1-5-63 தமிழ் செய்தது) என்று மநுவும் பராசரரும் ஓதினுர் கள். ''வேத எழுத்துக்கள் அரியின் நாமங்கள். எவ்வளவு வேத எழுத்துக்கள் வேதியரால் ஓதப்பட்டனவோ அவ்வளவு அரிநாமங்கள் ஓதப்பட்டன'' (தமிழ் செய்தது வேதாக்ஷராணி யாவந்தி படிதாநி த்விஜாதிபி: தாவந்தி ஹரிநாமாநி கீர்த்திதாநி ந ஸம்சய:) என்ருராதலின்,

வேதத்தின் முன்னும் பின்னும் தொடக்கத்திலும் முடிவிலும் பிரணவம் ஓதப்படவேண்டும் என்னும் ஓத்து முறையை வேதம் ஓதியுள்ளது மேலே கூறப்பட்டது. அவ்வாறு ஓதும் பிரணவத்துக்கு முன் தொடக்கத்திலும் முடிவிலும் அரிநாமம் ஓதப்படவேண்டும் என்பது வேத முறை ஆதலின் அரிநாமத்தை முன் ஓதியே வேதம் ஓதற் காகும். அவ்வாறே இன்றுகாறும் வேதம் ஓதப்பட்டு வருதல் கண்கூடு. இம் முறையை ''ஆதியந்த மரியென யாவையும் ஓதினாலகில்லன வுள்ளன வேதமென்பன மெய்ந்நெறி நன்மையன், பாதமல்லது பற்றிலர் பற்றி லார்.'' (இராமாவ. பால. சிறப்பு. 3) என்று கம்பர் பாடினர். ''மாதவன் பேர் சொல்லுவதே ஒத்தின் சுருக்கு'' (இரண்டாந்திருவந். 39) என்று பூதத்திரு வடிகள் பாடியருளினர்.

இவ்வுண்மையைக் கம்பர் ஒரு படலம் கொண்டு விளக்கிப் பாடி மகிழ்ந்தார். அது இரணியன் வதைப் படலம். அதனுள் இங்கு வேண்டும் பாடல்கள் சில வரு மாறு:—''வேதத்துச்சியின் மெய்ப்பொருட் பெயரினை விரித்தான்'' (இரணியன். 22 அரியெனும் பெயரினை விரித்தான் என்ற படி.) ''நால்வேதக் கடலமுதை மேலிருங் கற்பகத்தை வேதாந்த விழுப் பொருளின் மேலிருந்த விளக்கை விட்டு சித்தன் விரித்தனனே'' (பெரியாழ்வார் திரு. 4—3—11) என்ற பெரியாழ்வார் திருமொழியை இங்கு நோக்குக. ''ஓநமோ நாராயணாய என்றுரைத் துளமுருகித் தான மைந் திருதடக்கையுந்தலை மேற்றாங்கிப் பூநிறக் கண்கள் புனலுக மயிர் புறம் பொடிப்ப ஞானநாயகனிருந் தான்'' (ஷை.23) என்பன. பிரகலாதாழ்வானை ஞான நாயகன் என்று பாடிய ஆர்வத்தை ஒர்க. ''அறிவின் மிக்கான்'' (ஷை126) என்று பின்னும் போற்றினர். அத் துணை ஒப்பற்ற பிரசித்தி பெற்றவன் பிரகலாதாழ்வான் என்பதை ''நல்லாரெல்லார்க்கும் என்றுமே பிரகலாதன் உவமாநமாக நின்றான்'' (விஷ்ணு புரா.1. 15.157 தமிழ்

செய்தது) என்று பராசரமுனிவரும் ''ஞானிகட்கு முன் செல்பவன்'' (கீதை. 7.17. பாஷ்யம், தமிழ் செய்தது) என்று இராமாநுஜரும் போற்றியுள்ளது நோக்குக.

''முன்னை வேதத்தின் முதற்பெயர் மொழிவது மொழிந்தேன்'' (ஷை 25.) முன்னை வேதம் = பிரணவம். அதன் முதற் பெயர் = அரி, அது மொழிவது இறைவன் என்றவாறு ''உபநிடதங்கள் தீரச் சொல்லுவ தேவரும் முனிவரும் செப்பும் பேரைச் சொல்லுவதல்லது பிறிது மொன் றுளதோ'' (ஷை.29) ''நான்மறை யகப்பொருள் புறப்பொருளறிவார் கவிகளாகுவார் காண்குவார் மெய்ப்பொருள் காலாற் புவிகொள் நாயகற் கடி யவர்க் கடிமையிற் புக்கார்'' (ஷை. 32) திருவடியால் உலகளந்துகொண்ட நாயகனுக்கு அடியாராவார்க்கு அடிமைப் புகுதலே பெறலரும் பேறு என்னும் மெய்ப் பொருளை நான்மறை யகப்பொருள் புறப்பொருள் கண் டுணர்ந்த கவிகள் காண்பார்கள் என்ற கவிச்சக்ரவர்த்தி யின் துணிபை நன்கு நோக்குக.

திருக்குறள் முதற்பாடற்கும் முதலதிகாரத்துக்கும் இவ் விரணியன்வதைப் பாடல்கள் விளக்கமாதல் காண்க. காவிய விசுவரூபம் காட்டினுன் கம்ப நாடன், ''சுருதியாதியில் தொடங்குறு மெல்லையிற் சொன்ன ஒருவன் யாவர்க்கும் நாயகன் திருப்பெயர்'' (ஷை 40) ''நாமமறை'' (ஷை 175) ''தன்னுளே யுலகங்க ளெவை யும் தந்தவை தன்னுளே நின்று தானவற்றுட் டங்கு வான். பின்னிலன் முன்னில னொருவன் பேர்கிலன் தொன்னிலை யொருவராற் றுணியற்பாலனே'' (ஷை 51) என்பன. திருக்குறள் முதற்பாட்டுக்கு இரணியன் வதைப் படலமும், பின் ஒன்பது பாட்டுக்கு விபீடணனடைக் கலப்படலமும் விரிவும் விளக்கமுமாய் நிகழ்தல் நன்கு ஓர்ந்து உணர்க. ஆதி பகவனும் திருமாலின் ஆதிப் பெயராகிய (ப்ரதமாபிதாநமாகிய) அகரத்தில் தொடங் கிய சீர்மை ஒன்றே திருவள்ளுவர் பரமவைதிகர் என்

பதையும் திருக்குறள் பரமவைதிகமங்கல நூல் என்பதை யும் கண்களில் தெரியக் காட்டி நின்றது.

இறைவன் உலகுக்கெல்லாம் சரீரியாகிய முழுமுதற் காரணன். அவன் ஆதிபகவன். அகார வாச்சியன். பிரணவ வாச்சியன். அரிநாமன். பவக்கடலைக் கடந்து வீடு என்னும் மீளாப் பேரின்பம் பெறுதற்கு அவனைத் தாள் பற்றல் ஒன்றே தான் உபாயம் என்பது திருவள்ளு வர் துணிபு இது சாரீரக நூற்றுணிபு. கீதைத் துணிபு. இராமாயணத்துணிபு. திருவாய் மொழித் துணிபு, இது பின்னர் விரித்துக் கூறப்படும். இங்கு அரிநாமம் பிரணவத்துக்குமுன் ஓத்தின் தொடக்கத்தி லும் முடிவிலும் ஓதப்படவேண்டும் என்னும் ஓத்துமுறை விளக்கப்பட்டது. ''ஆதித் தனிக்கோல மானனடியவர்க் காச் சோதித் திருத்தூணில் தோன்றினன்—வேதத்தின் முன்னின்றான் வேழம் முதலே என அழைப்ப, என் னென்று னெங்கட் கிறை''. (நளவெண்பா காப்புச் செய்யுள்) என்று புகழேந்தி வேதத்துக்கு முதலாகிய அரி நாமப் பிரசித்தியையும் அரிமுதல் (ஆதிகாரணம்) என் னும் பிரசித்தியையும் காட்டியவாறு. தமிழெழுத்துக்கு அரிவரி என்பதும், தமிழெழுத்துச் சுவடிக்கு அரிச்சுவடி என்பதும், தமிழெழுத்துப் பயிலும்சிறுவர்களுக்கு எழுத் துப்பயிலத் தோண்டப் படும் குழிக்கு அரிக்குழி என்பதும் பெயராய் நிற்றல் இவ்வுண்மையைக் கண்கொண்டு காணும் சான்றாக நிற்கும் நிலை என்று அறிக.

மேற்கூறி வந்ததின் சுருக்கு வருமாறு:-உடலெழுத் துக்கள், சிற்றுயிரெழுத்துக்கள், இறையுயிரெழுத்து என எழுத்துக்கள் மூன்றுவகையா யுள்ளன. பொருள்களும் அவ்வாறே உடற்பொருள்கள், (சடம்) சிற்றுயிர்ப் பொருள்கள் (சீவர்கள்) இறையுயிர்ப் பொருள் ஆதிபக வன்) என மூன்று வகையாயுள்ளன. அகரம் என்னும் இறையெழுத்து. உடல் சிற்றுயிர்கள் என்னும் எழுத்துக் களுக்குப் பகுதி அவையெல்லாம் அகரத்தில் தோன்று

கின்றன. நிலைபெறுகின்றன. ஒடுங்குகின்றன ஆதலின் அவை அகரத்தின் பிரகாரங்கள். அகரம் அவற்றின் பிரகாரி. அவ்வாறே சடம் சிற்றுயிர்கள் என்னும் பொருள்களுக்கு இறைப் பொருள் பகுதி, அவையெல்லாம் இறைப்பொருளில் தோன்றுகின்றன, நிலைபெறுகின்றன ஒடுங்குகின்றன. ஆதலின் அவை இறைப் பொருளின் பிரகாரங்கள். இறைப்பொருள் அவற்றின் பிரகாரி. உடற்பொருள்களுக்குச் சொரூபத்தில் விகாரப்பாடு, உயிர்ப்பொருள்களுக்கு ஞானகுணத்தில் (சுபாவத்தில்) மட்டிலுமே வேறுபாடு, சொரூபத்தில் விகாரப்பாடு இல்லை. இறையெழுத்தில் அல்லாத எழுத்துக்களுக்குத் தோன்றலும் நிலைபெறுதலும் ஒடுங்கலும் உற்றுள்ளன. இறைப் பொருளில் அல்லாத பொருள்களுக்குத் தோன்றலும் நிலை பெறுதலும் ஒடுங்கலும் உற்றுள்ளன. எழுத்துக் கெல்லாம் அகரம் ஆதிபோல் பொருள்களுக்கெல்லாம் இறைவன் (பகவன்) ஆதி. அகரம் காக்கும் இயல்வினனை உணர்த்தும். காக்கும் இயல்வினன அரிநாமன். அவன் ஆதிபகவன். ஆதிபகவனிடத்தில் பொருள்கள் பிற தோன்றி நிலைபெற்று ஒடுங்கும் இயல்பு உடையன. காக்கும் இயல்வினனை உணர்த்தல் அகரத்தின் இயல்பு. எழுத்துக்களுக்கெல்லாம் பகுதியான அகரம் பொருள்களுக் கெல்லாம் பகுதியான காவலனும் பகவானை உணர்த்தல் இயல்பு, உலகுக்கெல்லாம் ஆதிபகவனே உபாதாந காரணமும் நிமித்தகாரணமுமாவான். ஆகும் முதல்வனும் ஆக்கும் முதல்வனும் ஆதிபகவனே. ஆதலின் ஆதிபகவன் முதற்றே என்றார். ஆதிபகவனுக்கும் உலகுக்கும் உற்ற சம்பந்தம் உயிருக்கும் உடலுக்கும் உற்ற சம்பந்தம் போன்றது. அது சரீராத்ம பாவ சம்பந்தம் போன்றதொன்று என்றவாறு. ஈதே வேதத் துணிபு. மறைநூல்கள் உணர்த்தும் துணிபு. ''உலகுதந் தானும் பல்வேறுயிர்கள் தந்தானு முள்ளுற்றுலை விலாவுயிர்க டோறு மங்கங்கே உறைகின்றானும் மலரினில் மணமு மெள்ளிலெண்ணெயும் மற்றுங்கேளாய் அலகில் தொல் புகழும்பற்றி மூற்றிய அரிகாணத்தா'' (இரணியன்.120)

''தோன்றலு மிடையு மீறுந் தொடங்கிய பொருள்கட் கெல்லாம் சான்றவனிதுவே வேத முடிவு அது சரத மென்ருன்'' (இரணியன்.122) என்று இத்துணிபைக் கம்பர் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தார்.

''ஆக்கையுள்ளும் ஆவியுள்ளும் அல்ல புறத்தினுள்ளும் நீக்கமின்றி எங்கும் நின்ருய்'' (திருவாய் 4-7-6) என்று சடகோபர் பாடியருளினர். ''உலகனைத்தும் இறைவனுக்கு உடம்பு. இறைவன் உலகனைத்துக்கும் உயிர்'' என்று உபநிடதம் பன்னி உரைத்தது. (ப்ருஹதாரண்யக 5.7 அந்தர்யாமி ப்ராஹ்மணம்). இறைவனைச் சாரீரன் என்று உபநிடதங்கள் ஓதின. (தைத்திரீய-ஆநந்தவல்லி; ப்ருஹதாரண்யக 4.5.1) அனைத்துக்குமே சாரீரனுகிய பரப்பிரமத்தை உணர்த்தும் உபநிடத நூலாதலால் வியாச முனிவர் பணித்தருளிய பிரம சூத்திரத்துக்குச் சாரீரகம் என்று பெயர். சாரீரன் முதன்மையை விளக்கிக்கூறும் நூலாதலின் அஃது அதன் பெயராயிற்று. பொருளெல்லாம் இறைவனுக்கு சரீரம் (உடம்பு), ஆதலால் இறைவன் சாரீரன் என்பது சாரீரன் என்னும் சொல் உணர்த்தும் உரிய பொருள். இறைவனுடைய சாரீர உண்மையை ''உடன் மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன் சுடர்மிகு சுருதியுள்'' (திருவாய். 1-1-7) என்று சடகோபர் ஓதினர். ''உலகெல்லாம் உன் (இராமபிரானுடைய) உடம்பு'' (ராமாயண. யுத்த. 120-26. தமிழ்செய்தது) "அவையெல்லாம் அரியின் உடம்பு'' (விஷ்ணுபுரா. 1-22-38. தமிழ் செய்தது) ''அவையாவும் அவன் (அரியின்) உடம்பு'' (ஷை 1-22-86.) தமிழ்செய்தது) ''தன் உடம்பினின்று பல்வேறு படைப்புகளைச் செய்யக் கருதி முதலில் அப்புக்களைப்படைத்தான்'' (மநு. 1-8 தமிழ் செய்தது) ''அப்புக்கள் நாரங்கள் என்னப் படும். அப்புக்கள் நரனிடத்தினின்று உண்டாயின. அவைகள் முன் அவனை ஆதாரமாக உடையன. ஆகையால் அவன் நாராயணன் என்று ஓதப்படுவான்'' (மநு. 1-10 தமிழ் செய்தது) என்று வேதமும் வேதம் கண்ட

இருடிகளும் துணிந்து அருளிச்செய்த பேருண்மை. அஃதே திருவள்ளுவர் துணிபு. அத் துணிபை உவமான முகத்தால் ஐயப்பாடறக் காட்டித் தந்த ஆற்றலில் ஈடு படுக. பிறிதெப்பொருளையும் ஏற்றற்கிய லாவாறு ஆதி பகவனே உலகுக்கெல்லாம் முதல் என்றும் ஆதிபகவனுக் கும் உலகுக்கும் உற்ற சம்பந்தம் சரீராத்தும பாவ சம்பந்தம் என்றும் காட்டித் தந்தார். ஆதிபகவன் என்ற விடத்தில் ஆதி என்றதால் உபசார வழக்கை விலக்கி ஆகும் முதன்மையும் ஆக்கும் முதன்மையும் ஒன்றிய அகார வாச்சியனுகிய அரியேமுதுவேத முதல்வன் உல குக்கெல்லாம் முதல் தனிவித்து என்னும் பரமகாரண உண்மையைத் தெரியக் காட்டித் தந்தவாறு அறிக.

அகாரம் என்னும் சொல் ஆரியம். ஓங்காரம் என் னும் சொல்லும் ஆரியம். ஆரியச் சந்தி ஒன்றில்தான் ஓங்கார வடிவம் உறும். தமிழ்ச் சந்தியில் அவ்வடிவம் இல்லை. ஆரியமும் தமிழும் ஒன்றியே நிகழும் மொழிகள் என்னும் உண்மையைப் பிறிதெச் சான்றும் வேண்டா வாறு ஓங்காரம் (ஓம் என்னும் சந்தி வடிவம்) ஒன்றே ஐயமறக்காட்டித்தரும். ஆரியத்தைப் பகைத்துத் தமிழ் ஒன்று கொண்டே பிரணவப் பொருளை உரைப்பார் கூற்று முற்றுமே போலி என்க. ஆரியம் மூலமூர்த்தி போன்றது தமிழ் உற்சவ மூர்த்தி போன்றது என்று தொடக்கத்திற் கூறியதின் உண்மையை ஓங்காரம் மெய்ப் பித்து நிற்றல் காண்க. ஓங்காரம் அகாரம் என்பன ஆரி யம். ஆரியத்தை ஒழிப்பார்க்கு அவை ஒழிந்தேபோம். அவை ஒழிந்தக்கால் எழுத்தெல்லாம் ஒழிந்து திருக்குற ளும் ஒழிந்துபோம். வேதம் கீதை இராமாயணம் பாரதம் பாகவதம் விஷ்ணு புராணம் மநு நூல் முதலிய மறை நூல்களாகிய பேரிலக்கியங்கள் கொண்டே முதற்குறளின் மெய்ப்பொருள் காண்பதற்காகும். "பனுவற்றுணிபு" (குறள் 21) என்றது முதற்குறளுக்குப் பின்னும் சாலப் பொருந்தும். திருவள்ளுவர் மேற்கூறிய ஆரிடப்பனு

வலனைத்தையும் நன்கு உணர்ந்த ஞானக்கடல். அவற்றின் குருத்தின் பொருளை முதற்குறள் தமிழாக அமைத்த சீர்மையை ஆழ்ந்து ஓர்ந்து உணர்ந்து இன்புறுக. ஆதலின் இன்றொரு சிலர் ஏதோ குறளில் பிறர் ஆரியப்பொருளை ஏற்றிக் கூறிவிட்டார்கள், தாங்கள் கூறுவதே ஆரியத்தை ஒழித்த உரிய பொருள்—என்று பறைதல் போலி என்பதை முதற்குறளே காட்டி நின்றது. வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து இவனோயிது தீர்த்துக் கொள்ளாது போய் ஏதம் பறைந்து அல்ல செய்து கள்ளூடு கலாய்த்தூய்க், கீத முழவிட்டு நீரணங்காடுதல் கீழ்மையே'' (திருவாய் 4:6. 8.) என்ற சடகோபர் திருவாய்மொழி இங்கும் நோக்கத் தக்கது.

## நான்காமத்தியாயம்

இனிக் கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் பின்வரும் பாக்களின் மெய்ப்பொருள் காண்பாம். முதற்குறளின் விரிவும் விளக்கமும் கம்பர் பாடிய இரணியன் வதைப் படலம் என்றும் பின்னுள்ள முதலதிகாரக் குறட்பாக் களின் விரிவும் விளக்கமும் விபீடணனடைக்கலப்படலம் என்றும் மேலே கூறினோம். இப்பொருளை விரிப்பாம். "ஆலமர்வித்தி னருங்குறளானுன்'' (இராமாவ. பால. வேள்வி. 21) என்ற பாடலும் ஓர் அருங்குறள். இது முதற் குறட்குறுமைக்கும் குறுமையாயும் இவ்விரு படலங்களும் முதலதிகாரக் குறள்நெடுமைக்கும் நெடு மையாயும் விளங்கும் சீர்மையை ஓர்க. ''காவிய விசுவ ரூபம் காட்டினுன் கம்பநாடான்'' என்று வேறிடத்து யாம் கூறியதின் உண்மையை இங்கும் கண்டுகொள்க.

முன்னர்த் திருக்குறளின் அமைப்பை நோக்குவாம். முதலதிகாரம் நீலமேகநெடுந்தகையின் இறைமாட்சி யையும் அருண்மாட்சியையும் கூறிற்று. அது அகரம் கூறும் உரிய பொருள். அடுத்த அதிகாரம் அந் நெடி யோன் திருமேனியை நிகர்த்த நீலமேகத்தின் சிறப்பைக் கூறிற்று. அடுத்த அதிகாரம் அதை நிகர்த்த நீத்தா ரின் பெருமையைக் கூறிற்று. அதற்கடுத்த அதிகாரம் அறனை வலியுறுத்திற்று. அது துறப்பதே தொழிலாகத் தோன்றும் அறத்தின் நிறம் என்க. ''ஆரருள் சுரக்கும் நீதியற நிறம்'' (இராமாவ. உயுத். விபீடணன். 137) ''தருமத்தின் தனி மூர்த்தி'' யின் நிறம் (ஷை ஆரணிய. விராதன் 53) ''தீதிலா வுதவி செய்த சேவடிக்கரிய செம்ம''லின் நிறம் (ஷை பால. அகலிகை. 83) அதன் தோற்றம் துறவின் தோற்றம். அருளின் தோற்றம். அதன் தோற்றமும் திவ்வியம், செய்கையும் திவ்வியம். ''என் தோற்றமும் செய்கையும் திவ்வியம்'' (கீதை,

4-9 தமிழ் செய்தது) என்று இறைவன் தானே அருளிச் செய்தான் ஆதலின் அது புகழுடன் தோன்றுகின்றது. அதன் தோற்றமே புகழின் தோற்றம். கைம்மாறு வேண்டாது வேண்டுதல் வேண்டாமை யிலானுய்த் துறப்பதே தொழிலாய்த் தோன்றும் நீலநிறத்து நெடுந் தகையின் தோற்றம் என்ற உண்மை காண்க. இவ் வுண்மையை ''எழில் கொண்டு மின்னுக்கொடியெடுத்து வேகத் தொழில் கொண்டு தான் முழங்கித் தோன்று— மெழில் கொண்ட, நீர்மேகமன்ன நெடுமால் நிறம் போலக் கார்வானம் காட்டும் கலந்து'' (மூன்ருந்திருவந். 86) என்று பேயாழ்வார் காட்டிந்தந்தார். துறப்பதே தொழிலாகத் தோன்றும் அருளின் தோற்றம் என்றவாறு சித்தோபாய மூர்த்தியின் தோற்றம் அது. அத்திற நீதி ''அறத்தான் வருவதேயின்பம் மற்றெல்லாம் புறத்த புகழுமில'' (குறள். 39) ''தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார், தோன்றலிற் ருேன்ருமை நன்று'' (குறள் 236) என்ற குறளேயும் இங்கு நோக்குக. துறப்பதே தொழிலாகத் தோன்றலே புகழொடு தோன் றலாம். அஃதிலார் தோன்றலில் தோன்ருமை நன்று என்று வள்ளுவர் தமது உள்ளத்தைத் தெரிவித்தார்.

ஆதிபகவன் என்பான் அகாரவாச்சியன் ஓங்கார வாச்சியன். அவன் உலகுக் கெல்லாம் முழுமுதற் காரணம். அவன் சருவசரீரியும் சருவசரணியனும் சர ணமுமாம். பவக்கடலைக் கடத்திப் பேரின்பமாகிய மாவீடு அருள்பவன் அவன் ஒருவனே. அவனைத் தாள்பற்றியே அவன் அருளைப் பெறமுடியும், அவனைத் தாள் பற்றலே பேரின்ப வீடு பெறுதற்கு உபாயம். (ஆறு) உய்வுபாயம் அஃதொன்றே. மற்றெதுவும் உபாய மன்று என்று திருவள்ளுவர் கையிலங்கு கனிபோல் பரமவைதிக உபதேசம் செய்து விளங்கவைத்தார்.

முதற்குறளில் உலகுக்கெல்லாம் ஆதி பகவனே சரீரி என்று அகரஉவமை முகத்தால் உணர்த்திப் பின்

னுள்ள குறள்களால் அவன் உலகுக்கெல்லாம் சரணி யன் என்று உணர்த்திய சீர்மைகாண்க.

சரீரி சரணிய சரண என்னும் சொற்கள் காத்தல் என்னும் பொருளைக் கூறும் ச்ரு (ரக்ஷாயாம் காத்தல் என்னும் பொருளில்) என்னும் வினைப்பகுதி யடியாகப் பிறந்த சொற்கள். ஆதிபகவனும் சருவசரீரியாகிய ஒரு வனே உலகுக்கெல்லாம் சரணியன். அவனைத் தாள் பற்றியே உயிர்கள் உய்ய வேண்டும். அஃதொன்றே தான் அவற்றின் உய்வுபாயம் அது சரணுகதி (அடைக் கலம் புகுதல்) என்று வள்ளுவர் ஐயமறக் காட்டித்தந் தார். இது மறைகளும் மறைநூல்களும் விளம்பிய உண்மை. ''அடைக்கலம் தவங்களுள் மிக்கது'' (தைத் திரீய. 50 தமிழ் செய்தது) ''ஓம் என்று ஆத்துமாவை (இறைவன் தாளில்) இடுமின் ஈதே சிறந்த உபநிடதம். தேவர்க்கும் அறிதற்கு அரியது'' (ஷெ 51. தமிழ் செய் தது) ''எவன் நான்முகனை முற்பயந்தானே எவன் அவ னுக்கு வேதங்களைப் பயந்தானே மதிநலம் அருளும் அத் தேவனை நான் வீடுபெற விரும்பிச் சரணம் அடைகின் றேன்'' (ச்வேதாச்வதர. 6. (தமிழ் செய்தது) ''நீ ஓங் காரம் (இராமய. யுத்த. 120-23. தமிழ் செய்தது) ''உலகெல்லாம் உன் உடம்பு'' (ஷெ 26.) தமிழ் செய் தது) ''நீயே சரணியனும் சரணமும் என்று திவ்விய மாவிருடிகள் அறைகின்றூர்கள்'' (ஷெ 17 தமிழ் செய் தது) ''முன் நீயே நெடியோனுய் மூவுலகையும் அளந் தாய்'' (ஷெ 27. தமிழ் செய்தது) என்று நான்முகனை முன்னிட்டுக் கொண்டு முக்கண்ணனுள்ளிட்ட அமரரனை வரும் திரண்டு இராவண சங்காரம் செய்தருளிய இராமபிரானைத் தொழுதேத்தினுர்கள், இராமபிரானை ''உலகுக்கெல்லாம் சரணியன்'' (ஷெ யுத்த. 17.15. தமிழ் செய்தது) என்று இராமாயணம் பின்னும் உணர்த்தியது. ''நீர் நுமதென்றிவை வேர்முதல் மாய்த்து இறைசேர்மின் உயிர்க்கு அதன் நேர் நிறை யில்லே'' (திருவாய் 1-2-3) ''எண் பெருக்கந்நலத் தொண்பொருளீறில வண்புகழ் நாரணன் திண்கழல்

சேரே'' (ஷ 1-2-10) ''அத்தமீலாதி யம்பகவன் வணக் குடைத்தவநெறி வழிநின்று புறநெறிகளேகட்டு உணக்கு மின் பசையற அவனுடையுணர்வு கொண்டுணர்ந்தே'' (ஷ 1-3-5) ''அரியினே அச்சுதனேப் பற்றி யா னிறை யேனுமிடரிலனே'' (ஷ 3-10-4) ''கண்ணனேத் தாள் பற்றி யான் ஓர்துக்கமிலனே'' (ஷ 3-10-8) ''கண்ண னேத்தாள் பற்றி யானென்றும் கேடிலனே'' (ஷ 3-10-5 "ஆறெனக்கு நின்பாதமே சரணுகத் தந்தொழிந்தாய்'' (ஷ 5-7-10) ''நாகணேமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கென்று நாள்தொறும் ஏகசிந்தையனுய்'' (ஷ 5-10-11) ''வாழ்துணேயா வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே வீழ்துணேயாப் போமிதனில் யாதுமில்லே மிக்கதே'' (ஷ 9-1-8) ''கண்ணனல்லா லில்லே கண் டீர் சரண் அது நிற்க வந்து மண்ணின் பாரம் நீக்கு தற்கே வடமதுரைப் பிறந்தான் திண்ணமா நும்முடை மை உண்டேல் அவனடி சேர்த்து உய்ம்மினே எண்ண வேண்டா நும்மதாதும் அவனன்றி மற்றில்லேயே''. (ஷ 9-1-10) ''களேகண் மற்றிலேன்'' (ஷ 5-8-8) என்ற நாவீறுடையபிரான் திருவாய்மொழியையும் ''கையிலங்காழி சங்கன் கருமுகில் திருநிறத்தன் பொய் யிலன் மெய்யன் தன் தாள் அடைவரேல் அடிமையாக் கும்'' (பெரிய திருமொழி. 5-9-1) ''எப்பாவம் பலவும் இவையே செய்திளேத் தொழிந்தேன், துப்பா நின்னடியே தொடர்ந்தேத்தவும் கிற்கின்றிலேன் செப்பார் திண்வரை சூழ் வேங்கடமாமலே என், அப்பா வந்தடைந்தேன் அடியேனே ஆட்கொண்டருளே.'' (ஷ 1-9-5) ''சந்த மாய்ச் சமயமாகிச் சமயவைம்பூதமாகி அந்தமாய் ஆதி யாகி அருமறையவையுமானுய் மந்தமார் பொழில்கள் தோறும் மடமயிலாலும் நாங்கைக் கந்தமார் காவளந் தண்பாடியாய் களேகண் நீயே.'' (ஷ 4-6-9) என்ற வையமெலாம் மறைவிளங்க வாள்வேலேந்தும் மங்கை யர்கோன் பெரிய திருமொழியையும் ''ஒருக்காலே சர ணுக அடைகின்ருர்க்கும் உனக்கடிமை யாகின்றேனென் கின்ருர்க்கும் அருக்காதே அனேவர்க்கும் அனேவராலும்

அஞ்சே லென்றருள் கொடுப்ப னிதுதானேதும் இருக் காலு மெழில் முனிவர் நினைவினாலும் இவையறிவார் செயலுடன் என் இசைவினாலும் நெருக்காத நீள்விரதம் எனக்கொன்றென்று நெறி உரைத்தார் நிலையுணர்ந்து நிலை பெற்றோமே'' (அபயப்ரதாந ஸாரம்) என்ற சந்த மிகு தமிழ்மறையோன் தூப்புல் தோன்றும் வேதாந்த தேசிகர் அபயப்ரதாநஸாரத்தையும் ''புறங்காண அகங் காணப் பொதுமுகத்தி னருணோக்கம் இறங்காத தாம ரைக்கணெம்பெருமா அனியம் புதியால், அறங்காத்தற் குனக்கொருவராரு மொரு துணையின்றிக் கறங்காகு மெனத்திரிய நீயேயோ கடவாய்தான்'' (இராமாவ. விராதன். 50) ''இப் பிறவிக்கடல் கடந்தேனினிப் பிறவே னிருவினையும், துப்புறமுநீர்த்த சுடர்த் திருவடியால் துடைத்தாய் நீ'' (ஷை. ஷை, 61) ''நான்மறை யகப் பொருள் புறப்பொருளறிவார் கவிகளாகுவார். மெய்ப் பொருள் காலாற்புவிகொள் நாயகர்க் கடியவர்க்கடிமை யிற் புக்கார்'' (ஷை உயுத்த. இரணியன். 32) "போதக மொன்று கன்றியிடங்கர்மாப்பொருத போரின் ஆதியம் பரமே யானுன்னபயமென்றழைத்த வந்நாள், வேதமும் முடிவுகாணு மெய்ப்பொருள் வெளிவந்தெய்தி மாதுயர் துடைத்த வார்த்தை மறப்பரோ மறப்பிலாதார்'' (ஷை. விபீடணன். 113) என்ற கவிச்சக்ரவர்த்தி கம்பநாடு டைய வள்ளலின் இராமாவதாரத்தையும் நோக்கித் திருக்குறள் முதலதிகார மெய்ப்பொருள் தெளிக.

சடகோபர் ஆதியம்பகவனும் சுகர் ஆத்ய பகவானும் வள்ளுவர் ஆதிபகவனும் கம்பர் ஆதியம்பரனும் ஒருவனே அவனைத் தாள் பற்றுவாரே பிறவிக் கடலைக் கடப்பார்கள் என்ற உண்மை காண்க. அவ்வொருவன் ஆதிமூலம் என்பான்.

சரணாகதி (தாள் சேர்தல் தாள் பற்றல் அடைக்கலம் புகுதல்) ஒன்றே உய்வுபாயம் என்று உணர்த்தும் இராமாயணத்துக்குச் சரணாகதி வேதம் என்பது பெயர்

(அபயப்ர. 3). அதை மேற்கொண்டதே திருக்குறள் முதலதிகாரம். சரணுகதியே கீதையின் சாரம். அஃதே திருக்குறளின் சாரம் என்ற உண்மையைக் கண்டுணர்க.

இதனுல் திருவள்ளுவர் சமயம் வைதிகம் திருக்குறள் வைதிக நூல் என்பது ஐயமறக் காணலாம். உலகனைத் தையும் உடம்பெனத்தாங்கி இயக்கி ஆண்டு காத்து ஆட் கொள்ளும் இயல்வினனுகிய ஆதிபகவனே இறைவன். அவன் சருவசரீரி. தாங்கு தலால் அவன் ஆதாரன். இயக்குதலால் நியந்தா. ஆண்டு ஆட்கொள்ளுதலால் சேடி. தாங்கி இயக்கி ஆண்டு ஆட்கொள்பவன் சரீரி என்னப்படுவான். தாங்கப்பட்டும் இயக்கப்பட்டும் ஆண்டு ஆட்கொள்ளப்பட்டும் உள்ளவை சரீரம் என்னப்படும். அவை ஆதேயம் நியாமியம் சேடம். ஆதலின் இறைவன் உபாதாநகாரணமும் (முதற்காரண மும்) நிமித்தகாரணமும் (கருத்தாதுணேக்காரணமும்) ஒன்றிய ஓர் முழுமுதற்காரணமாய் நிற்கும் முதல்வன். இது தேற்ற ஏகாரத்தின் வலிமை உணர்த்தும் திடப் பொருள். அம்முதல்வனுகிய ஆதிபகவனேத் தாள் பற் றியே உயிர்ப்பொருள் பிறவிக்கடலேக் கடந்து வீடு என்னும் பேரின்பம் பெறுதற்காகும். உய்வுபாயம் வேறு யாதுமில்லே என்று பரப்பிரமத்தின் சருவ காரணத் தன்மையையும் சருவசரணிய வண்மையையும் பன்னிப் பணித்த திருவள்ளுவர் சமயம் துய்ய உபநிடத சாரீரக சமயம் என்பது கண்கூடு. சருவ சரீரியே பரதத்துவம் (இறைவன்). அவனே சருவ சரணியன் அவனேத் தாள் பற்றிச் சரணம் அடைதலே பரம உய்வுபாயம். தாள் பற்றலேத் தாள் சேர்தல் அடைக்கலம் புகுதல் மறைபுகல் சரணுகதி நியாசம் பரம் துடைத்தல் பரம் மாய்த்தல் நிக்ஷேபம் என்பர். அத்தத்துவத்தையும் அவ்வுபாயத்தையும் திண்ணமறிந்து உரைத்த திரு வள்ளுவர் சமயம் வேதமுடிச்சமயம் என்ற உண்மை காண்க.

இன்ஞெரு சிலர் திருவள்ளுவரைச் சைநர் என்றும் பௌத்தர் என்றும் கருதுகின்றூர்கள். அஃதன்று என் பதை விளக்கிக் கூறுவாம். சைநரும் பௌத்தரும் தருக் கம் ஒன்று கொண்டே தங்கள் சமயத்தைக் கட்டிக் கொண்டவர்கள். அத்தருக்கம் கொண்டே ஒருவர் சமயத்தை மற்ஞெருவர் மறுப்பவர்கள். பௌத் தருள்ளும் நான்கு பெரும் பிரிவு உள்ளது. அவர்களுள்ளும் ஒருவர் கூறுவதை மற்றவர்கள் தருக்கம் கொண்டே மறுக்கின்றூர்கள். வெறுந்தருக்கத் தின் புன்மை இதனல் காணலாம். தருக்கத்தின் புன்மை யையும் நிலையுதலின்மையையும் வியாசமுனிவர் பிரம சூத்திரத்தில் காட்டியருளினர் (21-11-12) இனி இவர் கள் சமயம் எத்தன்மைத்து என்பதைக் கூறுவாம்.

சைநரை ஆருகதர் சமணர் என்றும் கூறுவர். சைநம் நிரீச்சுரம். சைநர் ஈசுவரனை மறுப்பவர்கள். அவர்கள் பரமாணுகாரண வாதியர்கள். பிரமகாரணத்தை மறுப் பவர்கள். ஈசுவரனே இல்லை என்றதால் ஈசுவர காரணம் அறவேஅற்றதாயிற்று. ஈசுவரன் இல்லையாதலால் அவன் தாள் என்பதும் அத்தாளைப் பற்றுதல் என்பதும் முற்றுமே அற்றதாயிற்று. அவர்களுக்கு வேதம் சான்றன்று. அவர் கள் வேதச்சான்றை மறுப்பவர்கள். அகர உண்மையும் உவமையும் அவர்கள் சமயத்துக்கு முற்றுமே முரண். சைநர் தருக்கம் ஒன்றையே சான்ருக மேற்கொண்டவர். அவர்கள் கற்பித்துக்கொண்ட ஸப்தபங்கி அவர்கள் தருக் கத்துக்கு அடி, ''தருக்கினற் சமண்செய்து'' (பெரியதிரு மொழி 2.1.7) என்ரூர் மங்கையர்கோன் ''தற்கச்சமண ரும்'' (இராமாநுசநூற்றந். 99) என்ரூர் திருவரங்கத்த முதனர். அவர்கள் கோட்பாடு வருமாறு:-

சீவர்களும் (உயிர்களும்) அசீவர்களும் (உயிரற்ற வைகளும்) உற்றதும் ஈசுவரன் அற்றதும் உலகு. உலகு என்பது ஆறு பொருள்களால் (திரவியங்களால்) ஆகியது. சீவன் தருமம் அதருமம் புற்கலம் காலம் ஆகாயம் என்

பன அவை. அவற்றுள் சீவர்கள் கட்டுப்பட்டவர்கள் (பத்தர்கள்) யோக சித்தர்கள், விடுபட்டவர்கள் (முக்தர்கள்) என்று மூவகைப்படுவர். தருமம் என்பது நடை (கதி) உடையவர்க்கு அந்த நடைக்கு ஏதுவாகிய ஒரு பொருள் (திரவியம்). அது உலகத்தை வியாபித்து உள்ளது. புற்கலம் என்பது நிறம் நாற்றம் சுவை ஊறு இவற்றை உடைய பொருள். அது பரமாணு வடிவமாயும் அதன் கூட்டரவின் வடிவமான வாயு தேசு நீர் தரை உடல் உலகு முதலியவடிவமாயும் உள்ளது. காலம் என்பது சென்றது நிகழ்கின்றது வருவது என்னும் வழக்குக்கு ஏதுவாகிய அணுவடிவப் பொருள். ஆகாயம் என்பது ஒன்று. அது எல்லையற்ற இடத்தை உடையது. அதனுள் அணுவொழிந்த சீவாஸ்திகாயம் தருமாஸ்தி காயம் அதருமாஸ்தி காயம் புற்கலாஸ்திகாயம் ஆகாயாஸ்தி காயம் என்னும் ஐந்து அஸ்திகாயங்கள் தொகுக்கப்பட்டுள்ளன. பல இடத்திலும் உள்ள பொருளுக்கு அஸ்திகாயம் என்று பெயரிட்டனர். ஞானம் காட்சி சுகம் வீரியம் என்னும் இவற்றை உடையவன் சீவன். அசீவன் என்பது சீவனுக்கு நுகரும் பொருள்களாம். ஆஸ்ரவம் என்பது சீவன் நுகர்தற்குக் கருவிகளாம். பந்தம் (கட்டு) என்பது எட்டுவகைப்படும். அது காதிகருமங்களாகிய நான்கும் அகாதி கருமங்களாகிய நான்குமாம். முன் நான்கும் சீவனுடைய இயல்பான ஞானம் காட்சி வீரியம் சுகம் என்னும் குணங்களுக்குத் தடைகளாம். பின் நான்கும் உடம்பு அதன் கண் பற்று அதில் நிலை அதனடியாக வரும் சுகம் துக்கம் உபேக்ஷைகளாம். நிர்ஜரம் என்பது அருகர் உபதேசம் செய்த மோக்க ஏதுவாகிய தவம். ஸம்வரம் என்பது சமாதியாம் புலனடக்கல். மோக்கம் என்பது பற்று முதலியது அற்றுச் சீவன் தன் இயல்பாகிய சொரூபத்தைப் பெற்று நிற்றலாம். பிருதிவி (தரை) முதலியவற்றுக்கு ஏதுவாகிய அணுக்கள் ஒருதன்மையவே. அவை விகாரத்தால் வரும் பேதங்கள். பொருள்கள் சத்துவமாயும் அசத்துவமாயும் நித்தியமாயும் அநித்தியமாயும் பிந்ந

மாயும் அபிந்நமாயும் உள்ளன. அவை ஒரு தன்மை யவல்ல. ஸ்யாதஸ்தி, ஸ்யாந்நாஸ்தி, ஸ்யாதஸ்திச நாஸ்திச, ஸ்யாதவக்தவ்யம். ஸ்யாதஸ்தி சாவக்தவ்யம், ஸ்யாந்நாஸ்திசா வக்தவ்யம், ஸ்யாதஸ்தி நாஸ்திசாவ க்தவ்யம் என்னும் ஸப்தங்கி நியாயமே எல்லாவிடங்களி லும் நடைபெறும். பரியாயமாய் அதனிலும் மாறுபடும். பொருள்களின் நிலைவேறுபாடு பரியாயம் என்னப்படும். அவற்றின் உண்மை இன்மைகளால் சத்துவமும் அசத் துவமும் உறும் என்பது சைநர் கோட்பாடு.

ஆதலின் சைநர் தருக்கம் ஒன்றைமட்டிலுமே சான் ருகக் கொண்டு அணுவே காரணம். (முதல்) என்று வாதிப்பவர். அவர்களுக்கு ஈசுவரன் (ஆதிபகவன்) இல்லை. ஆதலின் அவன் முதலுமில்லை. அவன் முதற்றே உலகுமில்லை. அவன் தாளுமில்லை. அவன் தாள் பற்றல் என்பதும் இல்லை. வைதிகத்திருக்குறள் முதலதிகாரம் சைநசமயத்துக்கு முற்றுமே முரணும் மறுப்புமாய் நின் றது. திருவள்ளுவரால் எச்சமயம் மறுக்கப்பட்டுள்ளதோ அச்சமயத்தினர் திருவள்ளுவர் என்பது அவருக்கு இழி வையே பயக்கும் என்பதை அவ்வாறு கூறுவார் அறியா ராயினர்.

பௌத்தமும் அவ்வாறே. பௌத்தருள் உட்பிரிவு கள் பல இருப்பினும் அவர்கள் நால்வகைப் பெரும் பிரிவு உடையவர். அவராவர்:—வைபாடிகர், சௌத்தி ராந்திகர், யோகாசாரர், மாத்தியமிகர் என்பார், பௌத் தர்களும் ஈசுவரனை மறுப்பவர்கள். அவர்கள் சமயமும் நிரீச்சுரம். அவர்களும் பரமாணு காரண வாதியர்கள். பரமாணுகாரணவாதியர் பலருள்ளார். அவர் வைசேடிகர் சைநர் பௌத்தர் முதலாயினோர். வைசேடிகரும் பௌத்தரும் பரமாணு நால் வகைப் படும் என்பர். சைநர் நால்வகையை உடன்படவில்லை. சைநர் அநேகாந்த வாதியர். வைசேடிகர் பாதிச் சூநி யராவார். பௌத்தர் முழுச்சூநியர். காரியப் பொருள்

களுக்கு வைசேடிகர்கள் நிரன்வய விநாசம் (ஒழிவு) கூறுகின்றார்கள். ஆதலின் அவர் அர்த்தவை நாசிகர் (பாதிச் சூநியர்) பௌத்தர்கள் காரணகாரியப் பொருள்கள் அனைத்துக்குமே விநாசம் கூறுகின்றார்கள். ஆதலின் அவர் வைநாசிகர் (முழுச்சூரியர்) ஆவார். பிருதிவி (தரை) நீர் தேசு வாயு ஆகிய நான்கின் பரமாணுத்திரளின் வடிவங்களே பூத பௌதிகப் புறப்பொருள்கள். புத்தியும் அதன் விகாரங்களும் அகப்பொருள்கள். புறப்பொருள்கள் கண்கூடு என்பர் சிலர். அநுமானத்தால் அறியப்படும் என்பர் வேறு சிலர். பொருள் என்பதே இல்லை பொருளற்ற புத்தியே உள்ளது என்பர் மற்றுஞ் சிலர். அதுவுமில்லை சூநியமே உள்ளது என்பர் பின்னுஞ் சிலர். புறப்பொருள்கள் உள்ளன அவை கண்கூடு க்ஷணிகங்கள் (கணந்தோறும் தோன்றியழிந்தொழிவன) என்பவர் வைபாடிகர். புறப்பொருளே இல்லை அது கனவிற் காணும் பொருள் போல்வது. அது புத்தியின் விகாரம் கொள்ளும் விசித்திர வடிவம். அது கண் கூடன்று. வடிவத்தின் விசித்திரம் கொண்டு அநுமாநத்தால் அறியப்படும் என்பவர் சௌத்திராந்திகர். உலகு பொய். பொருளே இல்லை. பொருளற்ற புத்தியே உள்ளது என்பவர் யோகாசாரர். அதுவுமில்லை எல்லாமே பொய். உள்ளது என்பதே இல்லை. எல்லாமே சூநியம். இன்மையே உண்மை என்பவர் சருவசூநியவாதியராகிய மாத்தியமிகர். இதற்குச் சதுக்கோடி விநிர்முக்த மாம் தருக்கம் சான்று என்றார்.

பௌத்தர் அனைவரும் ஈசுவரனை மறுத்தது போல் சீவர்களையும் (உயிர்ப் பொருள்களையும்) மறுத்தார். சீவன் என்பது கற்பனை என்றார். உலகு இல்லை சீவன் ஈசுவரன் இல்லை சூநியமே உள்ளது என்னும் சமயம் திருக்குறளுக்கு முற்றும் முரணுதலாலும் அச்சமயம் முற்றுமே திருக்குறளில் மறுக்கப்படுதலாலும் திருவள்ளுவர் பௌத்தர் என்பது முற்றும் முரண் முற்றும் போலி என்க.

இங்குத் தொடக்கத்திற் கூறியபடி ஆதிபகவனே உலகுக்கு முழுமுதற்காரணம். அவனே உபாதாந காரணமும் நிமித்தகாரணமும் ஆவான். ஆதலின் உலகுக்கும் ஆதிபகவனுக்கும் உற்றுள்ள சம்பந்தம் குடத்துக்கும் குயவனுக்கும் உற்றுள்ள தோர் சம்பந்தம் போன்றதன்று. உபாதாநமும் ஆகும் (மண் போன்ற பொருளும்) நிமித்தமும் (ஆக்கும் குயவன் போன்ற பொருளும்) ஒன்றிய முதற்காரணப்பொருள் ஆதிபகவ ளும் பரம்பொருள் என்று கூறப்பட்டது. ஆதிபகவன் மண்போல் ஆகும் முதல்வன். குயவன் போல் ஆக்கும் முதல்வன். இரு முதன்மையும் ஒன்றிய தோர் முழுத் தனி முதுமறை முதல்வன் என்பது திருவள்ளுவர் திடத் துணிபு. இரு முதன்மையும் ஒன்ருக் கால் முழு முதன்மை உருது என்று அறிக.

ஆதலின் ஈசுவரனை மறுக்கும் சமயங்களும் ஈசுவரனை உடன்பட்டும் அவனுடைய உபாதாநகாரணத் தன்மையை மறுக்கும் சமயங்களும் பரமாணுக்களே உபாதாநகாரணம் என்று கூறும் சமயங்களும், ஈசுவர னுக்கு நிமிந்த காரணத்துவத்தை மட்டிலுமே சாதிக்கும் சமயங்களும், சீவர்களில்லை உலகமில்லை எல்லாம் பொய் என்று சீவ உலகங்களின் உண்மையை மறுக்கும் சமயங்களும் திருக்குறளுக்கு முற்றுமே முரண். அவை திருக்குறளால் மறுக்கப் பட்டுள்ளது காண்க. ஆதலின் ஈசுவரனுக்கு—நிமித்த காரணத்தை மட்டிலுமே உடன்பட்டும் அந்த ஈசுவரன் தானும் அநுமானத்தால் சாதிக்கப்படுபவன் என்றும் கூறும் பாசுபதம் போன்ற சமயங்களும் திருக்குறளுக்கு முர ணேயாம்.

எச்சமயம் இறைவனுக்கு உபாதாநம் நிமித்தம் என்னும் இரண்டு காரணத்தையும் உணர்த்துகின் றதோ அச்சமயமே திருவள்ளுவர் சமயம் என்று கண்

டுணர்க. அது உபநிடத சாரீரக சமயம் வியாஸர் சமயம் சடகோபர் சமயம். ''யாவையும் யவரும் தானாய்'' (திருவாய் 3-4-10 ''முதுவேத முதல்வன்'' (ஷை 1-6-2) ''முனிமாப் பிரம முதல்வித்தாய் உலகம் மூன்றும் முளைப் பித்த, தனிமாத்தெய்வத் தளிரடிக் கீழ்ப்புகுதல்...'' (ஷை8.10-7) "முதல் தனி வித்தேயோ! முழுமூவுலகாதிக் கெல்லாம் முதல் தனி உன்னை'' (ஷை 10-10-9) என்ற சடகோபர் திருவாய்மொழியை இங்கு நோக்குக. திருக் குறள் முதலதிகாரத்தையும் சடகோபர் திருவாய்மொழி முதலிரண்டு திருப்பதிகங்களையும் ஒப்பு நோக்கி இங்குக் கூறிய பொருளின் வாய்மையைத்தெளியக் கண்டு ணர்க.

---

## ஐந்தாமத்தியாயம்

மேற்கூறிய முதற்குறள் விளக்கத்தால் திருவள்ளுவர் சமயம் துய்ய வைதிகம் என்று தெளியக் காணலாம், வள்ளுவர் மீமாஞ்சை வல்லார் என்று மேலே கூறினேம், உத்தரமீமாஞ்சை (சாரீரகம்) வல்லார் என்பதை இங்குச் சிறிது விளக்கிக் கூறுவாம். வியாசர் பிரமசூத்திர (உத்தரமீமாஞ்சை)த்துணிபும் சமயமும், வள்ளுவர் துணிபும் சமயமுமாம். சடகோபருக்குப்போல் வள்ளுவருக்கும் வியாசர் பணித்த பிரம (சாரீரக)சூத்திரம் ''சமய நீதிநூல்'' (திருவாய்மொழி 3,4.6,) ஆம். இதை உணர்த்தும் சில குறட்குறிப்புக்களை இங்கு எடுத்துக்காட்டுவாம், ''சமன் செய்து சீர்தூக்குங் கோல் போலமைந்தொருபாற் கோடாமை சான்றோர்க் கணி'' (குறள்.118) ''எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப், பொய்யா விளக்கே விளக்கு'' (குறள் 299). ''அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய நூலின்றிக் கோட்டி கொளல் (குறள்.401) என்னும் குறட் குறிப்புக்கள் அவை. திருக்குறள் முப்பாற் பொதுமறைத் தரும நூலாயினும் ஆங்காங்கு உற்றவிடத்துச் சிறப்புப் பொருளைச் சிறப்பாகக் கூறும் முறையை மேற்கொண்டுள்ளது. ''சிறப்பீனுஞ் செல்வமு மீனும்'' (குறள். 31) என்ற குறளை நோக்குக. முதலதிகாரம் சிறப்புப் பொருளை உணர்த்தி நின்றது என்பது மேலே விரித்து உரைக்கப்பட்டுள்ளது. சமன் செய்து சீர்தூக்கும் என்ற குறள் வியாசர் அருளிய பிரமசூத்ர ஸ்ம்ருதி பாதத்தைக் குறித்து நின்றது. அதில் ஒரு பாற்கோடுதலின்றிச் சமன் செய்து சமயங்களைச் சீர்தூக்கி உபநிடத சாரீரக சமயத்தின் மெய்ம்மையையும் நன்மையையும் வியாசர் ஆய்ந்து துணிந்து விளங்கவைத்தார் என்னும் உண்மையை ''ஒன்றினுக்கொன்று தொட்ட தொட்ட வொவ்வோரிடத்தும் கன்றுபன் முரணிற் பக்கமேடவலாடு மாற்றல், துன்றிய சங்கை யாயச் சமநிலை மதியிற்

கோல்போல், நின்று சீர் தூக்கி யோர்பாற்கோடுத னீக்கினனே'' (அதிகரணஸாராவளி 158. தமிழ்செய்தது) என்று வேதாந்த தேசிகர் கூறியுள்ளது காண்க. வியாசர் சான்ரோர்க்கு வழிகாட்டி என்ற குறட் குறிப்பை அதிகரண சாராவளி உட்கொண்டுள்ளதைச் சான்ரோர் தாமே காண்பார். குறளின் தமிழ்ச் சொற்கள் சாராவளியின் ஆரியச் சொற்களாய் நிகழ்தல் இதற்குச் சான்ரும்.

இக்குறளில் திருவள்ளுவர் சான்ரோர் ஒருவரைக் கருத்திற் கொண்டே பாடினர் என்பது மறுத்தற்காகாது. அவ்வொருவர் வியாசர் என்பது குறள் கூறும் சிறப்புக் குறிப்புக் கொண்டும் வேதாந்த தேசிகர் அதிகரணசாராவளி விளக்கம் கொண்டும் நன்கு காணலாம். மும்மொழிப் பேரிலக்கியங்களை ஒருங்கக் கண்டு வகையறிந்து சுவைத்த பெருந்தகையாளர் வேதாந்த தேசிகர் என்பதை மனத்திற்கொள்க. வியாசருடைய ஸ்ம்ருதிபாதம் போன்றதோர் இலக்கியம் வேறு எதுவும் காணுமையாலும் ஸ்ம்ருதிபாதம் ஒன்றே சமன் செய்து சீர்தூக்குதலாலும் சீர்தூக்கும் என்னும் குறட்கு ஸ்ம்ருதிபாதம் ஒன்றே இலக்கு என்பது ஐயமறத் தெளிவுறும். பெரியாரைப் பிழையாமை என்னும் அதிகாரத்தில் பெரியார்க்கு அகத்தியரை இலக்காகக் குறித்துள்ளது போல் (குறள். 899)இங்குச் சான்ரோர்க்கு வியாசரை இலக்காகக் குறித்துள்ள நலம் காண்க.

பெரியாரும் சான்ரோரே. சான்ரோரும் பெரியாரே. ஆயினும் ஒருவரைப் பெரியார் என்றதும் மற்ரொருவரைச் சான்ரோர் என்றதும் சிறப்பு நோக்கி என்க, ஒருவர்க்குத் தவம் செய்து நூல் நோக்கி நோற்ற சிறப்பு மற்ரொருவர்க்கு நூலாய்ந்து சமன் செய்து சீர்தூக்கி நூற்ற சிறப்பு. ''தகைமாண்டதக்கார்'' (குறள் 897) என்றதை நோக்குக. சாப அநுக்கிரகங்கட்கு ஏதுவாகிய பெருமையுடைய அருந்தவரைப் பெரியார் என்ரூர். அகத்தியரின்

அருந்தவப் பெருமை போற்றப் பெற்றுள்ளதை இராமாயணத்துட் கண்டு கொள்க. (இராமாய. ஆரணிய. 11-12) ''ப்ரஹ்மசூத்ர பதை: சைவ'' (ப்ரஹ்ம சூத்ர பதங்களாலும். கீதை 13-4. தமிழ் செய்தது) என்று இறைவனும் ''சமய நீதிநூல்'' (திருவாய் 3-4-6) என்று சடகோபரும் ''நீதி சூத்ரம்'' (அதிகரண. 26) என்று வேதாந்த தேசிகரும் போற்ற நூற்ற சிறப்பு அது. அவ்வாறு போற்றப்பெற்ற பிரமநூலாகிய உபநிடத நூலை நூற்றருளிய பெருஞ் சான்ரோர் ஆதலின் வியாசரைச் சான்ரோர் என்ருர்.

இங்குச் சான்று என்றது வேதத்தை. வேதம் சான்றுகட்குத் தாயும் தலையுமாதலால் அவ்வாறு கூறினர் என்று அறிக. ''செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம் அச் செல்வம் செல்வத்து ளெல்லாம் தலை'' (குறள். 411) என்றதும் அப்பொருட்டே. இதை .'ச்ருதி ஸம்பத்'' என்பர் மறைநூலார். ச்ருதி எனினும் கேள்வி எனினும் ஒக்கும். அது வேதம். ''சுடர்மிகு சுருதி'' (திருவாய் 1-1-7) என்ற திருவாய்மொழியையும் ''சுருதியினிறுதி'' (தேசிக. ஸ்ரீவைஷ்ணவ தினசரி. 8) என்ற தேசிகமாலையையும் ''சுருதியாதியில் தொடங்குறு மெல்லையிற் சொன்ன ஒருவன்'' (இராமாவதாரம் இரணியன். 40 என்ற இராமவதாரத்தையும் ''சுருதியும் பூவும் சுடரும் கூடி'' (பரிபாடல். 18.52) என்ற பரிபாடலையும் நோக்குக. ச்ருதிஸம்பத் (செவிச் செல்வம்) என்பதைத் தைவஸம்பத் என்றும், அதனேடு முரணுமனேத்வதயும் ஆசுரஸம்பந் என்றும் இறைவன் பகுத்துப் பாடியருளினன். (கீதை 16,1-3), இப்பாகுபாட்டைத் தைவாசுரஸம்பத் விபாகம் என்பர், ''வேதத்தோடு முரணுமவையெல்லாம் ஆசுரம்'' (கீதார்த்தஸங்க்ரஹ்ம், 21 தமிழ் செய்தது) என்று ஆளவந்தார் அருளிச் செய்தார். தைவசம்பத்து வீடு பயத்தற்காம் என்றும் ஆசுரசப்பத்து பவத்துப்படுத்தற்காம் என்றும் இறைவன் அருளிச்செய்தான் (கீதை. 16-5).

அச்சமின்மை மனமாசின்மை பகுதி கழிந்த ஆத்தும சொரூபவிவேகநிலையுறல் தக ஈட்டிய பொருளைத் தக்காக்கு ஈதல் மனத்தைப் புலன்களில் மேயவிடாது நிறுத்தல் இறைவன் வழிபாடு என்னும் கருத்தால் வேள்வி புரிதல் ஈருலகும் உடையவன் இறைவன் என்றும் அவனை வழிபடுதல் இவ்வாறு என்றும் உணர்த்தும் வேதம் அனைத்தையும் பயின்று நிற்றல் தவம், உள்ளம் உரைசெயல்கள் ஒன்றி நிற்றல் இன்னுசெய்யாமை வாய்மை வெகுளாமை துறவு புலனடக்கல் உயிர்கள் பால் அருளுடைமை கோட்சொல்லாமை அவாவின்மை மென்மை நாணம் ஆசைப்பொருள் உற்றவிடத்தும் அசையா நிலையுறல் தேசுமங்காமை பொறுமை ஆபத்திலும் செய்வன செயற்பாலன எண்ணித் துணிதல் துரோகமின்மை செருக்கின்மை என்பன தைவ சம்பத்து என்றும், டம்பம் (வெளிப்பகட்டுக்கு அறம் செய்தல்) வெகுளல் கொடுமை மெய்யறிவின்மை என்பன ஆசுர சம்பத்து என்றும் கீதையில் விளக்கப்பட்டுள்ளது. (கீதை 16-1-4).

இங்குத் தைவம் என்றது வேதநெறிநிற்பாரையும் ஆசுரம் என்றது வேதநெறி கடப்பாரையும் உணர்த்தி நின்றது ''வேதத்தோடு முரணு மவையெல்லாம் ஆசுரம்'' என்று ஆளவந்தார் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தது மேலேகூறப்பட்டது. ''உன் பொன்ன்டிக் கடவாதே வழிவருகின்ற அடியரோர்க் 'கருளி' (திருவாய் 9-2-2) "மேவித் தொழுதுய்ம்மினீர்கள் வேதப்புனித இருக்கை நாவிற்கொண்டு அச்சுதன் தன்னை வேதவிதி பிழையாமே பூவிற் புகையும் விளக்குஞ் சாந்தமும் நீரும் மலிந்து மெவித்தொழும் அடியாரும் பகவரும் மிக்க துலகே'' (திருவாய் (5-2-9) '' புவியுமிருவிசும்பும் நின்னகத்த நீயென் செவியின் வழிபுகுந்தென்னுள்ளாய்'' (பெரியதிருவ 3-75) என்ற சடகோபர் திருவாக்கில் ''ச்ருதி சம்பத்'' ''தைவசம்பத்'' செவிச்செல்வம் என்பதன் மெய்ப்பொருள் விளங்குமாறு

காண்க. செவியின்வழி என்ற சடகோபர் தூய தமிழ் ''ச்ருதிபத'' (அதிகரண. 268, சங்கற்ப 10.99; ரகசியத்ரயஸார-ஸாரநிஷ்கர்ஷாதிகாரம்) என்ற வேதாந்த தேசிகர் தூய ஆரியமாய் நிற்றல் காண்க. அதையே வேதமார்க்கம் என்று வேறிடத்தும் கூறினர். (சததூஷணி. 1-4)

செவிவழியை வேதமார்கத்தை, (ச்ருதி பதத்தை) மறுப்பதே தொழிலாகத்தோன்றி அநுமானவழி ஒன்றையே சான்ருகப் பற்றி நாட்டப்பட்ட புத்தம், சைநம் முதலிய சமயத்தார்க்கெல்லாம் செவியின்மையையும் செவிச்செல்வமின்மையையும் கண்கொண்டு காணுஞ் சான்ருகக் காட்டித்தரவல்ல இக்குறள் ஒன்றே வள்ளுவர் செவிச் செல்வம் படைத்த வைதிகவள்ளல் என்றும் உண்மைக்குத்தக்க தனிப்பெருஞ் சான்ருகும் ''பரப் பிரமம் வேதத்தால்தான் உணர்த்தப்படுவதால் (பிரம சூத்திரம் 1-1-3. தமிழ் செய்தது) என்று இறைநிலை மெய்யுணர்வைப்பயப்பது வேதம் (சாஸ்த்ரம்) ஒன்று தான் என்று துணிந்தவராயும் வேதவியாசர் ''மிக்கார் வேதவிமலர்'' (திருவாய் 2-9-8) வேதாசாரியர் (பகவத் குணதர்ப்பணம் உபோத்காதம், அதிகரண ''ஸாரா வளி 562) என்பனதமக்கே உரிய திருநாமமாக உடைய வராயும் விளங்கும் வியாசரைச் சான்ரோர் என்று குறள் போற்றும் உண்மையைச் சான்ரோர் நெஞ்சினல் நோக்கிக் காண்க.

---

## ஆருமத்தியாயம்

மேலே கூறிய தைவசம்பத்து என்பது நன்மக்கள் அனைவர்க்குமே ஒக்க உரிய ஆத்தும குணங்களாம் பொதுத்தருமம் என்னப்படும். அவ்வவர்கட்கென்று பிரித்துக் கூறப்பட்டுள்ள தனித்தருமங்களான சிறப்புத் தருமங்களும் தைவசம்பத்தாம். பொதுத் தருமம் இல்லாதவர்களுக்கு உய்வுபாயம் எப் பயனையும் பயவா என்று கௌதம முனிவர் கூறினார். ஆத்துமதருமங்களாம் தைவசம்பத்து என்பது மக்கட்கெல்லாம் உரியனவாம். அவையுடையார்க்கே உய்வுபாயம் உதவும். அவை யில்லார்க்கு உதவா. ஆக்கைக் குணங்கள் வேறுபடும். அதற்குத்தக வகுத்துள்ள தருமங்களும் வேறுபடும். அவை சிறப்புத் தருமங்களாம். ஆதலின் அவை ஒவ்வா. அச் சிறப்புத் தருமங்கட்கு வேண்டிய செவ்வைப்பாடுகளும் அத்தருமங்களின் செயற்பாடுகளும் சால உறப்பெறினும் ஆத்துமகுணங்கள் இல்லாதார்க்கு உய்வில்லை என்பது அம் முனிவர் துணிபு. ஆத்தும குணங்களுள்ளும் எட்டுக் குணங்களைச் சிறப்பாக அம்முனிவர் எடுத்துக் கூறினார். எல்லா உயிர்களிடத்திலும் அருளுடைமை பொறுமை அழுக்காருமை தூய்மை சோர்வின்மை மங்கலமொழி செயலெண்ணங்கள் உலோபமின்மை அவாவின்மை என்பன அவை. (கௌதம தர்ம, ப்ரச்ந. 1. தமிழ் செய்தது). தைவசம்பத்துள்ளும் இவை பின்னும் நலமுடையன என்பது இதனுல் விளக்கப்பட்டது. ஆதலின் ஆசுர சம்பத்து உடையவர்க்குத் ''தூய்மையுமில்லை. ஒழுக்கமுமில்லை வாய்மையுமில்லை'' (கீதை. 16-7 தமிழ் செய்தது) என்று இறைவன் மொழிந்தான். ''துயருறேல்' நீ தைவசம்பத்து உறப் பிறந்தவன் (கீதை 16-5). தமிழ் செய்தது) ''ஆதலின் உனக்கு வேதம் சான்று'' (கீதை 16-5 தமிழ் செய்தது) என்று அருச்சுனனை நோக்கிச் சோகம் தவிர்க்கும் சுடரடியிறைவன்தானே பின்னும் அருள் மிகுந்து உரைத்தான். இவ்வாற்ருல் அருளு

டைமை பிறர்க்கின்னு செய்யாமை அழுக்காருமை வாய்மை முதலியவற்றை ஐயப்பாடறுத்துக்காட்டித் திகழும் பேரழகும் புந்தியுட் புகுந்து தன்பாலாதரம் பெருக வைக்கும் பேரருளும் ஒன்றி விளங்கும் பொய்யா விளக்காகிய வேதமும் கீதையும் தெரிய உணர்த்தும் தைவ சம்பத்தின் பாற்படும் மாமங்கலச் செல்வமாம் ஆத்தும குணங்கள் என்ற பேருண்மையைத் திடமாக உள்ளத்திற் கொள்க.

வேதம் முழங்கும் நற்பொருள்களுள் ஒன்றிரண்டை எடுத்துக்கொண்டு அவற்றைத் தாங்கள் கூறும் பொருள் என்று வரைபவரும், வேதம் சான்றன்று தருக்கமே சான்று என்று வாதுசெய்பவரும், இறைவன் இல்லை அணுத்திரளே உலகுக்குக் காரணம் என்று துணிபவரு மாகிய நாத்திகரும் சூநியருமே ஆத்தும குணக் கோட் பாட்டை உரைத்தவர்கள்; வேதம் அதனைக் கூறவில்லை என்றும், வள்ளுவர் அச்சமயத்தவர் வைதிகரன்று, என் றும் இன்று கூறத்தொடங்கியிருக்கும் வேதப்பகைவர்கள் வாய்மையிழந்தவராவார் என்பதை உணராராயினர்.

,, என்பெருங் கண்கள் வேதம் என்பெருஞ் செல்வம் வேதம் என்பெருந்தாமம் வேதம் என் பெரும் பிரமம் வேதம் என்பெருவேதம்தன்னைத் திருடி யீரவுணர் கொண்டார் மன்பெரு மறையிழத்த மகியெலா மிருளி லாழ்ந்த’’(பாரதம் சாந்தி 344-45,நாராயணீயம் தமிழ் செய்தது) என்று வேதக்கண்ணையும் வேதச்செல்வத் தையும் மதுகைடவர்கள் பறித்துப்போய் ஒளிந்து கொண்டதால் நான்முகன் தனக்கும் உலகுக்கும் உற்ற பேரிழவுக்கு வருந்தி மீண்டும் தனக்கு வேதத்தைத் தந்து அருள்புரிய வேண்டும் என்று கண்ணும் கண்ணீரு மாய் நின்று திருமாலைச் சரணம் அடையத் திருமாலும் பரிமுகப்பரமனுய் அவதாரம் செய்து அவ்வீரவுணர் களையும் மாய்த்து வேதச்செல்வத்தை (செவிச்செல் வத்தை) நான்முகனுக்கு அருளிய திருமாலின் தெய்வத்

திருச்செயலை இக்குறள் அடியாகக் கொண்டுள்ளது சுவடறிவார்க்குக் கண்கூடு

இவ்வவதாரத்திருவருட் சரிதையை ''முன்னிவ் வுலகேழும் இருள்மண்டி யுண்ண. முனிவரொடு தானவர்கள் திசைப்ப வந்து பன்னுகலை நால்வேதப் பொருளை யெல்லாம் பரிமுகமாய் அருளிய எம் பரமன் காண்மின்'' (பெரிய திருமொழி 7-8-2) என்றும், ''வசையில் நான் மறை கெடுத்த அம்மலரயற் கருளி முன் பரிமுகமாய் இடைகொள் வேதநூலென் றிவை பயந்தவனே'' (ஷை, 5-3-2) என்றும் மங்கையர் கோனும். ''மது கைடவராகிய மன்னிருள் மாய்த் ததுவேத திருக்க ணயற் கருளி, மதிமா வுருவில் லூலகுக் குயிர் நீ பதி யாகியரங்க பயந்தனையே'' (ஸ்ரீரங்கராஜ. உத்தர 52. தமிழ் செய்தது) என்று பட்டரும் அருளிச் செய்துள்ளது காண்க. இதனுல் வள்ளுவர் பரிமுகப்பரமனை உள்ளத்துக் கொண்டுள்ளது அறியலாகும்.

வேதமே அந்தணர் மாடு என்றும் பிரசித்தியைக் கருத்திற்கோள்க. அந்தணன் என்பது நான்முகன் பெயர் என்று நிகண்டு. கூறிற்று (பிங்கல. 2-64) ''என்பெருஞ் செல்வம் வேதம்'' என்று அவ்வந்தணன் தானே கூறினுன். ''அந்தணர் மாட்டந்தி'' (திரு நெடுந். 4) என்று மங்கையர்கோனும் ''அந்தணர் மாட்டிலும்'' பரமபத. 1) என்று வேதாந்த தேசிகரும் அருளிச்செய் தார்கள். அந்தணன் மாடே அந்தணர் மாடு என்றபடி. ஆதலின் செவிச்செல்வம் ச்ருதிசம்பத் வேததநம் செல்வத்து ளெல்லாம் தலை (பரமம்) என்று குறளா சிரியர் கூறினுர். வேதம் பரமம் தநம் என்ற பாரத ஆரியம் செவிச்செல்வம் செல்வத்து ளெல்லாம் தலை என்ற குறள் தமிழாய் நிற்றல் காண்க ''ச்ருதி (கேள்வி) என்பது வேதமேயாம்'' (மநு, 2-55, தமிழ் செய்தது) ''வேதமே எவர்க்குச் செல்வமோ (மநு- 9-316 தமிழ் செய்தது) என்ற மநுமொழிகளில் இப்பொருள் பின்னும் விளங்குதல் நன்கு காணலாம்.

''எல்லா விளக்கும் விளக்கல்ல சான்ருேர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு', (குறள். 299) என்ற குற ளால் இப்பொருள் பின்னும் திடனுறுதல் காண்க. இங்குச் சான்ருேர் என்றது வியாசமுனிவனைச் சிறப்பா கக் குறித்து நின்றது. ''வேதமே சான்று'' (1-1-3) என்று பிரமசூத்திரத்தில் அறுதியிட்டுள்ளது மேலே கூறப்பட்டது. ''சத்தியம் சத்தியம் பின்னுமே சத்தி யம், நித்திய வேதத்தின் மிக்கதோர் சான்றிலே'' (நாரஸிம்ஹ. 18-33 தமிழ் செய்தது) என்று பேரிரு கள் திரளில் பிரமாணித்தருளிய மெய்யராதலின் வியா சர் சான்ருேர்க்குத் தலைமை சான்ற பெருந்தகையா ளர் என்று போற்றப்பெற்றவராயினர். ''கருமாணியாயி ரந்த கள்வனே! உன்னைப் பிரமாணித்தார் பெற்றபேறு'' (இரண்டாந். 61) என்று பூதத்திருவடிகள் இவ்வுண் மையை உணர்வித்தருளியபடி ''நூலெலாம் சால வாய்ந்து நொருக்கிலாத் தருக்கி லோர்ந்து சாலுமெய் துணிந்துளத்துச் சாடுவர் குழுக்கை தூக்கி, மேலுமெய் மெய் மெய் வேதச் சான்றினின் மிக்கதில்லென் ருனவன் சான்றெனில் யார் பரர் திரு மாலி ஞுவார்'' (சங்கற்பசூரி 1-90 தமிழ் செய்தது) என்றும் ''வையமெலா மிருள் நீக்கு மணி விளக்காய் மன்னிய நான் மறை மௌலி மதியே கொண்டு மெய்யலது விளம்பாத வியாசன் காட்டும் விலக்கில்லா நல்வழியே விரைந்து செல்வீர்'' (பரமதபங். 52) என்றும் வேதாந்ததேசிகர் விளம்பினர்.

சான்றுகளுள் வேதத்தின் மிக்கதில்லை என்று அறைந்தருளிய வியாசரின் மிக்க சான்ருேரில்லை என்ற உண்மை இதனுல் விளக்கப்பட்டது. ''மிக்கார் வேதவி மலர்'' (திருவாய். 2-9-8) என்று சடகோபரும் ''மிக்க வேதியர்'' (கண்ணி நுண். 9) என்று மதுரகவியாழ்வா ரும் வியாசரைப் போற்றியருளிய ஆர்வத்தைக் கண்டு ணர்க. ஆதலின் வியாசர் பணித்த பிரம சூத்திரத்தைச் ''சமய நீதிநூல்'' (திருவாய்.3.4.6) என்ருர் சட கோபர். ''தத்துவநூல்'' (இராமாநுச.65) என்ருர்

திருவரங்கத்தமுதனர். இவ்வுண்மை யடியாக வியாசர் அருளிய பிரமசூத்திரத்துக்குப் பரம்பொருளுக்குப் போல் சத்தியம் என்பது பெயராயிற்று. இதை வேதாந்த தேசிகர் அதிகரண சாராவளி முதற்சுலோகத்தில் குறித் துள்ளது காண்க.

மெய் (சத்தியம்) என்பது வேதத்துக்கும் வேதம் உணர்த்தும் இறைவனுக்கும் உற்றதோர் தனிப்பெயர். ஒன்று காட்டித்தரும் சத்தியம். ஒன்று அதனுற் காட் டப்பெறும் சத்தியம். ஆதலின் இரண்டும் விளக்குகளாம். ஒன்று மாந சத்தியம். ஒன்று மேய சத்தியம். இரண் டும் ஞானமயம். ஆதலின் இரண்டும் விளக்குகளாம். இரண்டும் சத்திய மாதலால் பொய்யா விளக்குகளாம். வேதம் மெய்ம்மொழி, மெய்ந்நூல். அஃதுணர்த்தும் பரம்பொருள் மெய்ப்பொருள். மெய்யன். இருமெய்ம் மைகளும் பிரித்தற்காகாவாறு வாசக வாச்சிய சத்தியப் பிரமங்களாய் ஒன்றித் திகழ்கின்றன. ''சுடர்மிகு சுருதியுள் உளன்'' (திருவாய் 1-1-7) என்றும் ''மறை யாய நால்வேதத்துள் நின்ற மலர்ச்சுடரே'' (ஷை.3-1-10) என்றும் ''துயரறு சுடரடி'' (ஷை 1-1-1) என்றும் இரு சுடரும் ஒன்றித் திகழும் மெய்ம்மையைச் சடகோபர் பாடியருளினர். ஆதலின் வேதமும் விளக்கு, திருமாலும் விளக்கு. ஒன்று மாநவிளக்கு. மற்றென்று மேய விளக்கு. இரண்டும் பொய்யா விளக்கு. நந்தா விளக்கு. விளக்கு என்ற சொல் வேதமாகிய விளக்கு, வேதத்தில் விளங்கும் விளக்கு, வேதத்தை (வேதப்பொருளை) விளக்கியருளும் மதி நலம் அருளும் விளக்கு என்னும் பொருள்களில் வேதவிளக்கு என்னும் சொல் வழங்கப்படும். சொல் லின் பெருமையை நோக்க வேதமாகிய விளக்கு என்று பொருள்படும். பொருளின் பெருமையை நோக்க வேதத் தில் விளங்கும் விளக்கு என்றும் வேதப்பொருளை விளக்கி யருளும் விளக்கு என்றும் பொருள்படும். இறைவன் ஒரு வனே வேதப்பொருளை உணர்பவனும் வேதம் உணர்த் தும் பரம்பொருளுமாம். ''வேதம் அனைத்தாலும் அறியப்

படுபவன் யானே, வேதம் அனைத்தையும் அறிபவன் யானே'' (கீதை. 15. 15. தமிழ் செய்தது) என்று இறைவன்தானே அருளிச்செய்தான். முழுமுதற் காரணனாகிய இறைவனே முழுமுதற் குருவுமாம். பிறர் இறைவனால் அருளப்பெற்றே வேதமெய்ப் பொருளை அறிவார். அருளப்பெறார் அறியார். ''மெய்யறி வருளும் தேவைச் சரணம் நானடைகின்றேனே'' (ச்வேதாச்.6. தமிழ்செய்தது) ''யவனையிப் பரனு கந்து வரித்தருள் புரிகின்றானே, அவன்தனால் பரன வன்தான் பெறப்படு பவனு வானே'' (கடோபநிஷத். 2.23. தமிழ்செய்தது) என்று உபநிடதங்கள் ஓதின. ''மதிநலம் அருளினன்'' (திருவாய்.1.1.1) ''திருமாலால் அருளப்பட்ட சடகோபன்'' (ஷை.8.8.11) என்று சடகோபரும் ''திருமாமகளால் அருள்மாரி'' (பெரிய திருமொழி, 8.6.10) ''மெய்ம்மையாளன்'' (ஷை.6.6.10) என்று மங்கையர்கோனும் அருளிச்செய்தார்கள். வேதப் பரம் பொருளாகிய தன்னையே தான் காட்டித்தரும் மன்னருள் அதுவாம். சத்தியத்தை அருள்பவன் அருளும் சத்தியன். என்றபடி. அது வேதசத்தியம் வேதவேத்திய சத்தியம். வாசக வாச்சியங்களாகிய இருசத்தியங்களின் பிரியா நலத்தை ''வேதமயன்'' (திருவாய்.2-7-2) ''வேத நீரன்'' (ஷை.1.8-10)என்று சடகோபர் பாடியருளினார். கோலவராக ஞானப்பிரானுடைய திருப்பாதங்களில் வேதங்கள் நிலைகொண்டன'' (விஷ்ணுபு.1.4.32.தமிழ் செய்தது) என்று பராசரமுனிவர் ஓதினார். அவ்வாறே ''சமயநீதிநூல் என்கோ... கண்ணன் என்கோ'' (திருவாய்.3.4.6) என்று சமய நீதிநூல் மயன் சமய நீதிநூல் நீரன் என்று வியாசர் நூற்றருளிய பிரமசூத்திரத்தைச் சடகோபர் போற்றும் ஆர்வத்தை ஓர்ந்துணர்க. இறைவன்தானே ''தெள்ளியதிடத் தத்துவ நூற் பதங்கள்'' என்று வியாசர்பணித்த பிரமசூத்திரத்தை உகந்தருளிய அருமைகண்டு சடகோபர் போற்றிய நறுமை காண்க. ''உளன் சுடர்மிகுசுருதியுள்'' (திருவாய்.1.1.7)என்று சடகோபர்தாமே இவ்வரும்

பொருளே விளக்கியருளினுர். சுருதிதானே சுடராயிருக்கச் செய்தேயும் பிறிதோர் உதவியை வேண்டாது தானே மெய்யுணர்வைப் பயக்க வல்லதாயும் ஸ்வபர நிர்வாஹக மாயும் நிற்கச் செய்தேயும் சுருதி அனைத்தையுமே இறைவனருளால் கண்டுணர்ந்த முழுதுணர் முனிவர்க் கல்லது மயர்வுமிகுந்த புல்லறிவுடைய சிற்றுயிர்களுக்கு அம்மெய்ப்பொருள் அறிதற்கரிதாதலால் ஐயந்திரிபுகளே அறுத்து அம் மெய்ப்பொருளேத் தெளிய விளக்கிக் காட்டும் விளக்கநூல் வேண்டியிருத்தலால் இதிகர்த் தவ்யதா என்னப்படும் விளக்கநூல் (உபப்ரும்ஹணம்) நூற்கலாயிற்று. அந்நூல் மீமாஞ்சையாம். அம்மீமாஞ்சை விளக்கத்தில் சுருதியின் மெய்ப்பொருள் உள்ளவாறு விளங்கி நிற்றலால் அவ்விளக்கநூலில் நிலேகொண்டு விளங்கும் சுருதியைச் சுடர்மிகுசுருதி என்ருர். அது வியாசர் நூற்ற ருளிய சாரீரக மீமாஞ்சையாகிய பிரம சூத்திரம். இப்பொருளேச் ''சுருதியின் முடியில் மிக விளங்கும் திருமகளார் தனிக்கேள்வன்'' (ஸ்ரீபாஷ்யம்-மங்கல.1- தமிழ்செய்தது)என்று இராமானுஜர் அருளிச் செய்தார். ''விதீப்தே'' என்றது அங்குள்ள சொல். உரிய நியாயங்களேக் கொண்டு ஆராய்ந்து தேறிய துணிபில் விளங்குதலால் விதீப்தி(விசிஷ்டா அத்ர தீப்தி:) என்று கூறப்பட்டது என்று வேதாந்ததேசிகர்தத்துவடீகையில் இதன் பொருளே உரைத்தார். ''சுடர்மிகு சுருதியுள்'' என்ற திருவாய்மொழித்தமிழ் ச்ருதிசிரஸி விதீப்தே'' என்ற ஸ்ரீபாஷ்ய ஆரியமாய் நிகழ்தல் காண்க. வியாசர் நூற்றருளியபிரமசூத்திரம் எத்திறச் சீரும் வீறும் உடையது என்பது இதனுல் அறியலாகும். இவ்வாற்ருல் திருக்குறளில் சான்ருேர் என்றதால் வேதவியாசரும் பொய்யாவிளக்கு என்றதால் பிரமசூத்திரமும் உணர்த் தப்பட்டுள்ள சால்பு நன்கு காணலாம்.

சுடர் என்றதால் மெய்யுணர்வைப் பயக்கும் வேதமும் அதன் விளக்கமாகிய பிரமசூத்திரமும் கீதையும் உணர்த்தப்படும். அவ்வாறே அவற்ருல் உணர்த்தப்படும்

ஓரொருவனும் அவற்றை உணரும் ஓரொருவனுமாகிய இறைவனும் உணர்த்தப்படுவான். பிரித்தற் கொண்ணு வாறு ஒன்றிய வாசக வாச்சியச் சொற் பொருட் பெருஞ் சுடர்களாய்த் திகழ்கின்றன. உபநிடதம் பிரமசூத்திரம் கீதை ஆகிய மும்மறைநூல்களும் ப்ரஸ்தாநத்ரயம் என் னப்படும். அவை மெய்ந்நூல். அவை உணர்த்துபவன் மெய்யன். ஆதலின் மெய்ந்நூலும் மெய்யனும் வேத விளக்கும் பொய்யா விளக்குமாம் என்று வேதமூதுவர் ஓதுவார். ''பரஞ்சோதி'' (தைத்தி.71;சாந்தோக். 8.12.2) ''சோதிகட்கெல்லாம் சோதி(முண்டக.2.10. தமிழ்செய்தது) ''அங்குச் சூரியன் விளங்குவதில்லை சந்திரனும் தாரகைகளும் மின்களும் விளங்குவதில்லை. அக்கினிக்குப் பேச்சு ஏது? விளங்கும் அவனை ஒத்து அவை அனைத்தும் விளங்குகின்றன. அவன் ஒளியால் இவை அனைத்தும் விளங்குகின்றன'' (சுவேதாச்வ.6; கடோபநிஷத்5.15.தமிழ்செய்தது) "சத்தியம்'' (சாந் தோக்6.3.5; தைத்தி2) ''சத்தியத்தின் சத்தியம்'' (ப்ரு ஹதாரண்யக.4-1-20.) என்று உபநிடதங்கள் ஓதின. ''மிக்க ஞானமூர்த்தியாகிய வேதவிளக்கினை'' (திருவாய். 4.7.10) ''மிக்க ஞானவெள்ளச் சுடர் விளக்காய்'' (ஷை2.6.2) ''ஆதியாஞ் சோதி'' (ஷை.2-1-11)''பரஞ் சோதி'' (ஷை3.1.3)என்று சடகோபரும் ''மிக்கானை, மறையாய் விரிந்த விளக்கு'' பெரியதிருமொழி8-9-4) 'விளக்கொளி'' (திருநெடுந்.14) ''நந்தாவிளக்கு'' பெரியதிருமொழி.3.8-1) என்று மங்கையர்கோனும் ''அவியாத சுடர்''(தேசிக.அர்த்த.1)''மெய்விளக்கு'' ஷை.அதிகார.50) ''பரமவ்யோமபாஸ்கரன்'' (ரகுவீர கத்யம்) என்று வேதாந்த 'தேசிகரும் பரவினர்கள். வெய் யோன்'' (சிங்கப்பிரான். இராமவ.பால. பூக்கொய்.) என்ற கம்பர் பாடலையும் "விண்ணுயர் புட்கொடி விறல் வெய்யோன்''(புறநானூறு.56) என்ற புறநானூற்றுப் பாடலையும் காண்க.

வேதம் பொய்யாவிளச்கு. மெய்ந்நூல். ஒளிநூல். தைவசம்பத்து. அதற்கு முரணு மவை யெல்லாம் பொய்ந்நூல் மயக்கநூல். இருள்நூல். ஆசுரசம் பத்து. வேதம் சத்துவம். சத்தியம். அதனேடு முரணும் பிற தமம் பொய். ''பொய்ந் நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கும் அழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை யினியா முருமை உயிரளிப்பான் எந்நின்ற யோநியுமாய்ப் பிறந் தாய்! இமையோர் தலைவா ! மெய்ந்நின்று கேட்டரு ளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே'' (திருவிருத்தம். 1) என்று இறைவனுக்குச் சடகோபர் செய்த பொய்யா மொழி விண்ணப்பம் ''மெய்யிறை வீறி ராம கேட்டி மெய்யீதி யான் சொல், செய்ய மாதிருவின் கேள்வன் சக்கரப் படையனே நீ, தெய்வ நாராயணன் தான் எங்குமே நிறைந்துளாயே'' (இராமாய யுத்த. 120.13 தமிழ் செய்தது) என்று நான் முகன் இராமபிரானுக்குச் செய்த பொய்யா மொழி விண்ணப்பம். உபநிடதங்களும் இறைவனுக்குச் செய்த விண்ணப்பமும் அத்தன்மையதே என்பதை உபநிடதங்களிற் காணலாம். இராமபிரான் மெய்யன் வெய்யோன் இராமாயணம் மெய்ந்நூல். சரணுகதி வேதம். ''பொய்ம் மொழி யாது மாகாதுன்னு டைக் காவியத்தில்'' (இராமாய. பால. 2.35 தமிழ் செய்தது) என்று நான்முகனுல் அருளப்பட்ட வான்மீகி முனிவரின் பொய்யா மொழி இராமாயணம். அந்நான் முகன் தானே திரண்டமரர் தொழுதேத்திய திரளில் அம ரர்க்குத் தலைவனுய் முன்னின்று இராமபிரானுடைய பேரிறைமையையும் பேரருண்மையையும் உலகறிய விண்ணப்பம் செய்தான். அவ்விராமபிரானுலேயே அருளப்பட்ட சடகோபர் அவனது பேரிறைமையையும் பேரருண்மையையும் விண்ணப்பம் செய்தார். ஆதலின் திருவாய்மொழி மெய்ந்நூல் பொய்யாவிளக்கு பொய்யில் பாடல் (திருவாய். 4.3.1) இராமாயண மும் மெய்ந்நூல் பொய்யாவிளக்கு (இராமாய. 2.31;35; 4-6)''பொய்யில் கேள்விப் புலமையினேர் புகல் தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே'' இராமாவ பால- சிறப்பு. 6) என்ற கம்பர் திருவிருத்தத்

தை நோக்குக, பெரிய திருமொழியும் திவ்ய ப்ரபந்தங்களும் அத்தகையவே. ''திருமாமகளால் அருள்மாரி'' (பெரியதிருமொழி 8.6.10) ''கலிகன்றி செம்மைப் பனுவல் நூல்'' (ஷை.10-4-10) ''பொயம்மொழி யொன்றில்லாத மெய்ம்மையாளன், புலமங்கைக் குலவேந்தன்'' (ஷை. 6.6.10) ''தூயமாமாலே'' (திருக்குறுந் 16) ''சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொல்மாலே இடராழி நீங்குகவே என்று'' (முதல் திருவந் 1.) ''ஞானச் சுடர் விளக் கேற்றினேன் நாரணற்கு ஞானத்தமிழ் புரிந்த நான்'' (இரண்டாந். 1) ''திருக்கண்டேன்'' (மூன்ருந்.1) ''உய்த்துணர் வென்னும் ஒளிகொள் விளக்கேற்றி, வைத்தவனே நாடி வலேப்படுத்தேன்—மெத்தெனவே நின்ருனிருந்தான் கிடந்தா னென்னெஞ்சத்துப் பொன்ருமை மாயன் புகுத்து'' (ஷை. 94) ''வீடாக்கும் மெய்ப் பொருள் தான் வேத முதற்பொருள்தான் விண்ணவர்க்கு நற்பொருள்தான் நாராயணன்'' (நான்முகன்.17) ''மாயன் அன்று, ஓதிய வாக்கதனேக் கல்லார் உலகத்தில் ஏதிலராய் மெய்ஞ்ஞானமில்'' (ஷை. 71) என்பனவும் பிறவும் காண்க. பல கூறி என். வேதமயனுன இறைவனுல் மதி நலம் அருளப் பெற்ற வேதம் வல்லார் பனுவல்கள் மெய்ந்நூல் ஒளிநூல் தெளிவு நூல் வேதத்துக்கு முரணுமவையெல்லாம் பொய்ந்நூல் இருள்நூல் மயக்கநூல் என்று அறிக. அஃதே சான்ரேர் துணிபு. குறளாசிரியர் துணிபு.

---

ஏழாமத்தியாயம்

''வேதத்துக்குப் புறம்பானதும் வேதம் கொண்டும் குறும்பு உரைக்கும் இருளில் நிலைகொண்ட நூலெல்லாம் யாதும் பயனற்று ஒழிந்திடும் பாழேயாம்'' (மநு. 12-95தமிழ்செய்தது)என்று மநு கூறினர். ''இருளினை நீக்கவும் மெய் பொய்பிரித் துணர்த்தவும் தான், அருளினிற் பரன் வேதத்தை விளக்கென அளிக்கின் ருனே'' (ஸ்ரீரங்கராஜ. உத்தர. தமிழ் செய்தது)என்ருர். பட்டர். ''பூண்டவத்தம் பிறர்க் சுடைந்து தொண்டுபட்டுப் பொய்ந்நூலை மெய்ந்நூலென் றென்று மோதி, மாண்டவத்தம் போகாதே வம்மின்'' (பெரிய திருமொழி2.5.2) ''கள்ளநூல் தன்னையும் கருமமன் றென்றுயக் கருதினுயேல்,தெள்ளியார் கைதொழுந் தேவனுர் மாமுநீரமுது தந்த, வள்ளலார் வல்லவாழ் சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே!'' (ஷை.9.7.9) ''மறைவலார் குறைவிலார்'' (ஷை-9-7-10)என்பன மங்கையர்கோன் மெய்ம்மொழிகள் உபநிடத்மூர்த்தியாகிய சடகோபர்''மதிநலம் அருளினன்'' (திருவாய்-1-1-1) ''திருமாலால் அருளப்பட்ட சடகோபன்''(ஷை-8-8-1) ''கள்ளமனம் தவிர்ந்தே உன்னைக் கண்டுகொண் டுய்ந்தொழிந்தேன்''(ஷை. 5-1-3)''தெளிவுற்று வீவின்றி நின்றவர்க்கு இன்பக் கதி செய்யும் தெளிவுற்ற கண்ணனைத் தென்குருகூர்ச் சடகோபன் சொல் தெளிவுற்ற ஆயிரத்துள் இவை பத்தும் வல்லாரவர் தெளிவுற்ற சிந்தையர்'' (ஷை-7-51-1) ''கள்ளவேடத்தைக் கொண்டுபோய்ப் புரம் புக்கவாறும் கலந்தசுரரை, உள்ளம் பேதம் செய்திட்டு உயிருண்ட உபாயங்களும் வெள்ளநீர்ச் சடையானும் நின்னிடை வேறலாமை விளங்க நின்றதும் உள்ளமுள் குடைந்து என்னுயிரை உருக்கி யுண்ணுமே.'' (ஷை5-10-4) என்று இவ்வுண்மையைக் காட்டித்தந்தார்.

இதன் பொருள்:அவனின்றி அணுவும் அசையாது என்றது மறைமுடித்துணிபு. உயிர்கள் தத்தம் வினைப்

பயனை நுகர்தற்பொருட்டு இறைவன் இருவகை நூல் களை விரிக்கின்றான். நல்வினையார்க்கு மெய்ந் நூலையும் தீவினையார்க்குப் பொய்ந்நூலையும் விரிக்கின்றான். நல் லார் தீயார் இருவருமே இறைவன் உடைமைகள். உடை மைகளேயாயினும் உடைமைகளேயாதலானும் அவ்வவ் வுயிர்கள் செய்த கருமத்தின் பயனாக அதததற்குத்தக மெய்ந்நூல் வாயிலாக மெய்யுணர்வையும் பொய்ந்நூல் வாயிலாகப் பொய்யுணர்வையும் தருகின்றான். அது இறைவன் கோன்மையும் நடுவுநிலைமையுமாம். நல்வினை யோர் சாத்துவிகர். தெய்வத்தன்மையினர். தீவினையோர் தாமசர் ஆசுரத்தன்மையினர். சத்துவம் மிக்கவர் சாத்து விகர். தமம் மிக்கவர் தாமசர். சத்துவம் என்பது ஒளியும் நலமுமாம். தமம் என்பது இருளும் மலமுமாம். சாத்து விகர்க்குஒளி நலத்தில் நடை. தாமசர்க்கு இருள் மலத்தில் நடை. ஆதலால் அவர்கள் நிசாசரர்கள் (இரவில் நடப் பவர்கள்)என்னப்படுவார்கள். ஆந்தை போல்வார் என்ற படி. ஒளியைப் பகைப்பதே ஆந்தைக்கு இயல்பு. அவ் வாறே மெய்ந்நூலைப் பகைப்பதே தாமசர்க்கு இயல்பு. சாத்துவிகர்க்குத் தைவசம்பத்து. தாமசர்க்கு ஆசுரசம் பத்து. இது அவரவர் கருமபயனுக்குத் தக இறைவன் வகுத்த பாகுபாடும் வழங்கும் நீதிப்பாடுமாம். மதிநலத் தைச் சாத்துவிகர்க்கு அருள்மூர்த்தியாய் நல்குகின்றான். மதிமலத்தைத் தாமசர்க்குக் கள்ளவேடத்தில் கொடுக் கின்றான். தூமனத்தர்க்கு மெய்ந்நூலை அருள்கின்றான். தீமனத்தர்க்கு மயக்கநூலைக் காட்டுகின்றான். நல்வினை பயப்பது தூமனம். தீவினை பயப்பது தீமனம். இரசம் (இராசதகுணம்)தமத்துள் அடங்கும். சத்துவம் இரசம் தமம் என்னுமவையெல்லாம் இறைவன் வயத்தவாய் அவ்வவர்கள் செய்த வினைக்குத்தக அவற்றின் பயனாக இறைவன் அவர்களிடத்தில் நிகழச் செய்கின்றான். (கீதை-7-12-14)தமத்தில் மயக்கமும் மருளும். உயிர்க ளெல்லாம் ஏதோ ஒருநாள் அவரவர்கள் அறிந்தோ அறியாதோ செய்ததோர் நல்வினையை விரகாகக்

கொண்டு காலம் கண்டு தன் கோன்மை கோடாது எத் திறத்தீயாரும் உய்யும் வண்ணம் தன்னைத் தாள் பற்றும் மதிநலத்தை அருளித் தாள்பற்றச் செய்து அப்பற்றில் அவர்களை ஆட்கொண்டு வீடென்னும் பேரின்பத்தை அருள்கின்றான் என்பது வேதத் துணிபு. ''வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே''(திருவாய்-10-9-9) ''எம்மா பாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்குங் கண்டீர்''(ஷை.5-1-7)''கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல் லால் மற்றும் கேட்பரோ, கேட்பார் செவிசுடு கீழ்மை வசைவுகளே வையும். சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன் திருவடி, தாட்பாலடைந்த தன்மை அறிவாரை அறிந்துமே'' (ஷை.7-5-3)என்று சடகோபர் அருளிச்செய்தார். ''நன்றுனரண் கொண்டவர்கட் கின்ற லதோ நாளையல தூழியன்றே, நன்றிதரு மெய்யுணர்தன் தாளிணையை நல்கிடுவன் வேங்கடக்கோன், என்றதரு ணீபுரியும் பெருமிதநல் விளையாட்டி னேற்றத்தாழ்வில், நின்றெழுமுன் தள்ளரிய தண்ணளியின் திரைகளெனத் தெரிப்பாய்தானே''(தயாசதகம்79, தமிழ்செய்தது)என்று வேதாந்ததேசிகர் அருளிச்செய்தார். ஆதலின் மெய்ந் நூல் விரித்தலும மயக்கநூல் காட்டலும் இறைவன் கோன்மை நிகழ்த்தும் பாகுபாடும் நீதிப்பாடுமாம். ஈதறி தற்கியலாது ஒருகுலத்துக்கு ஒருநீதி என்று அறநூல் களை இகழ்வார் கூற்று மருள் என்க. கள்ளவேடம் என்பது அருளாளனாகிய இறைவன் விளையாட்டு. அதை அவன் லீலை என்பர்.அது கண்புதையல் விளையாட்டு என்னப்படும். ''கண்புதைய மூடிற்றால்'' (திருவாய். 5-4-6)என்ற சடகோபர் திருவாய்மொழியையும் ''ஒண் டொடியாள் திருமகளுந் தானு மாகி ஒருநினைவா லீன்ற உயி ரெல்லா முய்ய,வண்டுவரை நகர்வாழ வசுதே வற் காய் மன்னவற்குத் தேர்ப்பாக னாகிநின்ற தண்டுளவ மலர்மார்பன் தானே சொன்ன தனித்தருமந் தானெமக் காய்த் தன்னை யென்றுங், கண்டுகளித் தடிசூடவிலக்காய் நின்ற கண்புதையல் விளையாட்டைக் கழிக்கின் றானே''

(தேசிக,அமிர்தாஸ்.10)என்ற வேதாந்ததேசிகர் தேசிக மாலையையும் நோக்குக.

இறைவனாகிய பேரருளாளனைத் தாள்பற்றி அந்த மில் பேரின்பத்தை அருந்தற்கு இட்டுப்பிறந்த ஞான இயல்வினனாகிய சிற்றுயிர்ப்பொருளின் மெய்யுணர் கண்ணை அதன் வினையின் பயனாக மறைத்துப் பொய் யுணர்வில் மருட்டற்றன்மையனுமாறு ஆக்கி அவன்பால் கள்ளவேடங் கொண்டு விளையாடுகின்றான். மதிநல மருளும் பேரருளாளன் தானே கள்ளவேடம் கொள் கின்றான். அவ்வேடத்தில் கண்புதையல் விளையாட்டைப் புரிகின்றான். அது அருளாளனாகிய இறைவன் கோன்மை கொள்ளும் வேடமும் விளையாட்டுமாம். அவ்வேடம் கொண்டு தீவினையோரை மயக்காக்கால் இறைவன் கோன்மை கெடும் என்பது மறைஉணர்த்தும் உண்மை இதன்நுட்பத்தை பிரமசூத்திரத் துள்ளும்(2-1.33-36;2.3 41;3.2.37முதலியன)அதன் விளக்கமாகிய வேதாந்த தேசிகர் அதிகரணசாராவளியுள்ளும் காண்க(192ம்சு லோகம் இப்பொருளை நன்கு விளக்கிற்று.)

மெய்யுணர்தல் என்னும் திருக்குறளதிகாரம் இம் மறைப்பொருளை அடியாகக் கொண்டுள்ளது. வேத உணர்வாகிய மெய்யுணர்வால் மக்கள் பிறவியினின்றும் விடுபடுகின்றார்கள். மீளாப் பேரின்பம் பெறுகின்றார்கள். பொய்யுணர்வாகிய புலனுணர்வால் பிறவியில் மூண்டு மாள்கின்றார்கள். துயரில் ஆழ்கின்றார்கள் என்பது அவ் வதிகாரப்பொருள். இறைவன் அருண்மையே மிக்கதாத லின் மயக்கற்கு அவன் கொள்ளுமது வேடம் என்றும் அவ்வேடத்தில் அவன் உரைப்பது மயக்கநூல் என்றும் மேலே சொல்லப்பட்டது. இறைவன் ஆணையாகிய வேதம் வகுத்த விதிவிலக்குகளைக் கடந்து ஒழுகும் எம்மா பாவியரும் ஏதோ ஒருநாள் இறைவன் அருளுக்கு இலக் காகி அவனைச் சரணம் அடைந்து பிழைபொறுத் தருள வேண்டி அவனருளால் உய்வு பெற்று நல்வாழ்வுடை

யாரே ஆவார் என்பது இறைவனைப் பற்றிய மெய்யுணர்வாம். அடியவர்க்கு மெய்யன், மெய்யர்க்கு மெய்யன், பொய்யர்க்குப் பொய்யன் என்றது அம்மெய்யுணர்வு. இறைவன் அகாரவாச்சியனுகிய ஆதிபகவன். அவனைத் தாள்பற்றுவார்க்கு அவன் மெய்யன். பற்றுர்க்குப் பொய்யன். தாள்பற்றுவார்க்கு மெய்யன் என்னும் பொருளைப் பகவன் என்னும் சொல்லாலும் பற்றுர்க்குப் பொய்யன் என்னும் பொருளை ஆதி என்னும் சொல்லாலும் அந்த ஆதிபகவன் என்பான் அகாரவாச்சியன் என்னும் பொருளையும் உணர்த்தி நிற்கும் சால்பு ஓர்ந்து உணரத் தக்கது. ''உலகம் யாவையுந் தாமுள வாக்கலும், நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா, அலகிலா விளையாட்டுடையாரவர் தலைவ ரன்னவர்க்கே சரணுங்களே'' (இராமாவ.பால.சிறப்பு.1)என்ற கம்பர் முதல் திருவிருத்தத்தில் முதல்திருக்குறட்பாவின் மெய்ப்பொருள் விளக்குமாற்றைக் கண்டுணர்க. "கற்பா ரிராம பிரானையல்லால் மற்றுங் கற்பரோ'' (திருவாய்.7.5.1)என்று நாவீறுடைய பிரான் தொழுதெழும்படி. இங்குக் கற்பார் என்றது தாள் பற்றலளவாக முதிர்ந்து கனிந்த மெய்யுணர்வுடையார் என்னும் சிறப்புப் பொருட்டு. அத்திருப்பரச் சரணிய மூர்த்தியாகிய இராமபிரானைத் தாள்தொழுதெழுஞ் சீரிய முதுமதிச்செல்வர் மாதாநுபங்கியாகிய திருவள்ளுவர் என்ற உண்மை இதனுற் காணலாம். ''கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன் நற்ருள் தொழாஅ ரெனின்'' (குறள்-2) என்ற குறளை இங்கு நோக்குக. இக்குறட் பொருள் பின்னர் விரித்துஉரைக்கப்படும். காவியவிசுவரூபம் காட்டினுன் கம்பநாடன் என்ற காட்சியை இங்கும் காண்க. ''உலகமுள வாக்கல்நிலை பெறுத்தல் நீக்கல், உன்களிகொள் ளரிபுரியும் விளையாட்டென்றும் நிலவுதிரு வான்கதவு நீக்கு மோக்கத் திறவுதரு மவன்தகவுன் திறனே யென்றும் குலவியெழு குரலினிய குயிலின் கீதம் கொழிக்குமொழி விழுமியர்நாச் செழிக்க வாழ்த்தும் கலையிலகு மறைத்தலைவன் திருநீ என்றே கண்களிக்கக் கருணையுனைக் கண்டே னம்மா!'' (தயாசதகம்.68. தமிழ்

செய்தது)என்ற வேதாந்ததேசிகர் திருப்பாடலில் இப் பொருளின் நலமும் நயமும் பொலிந்து எழில் காட்டும் திருக்காண்க.

வேதாந்ததேசிகர் அருளிச்செய்த தமிழ்ப்ரபந்தங் களுள் மும்மணிக்கோவை முதலில் அருளப்பெற்றது. அக்கோவை ''அருள்தரும்'' என்று குறளைப்போல் அகரத்தில் தொடங்கியும் இங்குக் கூறிய பொருளை உணர்த்தியும் நிற்றல் நோக்கத்தக்கது. இப் பொருளை வேதாந்ததேசிகர் நவமணிமாலையில் பின்னும் விரித்து விளங்க வைத்தார். ''புரமுயர்த்த அசுரர்கட்கோர் புற முரைத்த பொய்யினன், வரையெடுத்து மழைதடுத்த மழையொடொத்த மெய்யினன், திரைநிரைத்து கட லெரித்த சிலைவளைத்த கையினன், அருள்கொடுத்து வினை தவிர்க்கும் அடியவர்க்கு மெய்யனே'' (தேசிகமாலை. நவ மணி.3.)என்ற பாடலை இங்கு நோக்குக. ''அகர முதல வுரைகொள்மங்கை கணவனுக் களித்தனை''(நவமணி.2) என்ற பாடலையும் நோக்கி இங்குக் கூறும் பொருள் திடனுமாறு காண்க. ''உன்கழல் பாடியே பணிந்து தூமனத்தனனாய்ப் பிறவித்துழதி நீங்க என்னைத் தீமனம்கெடுத்தாய்,, (திருவாய் 2-7-8) ''தனமெய் யர்க்குமெய்யனே, (ஷை 9-10-6) ''மெய்யனாகும் விரும்பித் தொழுவார்க்கெல்லாம், பொய்யனாகும் புறமே தொழு வார்க்கெல்லாம்'' (ஷை.9-10-7) என்ற சடகோபர் திருவாய்மொழியையும் ''மெய்யர்க்கே மெய்ய னாகும் விதியிலா வென்னைப் போலப், பொய்யர்க்கே பொய்ய னாகும் புட்கொடி யுடைய கோமான்'' (திரு மாலை.15)என்ற தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலையையும் ''அடியவர்க்குமெய்யன்'' (பெரிய திருமொழி.3-1-3)''மறையோர் தங்கள் கண்''(பெரிய திருமொழி7-10-9)என்ற மங்கையர்கோன் பெரிய திரு மொழியையும் நோக்குக.

---

## எட்டாமத்தியாயம்

இறைவன் நுகர்ந்து இன்புறும் சுவை இருவகை யாகும். ஒன்று விளையாட்டுச் சுவை. அது லீலாரசம் என்னப்படும். கருமபயனாக உயிர்களை ஆக்கையிற் கட்டி அதற்குத்தக அவைகளை ஆட்டிவைத்து இன்புறும் சுவை. அது கண்புதையல் விளையாட்டு. தன்னைச் சரணம் அடையும் உயிர்களின் கண்ணைத் திறந்து கருமக்கட்டைச் சிதைத்து அவர்களை ஆட்கொண்டருளும் சுவை மற்றொன்று. அது அநுக்கிரஹ ரஸம் என்னப்படும். கட்டில் பொய்யுணர்வு. அது இருள் (தமம்). அசுரசம்பத்து. வீட்டில் மெய்யுணர்வு. சத்துவம் (ஒளி) தெய்வசம்பத்து என்றபடி இறைவன் அருளாளனாதலால் அவன் கட்டியாட்டலும் விளையாடல் ஆயிற்று. இல்லையேல் அது வதையாடலேயாம். ஆதலின் பேரருளாளனாகிய இறைவன் ஒருவனுக்கே அவ்விரண்டும் உற்ற இயல்பு என்பது மறைமுடித் துணிபு.

அசுரசம்பத்தாம் இருளின் தன்மையும் தெய்வசம்பத்தாம் ஒளியின் தன்மையும் மேலே விளக்கப்பட்டது. அவற்றின் முரணே உலக முரணுக்கு அடி. இறைவன் தானே திருவவதாரம் செய்து பொய்யராகிய கொடுவல்லசுரர் (அசுரசம்பத்தாகிய இருள்) மெய்யராகிய நல்லடியார்க்கு (தெய்வ சம்பத்தாகிய ஒளிக்கு) செய்யும் துன்பங்களையும் இடர்களையும் களைந்து மறநிலையசுரர்களை மாய்த்து நல்லறம் நிலைகொள்ளுமாறு அருள் புரிகின்றான். தொழுது பேணும் நல்லடியார்க்குத் தொழப்படும் தன்திருவடிவத்தில் அடியவர்க்கு மெய்யன் என்று தன்னைக் காட்டித்தரும் தன்பெருந் தகவில் அறத்தை நிலைகொள்ளச் செய்கின்றான். அடியார் பேணும் உருவத்தைத் தான் பேணி அவ்வுருவத்தில் தன்னைக் காட்டியருளித் தன்னடியாரைத் தோள்களாரத் தழுவித் தன்பேறாக இறைவன் பேணி அருள்செய்து

விளங்குகின்ருன். ''பேணுங்கால் அறம் பேணும்'' (மநு-8-15.தமிழ்செய்தது)என்று மநுகூறினர். ''அறத்தின் மூர்த்தி இராமன்'' (இராமாய. ஆரணிய.37-13-தமிழ் செய்தது)என்று வான்மீகி பாடினர். ''பேணுங்கால் பேணு முருவாகும்''(திருவாய்.2-5-10)என்று சடகோபர் அவ்விருவர் மொழியும் ஒன்றி எழில்காட்டும் நயம் பொலிய யாத்தருளினர். பேணும் உரு என்றது இறைவன் திருஅவதாரஉரு என்றபடி. இதை ஆராத்ய ஸ்வரூபம் என்று இராமாநுஜர் அருளிச்செய்தார் (கீதை. 4-8-பாஷ்யம்) தனது சரணியத் திருவுருவத்தைத் தன்னைச் சரணம் அடைந்தவர்க்குக் காட்டித் தருமாற்ருல் பேரருளாளனுகிய இறைவன் தருமத்தை நிலைநிறுத்து கிருன். அஃதே அவன் திருவவதாரப் பயன் என்று இறைவன் தானே பாடியருளிய கீதைக்கு இராமாநுஜர் பாடியமிட்டருளினர். அடியவர்க்கு மெய்யன் என்னும் தனது சரணிய உண்மையைத் தன்திருமேனி (மெய்) கொண்டு காட்டி வைதிகதருமத்தை இறைவன் நிலை நிறுத்துகிருன் என்றபடி. அடியாரைக் காத்து ஆட்கொள் ளலும் தன் திருமேனிக் காட்சியை அவர்களுக்கு அருளு மாற்ருல் தருமத்தை நாட்டலும் இறைவன் செய்தருளும் அவதாரத்தின் பயன் என்பது கீதைத் துணிபொருள். அடியவர்க்குத் தீங்கு இழைக்கும் அசுரரை(அசுரசம்பத்து உடையாரை)மாட்டுதல் அவதாரத்தின் முக்கியப் பயன் அன்று. அசுரரைக்காய்தற்கு அவதாரம் செய்யவேண்டி யதில்லை. இறைவன் சங்கற்பமாத்திரத்தாலே அது செய்து முடித்தற்காகும். (ஸ்ரீபாஷ்யம்.1-1-21). தன்னைச் சரணம் புகும் அடியவர்க்குத் தன்னைக் காட்டித் தந்து அவ்வாயிலாய்த் தருமத்தை நாட்டுகின்ருன்: அவர்களைத் துன்புறுத்தும் அசுரரை மாட்டுகின்ருன். அது இறைவனுடைய அவதாரத்தின் சிறப்பும் பயனு மாம். அது அவனது இன்னருளின் அவதாரமேயாம். அது இறைவன் ஒருவனுக்கே உற்றது. பிறர்க்கு அற்றது. ''அவ்வரு ளல்லன அருளுமல்ல'' (திருவாய்9.9.6)என்று சடகோபரும் “நல்லா னருளல்லால் நாமநீர் வையகத்துப்

பல்லா ரருளும் பழுது''(முதல்திருவந்.15)என்று பொய் கைப்பிரானும் இவ்வுண்மையை விளக்கியருளினர்கள். மெய்யருளாளனுன திருப்பரன் ஒருவனுக்கே அவதாரம் உற்றுள்ளது. அவதாரம் உற்ற ஒருவனே திருப்பரன். அவன் ஒருவனுக்கே திருவுருக்காட்டி நல்லறம் நாட்ட லும் தன்னடிமெய்யர்பால் மெய்யருள் சுரத்தலும் உற்ற தும் உரியது மாயிற்று. வேதாந்ததேசிகர் அருளிச்செய்த மும்மணிக்கோவை அடியவர்க்கு மெய்யனின் மெய்யருள் மெய்ம்மையை விளங்கக் காட்டுமோர் மெய்யொளிக்கோ வையாய்த் திகழா நின்றது. ''அருள்தரு மடியவர் பான் மெய்யை வைத்துத் தெருள்தர நின்ற தெய்வநாயக! நின் அருளெனுஞ் சீரோ ரரிவையாய தென இருள்செக எமக் கோ ரின்னெளி விளக்காய் மணிவரை யன்ன நின்திரு வுருவில், அணியம ராக அலங்கலா யிலங்கி......நின்னு டன் சேர்ந்து நிற்குநின் திருவே.''(1) ''மொழிவார் மொழிவன மும்மறை யாகு மயிந்தையில்வந்து, இழிவா ரிழிகவென் றின்னமுதக்கட லாகிநின்ற, விழிவா ரருள் மெய்யர் மெல்லடி வேண்டிய மெல்லியல்மேல், பொழிவா ரநங்கர்தம் பூங்கரும் புந்திய பூமழையே'' (3)''நந்துத லில்லா நல்விளக் காகிஅந்தமி லமுத ஆழியாய் நிற்றி'' (4)''உயர்ந்தநீ உன்னை எம்முடன் கலந்தனை''(ஷை) ''நானு வுருவங் கொண்டுநல் லடியோர் வானு ரின்ப மிங் குற வருதி'' (ஷை)''கண்டிலங் கதியுனே யன்றிமற் றென் றும், பல்வகை நின்றநின் படியனைத்தும் தொல் வகை காட்டும் துணிந்த தூமறையே'' (ஷை) '' ஆறு நீயே ஆற்றுக் கருடலின்'' (7) ''அறமு நீயே மறநிலை மாய்த்தலின் (ஷை) நின்னுலன்றி மன்னு ரின்பம் நின்பொருட்டு நீ என்பொருட் டில்லை நின்னுரு நின்று மின்னுருத் தோன்றும் நின்றனக்கு நிகர் நின்னடி யடைவார், வாரணமழைக்க வந்த காரணமே'' (10) என்ற பாக்களும் பிறவும் நோக்கத் தக்கவை ''வரை யெடுத்து மழை தடுத்தமழை யொடொத்த மெய்யினன்'' (நவமணி. 3) என்றதும் அது. இப் பொருளெல்லாம் தூமறையுணர்த்தும் துணிபொருள் என்று இம்மணிக்

கோவை இனிது உணர்த்தி நின்றது. ஈதே திருக்குறள் முதலதிகாரம் தெரிய உணர்த்தும் பேருண்மை. "வீரனை நோக்கி யங்க மென்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர், வாரநெஞ் சுருகிச் செங்க ணஞ்சன மலையன் றுகில், கார்முகில் கமலம் பூத்த தன்றிவன் கண்ணன் கொல்லாம் ஆரருள் சுரக்கும் நீதி யறநிறங் கரிதோ வென்றான்" (இராமாவ-உயுத். விபீடணன். 137) என்று இவ்வுண்மையைக் கவிச் சக்ரவர்த்தியின் ஆர்வ மோங்கிய தீங்கவி முழங்கிற்று.

---



## ஒன்பதாமத்தியாயம்

தெய்வச் செல்வம் சத்துவம் ஒளி மெய்ந்நூல் மெய்யர் நல்லார் என்பதன் தன்மையும், அசுரச்செல்வம் தமம் இருள் பொய்ந்நூல் பொய்யர் பொல்லார் என்பதன் தன்மையும் மேலே கூறப்பட்டது, அசுரச்செல்வமாகிய தமம் (இருள்)உடையார்க்கு மூவர் உவமையாவார். இரணியன் இராவணன் சிசுபாலன் என்பார் அம்மூவர். அவருள்ளும் இரணியன் முதன்மை பெற்றவன். இருள் முதல்வன் என்னும் சொல்லுக்கு உரிய முதற்பொருளான வன். அவனை நோக்கத் தமம் (இருள்)என்னும் சொல் இராவண சிசுபாலருக்கு உற்றது உபசாரவழக்கு என்ன லாம்படி ஆயிற்று. தமத்துளார் திரளில் இரணியனே பெரி யான் என்னும் பெயர் படைத்தவனானன். இருட்பெரும் பருப்பதமாய்ப் பருத்தவன். ஆதலின பரியன் என்னும் பெயர் தனக்கே உரியதாக ஆக்கிக் கொண்டவன். பருத்த புய வலியன். நான்முகனிடத்தில் பெற்ற வாவலியன். தவவலியும் தமவலியை வளர்த்தற்கே உதவியது. உல கெலாம் பெயரத் தாவும் பேரடாநின்ற தாள்வலியன். (இரணியன்வதை-129)பல கூறி என. ஒப்பற்ற தமவலித் தனிப்பரியன் என்னும்படி பருத்தவன். அவன் வலியை ''முரணவலி'' (முதல் திருவந்.36) என்றார் பொய்கைப் பிரான். ''வரங்கருதித் தன்னை வணங்காத உரங் கருதி மூர்க்கத்தவன்''(இரண்டாந். 84)என்றார் பூதத்திருவடி. ''பரியனாகி வந்த அவுணன்'' (அமலனாதி. 8) என்றார் பாண் பெருமாள். ''பரிய இரணியன்'' (பெரிய திருமொழி. 1-5-7, 9-4-4) ''பரியோன்'' (ஷை 7-7-5) ''பேணா அவு ணன்'' (ஷை 1-10-5) கூடா இரணியன் (ஷை 11-7-4) ''இரணியனை முரணழிய'' (ஷை 8-3-7) ''இரணியனை முரணழித்த முதல்வன்'' (ஷை 7-11-5) என்றார் மங்கை யர்கோன். ''கங்குற் கனகன்'' பால. பூக்கொய். 1) ''பேர டா நின்ற தாளோ டுலகெலாம் பெயரப்போவான்'' (உயுத். இரணியன். 129) ''இரணியன். .........முரணி யன்'' (ஷை விபீடண- 2) என்றார் கம்பர். ''பரியனாகி

வந்த அவுணன்'' என்ற மேற்கூறிய பாண்பெருமாள் பாடலுக்கு ''ஸர்வலோகத்திலு முள்ள தமஸ் (இருள்) எல்லாம் திரண்டு ஒருவடிவு கொண்டாற் போலே அதிஸ் தூலனாய் (மிகப்பருத்தவனாய்) மஹாமேரு நடந்தாற் போலே எதிர்த்து வந்த திரண்டதோள் இரணியன்'' (முநிவாஹந. 8) என்று வேதாந்த தேசிகர் உரைத்தரு ளினார். மலைபோல் பருத்த இருட்பெரியான் என்னும் பிரசித்தி பெற்றவன் இரணியன் என்றது இதனால் உணர்த்தப்பட்டது. இங்கு மஹாமேருவைப் போல் பருத்து எதிர்த்து வந்தான் என்று உவமித்தது இரணிய னுடைய பெயரைக் கருதி என்க. [மகாமேருவுக்குக் கனககிரி பொன்மலை (இரணியகிரி) என்று பெயர், அது மிகப்பெரிய பொற்கிரி. இரணியன் பொன்பெயரோன் என்றது பற்றி அவன் பருத்த தன்மையை மட்டிலும் கருதி அக்கிரியோடு உவமித்தபடி ''பொன்பெயரோன் மார்பிடந்த வீங்கோதவண்ணர் விரல்'' (முதல் திருவந் தாதி. 23) என்ற பொய்கைப்பிரான் திருவந்தாதியும் ''அப்பொன்பெயரோன் தடநெஞ்சங் கீண்ட பிரானார்'' (திருவிருத்தம்.46) என்ற சடகோபர் திருவிருத்தமும் ''எவ்வு வெவ்வேற் பொன்பெயரோன்'' (பெரிய திருமொழி 1.7.4) என்ற மங்கையர்கோன் பெரிய திருமொழியும் இங்கு நோக்கத் தக்கவை. இரணி யன் பொன்னின் (இரணியத்தின் கனகத்தின்) பெயரைப் புனைந்த பருத்த இருள்மலை என்ற பொருள் இதனால் காட்டப்பட்டது. மேருவின் உயர்வை மட்டிலுமே கருதி உவமித்தபடி. அதன்பொன்மை ஒண்மைகளைக் கருதி உவமித்தபடியன்று என்று அறிக. இதை ஏகதேச உவமை என்பர். மகாமேருமலையை வேத மயனாகிய கருடாழ்வானும் பெரியதிருவடிக்கும் அவனை நிகர்த்த அநுமனும் சிறிய திருவடிக்கும் உவமையாகக் கூறுவது ஆன்றோர் மரபு. ''சிறகுடைய மஹாமேருவைப் போலே சிறந்த திருமேனியுடையனாய் த்ரயீ (வேத) மயனாய்த் திருமகள்சேர் மார்பனுக்குத் திருக்கண்ணாடி போல் அபிமுகனாய் நிற்கிற காலார்ந்த கதிக் கருடன்''

(பரமபத.திவ்யதேச)என்றும் ''ககனமிவர் கனகவரை யிருமைதரி மறையுருவ வொருதனது கருடனிற கலைவு வளி யிலவமுற விடமுமிழு கணையுறுக ணறவொழிய'' (ரகுவீரகத்ய. தமிழ்செய்தது) என்றும் வேதாந்த தேசிகரும் ''மஞ்சுயர்பொன் மலைமேலெழுந்த, மாமுகில் போன்றுளர் வந்து காணீர்அஞ்சிறைப் புள்ளு மொன் றேறி வந்தார்'' (பெரியதிருமொழி.9-2-8)என்று மங்கை யர்கோனும்.''கருமுகில் தாமரைக்காடு பூத்து நீடு இரு சுட ரிருபுறத்தேந்தி யேடவிழ் திருவொடும் பொலிய வோர் செம்பொற் குன்றின் மேல் வருவபோற் கலுழன் மேல் வந்து தோன்றினன்.''(பால.திருவவதார.13) என்றும் ''அல்லைச் சுருட்டி வெயிலைப் பரப்பி யகலாசை யெங்கு மழியா, வில்லைச் செலுத்தி நிலவைத் திரட்டி, விரிகின்ற சோதி மிளிர எல்லைக் குயிற்றி யெரிகின்ற மோலி யிடைநின்ற மேரு வெனும்த் தொல்லைப் பொருப் பின் மிசையே விளங்கு சுடரோனின் மும்மை சுடர'' (உயுத்த.நாகபாச.246)என்றும் ''பொன்னுருக்கொண்ட மேரு புயத்துக்கு முவமை போதாத் தன்னுருக் கொண்டு நின்றான் தருமத்தின் தனிமை தீர்ப்பான்'' (கிட்கிந்தா அநுமப்.34) என்றும் கம்பரும் பாடியவை காண்க. ''புருவத்துக் கருவல் கந்தத்தாற் றுங்கியிவ்வுலகந் தந் தடிப் படுத்ததை நடுவண் ஓங்கிய பலர்புகழ் குன்றினோ டொக்கும்'' (பரிபாடல்.4.22-24)என்று கடுவனிளவெயி னனார். இவ்வுலகம் முன் வெள்ளத்தில் அழுந்தின காலத்தில் கோலவராகமூர்த்தியாய் உலகத்தை அவ் வெள்ளத்தினின்றும் எடுத்துக் காத்தருளிய செய்கை மேருவின் செய்கையோடு ஒக்கும் என்று உவமித்ததும் நோக்கத்தக்கது.

கங்குற்கனகன் தன் அசுரஇயல்புக்குத் தக மிகப் பருத்த இருள்மலைபோல் உயர்ந்து பரமபாஸ்கர இறைவ னாகிய வெய்யோனை எதிர்த்தான். அவன் எதிர்த்த அளவில் அளவனைத்தையும் கடந்த உயர்வுடைய இறைப் பரஞ்சோதிதானும் தன் அளவுபாடற்ற உயர்வைப் பின்

னும் மிகுத்து உயர்ந்தோங்கினன். விஷ்ணுவாகிய தான் மஹாவிஷ்ணு ஆனன். மஹாவிஷ்ணு என்பது நரசிங்க மூர்த்தியின் திருநாமம். திவ்விய ஆத்தும சொரூப வியாத்தியோடு திவ்விய மங்கலத் திருமேனி வியாத்தி யால் பின்னும் உயர்ந்தான் என்றபடி- இவ்வாறு இருள் மிகு மலையாகிய இரணியனும் இறைச்சுடர் மிகு பரஞ் சோதியாகிய சரணியனும் உயர்ந்த உயர்வை:- 'இரு வரும் பொருந்தப் பற்றி யெவ்வுல குக்கு மேலாய் ஒரு வருங்காணு வண்ண முயர்ந்ததற் குவமை கூறின் வெரு வருந் தோற்றத் தஞ்சா வெஞ்சின வவுணன் மேரு அருவரை யொத்தா னண்ண லல்லவை யெல்லா மொத் தான்'' (இரணியன். 148) என்று அரியதோர் உவமை யால் கம்பநாடுடையவள்ளல் காட்டித் தந்தார். அவுணன் மேரு அருவரையை ஒத்தான் அண்ணலோ எனின் அல்லவை யெல்லாம் ஒத்தான் என்ருர். அண்ண லாதலின் அவன் எங்குமுளன். எங்குமுளனுதலின் அவன் அண்ணல். பொருள் அனைத்தையும் வியாபித்து அவை கட்கெல்லாம் உள்ளுயிராய் நின்று நிகழ்கின்ருன். ஆத லின் அவற்றின் உயர்வெல்லாம் அவற்றை உருவாக உடைய அண்ணலின் உயர்வாம். அவ்வுயர்வெல்லாம் அவ்வுருக்களுள் ஒன்றி நிற்கும் அன்னவன் (விசிட்டன்) உயர்வாயிருக்கச் செய்தே அவ்வவ் வுருக்களின் உயர்வு களுடைய அளவுபாட்டையெல்லாம் கடந்து அவற்ருல் தீண்டப் படாது தான் ஒருவனே எங்கும் நிறைந்த பரிபூரண இறைவனய் விளங்கும் பரஞ்சுடர் என்ற உண்மை விளங்குமாறு உயர்ந்தான். உலகுதன்ஞே டொன்றி நிற்கத் தான் வேறுநிற்கும் அளவற்ற அண்ணல் என உயர்ந்தான் என்றவாறு. காலத்தாலும் இடத்தாலும் பொருளாலும் அளவு மூன்றுவகைப்படும். குடம்போன்ற சடவிகாரங்கள் காலத்தாலும் இடத் தாலும் பொருளாலும் அளவுபாடு உடையன. உயிர்ப் பொருள் என்றுமே உள்ளது. அதன் சொரூபம் அணு. ஆதலின் சொரூபத்தால் வியாத்தி அற்றது. பிறிதோர் பொருளுக்கு உள்ளுயிர் (அந்தர்யாமி) அன்று. தனக்கு

இறைவனையே உள்ளுயிராக உடையது. இறைவன் ஒருவனே அனைத்துக்கும் உள்ளுயிர். எல்லாப் பொருள்களுள்ளும் உறைந்து அவைகளைத் தன் வயத்தவாய் இயக்கி ஆள்கின்ருன். அது இறைவனுடைய அந்தர்யாமித்தன்மை என்னப்படும். ஆதலால் உயிர்ப்பொருளெல்லாம் இடத்தாலும் பொருளாலும் அளவுபாடுடையன. ஆகாயம் என்னும் சடவிகாரம் என்றும் (நீடு) உள்ளது. எங்கும் உள்ளது. ஆதலால் காலத்தாலும் இடத்தாலும் அளவுபாடற்றது. பொருளால்மட்டிலுமே அளவுபாடு உடையது. இறைப்பொருளை உள்ளுயிராய் உடையதாதலாலும் இறைப்பொருளால் அளக்கப்பட்டும் இயக்கப்பட்டும் ஆளப்பட்டும் இருத்தலாலும் ஆகாயம் பொருளால் (அந்தர்யாமியாகிய இறைப்பொருளால்) அளவுபாடு உடையது. அவ்வித மூவகை அளவுபாடும் அற்றதே இறைப்பொருள். மலையிலோ அணுவிலோ தூணிலோ துரும்பிலோ இறைவன் அவ்வப்பொருள்களுள் அந்தர்யாமியாயிருப்பினும் அவற்றின் குறுமை நெடுமைகள் அவனதல்ல. குறுமை நெடுமைகளாம் அளவுபாடுகள் அற்றவனுய் என்றும் எங்கும் நிறைந்து விளங்கும் வியாபகப் பரஞ்சோதியாய் இறைவன் திகழ்கின்ருன். அளவுபாடு அற்ற பரம்பொருளின் வியாபக உயர்வில் குறுமை நெடுமைகளாம் அவரப்பொருள்களின் வியாப்பிய உயர்வெல்லாம் உயர்வுஅல்ல என்னும்படி பொடி என அடங்கி ஒடுங்கிப் போம். இறைவன் உயர்வு குடத்தின் உயர்வு அல்ல(குறுமை அல்ல) மலையின் உயர்வு அல்ல (நெடுமைஅல்ல). அவ்வாறே அனைத்தின் உயர்வும் அல்ல. அவையெல்லாம் அளவுபாடுடைய அவரப்பொருள்களின் உயர்வே. இறைவன் உயர்வு அஃதல்ல அஃதல்ல என்று அல்ல அல்ல என்றேதான் உணர்தற்காகுமேயன்றி வேறு எவ்வாற்ருனும் உணர்தற்காகாது. இது உபநிடதம் உணர்த்திய முறை. (ப்ருஹதாரண்யக 4.3.6). இவ்வுபநிடத உண்மையை வியாசமுனிவர் பிரமசூத்திரத்தில் விளக்கியருளினர். (3.2.20;3.2.21)குறுமை நெடுமை

களுள் வியாபித்திருப்பினும் இறைவன் அவ்வளவுபாடு களால் தீண்டப்படாது பரிபூரணனாய் எங்கும் நிறைந்து விளங்குகின்றான் என்பதும் அல்ல அல்ல என்று அளவு பாடு மட்டுமே விலக்கப்பட்டது என்பதும் பிரமசூத்திரத் திடப் பொருள். ''உயர்வற வுயர் நலமுடையவன்'' (திருவாய்1.1.1)என்ற திருவாய் மொழித் திடப்பொரு ளும் அஃதே. இறைவனாகிய பரிபூரணனுக்கே உற்றது உயர்வு. மற்ற எப்பொருளின் உயர்வும் இறைவனு யர்வை நோக்க உயர்வல்ல என்றே அறிதற்காமாறு அவ்வவ்வுயர் பொருளின் உயர்வை அறுத்தே இறைவன் உயர்வு ஓங்கி விளங்கும். அவரப்பொருள்கள் எத்துணை உயர்தற்கு ஒண்ணுமோ அத்துணையும் ஒருங்க உயர்ந்த இரணியன் உயர்வுதானும் உயர்வல்ல என்னலாம்படி அண்ணலின் உயர்வினுள் மிக்க நுண்ணியதோர் அணு வென அடங்கி ஒடுங்கியது. அல்லவையெல்லா மொத் தான் என்றவிடத்தில் அல்லவை என்றது இரணியன் உயர்வை விலக்கிக் கூறியதன்று. அடக்கிக் கூறியதே. அவுணன் உயர்வுதானும் அண்ணலின் உயர்வினுள் கடலிற் கடுகுபோலும் வானில் மசகம்போலும் உளதோ இலதோ என்னும்படி அடங்கி ஒடுங்கியது என்றபடி. இரணியனுக்கும் அண்ணலே அந்தர்யாமி (உள்ளுயிர்). அண்ணலினின்றும் இரணியனை விலக்க ஒண்ணாது. ஆத லின் இரணியாசுரன் மகாமேருகிரியைப் போன்றான், நரசிங்கப்பிரான் மற்ற மலைகளையெல்லாம் போன்றான், மேருமலைக்குச் சுற்றிலுமுள்ள குலபருவதங்களும் சக்ர வாளகிரியுமாகிய அனைத்தையும் போன்றான் என்று இப் பாடற்குப் பொருள் உரைத்தல் பொருந்தாது என்க. இரணியன்வதைப் படலத் துணிபொருட்கு முற்றுமே முரண். அது ''மாமேருக் குன்றினு முளன் (124)என்று கூறியதை மறுத்ததாம். மாமேருவின் உயர்வுதானும் அண்ணலின் உயர்வில் அணுவென அடங்கும் என்ற மெய்ப்பொருள் காண்க. இதை ஏகதேச அநுவாதம் என்பர். பெரிய அளவில் சிறிய அளவு அடங்கும்: ஆயிரத் தில் பத்து அடங்கும். பத்து அடங்காத ஆயிரமில்லை,

அளவுகடந்த பொருளில் அளவுடைய பொருள் யாவும் அடங்கும். விலகி நிற்காது. ஆதலின் இத்தன்மை ஏகதே சாநுவாதம் என்னப்பட்டது. அண்ணல் என்ற சொல் ஏகதேசாநுவாதம் என்பதைத் திடப்படுத்தும். இவ்வுவமையால் இறைத்திருநரசிங்க வெய்யோன் பரிய இரணிய இருளை நீக்கிய விரைவும் உணர்த்தப்பட்டது. ''எங்குமுளன் கண்ண னென்ற மகனைக் காய்ந்து, இங்கிலையா லென்றிரணியன் தூண்புடைப்ப, அங்கப் பொழுதே அவன் வீயத் தோன்றிய என், சிங்கப்பிரான் பெருமை யாராயுஞ் சீர்மைத்தே'' (திருவாய்.2.8.9) என்று அவ்விரைவைச் சடகோபர் விளக்கியருளினர். காணுதவரை பகைத்து இகழ்ந்த இரணியன்தானே தெள்ளிய திருநரசிங்கமூர்த்தியாய் அண்ணல் சோதித் திருத்தூணினின்று தோன்றியவாறே ''இது என்ன திருவுருவம் அற்புதம் சீயம் அல்ல மானுடம் அல்ல நரசிங்கவுருவம் என்னே! (பாகவதம். 7-8-19. தமிழ் செய்தது)என்று உபநிடதம் ஓதிய அல்ல அல்ல என்ற முறையாலே அண்ணலைக் கண்டு அற்புதம் என்று வியந்தான். ''அண்ணல் அல்லவையெல்லாமொத்தான்'' என்று இரணியன்தானே ''கம்பத்தின் வழியே காணக் காட்டுதி'' (இரணியன். 125)என்று காணவிடாய்த்த காட்சியை ஒருபடி கண்டுவியந்தபடி என்க. இப்பாடலில் வெருவருந் தோற்றம் ஏன்றதற்கு முநிவாஹநபோகத்தில் வேதாந்ததேசிகர் உரைத்தபடி மகாமேருமலைபோற் பருத்த இருளின் தோற்றம் எனப் பொருள் கொள்க. ''கங்குற் கனகன்'' என்றதற்கும் ''மேரு அருவரை ஒத்தான்'' என்றதற்கும் அஃதே பெரிதும் பொருந்தும். பரமபாஸ்கரன் என்றார் வேதாந்ததேசிகர். வயங்கு வெய்யோன் என்றார் கம்பர். ஆதலின் பொருள் நலமும் அப்பொருளில்தான் என்று அறிக.

---

## பத்தாமத்தியாயம்

இரணியனுக்கு அடுத்தபடியாக இராவணன் இருட்பரியனுவான். இராவணனும் பருத்ததோர் இருட் பருப்பதமே யாயினும் இரணியனை நோக்க ஒரு சிறு துரும்பே போல்வான். இராவணன் திக்குவிசயம் செய்ய உலகெல்லாம் சுற்றிவருங்கால் மாவலியிருக்குமிடம் வந்து சேர்ந்தான். மாவலியுடன் போர் செய்ய விரும் பினன். அப்பொழுது மாவலி காண்பதற்கரிய பகலவன் போல் ஒளிமிக்க விசுவரூபனுய் விளங்கினன். தன்னைத் தேடிவந்த இராவணனை மாவலி தன்மடியில் இருத்திக் கொண்டு என்பால் நீ வேண்டிவந்த காரியம் என்ன அதை நான் செய்கிறேன் என்றுன். அதற்கு இராவணன் முன்னுள் உன்னைத் திருமால் இங்குக் கட்டி வைத் தான் என்று கேள்விப்பட்டேன். அக்கட்டினின்றும் உன்னை விடுவிக்கும் வலிமை உடையவன் நான். ஐயப் படாதே என்று கூறினன் அதைக்கேட்ட மாவலி சிரித் துக்கொண்டே எவனைப்பற்றி நீ கேட்கிருயோ அவனைப் பற்றிச் சொல்கிறேன் கேள். கரியமேனியனுய் இங்கு வாயிலில் எந்த ஒரு புருடன் என்றும் நிற்கின்ருனே அவனுல் வலிமிக்க தாநவர்களும் பிறரும் அடக்கப்பட்டு ஒழிந்தார்கள், நானும் கட்டுண்டேன். தானவர்க்கு அவன் தடுக்கவொண்ணுக் கூற்றுவன் அவனை யாரும் வஞ்சிக்க முடியாது. அவன். பேரிறைவன். விஷ்ணு. அவன் அவதாரங்கள் பல செய்து தாநவவீரர்களை மாய்த்த பெருந்திறலோன் என்று கூறி அங்கிருந்ததோர் கல்லைக்காட்டி இதோ எரியும் தழல் போல் யாதொரு வட்டக்கல் சுடர்கின்றதோ அக்கல்லை இங்கண் எடுத்துவா என்று மாவலி இராவணனுக்குச் சொன்னன். இராவணனும் அங்குச்சென்று அக்கல்லை எடுக்க முண்டி முயன்ருன். இயலவில்லை. பின்னும் முயன்று அக்கல்லைச் சிறிது அசைத்த வளவிலே நசுக் குண்டு குருதி வெள்ளம் பெருகக்கீழே அடியற்ற மரம் போல் விழுந்து ஒரு முகூர்த்தம் மூர்ச்சைபட்டுக் கிடந் தான். மூர்ச்சை தெளிந்து எழுந்த இராவணன் மிகவும்

வெட்கம் அடைந்து நின்ருன் அப்படி நின்ற இராவணனே நோக்கி இராவணனே! இங்குவா நான் சொல்கிறேன் கேள். நீ எடுக்க முயன்றது என் முற்பாட்டன் இரணியன் காதணியில் இழைக்கப்பட்ட மணிக்கற் களுள் ஒன்று. நரசிங்கப்பிரானேடு இரணியன் போர் செய்தபொழுது அக்கல் சிதறி இங்கு விழுந்தது. மற்றவை மலேயடிவாரத்திலும் வேறு பல இடங்களிலும் சிதறி விழுந்தன. இரணியன் காதணிக்கற்களுள் ஈது மொன்று என்று கூறி அத்திற இரணியனும் அங்கப் பொழுதே வீயத் தோன்றிய பரம் பொருளும் பரஞ் சோதியுமான திருநரசிங்கப் பிரான் பேரிறைமையை இராவணனுக்கு மாவலி எடுத்துரைத்தான். அதைக் கேட்ட இராவணன் அங்கிருந்து புறப்பட்டுச் சென்ருன். [இராமாயணம். உத்தர. 23(1)] வெள்ளியங் கிரியையும் வேரொடு மெடுத்த இராவணன் இரணியனது காதணிக் கல் ஒன்றை அசைக்க இயலாது மூர்ச்சித்து விழுந்தான் என்ருல் இரணியனுக்கும் இராவணனுக்கும் மேருவுக்கும் கடுகுக்கும் போன்றதோர் நெடுவாசி தெரியக் காண லாம் ''இரணிய னென்பவ னெம்மனேரினும் முரணிய னவன்றனே முருக்கி முற்றினன் அரணியன்'' (உயுத். விபீடண. 2) என்று இப்பொருளேக் கம்பர் பாடினர்.

இராவணன் அரக்கன். இராக்கதர். நிசாசரர், யாது தாநர் முதலியன அரக்கர்க்குப் பெயர் (அமரம் 118-120). அவர் சுவர்க்க வருக்கத்தினர். மக்கள் வருக் கத்தினரல்லர். தேவர் அசுரர் என இருவகைப்பிரிவு உடையவர். அவ்விருவகையினரும் உடன் பிறந்த வர்கள். ஓரினத்தவரேயாயினும் ஒருவர்க்கொருவர் என்றுமே பகைவராயினர். ஆதலின் தேவர் என்பார் சுரர் என்றும் தேவப்பகைவர் அசுரர் என்றும் பிரிக்கப் பட்டார்கள். சுரருள்ளும் அசுரருள்ளும் உட்பிரிவுகள் உள்ளன. இயக்கர் (யக்ஷர்) என்பவர்களும் சுவர்க்க வருக்கத்தினரே. அரக்கரும் இயக்கரும் தேவ யோநியரே. வித்தியாதரர் அப்சரசுகள் இயக்கர் (யக்ஷ)

அரக்கர் (ரக்ஷ:) கிந்நரர் பிசாசர் குஹ்யர் சித்தர் பூதர் இவர்கள் தேவயோநிகள். (அமரம் 21-22) அசுரர் படைக்கப்பட்ட பிறகு பசி நீர் விடாய் அச்சம் முதலியவை இல்லாதிருக்க நாங்கள் என்ன செய்வது என்று அவர்கள் நான்முகக் கடவுளைக் கேட்க நான்முகக்கடவுளும் உங்களை நீங்கள் முயன்று தற்காத்துக்கொள்ளுங்கள் என்றான். அப்பொழுது அவர்களுள் சிலர் காக்கின்றோம். (ரக்ஷாம; என்றார்; வேறுசிலர் உண்கின்றோம் (ஜக்ஷாம:) என்றார்: காக்கின்றோம் (ரக்ஷாம:) என்றவர்கள் அரக்கர். (ரக்ஷ: ராக்ஷஸ:) என்னப்பட்டார். உண்கின்றோம் (ஜக்ஷாம:) என்றவர்கள் இயக்கர் (யக்ஷ:)என்னப்பட்டார். (இராமாயண. உத்தர 4.10—13)ஆதலின் விச்சிரவாவின் புதல்வருள் குபேரன் (வைச்சிரவணன்) இயக்கனென்றும் இராவணாதியர் அரக்கரென்றும் கூறப்பட்டார். இயக்கராயினும் அரக்கராயினும் அவர்கள் சுவர்க்க வருக்கத்தினரே. தேவயோநியரே. மக்கள்வருக்கத்தினரல்லர். அரக்கர் மக்களைப் பொருள்எனக் கருதாது இகழும் இயல்வினர். ஆதலின் இராவணன் நான்முகனிடத்தில் சாகாவரம் வேண்டுங்கால் மக்களால் தனக்குச் சாவுஇல்லை என்று வரம் வேண்டாது விடுத்தான். (இராமாயண.உத்தர.10.20) இராக்கதயோநிக்கு அவ்வரம் வேண்டுதல் பெரிதும் இழிவு எனக்கருதி அவ்வரம் வேண்டாதொழிந்தான். மனிதரைத் துரும்பினும் தண்ணியர் என்று இகழ்ந்த பெரிய அரக்கன் இராவணன். அவன் மனிதன் அன்று.

சுரர்களுள் போலும் மக்களுள் போலும் விலங்குகளுள் போலும் அரக்கருள்ளும் வருணப்பாகுபாடு உள்ளது. இராவணன் அந்தணவருணத்தவன். வேதம் ஓதியவன். வேதவேள்வி செய்தவன். வேதம் கூறிய சபதபங்களை, இலங்கையில் நிகழச்செய்தவன், அரக்கர்கள் இலங்கையில் சபம் செய்து கொண்டிருந்ததையும் வேதம் ஓதிக்கொண்டிருந்ததையும் அநுமன் கண்டான் (இராமாய. சுந்தர. 4.12-13) இராவணன்பால் அன்பினால்

வீடணன் நல்லுபதேசம் செய்ய அவனிடம் சென்ற பொழுது வேதம் ஓதுபவர்களின் புண்ணியமான புண்ணி யாகவாசநஒலி நிகழ்ந்து கொண்டும் அதற்கான தயிர் க்கலங்களும் நெய்க்கலங்களும் மாலைகளும் அக்ஷதை களும் திகழ்ந்து கொண்டும் இருக்க அங்கு இராவணன் ஆசனத்தில் அமர்ந்திருந்தான் (இராமாய. யுத்தம். 10.8.10) என்றது காண்க. நான்முகனை. நோக்கி வேதமந்திரங்களை ஓதிக்கொண்டும் தியாநம் செய்நு கொண்டும் பத்து ஆயிரம் வருடங்கள் தவம் செய்து கொண்டும் ஒரு ஆயிரவருடம் முடியும்போது ஒரு தலையை அறுத்துத் தீயில் ஆவுதி செய்து கொண்டும் பத்தாவது ஆயிரவருடத்தில் பத்தாவது தலையையும் ஆவுதி செய்ய அறுக்கத் தொடங்குங்கால் நான்முகன் தோன்றி இரா வணன் செய்த தவத்துக்கு உகந்து அவன் கோரிய வரங்களைக் கொடுத்ததோடு ஆவுதி செய்யப் பட்ட அவன் தலைகள் ஒன்பதையும் மீண்டும் முன்போல் முளைக் கச்செய்து தன்னுலகம் சென்றான் (இராமாய. உத்தர 10.10.24).

இராவணன் பார்ப்பன அரக்கன். அவன் ஓதியது வேதம். பேசியது பார்ப்பனர் பேசும் சங்கத மொழி (ஸம்ஸ்கிருதம், ஆரியம்). சீதைப்பிராட்டியுடன் எம்மொ ழியில் பேசுவது என்று அநுமன் எண்ணிப்பார்த்துப் பார்ப்பனர் பேசும் சங்கதத்தில் பேசினால் பிராட்டி தன்னை இராவணன் என்று கருதி அஞ்சுவாள் ஆவாள் ஆதலின் மானுட சங்கதத்தில் பேசுவேன் (இராமாய. சுந்தர. 30.17-20) என்று துணிந்து மானுட சங்கதத் தில் பேசினான். இதனால் இராவணன் பார்ப்பன அரக் கன். அவன் ஓதியது வேதம். செய்தது வேள்வி பேசியது பார்ப்பனர் சங்கதம் என்ற உண்மையைக் காண்க.

இலங்கை என்பது இராவணனுடைய ஆட்சித்தலை நகர். அது இந்திரன் கேட்டுக்கொண்டபடி சுவேலமலை யின்மேல் விசுவகருமாவினால் அமைக்கப்பட்டது அது

முப்பது யோசனை அகலமும் நூறுயோசனை நீளமும் உடையது. (இராமாயண உத்தர 52.1-29) பின்னர் அது விசுவகருமாவினுல் மாலியவான் முதலிய அரக்கர் களுக்குக் கொடுக்கப்பட்டது. அதிற் குடியேறிய கொடிய அவ்வரக்கர்கள் உலகத்தாரை இமிசித்து வாட்டுவாரா யினர். அதனுல் வருந்திய தேவர்கள் திருமாலைச்சரணம் அடைந்தார்கள். திருமாலால் மாட்டப்பட்ட அரக்கர்கள் இலங்கையைவிட்டு ஓடி ரசாதலம் சென்று அங்கு வாழ்ந்து வந்தார்கள். அது முதல் இலங்கை பாழாய்க் கிடந்தது. ''தண்கடல் வட்டத் துள்ளாரைத் தமக்கி ரையாத் தடிந்துண்ணும் திண்கழற்கா லசுரர்க்குத் தீங்கிழைக்குந் திருமால்'' (திருவாய் 3.5.2) என்ற சடகோபர் திருவாய்மொழி யையும் ''இராக்கதர் வாழி லங்கை பாழாளாகப் படைபொருதானுக்குப் பல்லாண்டு கூறுதுமே.'' (பெரியாழ்வார் திருமொழி 1.1.2) என்ற பெரியாழ்வார் திருமொழியையும் நோக்குக. பின்னர்க் குபேரன் செய்த தவத்துக்கு உகந்த நான்முகன் குபே ரனை நிதிகளுக்கு அதிபதியாக்கி அவனுக்கு இலங்கை யைக் கொடுத்தான். அதோடு புட்பக விமானத்தையும் கொடுத்தான். அதன்பின் இராவணன் குபேரனை வென்று இலங்கையையும் புட்பகத்தையும் குபேரனிட மிருந்து பறித்துக் கொண்டு அவனை இலங்கையினின்று துரத்தி விட்டான். அரக்கருடன் இராவணன் இலங்கையில் குடியேறி உலகத்தார்க்குப் பொறுக்க வொண்ணு இன்னல்கள் செய்வானுயினன். அவன் செய்த கொடுமைகளை நோக்கி அவன் தந்தை விச்சிரவா தானுமே அவனை வெறுத்து அவனுக்குச் சாபமிட்டான். (இராமாய உத்தர. 3-17-33; 11-23-49 ; சுந்தர 9-13) இதனுல் இலங்கை என்பது மாலியவான் முதலிய அரக் கர்கள் குடியேறிய தீவு. திருமால் அவர்களைத் தாக்கிய பொழுது அவர்கள் அதைவிட்டு ஓடிப்போக இலங்கை பாழாகியது. பின்னர் அது நான்முகனுல் குபேரனுக்குக் கொடுக்கப்பட்டுக் குபேரனிடமிருந்து இராவணனுல் பறித்துக்கொள்ளப்பபட்டு இராவணன் தலைநகராக ஆக்

கிக்கொள்ளப்பட்டது என்பதுகாணலாகும். மேலும் அதன் அகலம் முப்பது யோசனை. நீளம் ஆறு யோசனை. ஒரு யோசனை என்பது சற்றேறத்தாழ பத்துமைல் ஆகும். ஆத லால் இலங்கை நகர் முந்நூறு மைல் அகலம். ஆயிரம் மைல் நீளம். அதில் இராவணன் அரண்மனை அரை யோசனை. அகலம் ஒருயோசனை நீளம் (சுந்தர 9-2), விசு வகருமாவின் புதல்வனை நளன் கடலில் கட்டிய அணை (சேது) பத்து யோசனை அகலம் நூறுயோசனை நீளம் (யுத்த. 20-74). மகேந்திரமலையினின்றும் அநுமன் கட லைத் தாவினன். தாவிய கடல் நூறுயோசனை. (கிஷ்கிந்தா 64-18.67.1) இதனால் மகேந்திர மலையிலிருந்து ஆயிரம் மைலுக்கு அப்பால் இலங்கை இருந்தது என்பதும் மாலி யவான் முதலிய அரக்கர்களும் அவர்கள் இலங்கையை விட்டு ஓடிய பிறகு இராவணன் முதலிய அரக்கர்களும் இலங்கையில் வந்து குடியேறினர்கள். என்பதும் தெரிய லாம். அந்த இலங்கை சிங்கள (சிம்ம(ஹ) ள)த்தீவு அல்ல. சிங்களம் வேறு இலங்கைவேறு. இலங்கை சிங்களத்துக்கு நெடுந்தூரம் அப்பாலது. அது சற்றேறக் குறைய ஆயிரம் மைல் ஆகும். சிங்களம் என்னும் சொல் ஸிம்ஹள. என்னும் ஆரியத்தின் சிதைவு. சிங்களத் தீவுக்கும் தனுக்கோடிக்கும் இடையிடம் இருபது மைலுக்குள்தான். இதுதானும் பிற்காலத்தில் கடல் அறுத்து நீர் பாய்ந்ததாலாயது என்பர். உண்மை இவ் வாறிருக்கச் சிங்களத்தை இலங்கையாக்கிக் கதைகள் பல கட்டப்பட்டு விட்டன கோதாவிரியை அடுத்துள்ள பஞ்சவடிக்குத் தெற்கே கிட்கிந்தை உள்ளது. பம்பை கிட்கிந்தை என்பன இன்று பெல்லாரி (ஹம்பி அகோபிலம் (சிங்கவேள் குன்றம்) என்னும் இட மாகும். பெல்லாரி என்னும் சொல் பிலஹரி என்னும் ஆரியத்தின் சிதைவு. குகையிலுள்ள சிங்கம் என்பது பிலஹரி என்னும் சொல்லின் பொருள் இது அஹோ பிலம் என்னும் திருப்பதி. திருமங்கையாழ்வாரால் பாடல்பெற்ற திருக்குன்றம். இங்குக் கல்வெட்டுக் களும் உள்ளன. அஹோபிலம் பெல்லாரி ஜில்லாவில்

இருத்தல் வேண்டும் அவ்வாறில்லாமல் கர்னூல் ஜில்லா வில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இது நாடாள்வார் ஆட் சிக்கு வேண்டியவாறு பிரிவு செய்ததால் வந்த மாருட்டம். பெல்லாரியே(பிலஹரியே) அஹோபிலம் என்க. விபவத் திருமூர்த்தியாகிய இராமபிரான் அஹோபிலம் வந்து அர்ச்சைத் திருமூர்த்தியாய்க் கோயில் கொண்டருளும் சிங்கப்பிரானைத் தொழுது பஞ்சாமிருதம் என்னும் ஐந்து சுலோகங்களைப் பாடியருளினன் என்று திருத்தல மான் மியம் கூறுகின்றது. அவ்வைந்து சுலோகங்கள் பாரா யணம் செய்யப்பட்டு வருகின்றன. பஞ்சவடிக்குத் தெற்கே கிட்கிந்தை உள்ளது. கிஷ்கிந்தா என்னும் சொல் ஆரியம். இச்சொல் பாணிநிசூத்திரத்துப் பாரஸ்கராதி கணத்தில் படிக்கப்பட்டுள்ளது (6.1.157). கிம் கிம் ந தத்தே (எதெதைத்தான்தரிக்கவில்லை என்றதால் கிஷ் கிந்தா - தமிழ்செய்தது) என்று அச்சொல்லின வியுற் புத்தி (சொற்புணர்ச்சி இலக்கணம்). அவ்வளவு வளம் உடையது என்றபடி. அது மிகவும் தூய்மை வாய்ந்த இடம். அங்கு மதங்கர் சவரி முதலிய பெருந் தவச் சுடர்கள் விளங்கினர்கள். ஆதலின் அங்குத் தேவர்கள் வானரர்களாகத் தோன்றினர்கள். கிட்கிந் தைக்குத் தெற்கே உள்ள மகேந்திரமலைக்கு இராமபிரா னும் வானரர்களும் சென்றூர்கள். மகேந்திர மலையி னின்று அநுமன் தென்திசை நோக்கி நூறுயோசனை தூரம் மிக்கவிரைவில் பறந்து இலங்கையை அடைந் தான் என்று இராமாயணம் கூறுதலால் அந்த இலங்கை இந்தச் சிங்களமன்று என்பதை ஐயமறக் காணலாம். இதற்குமுரணுக இன்ரெருசிலர் செய்யும் கற்பனை போலி என்க.

---

## பதினொன்றுமத்தியாயம்

இராமாயணத்தைப் பற்றியும் இராமபிரானைப் பற்றியும் இன்று சில புத்தாராய்ச்சியாளரும் சில மேனாட்டாரும் நம் தமிழகத்துள்ளும் ஒருசமயத்தைச்சார்ந்த ஒரு சிலரும் (ஒருசிலரும் என்றதை நன்கு குறித்துக்கொள்க) பலபடி கூறுகின்றார்கள். திருவள்ளுவர் இராமாயணத்தை மேற்கொண்டவர் என்பதும் இராமபிரான் சருவலோக சரணியன் அவனைச் சரணம் அடைதல் ஒன்றேதான் உயிர்களுக்கு உய்வுபாயம் என்றும் உலகறிய இயம்பிய வைதிக வள்ளல் என்பதும் கீழே விளக்கப்படும். இங்கு இவ்வாராய்ச்சியாளர்களும் பிறர் சிலரும் சொல்லுமவற்றின் தகாமையைச் சற்று விரித்துக் கூறிப் பின்னர் மேலே கூறிவந்த பொருளைத் தொடர்ந்து கூறுவாம்.

இவ்வாராய்ச்சியாளர்க்குச் சில மேனாட்டார் வழிகாட்டிகளும் பரமகுருக்களும் ஆவார். தாய் எட்டடிப் பாய்ந்தால் குட்டி பதினாறடிப் பாயும் என்ற கணக்கில் இவர்கள் மறுப்பும் கற்பனையும் செய்பவர்கள். யாம் இங்குக் கூறவது வான்மீகி இராமாயணத்தை அடியாகக் கொண்டுள்ளது என்று அறிக.

திருமாலின் பெயர்களைக் கூறுமிடத்தில் அமரகோசம் என்னும் நிகண்டில் இராமன் என்னும் பெயரைக் கூறவில்லை. ஆதலால் அமரகோசத்துக்குப் பிற்பட்டது இராமாயணம் என்பார் இவ்வாராய்ச்சியாளர். துய்ய தருக்க முறையால் நோக்குவார் இதை ஏதுப்போலி மலிந்துள்ளது என்று கழிப்பார். அம்முறையை இவ்வாராய்ச்சியாளர் அறிந்திலர். அது நிற்க. திருமாலின் பெயர்களெல்லாம் அமரகோசத்தில் கூறப்படவில்லை என்பதற்கு அந்த அமரகோசமே சான்றாய் நின்றதை அவர் அறியாராயினர். திருமாலின் பெயர்களைக் கூறுமிடத்தில் அரி (ஹரி) என்னும் பெயரைக் கூறவில்லை. திருமகளின் பெயரைக் கூறுமிடத்தில் ஹரிப்ரியா (54) என்னும்

பெயரை அந்த அமரகோசமே கூறி யிருக்கிறது. ஹரி என்பது திருமாலின் மிகப் பிரசித்தமான பெயர். அதைத் தெரிந்திருந்தும் அப்பெயரைத் திருமாலின் பெயர்களுள் கூருது திருமகளைக் கூறுமிடத்தில் மட்டிலுமே அநுமித் தறிதற்குத்தக்கதாகவே கூறியது இவ்வாராய்ச்சியாளர் கருத்தால் பெரிதும் இழுக்கேயாம். மேலும் திருமாலின் பெயர்களைக் கூறுமிடத்தில் ஸ்ரீபதி (41) என்னும் பெயர் கூறப்பட்டிருக்கிறது. அதற்கு ஏற்கத் திருமகளின் பெயர் களைக் கூறுமிடத்தில் ஸ்ரீ: (54) என்னும் பெயர் கூறப் பட்டிருக்கிறது. அப்படி கூறிய அமரகோசநூலாரே ''ஹரிப்ரியா'' என்று கூறியதற்கு ஏற்க ஹரி என்னும் பெயரைக் கூருதது இழுக்காம். ஹரி (அரி) என்பது திருமாலின் வேதமுதற்பெயர். அது வேதத்தின் தொடக் கத்திலும் முடிவிலும் ஓதிய பெயர். முதன்மைதாங்கி நிற்கும் ஹரிநாமத்தை அமரகோசம் கூறாததால் அமர கோசத்திற்குப் பிறகுதான் ஹரி (அரி) என்பது திரு மாலின் பெயராக வழங்கி வரலாயிற்று ஆதலால் அப் பெயரைக் கூறும் வேதம் உபநிடதம் முதலிய முன்னூல் களெல்லாம் அமரகோசத்திற்குப் பிற்பட்டவைகளே என்று இவ்வாராய்ச்சியாளர்கள் கூறவும் கூடும். ஹரிப் பிரியா என்று கூறியுள்ளதே எனின் அது அநுமாநம் ஆகுமேயன்றி அபிதாநம் (பெயர்) ஆகாது. அமரகோசம் அபிதாநகோசம் அநுமான கோசமன்று என்று இவ் வாராய்ச்சியாளர் கூறவும் கூடும்.

பரத்துவ நாமங்களுள் பிரசித்தமான அரி நாமத் தைக் கூருதது போல் பிரசித்தமான பத்து அவதார நாமங்களுள்ளும் இராமபிரானுடைய நாமம் கூறப்பட வில்லை. அவ்வாறே ஞானப் பிரானுடைய (வராஹா வதாரம்) நாமமும் சிங்கப்பிரானுடைய (நரஸிம் ஹாவ தாரம்) நாமமும் கூறப்படவில்லை. திரி விக்கிரம அவதார நாமம் கூறப்பட்டிருக்கிறது. அவ்வாறே கண்ணபிரான் அவதார நாமமும் கூறப்பட்டிருக்கிறது. நம்பி மூத்தபிரான் அவதார நாமமும் கூறப்பட்டிருக்கிறது

திரிவிக்கிரம அவதாரத்துக்கு முற்பட்டவை ஞானப் பிரான் அவதாரமும் சிங்கப்பிரான் அவதாரமும். அவ் வாறே கண்ணபிரான் அவதாரத்துக்கு முற்பட்டது இராமபிரான் அவதாரம். ஞானப்பிரான் அவதாரமும் சிங்கப்பிரான் அவதாரமும் அமரகோசத்துக்குப் பிற்பட்ட வை அவற்றைக் கூறும் வேதமும் பனுவல்களும் அமர கோசத்துக்குப் பிற்பட்டவை என்றும் இவ்வாராய்ப்ச் சியாளர் கூறவும் கூடும். விக்ரமாதித்தன் சபையின் நவ ரத்தினங்கள் (ஒன்பது இரத்தினங்கள்) என்று பிரசித்தி பெற்றவர்களுள் காளிதாஸரும் அமரகோச நூலாராகிய அமரஸிம்மரும் இருவராவார். காளிதாஸர் பாடிய ரகுவம்சம் இராமாயணத்தையும் இராமபிரானையும் போற்றியுள்ளது கண்டு இராமாயணத்தின் தொன்மை யும் இராமபிரான் இறைமையும் விளங்கக் காணலாம். மேலும் அமரகோசத்தில் விஷ்வக்ஸேநர் என்னும் பெயர் திருமாலின் பெயர்களுள் கூறப்பட்டுள்ளது (35) ஆயினும் திருமகளின் பெயர்களுள் விஷ்வக்ஸேநப்ரியா என்று கூருது வேருெரு மகளின் பெயராகக் கூறியிருத் தலும் (950) இங்கு நோக்கத்தக்கது. அமரகோசம் நிகண்டு நூல். நிகண்டுநூல்கள் சில சொற்களைத் தொகுத்து அவற்றின் பொருளைப் பொதுவாகக் கூறும் அளவுக்குத்தான் உதவும் என்பதை உணராமல் அவற் றுக்கு இல்லாத உரிமைகளை ஏற்றி அதுகொண்டு தொல்லிலக்கியங்களுக்குத் தாயிலக்கிய மாய்த் திகழும் திவ்ய இராமாயணத்தைப் பற்றியும் அது போற்றிப் புகழும் தெய்வச்சிலை யிறைவனுகிய இராமபிரானைப் பற்றியும் தோன்றியபடி யெல்லாம் கற்பனைகள் செய்யத் துணிதல் அறிஞர்க்குத்தக்க செயலாகாது. இங்கு மற்ருென்றும் கூறி இக்கருத்தைத் திடப் படுத்துவாம். பாணன் (பட்டபாண) என்னும் ஆரியமாக்கவிஞர் தமது ஹர்ஷ சரிதத்தில் முற்கவிகளைப் போற்றுமிடத்தில் வியாசமுனிவரை முழுதுணர நீர்மையினர் என்றும் கவிகளுக்கு நான்முகன் என்றும் முற்கூறிப் பின்னர் பாஸ காளிதாஸ சுபந்து முதலிய கவிகளைக் கூறியிருக்

கிறார். வான்மீகிமுனிவரைக் கூறவில்லை. இதுகொண்டு வான்மீகிமுனிவர் பாணகவிக்குப் பிற்பட்டவர் இராமாயணம் ஹர்ஷசரிதத்துக்குப் பிற்பட்டது என்று இவ்வாராய்ச்சியாளர் கூறவேண்டும். கூறவும் கூறுவார். ஏன் கூறு தொழிந்தாரோ, பாணர் கவி. அவர் நூற்ற ஹர்ஷ சரிதம் காவியம். அந்நூல் கூறுவது கவிகளை. அதனுள் வான்மீகி கூறப்படவில்லை. அமரகோசம் நிகண்டு. இவ்வாராய்ச்சியாளர்க்குப் பாணகவியின் காவியம் பெரிதும் கைகொடுத்து நிற்க அதை விட்டு எதற்காக நிகண்டு தேடி ஓடினரோ? அறிந்திருந்தால் கூறியிருப்பார். இராமாயணத்தில் வானஊர்தி (விமாநம்) கூறப் பட்டிருத்தலால் இவ்வாராய்ச்சியாளர் கருத்தால் வான ஊர்தி கண்டுபிடிக்கப்பட்ட இருபதாம் நூற்றுண்டுக்குப் பிறகுதான் இராமாயணம் தோன்றியது என்னவும் வேண்டும். அவர்கள் தோற்றம் வானஊர்திகளின் தோற் றத்துக்கு முற்பட்டதால் அவ்வாறு கூறுதற்கு இயலாது போயிற்றுப் போலும். இவ்வாராய்ச்சியாளர் கற்பனை எத்தகையது என்பதைத் திட்டாந்தமொன்று தெளிய விளக்கும். பாணிநி காலத்தில் உபநிடதம்(உபநிஷத் என்னும் வேதமுடிப்பாகம்) தோன்றவில்லை. பின்னரே தோன்றியது என்றூர்கள். அதற்கு ''அரண்யாந் மநுஷ்யே''(4-2-129) என்ற பாணிநி சூத்திரத்தைச் சான்றுகக் காட்டினூர்கள். ஆரணியகம் என்னும் சொல் லுக்கு உபநிடதம் என்பது பொருள். வீடுபெற விரும்பு வார் துறவை மேற்கொண்டு காட்டுக்கு (அரணியத் துக்குச்) சென்று அங்கு உபநிடதத்தைப் பயின்று அது கூறியவாறு தவம் செய்து வீட்டறம் புரியும் காரணத் தால் உபநிடதம் ஆரண்யகம் என்னப்பட்டது. இச்சூத்தி ரத்தில் அப்பொருள் கூறப்படவில்லை. காட்டில் உள்ள மனிதனுக்குப் பெயர் என்று பொருள் கூறப்பட்டுள்ளது. அங்கு மனிதர் நடக்கும் வழிக்கும் பெயராயிற்று. அது பற்றி இவ்வாராய்ச்சியாளர் உபநிடதம் (ஆரண்யகம்) பாணிநிக்குப் பிற்பட்டது என்று கற்பனை செய்வாரா யினர். இக்கற்பனையின் மிக்கதோர் மருள் இல்லை என்

பதை "ஜீவிகோபநிஷதா வௌபம்யே" (1-4-79) என்ற பாணிநி சூத்திரமே காட்டித்தந்தது. உபநிஷத் என்னும் சொல்லையே கூறியும் அதன் தன்மையை உணர்த்தியும் உள்ள இச்சூத்திரம் உபநிடதம் பாணிநி காலத்தில் இருந்துள்ளது என்பதையும் பாணிநி உபநிடத நுட்பத்தை நன்கு அறிந்தவர் என்பதையும் கையிற்கனிபோல் காட்டிநின்றது. அ ஷ் டா த் யா யி யை (பாணிநி சூத்திரத்தை) மனப்பாடம் செய்யாமல் அகராதி அட்டவணையை நோக்கியே சூத்திரம் காண்பார்க்கு அகராதி அட்டவணைப் பகுதியில் ஜகரத்தில் தொடங்கும் இச்சூத்திரம் இடம் பெருததால் அட்டவணைக் கண்ணர்க்கு அது புலப்படாது போயிற்று என்று அறிக.

"வில்லைத்தாங்குபவரனைவருள்ளும் நான் இராமன்" (கீதை, 10-31. தமிழ்செய்தது) "திருமால் இராகவனுக அவதாரம் செய்தபொழுது திருமகள்சீதையாக அவதாரம் செய்தாள்" (விஷ்ணுபுரா. 1-9-144. தமிழ் செய்தது) என்று இறைவன் பாடினுன் பராசரர் கூறினுர். அமரகோசம் க்ருஷ்ணுவதாரத்தைக் கூறியுள்ளது. இது மேலே கூறப்பட்டது. அந்த க்ருஷ்ணுவதாரமூர்த்தியே தன்னுடைய தெய்வத்திருச்சிலை இராமாவதாரத்தைக் கூறினுன். பராசரமுனிவரும் இராமாவதார சீதாவதாரங்களைக் கூறினுர். அமரகோசத்துக்கு நெடுங்காலம் முற்பட்ட இவ்விரு தொல்லிருஞ்சான்றுகளும் இவ்வாராய்ச்சியாளர் கண்களில் ஏன் படவில்லையோ? இவர் கற்பனை மருள் என்பதை இவ்விருதிவ்விய திருமறைத் தீபங்கள் தெரியக் காட்டித்தரும்.

---

## பன்னிரண்டாமத்தியாயம்

இரும்பு ஆராய்ச்சி புதையல் ஆராய்ச்சி கல்வெட்டு ஆராய்ச்சி என்பனவும் அவைபோன்ற தூலப்பொருள் களின் ஆராய்ச்சிகளும் உண்மை காண்பார்க்கு அத் தன்மையவேயாம். அவைகளை மட்டிலுமே கொண்டு இராமாயண காலமும் இராமாயண உண்மையும் மறுத் தற்காகாது. அவ்வுரிமை அவைகளுக்கு இல்லை. தூலக் கண்களையும் தூலக்கண்ணாடிகளையும் கொண்டு பஞ்சபூத விகாரப்பாட்டின் வேறுபாடுற்ற வீக்கத்தாலாகிய பொருள்களைப் பற்றிச் செய்யும் ஆராய்ச்சிகளே அவை. புலால்விழியால் புலால் பொருள்களை புலாலறிவு கொண்டு புலால்மனம் போகும் வழிகளில் சென்று காணும் காட்சிகளே அவ்வாராய்ச்சிக் காட்சிகளாம். அவை மெய்யுணர்வார்க்கு மருட் காட்சிகளே. அவை காட்டும் நூல் மயக்கநூல். மெய்ந்நூல் மெய்யுணர்வு. மயக்கநூல் பொய்யுணர்வு என்றதன் தன்மை மேலே கூறப்பட்டது. ஐம்பொறிகளும் ஆறிய முக்கால மெய்ஞ் ஞானியர் களாய் ''நிற்கின்ற தெல்லாம் நெடுமால்'' நான்முகன்.54)என்று இறைவனால் மதிநலம் அருளப் பெற்று விசுவருபத் திருக்காட்சி கண்டு ''கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம்... மாதவன் பூதங்கள் மண்மேல் பண்தான் பாடி நின்றாடிப் பரந்து திரிகின்றனவே'' (திருவாய்5-2-2)''அடங்கெழில் சம்பத்து அடங்கக் கண்டு''(ஷ1-2-7)என்று ஈருலகும் (உபயவிபூதியும்)இறைவனுடைய செல்வம் என்று கண்டு இன்புறும் தூமனப் பெருந்தகவோர் கண்டு காட்டித் தரும் மறைக்காட்சியும் மறைப் பொருட்காட்சியும் துய்ய மெய்க் காட்சிகளாம். அவற்றின் மெய்ம்மையைப் புலால் விழியர் ஆராய்ச்சியும் காட்சியும் கொண்டு மறுத்தற்கு ஒண்ணாது. ''வண்டமிழ் நூற்க நோற்றேன் அடியார்க்கு இன்ப மாரியே''(திருவாய்.4-5-10)என்றார் தவம் செய்து தமிழுபநிடதம் கண்டு நல்கிய வண்குருகூர்ப் புனிதர். அம்மாபுனிதர் தமிழுபநிடதம் (திருவாய்மொழி)காண்

பதற்குச் செய்த தவத்தின் பெருமையைப் "பழநான்மறை யும் மண்ணும் விசும்பும் தவம் செய்தன மகிழ்மாறன் செய் யுள் எண்ணுந் தகைமைக் குரிய மெய்யோகியர். ஞான மென்னும் கண்ணும் மனமும் செவியும் தவம்செய்த காலத் திலே''(சடகோபரந்தாதி.39) என்று கம்பநாடுடைய வள்ளல் விளக்கினர். இவ்வுண்மையைப் பாதுகா ஸஹஸ் ரத்தில் திரும்பாமெய்யெழுத்து என்னும் அரியதோர் ஆரியச் சொற்சித்திரப் பாடலில் இருமறைமுடிப் பேரா சிரியப் பெருமானராகிய வேதாந்ததேசிகர் பாடி யருளினர். (பாதுகாஸஹஸ்ர.920). அதன் சித்திரத் தமிழ்:— ''அவநீறுஞ், சடகோபர், தலைமாணே, ழனளா யே'' (திருப்பாதுகமாலை-தமிழ். 920 என்பது.) புலால் விழியர்க்குத் திவ்விய உண்மை காண இயலாது. ''உன் னுடைய இந்தக் கண்ணல் என்னைக் காண ஒண்ணது. திவ்வியமான கண்ணை உனக்குக் கொடுக்கிறேன் (அது கொண்டு)என் இறைமாட்சியைக் காண்''(கீதை.11-8 தமிழ் செய்தது) என்று இவ்வுண்மையை இறைவன் தானே உரைத்தியருளினன். 'என் நெஞ்சினல் நோக்கிக் காணீர்'' (திருவாய்.5-5-2) என்ருர் சடகோபர். ''என் கணல் நோக்கிக் காண்டற் கெங்கணு முளன்கா ணெந் தை, உன்கண னன்பிற் சோற லுறுகோளென்றுணர கில்லாய் நின்கணல் நோக்கிக் காண்டற் கெளியனே'' (இராமாவ-உயுத்தஇரணியன்.121) என்ருன் பிரகலா தாழ்வான். "அதையெல்லாம் தருமாத்துமாவாய் யோக நிலையில் தருமவீரியத்தால் உள்ளவாறு தெரியக் காண நின்ருன்'' (இராமாய. பால.3-4-16தமிழ் செய்தது) என்றது வான்மீகி முனிவர் கண்ட மெய்த்திருக் காட்சி. புலாற்கண் கண்ணல்ல. அது முகத்து இரண்டு புண்ணே யாம் (குறள்.393). ''புலாற்கண்ணன் அவனை (இறைவனை)க் காணமாட்டான்'' (மறைநூல். தமிழ் செய்தது. நமாம்ஸசக்ஷு: அபிவீக்ஷதே தம். என்பது அங்குள்ளஆரியம்)மறைநூல் புலால் என்றதைக் குறள் புண் என்றது. புலாற்கண் காண்பது புண்பாடு வேத மென்பன மெய்ந்நெறி காண்பது பண்பாடு. இறைவன்

தோற்றமும் செய்கையும் கண்முன் நிகழ்வதுபோல் காணும் சான்ருகக் காட்டித்தந்த பொய்யில்கேள்வித் தெய்வமாக் கவிவள்ளல் வான்மீகி என்ற உணர்வு ஒன்றேதான் மெய்யுணர்வு (இராமாய. பால. 2-35;4-17) பிற மருள் என்க. இதற்குத் திருக்குறள் சான்ருதல் பின்னர்க் கூறப்படும். வேதஉணர்வு பண்பாடு. அது மதி நல விழியுணர்வு. அது மெய்யுணர்வு என்ற உண்மையை "பண்புடை வேதம் பயந்த பரன்" (திருவாய் 6.6-5) "மதி நலம் அருளினன்" (ஷை. 1-1-1) என்று சடகோபர் காட்டி யருளினர். புலால்விழி காண்பது புண்பாடே என்பதற்குப் பூதநூல் வல்லார்கள் தாமேசான்ருவார். இயற்கை (பஞ்ச பூதவிகாரம்) என்றும் இயற்கைஎழில் என்றும் தூலஉலகத் தைப் புலால் விழியர் கூறுகின்ருர்கள். தூல இயற்கை காட்டுமதே எழில் அது காண்பதே எழிற்காட்சி அக் காட்சியே இன்பம் என்கின்ருர்கள். தெய்வம் இல்லை வேதம் இல்லை என்பதே அவர்கள் கோட்பாடு. இதைப் பூதநூல்வல்லார்களே மறுக்கின்ருர்கள். இயற்கை என்பது துன்பமே. ஒன்றை யொன்று கொன்றுண்ணலே இயற்கைப் போக்கு. துயரத்தில் ஆழ்ந்து வருந்துதலே வாழ்வு என்பது பூதநூல் வல்லார் துணிபு. பூவின் மலர்ச் சியை எழில் பொழிவது போலும் இன்பம் பயப்பது போலும் கண்டு கவிகள் இன்புறுவதும் அதை விரித்து வருணித்துப் பாடுவதும் அறியாமையின் செயல் என்றும் அப்பூவானது அரும்புதற்கும் போது ஆதற்கும் மலர்தற் கும் படும் பாட்டையும் வருந்தலையும் அக்கவிகள் அறிந் திருப்பாராகில் அதற்கு மனம் கரைந்து கண்ணீர் சொரிந்து நைந்து உருகவேண்டுவதல்லால் மனம் களித்துக் கவிபாடிக் குதித்து இன்புற இடமில்லை என்று கோதற்ற கண்கூட்டையே சான்ருக மேற்கொண்டு உலகம் துக்கமயமே இன்புற வழிஇல்லை என்று தூல நூலார்கள் திண்ணம் தேறினர்கள். தூலக்கண்ணர் இன்பம் என்ருர்கள். தூலநூலார் துன்பம் என்ருர். இதன் உண்மை என்ன? சடகோபரும் சுகரும் காட்டியருளிய உண்மையைக் காண்பாம். "பூவையும் காயாவும் நீல

மும் பூக்கின்ற, காவி மலரென்றும் காண்டோறும்—பாவி யேன், மெல்லாவி மெய்மிகவே பூரிக்கு மவ்வவை, யெல் லாம் பிரா னுருவே யென்று'' (பெரியதிருவந்.73) என்று சடகோபர் அருளிச்செய்தார். இறைவன் திருவாய் விரி தற்கு உலகு புரியும் முயற்சியே மலர்ச்சி என்றவாறு. ஆத்மலாபம் பெறுதற்கு என்பது கருத்து. அருளாளனுன இறைவன் சங்கற்பத்தால் நிகழும் முயற்சியாதலால் அது இன்பக் காட்சியாயிற்று. அக்காட்சி அருளப்பெற்ற சடகோபர் அது கண்ட இன்பத்தில் தாமும் பிரான் உருவே என்று பூரித்தார். அஃதருளப்பெற்ருரே அது கண்டு பூரிப்பார். அஃதே மெய்க்காட்சி. இறைவனது மெய்யெனக் காணும் மெய்க்காட்சி, விசுவரூபக் காட்சி. அக்காட்சி கண்டாரே இன்பம் கண்டாராவார். அக் காட்சியைத் தூலக்கண்காட்டாது. தூலக்கண் காட்டுவது துன்பத்தையே. ஆதலால் தூலநூலார் கண்கூடு ஒன்றை யே கொண்டு துன்பத்தையே கண்டார்கள். மெய்ஞ் ஞானக்கண் ஒன்றுதான் இன்பம் காணவல்லது. அது இறைவனுல் அருளப்பட வேண்டும். அஃதருளப் பெற்ருர்க்கே அக்காட்சி.

இறைவன் தானும் இடைப்பிள்ளைகளுக்குக் காட்டி யருளிய உண்மை ஈதே. உத்தவருக்கும் அருச்சுன னுக்கும் இறைவன் அருளிய உபதேசம் நிற்க இடைப் பிள்ளைகளுக்கு அருளிய உபதேசத்தைக் காண்பாம். ''காண்மினிப் பிறர்க்கே வாழும் கழிபெருஞ் செல்வர் தம்மை ஏண்வளி மாரிகோடை யிமம் பொருத்தளிக்கும் நம்மை மாண்பிறப் பிவற்றி னென்னே எவர்க்குமுய் வண்ணமாரும் வீண்பட நல்லரைப் போல் மீண்டில ரிவற்றை வேண்டி இலைமலர் கனிகள் நீழல் கிழங்குரி வழங்கு தாரு நலமணம் சாறு நீறு கரிதளிர் விரித ளங்கள் பலவதால் விரும்பிற் றெல்லாம் பரிவினிற் புரிவு பூக்கும், பலமிதிவ் வளவதேதான் பாரினிற் பிறந் தார்க்கெல்லாம். உயிரினுல் பொருளி னுலும் உய்வருண் மதியினுனும், நயமதார் மொழியி னுலும் நலமதே

புரிதல் நாளும்'' (பாகவதம் 10.22.35-38 தமிழ் செய் தது என்பன அவ்வுபதேசம். தனது திருவிளையாடலாகிய உலக (லீலாவிபூதி) நிகழ்ச்சி துறவின் கண்ணே நிகழு மாற்றை மரங்களைக்காட்டி ஆயர்சிறுவர்க்கு ஆநந்த மயனுகிய இறைவன் அருண்மயனுய் உணர்வூட்டிய திருப்பாடல்கள் இவை. இம்மரங்களை நோக்கிக் காணீர். இவை பிறர் பொருட்டே வாழ்கின்றன. அது துறவில் வாழ்வு. துறவே அழியாப் பெருஞ் செல்வம். அச்செல்வம் மல்கும் முயற்சித் திரு வுடையன இம்மரங்கள் என்று மரங்களைச் சுட்டிக் காட்டிப் பின்னும் அவற்றின் துறவின் வகைகளை விளக்கிக் காட்டுகின்ருன்;—காற்று மழை வெயில் பனி இவைகளால் உண்டாகும் துன்பங்களை யெல்லாம் தாம் பொறுத்துக் கொண்டு அத்துன்பங்க ளினின்றும் தம்மை அடைந்த நம்மைக் காக்கின்றன. காற்றுக்கும் மழைக்கும் வெம்மைக்கும் பனிக்குப் வருந்தித் தம்மை அடைவார்க்கு அவற்றையெல்லாப் தாம் தாங்கிக்கொண்டு தம்மை அடைந்த நம்மை அவை தாக்காவாறு தடுத்துக் காக்கின்றன. துறப்பதே தொழி லாகத் தோன்றியுள்ள இம்மரங்கள் பிறவித் துறவிகளே. அஃதே அவற்றின் பிறப்பின் மாட்சி. அது மனமொழி களைக் கடந்து பொலியும் மாட்சி. உயிர்களெல்லாம் உய்யும் வண்ணமே அம்மாட்சியின் வண்ணம். அடைந்த எவர்க்குமே தம்மையே நல்கி இன்புறும் நல்லாரைப் போல் இம்மரங்கள் தம்மை வேண்டி அண்டிய எவர்க்கும் தம்மையே நல்கிப் பூரிக்கின்றன. இம்மரங்களை நாடிய எவரும் வேண்டியது பெருது வீணே மீண்டார்கள் என் பதில்லை. இலையாலும் பூவாலும் கனியாலும் நிழலாலும் வற்கலையாலும் தாருவாலும் மணத்தாலும் சாற்ருலும் தூளாலும் கரியாலும் தளிராலும் அவை போன்ற பல வாலும் தம்மை அண்டினர்க்கு வேண்டிய யாவையுமே அன்பார்ந்து நல்கிப் பொலிகின்றன. உலகில் பிறந்தா ரெல்லாம் பிறப்புப்பயன் கொள்ளல் இவ்வளவால்தான், தம்மைத் துறப்பதே தொழிலாகும் புகழழோங்கத் தோன்றிய இம்மரங்களின் மாண்பை நன்கு நோக்கிக்

கண்டுகொண்மின் ஒருவன் தோன்றினுன் என்ருல் அவன்துறவோடே தோன்றல் வேண்டும். அஃதே அவன் புகழோடு தோன்றுதலாகும் அப்புகழிலான் தோன்றலில் தோன்ருமையே நன்ருகும். துறப்பாரின் தோற்றமே நன்று. அது துறவின் தோற்றமாதலால். துறவிலார் தோன்ருமையே நன்ருகும். அது பற்றின தோற்றமும் களவின் தோற்றமு மாதலால். இது கண்டு நீங்கள் உணரவேண்டியது யாதெனின் கேண்மின். துறவின்கண் நலம் புரிந்து ஒழுகும் வாழ்வே பெருஞ்செல்வம். அந்நலம் உயிரை நல்கலாலும் பொருளை நல்கலாலும் உய்வண்ணத்தைப் பயக்கும். நன்மதியை நல்கலாலும் நயமிக்க நறுமொழியை நல்கலாலும் அவைபோல்வனவாலுமே புரிதலாகும் என்பது.

இறைவன் திருவுள்ளத்தை உணர்த்தும் வேதத்தின் உட்பொருளை இறைவன் தானே வேதவியாசராய்ப் பிள்ளைபோல் பழக்கிவைத்த இக்கிள்ளை முனிவரின் (சுகமுனிவரின்) வாய்மொழியமுதம் சுவைபட்டோடும் நயத்தை நன்கு நுகர்ந்து இன்புறுக. இங்கு விளக்கப் படவேண்டியதோர் நுண்பொருள் உள்ளது. அந்த மரங்களைப் பிறவித் துறவிகள் என்றது இறைவன் நோக்கால். மறைநோக்கே இறைவன் நோக்கு. மறைநோக்கு எனினும் இறைநோக்கு எனினும் ஒக்கும். மறைநோக்கால் கூறியதே அது. மரநோக்கால் கூறியதல்ல. மரத்துக்கு அத்திறநோக்கு இல்லை. அதன் நோக்கு மரநோக்கேதான். அது அஃறிணை நோக்கு. மறைநோக்குடையார்க்கு மரமும் இறைவனே. மரநோக் குடையார்க்கு இறைவனும் மரமே. ''நிற்கின்ற தெல்லாம் நெடுமால்'' (நான்முகன்.54) ''என்நெஞ்சினுல் நோக்கிக் காணீர்'' (திருவாய் 5-5-2)என்பன வேத மூர்த்திகளின் மறைநோக்கு. தன்னைத் தான்பற்றிச் சரணம் அடைவார்க்கு அருள்மாரியாய் அபயம் நல்கி வீடளித்து விளங்கும் சரிணியப் பரஞ்சுடராய்த் தாருத் திருமேனியனுயும் சிலைத் திருமேனியனுயும் கோயில்

கொண்டு பொலிந்து நிற்கும் இறைவனை மரநோக் காலும் கல்நோக்காலும் காண்பார்க்கு அவன் மரமும் கல்லுமே போல்வான். மரமும் கல்லும் போல்வாரே அவ்வாறு நோக்குவார் என்றபடி. மெய்யர்க்கு மெய்யன் பொய்யர்க்குப் பொய்யன் என்றது இறைவனுக்கு உற்றது போல் இறைவனுடைய திருத் தோற்றங்கள் திருக்குணங்கள் திருச்சரிதைகள் முதலியவற்றைக் கண்டு காட்டித் தரும் திருவாய்மொழி இராமாயணம் பாகவதம் முதலிய மறை நூல்களுக்கும் உற்றது என்க.

தூல நூலாரின் மலரைப் பற்றிய அறிவுக்கும் இறைவன் ஊட்டும் அறிவுக்கும் எத்துணை வாசி உள்ளது என்பதை இதனால் காண்க.

---

## பதின்மூன்றுமத்தியாயம்

இதுகாறும் இங்குக் கூறியது கொண்டு வேதம் என்பது செவிச்செல்வம் அச்செல்வம் செல்வத்து ளெல் லாம் தலை(குறள் 411) ''செவியிற் சுவை யுணரா வாயுணர்வின் மாக்கள் அவியினும் வாழினு மென்'' (குறள்.420)'' ''சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு'' (குறள்.299)-என்ற திருக்குறளின் மெய்ப் பொருள் தெளியக் காணலாம். அவ்வாறே ''முயற்சி திருவினையாக்கும்'' (குறள்.616)''முகத் திரண்டு புண்ணு டையவர் கல்லாதவர்'' (ஷை393.''கற்றதனாலாய பய னென்கொல் வாலறிவன், நற்றாள் தொழாஅரெனின் ஷை.2)என்ற குறளோடு கூட்டிப்பொருள் கொள்க.) ''தோன்றிற் புகழொடு தோன்றுக. அஃதிலார், தோன்ற லிற் றோன்றாமை நன்று'' (ஷை.236)ஒப்புரவினால் வருங் கேடெனி னஃதொருவன் விற்றுக்கோட் டக்க துடைத்து' (ஷை220)''கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி, எல்லா வுயிருந் தொழும்''(ஷை.260)'தாமின் புறுவ துலகின் புறக்கண்டு, காமுறுவர் கற்ற றிந்தார்''(ஷை. 3.99)என்ற குறட்பாக்களின் மெய்ப்பொருள் காண்க. மேற்கூறிய வேதம் கீதை மாநவம் இராமாயணம் பாக வதம் முதலிய மெய்ந்நூற்பொருள்கள் திருக்குறட் பாக்கள் வடிவத்தில் திகழும் சால்பைக் கண்டுணர்க.

மேலும் ஊழிப் பெருவெள்ளங்கள் பல உற்றுப் போந்தன. ப்ரளயம் என்பதும் ஊழிப் பெருவெள்ளம் என்பதும் ஒருபொருட்சொற்கள்· பிரளயம் இருவகைப் படும். அவை பிராகிருதப் பிரளயம் நைமித்திகப் பிரளயம் என்பனவாம். அவற்றுள் பிராகிருதப் பிரளயம் என்பது கற்பாந்தத்தில் எல்லாப் பொருள்களுமே ஒக்க அழிந்து ஒழியும் பேரூழிப் பிரளயம். நைமித்திகப் பிரளயம் என்பது இடையிடையே சிலவே அழிந்து

ஒழியும் சிற்றூழிப் பிரளயம். சற்றேறத்தாழப் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒரு நைமித்திக ப்ரளயம் வந்துள்ளது என்பர். அப்பொழுது அழிந்து ஒழிந்த பொருள்கள் பல. அன்றியும் தூலச் சடப்பொருள் ஒருதன்மையை இழந்து மற்றோர் தன்மையைப் பெற்றுச் சொரூப விகாரம் அடையும் இயல்புடையது. இது மேலே கூறப்பட்டுள்ளது. இரசாயந முறையாலும் தாதுவாத முறையாலும் மந்திர முறையாலும் மூலிகையாலும் அவை போன்ற பிறவாலும் தூலச் சடப்பொருளின் ஒருவிகாரத் தன்மையை மாற்றி மற்றோர் விகாரத்தன்மையை அடைவித்தற்கு ஆகும். ஆதலின் ஒருகாலத்தில் ஒருவிகாரப் பொருள்தான் இருந்தது, வேறு ஒன்றுமே இருந்ததில்லை என்று சாதித்தற்கு இயலாது. அரக்கரை அழித்தற்கும் அறத்தை நிறுத்தற்கும் இறைவன் திருவவதாரம் செய்தபொழுது அவன் கருத்திற்குத் தகத் தேவர்கள் வானரர்களாயும் தூலச்சடப்பொருள்கள் வேண்டிய பல்வேறு விகாரப்பாடுகள் உடையனவாயும் தோன்றி இறைவனுக்குக் குற்றேவல் செய்து நிறமும் நலமும் பெற்றன. சடங்களும் சீவர்களால் அபிமானிக்கப்பட்டுள்ளன என்பது வேதம் உணர்த்தும் உண்மை. ஆதலின் பொருள்களெல்லாம் வேண்டிய படிகளிலெல்லாம் வேண்டிய படிவங்களிலெல்லாம் இறைவனுக்குக் குற்றேவல் செய்தன. புல்லும் பிரமாத்திரமாயிற்று. இத் தூலப்பொருள் இக்காலத்தில் உளவாதற்கில்லை என்று சாதிக்க முயல்வது அசித்தி ஏதுப்போலி முதலிய தருக்க வழுக்கள் மலிந்துள்ளதாலும் இறைவன் சங்கற்பத்துக்கும் சடவிகார நுட்பங்களுக்கும் முரண்படுதலாலும் இழுக்கெனக் கழித்தற்கே தக்கதாம். கல்லை அணங்காக்கிய பொன்னடிப் பேரிறைப் புனிதன் இராமபிரான். கரியைப் பரீக்ஷத்து ஆக்கிய பொன்னடிப் பேரிறைப் புனிதன் கண்ணபிரான். ஆதலின் தூலப் பொருளாராய்ச்சியாளர் மறுப்பு கிணற்றுத் தவளைகள் கடலை மறுத்தற்கு ஒப்பாகும். கிணற்றி னளவே யாகும் இவர்களறிவு என்பதை இவர்களறியாராயினர். கிணற்றுண்மையை மறை

நூலார் மறுக்கவில்லை. அது கிணற்றுண்மை யென்றே தான் அவர்கள் கூறுகின்ருர்கள். இவ் வாராய்ச்சியாளர் களோ எனில் கிணற்றுண்மை ஒன்றே தான் உண்மை என்றும் அவ்வொன்றையே கொண்டு கடலுண்மையை மறுக்கின்ருர்கள். மறைநூலார் அம்மறுப்பு மருள் என் கின்ருர்கள். தூய மறை உணர்வுக்கும் தூலச் சடவுணர் வுக்கும் நெடுவாசி என்கின்ருர்கள். பாற்கடலில் பள்ளி பயின்றருளும் அறிதுயிலமர்ந்த தெய்வச்சிலைப் பரமன் கரைபுரண்ட கருணைக்கடலாய் நல்லாரைக் காக்கவும் தீயாரை நீக்கவும் நல்லறத்தை நாட்டவும் மானுடவடி வம் கொண்ட தெய்வத் திருத்தோற்றத்தில் தெய்வத் திருவருட் செய்கைகள் பல புரிந்தருளியவைகளைத் தெய்வத் திருக்காட்சி யருளப்பெற்ற அருந்தவமுனிவர் கள் பாடிப் போற்றி இன்புற்ருர்கள். ''சிந்தாமல் உலகங் கள் வாழவென்று'' பெருமனவள்ளல்களாய்த் தாங்கள் கண்டு இன்புற்ற உண்மையை உலகுக்குக்கரவாது நல்கிய கற்பகங்களாய் உலகு இன்புறக் கண்டு தாமின் புற்ற பெருமனவள்ளல்களாய் மகிழ்ந்து திகழ்ந்தார்கள். ''தாமின்புறுவது லகின்புறக் கண்டு'' (குறள்.399)என்ற கல்விஅதிகாரக் குறட்கு வான்மீகிபோல்வார் இலக்கிய மாய் நிகழ்தலைச் சான்ருேர் உள்ளம் அறியும். இதனின் மிக்க நன்றி செய்தாரார்? செய்கின்ருரார்? செய்வாரார்? செய்ந்நன்றிகுன்றேன்மின். நன்றிகுன்ரு நெஞ்சினுல் நோக்கிக் காண்பார்க்கு இறைவன் திருத்தோற்றமும் திருச்சரிதையும் கண்முன் நிகழ்வதுபோல் தெரியத் தோன்றும். இவ்வுண்மையை இராமாயணம் கூறியுள் ளது. (இராமாய.பால.4.17)''என் நெஞ்சினுல் நோக்கிக் காணீர்'' (திருவாய்.5-5-2)என்று முத்தமிழ்க் கழிபெருந் தெய்வமாகிய திருக் குருகூர்ப் பரன் செய்தருளிய உப தேசம். அவ்வாறு காண்பார் ''கற்பா ரிராம பிரானையல் லால் மற்றும் கற்பரோ'' (திருவாய்.7-5-1) என்ற உண்மையைக் கண்டுய்வார். பிறநாட்டினின்று நந் நாடுற்றுச் செங்கற்பட்டு மாவட்ட அதிகாரியாய்த் தன் பால் அன்பு செய்த மதிநல்லாற்கு ஏரிகாத்தராமன்

என்னும் தன்னிறைத் திருநாமத் தொல்லருள் தோன்றத் தன்னைக் காட்டித்தந்து பேரருள் புரிந்து "அருளாளர் தாமெனினும் தமக் கொவ்வாரே'' (தேசிகமாலை. அத்திகிரி.22) என்னும் பேருண்மையை முதலித்துக் கொண்டு மதுராந்திகத் திருப்பதியில் கோயில்கொண்டு பொலிந்து நிற்கும் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ என்ற உண்மையைச் செய்ந்நன்றிகுன்ரு நெஞ்சுடையார் கண்களில் தெரியக் கண்டுணர்வார். ''தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமா கவே''(திருவாய்.3-6-8)என்று அவன் நற்ருளைச் சரணம் புக்கு நல்வாழ்ச்சி பெற்று உய்வார். இந்நூல் வாழ்த்துப் பாக்களுள் இரண்டு இங்கு உரைத்துள்ள கருத்தை உணர்த்துதல் காண்க.

---

## பதினேன்காமத்தியாயம்

தூலப் பொருளாராய்ச்சிகளைக் கொண்டு பொய்யா மொழிகள் மறுத்தற் காகா. பொய்யாவிளக்குகள் அவித் தற்காகா. பொய்யா மொழிகள் அழியா. பொய்யா விளக்குகள் அவியா. சான்ருேர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு. அது வேதம். வேதத்தைப்பொய்யாவிளக்கு என்று காண்பாரே சான்ருேர். சான்ருேர்க்கே அது பொய்யாவிளக்கு. சான்ருேர்க்கு உவமானமாய் விளங்கும் விபீடணுழ்வான் பொய்யாவிளக்குக் கொண்டு "ஆரருள் சுரக்கு நீதி யறநிறம் கரிதோ என்ருன்'' (விபீடணன். 137)என்று மெய்யருட் பரமனைக் கண்டடைந்து நில மிசை நீடுவாழும் திருவாளனுனன். விபீடணன் சான் ருேர்க்குத் தலைமை சான்றவன் என்பதை இறைவன் தானே ''மெய்யினுக் குறையுளான ஒருவன்'' (விபீடணன் 121)என்று உகந்தருளினுன். வேதம் பொய்யாவிளக்கு என்ற உண்மையை ''மையற நெறியி னேக்கி மா மறை நெறியி னின்ற, மெய்யினைப் பொய்யென் ருனும் மீள் கிலா நரகில் வீழ்வார்'' (விபீடணன்.117) என்று மெய் யிறைவன் அருளிச் செய்தான். காட்டும் பொய்யா விளக்கு வேதம். காட்டப்படும் பொய்யா விளக்கு இறைவன் என்பது இதனுல் காட்டப்பட்டது. சான் ருேர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு என்ற திருக்குறள் துணிபின் மெய்ம்மையும் வலிமையும் இவ்வளவால் விளக்கப்பட்டது. ஐயப்பாடுகளை அறுத்து இம்மெய்ப் பொருளைப் பின்னும் திடப்படுத்தும் குறட்பாக்கள் சில இங்கு அறியத்தக்கன. ''கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக், குறுகத் தறித்த குறள்'' ஆதலின் சூத்திரம் போன்ற குறட்பாக்களின் மெய்ப்பொருள் முதனூற் சான்றுகளும் பேரிலக்கியங்களும் கொண்டுதான் அறி தற்கு ஆகும் ஆதலின் இங்கும் முன்னும் விரித்துக் கூறி யதும் பின்னும் விரித்துக் கூறுவதும் என்று அறிக. அவை

அனைத்தையும் குறள் வேண்டியும் தாங்கியும் நிற்கின்றது.

''செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள், அவியினும் வாழினு மென்'' (குறள்-420)என்ற குறளின் மெய்ப் பொருளைக் காண்பாம். இக்குறளில் சுவை ஏன்பது செவியில்தான் உள்ளது. வாயுணர்வில் இல்லை என்று வாயுணர்வுக்குச் சுவை விலக்கப்பட்ட நயம் ஓர்ந்து சுவைக்கத் தக்கது. ஆதலின் வாயால் நுகரப் படும் சுவை என்று இக்குறட்குப் பொருள் உரைத்தல் பொருந்தாது என்க. விலக்கியபொருளைப் பொருளென ஏற்றிஉரைத்தல் முரண். வாயுணர்வு சுவையற்ற புல் லுணர்வாம் நவையுற்ற புலாலுணர்வாம். முன்னது விலங்குணர்வாம். பின்னது அரக்கருணர்வாம். ஆதலின் அதற்குச் சுவை கூறுதற்காகாது. செவியுணர்வொன்றில் தான் மெய்யுணர்வு. அவ்வுணர்வொன்றில்தான் சுவை. பரமாத்தும் மெய்யுணர்வின் சுவை என்றவாறு. இருக்குக் கள் சாமங்கள் எசுக்கள் அஃதன்றே உளராவார்க்கு (சான்றோர்க்கு)ச்சீரிய அமுது.'' (வேதம். தமிழ்செய்தது) என்று வேதம் ஓதியது. அவ்வுணர்வுடையாரையே சத்துக்கள் (உளரானவர்கள்)என்று வேதம் ஓதியதால் அஃதிலார் இலரேயாவார் என்பது வேதத்தின் தாற் பரியம். இத் தாற்பரியத்தைத் தைத்திரீய உபநிடதம் தெளிய உரைத்துள்ளது பின்னர்க் கூறப்படும். இவ் வேதப் பொருளையே செவியிற் சுவையுணர்வில்லாதார் ''அவியினும் வாழினு மென்'' என்று குறளாசிரியர் அநுவதித்தார். வேதம் என்பது சுருதி. அது செவி அஃதொன்றில்தான் சுவை, வேதமும் வேதவிளக்கங் களாகிய ஆரிடப் பனுவல்களும் இங்குச் செவி யென்றும் அவை பயப்பதே சுவையென்றும் அவ்வுணர்வே சுவை யுணர்வென்றும் உணர்த்தப் பட்டது. ''செவிகளாலார நின்கீர்த்திக் கனியென்னும், கவிகளே காலப் பண் தேன் உறைப்பத் துற்றுப் புவியின்மேல் பொன்னெடுஞ் சக்கரத் துன்னையே, அவிவின்றி ஆதரிக்கும் என் ஆவியே''

(திருவாய். 3-8-6)''கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல் லால் மற்றும் கேட்பரோ''(திருவாய். 7-5-3)கேட்டாரார் வானவர்கள் செவிக் கினிய செஞ்சொல்லே'' (திருவாய். 10-6-11)என்ற திருவாய்மொழியையும் ''பூமிபாரங்கள் உண்ணும் சோற்றினை வாங்கிப் புல்லைத் திணிமினே'' (பெரியாழ். திருமொழி. 4-4-5)என்ற பெரியாழ்வார் திருமொழியையும் ''செப்பச்செவிக் கமுது'' (தேசிக. அதிகார 40)என்ற தேசிகமாலையையும் ''தொல்லி லங்கைகட்டழித்த சேவகன்சீர் கேளாத செவி யென்ன செவியே திருமால்சீர் கேளாத செவி யென்ன செவியே'' (மதுரை .ஆய்ச். 37-39)என்ற சிலப்பதிகாரத்தையும், ''ஓங்கரும் பாத நான்கும் வகுத்த வான்மீகி யென்பான், தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச் செய்தான்'' (பால.நாட்டு 1. என்ற இராமாவதாரத்தையும் நோக்கி இத்திருக்குறளின் மெய்ப்பொருள் கண்டுணர்க. முன்னர்ச் சுவையற்ற புல்லுணர்வாம் விலங்கின் வாயுணர்வை விளக்கிக் கூறிப் பின்னர் நவையுற்ற புலாலுணர்வாம் அரக்கரின் வாயுணர்வை விளக்கிக் கூறுவாம்.

புல்லுணர்வே விலங்குகளின் உணர்வு. ஆதலின் அத்தகை யுணர்வுடையாரை வாயுணர்வின் மாக்கள் என்ருர். ''புல்லைத் திணிமின்'' என்ற பெரியாழ்வார் பிரயோகம் நோக்கி இக்குறளில் வாயுணர்வு என்றதன் கருத்து அறிதற்காகும். பெரியாழ்வாரும் திருவள்ளு வரும் ஒத்த கருத்துடையவர்கள் என்பதற்கு ஈதுமோர் அடையாளமாம். விலங்குகளின் உணர்வு இரை யுணர்வே. அவ்வுணர் வுடையானைக் ''கழிபேரிரை யான்'' (குறள் 947)என்று இகழ்ந்தார். மக்கள்(அற மக்கள்)உணவை மருந்து என்றும் மாக்கள் (மறமக்கள்) உணவை இரை என்றும் திருக்குறள் காட்டித் தருமோர் அருமறைப் பொருள். மருந்து என்னும் சொல்லுக்கு அமுது என்பது பொருள். ''அமரியுஞ் சுதையும் மருந்தும் அமுதே'' (பிங்கல.2-217)என்று நிகண்டு படித்தது. இறைவன் கண்டருளிய சேடம் அமுது என்னப் படும்.

அது அருந்தப்படும் வேள்விச் சேடம். அஃதருந்தும் நல் மக்களை அமுது அருந்துபவர்கள் என்றும் உளராவார்கள் என்றும் இறைவன் பாடியருளினன். (கீதை. 3-13;4-31) இறைவனுக்கு என்று வழிபட்டு இடப்பெறும் வேள்வி வேள்வியு ளெல்லாம் தலை என்று பின்னும் பாடி யருளினன். (கீதை. 4-24; 9-24).வேதமும் கீதையும் உணர்த்தும் அமுதப்பொருளை மருந்து என்றும் அல்லாததை இரை என்றும் காட்டித்தரும் திருவள்ளு வரின் மிக்க வைதிகர் எவராவார்? ஈதொன்றே வள்ளுவ ரின் வைதிக வன்மைக்கும் வைதிக வொண்மைக்கும் தக்கபெருஞ் சான்ருகும். அமுது உண்டு உளராகும் நல்லார் மக்களாவார். விலங்குபோல் இரை விழுங்கும் வாயுணர்வுடையார் மாக்களாவார் என்பது வைதிகத் திருக்குறட்டுணிபு. ''செப்பச் செவிக் கமுதென்னத் திகழுஞ் செழுங்குணத்துத், தப்பற் றவருக்குத் தாமே யுகந்து தருந் தகவால், ஒப்பற்ற நான்மறை யுள்ளக் கருத்தி லுரைத் துரைத்த, முப்பத் திரண்டிவை முத்தமிழ் சேர்ந்த மொழித் திருவே ''(தேசிகமாலை.அதிகார.40) என்ற சந்தமிகு தமிழ்மறை யோராகிய வேதாந்த தேசிகர் திருப்பாடல் இங்குநன்கு நோக்கத் தக்கது. அவ்வாறே ஒப்பற்ற நான்மறை யுள்ளக் கருத்தில் உரைத் துரைத்த வீட்டில் தலைக்கட்டும் அரியதோர் முப்பால் நூல் திருக்குறள் என்னும் உண்மையைக் கண்டுணர்க. அவ்வுணர்வே திருக்குறளைப் பற்றிய மெய் யுணர்வாம். இத்தேசிகமாலைப் பாடலில் செப்பச்செவிக்கு அமுது என்னும் அரும் பிரயோகம் செப்பச்செவிக்கு ஆராவமுதாம். செப்பச் செவி என்றதால் செம்மை செய்யப் பட்ட செவி என்னும் சிறப்புப் பொருள் உணர்த் தப்பட்ட நயம் காண்க. செப்புதல் என்னும் பொருளோடு செம்மை செய்யப்படுதல் என்னும் பொருள் ஒன்றிய சிறப்பு. அது அச்செவியின் சிறப்பு. ''தெருவு நெஞ்சு நடு செம்மையுஞ் செப்பம்'' (பிங்கல. 10-538)என்று நிகண்டு படித்தது. அச்செவி ஒன்றுதான் உண்மையில் தோட்கப் பட்ட செவிஆகும். பிற ஆகா என்ற உண்மையைக்

''கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால், தோட்கப் படாத செவி'' (குறள்.418)என்ற அருங்குறள் விளக்கிற்று. ''புவியு மிருவிசும்பும் நின்னகத்த நீயென், செவியின் வழி புகுந்தென் னுள்ளாய்—அவிவின்றி, யான் பெரியன் நீபெரியை யென்பதனை யாரறிவார், ஊன்பருகு நேமியாய் உள்ளு'' (பெரிய திருவந். 75)என்ற சட கோபர் திருவாக்கு இங்கு நோக்கத் தக்கது. கர்ணம் என்னும் ஆரியத்துக்குச் செவித்துளை என்பது தமிழ். அவ்வாரியச் சொற்பொருளை இக்குறள் காட்டித்தந்தது. ''கர்ண'' என்னும் வினைப்பகுதி சுராதி கணத்தில் படிக் கப்பட்டுள்ளது. செவியைத் துளைத்தல் என்பது அதன் பொருள். (சுராதி.21.கௌமுதி. பக்கம். 238). கேள்வி யால் தோட்கப் பட்ட செவியே செவி என்ற சிறப்புப் பொருளை நிருத்த முறையால் உணர்த்திய வள்ளுவரின் ஆரிய வியாகரண வல்லமை எத்திறச் சீர்மைத்து என்றதை ஓர்ந்து காண்க. அத்தகைச் சிறப்புடைய செவியையே வேதாந்ததேசிகர் செப்பச்செவி என்று சுவையுற விளக்கினர். செம்மையுடைய செவி என்றபடி. ''உவப்பினின் னமுத மூறி யொழுகுமால் சரிதங் கேளாச், செவித்துளை நச்சு நாகஞ் செறிவதோர் துளைமற் றுமால்'' (பாகவத: சௌனகாதியர் 6) என்ற பாகவத புராணத்தில் இப்பொருள் நலம் திகழும் சீர் நோக்கத்தக்கது.

செவியிற்சுவை யுணர்வுடையார் சான்றோர். அவர் களே உளர்களாவார். (ஸத்துக்களாவார்).அவர்கட்கே உற்றது செவியிற் சுவைஉணர்வு. அவ்வுணர்விலார்க்கு உற்றது புல்லிய புல்லுணர்வாம் வாயுணர்வு. அது சுவையற்றது. ''அவனே (இறைவனே) சுவை(ரஸம்). இவன்(உயிர்ப்பொருள்) சுவையை அடைந்தே இன்பம் உடையவன் ஆகின்றுன்'' (தைத்திரீய. 2-7.தமிழ் செய்தது) என்று உபநிடதம் ஓதியது. ஆதலின் இறைவனைப் பற்றிய மெய்யுணர்வு ஒன்றேதான் (உப நிடத உணர்வு ஒன்றதோன் செவியுணர்வு ஒன்றேதான்)

சுவையுணர்வு ரஸஉணர்வு ஆநந்தஉணர்வு, அஃதிலா தானே ''இலானுயே ஆகின்ருன்'' (ஷி. 2-6.தமிழ் செய்தது)என்று உபநிடதம் இகழ்ந்தது. உபநிடதம் இகழ்ந்தவாறே திருக்குறளும் ''அவியினும் வாழினு மென்'' என்று இகழ்ந்து உரைத்தது. இக்குறளில் செவி யிற்சுவை என்று சிறப்பித்தமையின் உபநிடதப்பொருள் கூறப்பட்டது என்று அறிக. உபநிடதரஸமே திருக்குறட் சுவை. இக்குறட்கு உபநிடதமும் இராமாயணமும் அடி என்ற உண்மையைக் காண்க. வேதம் பொய்யாவிளக்கு என்பதை ''வேதங்கள் மெய்யில் நிலைகொண்டுள்ளன'' (இராமாய. அயோத்தி.109-14. தமிழ்செய்தது)என்றும் வேதஉணர்விலாரின் உணர்வு விலங்குணர்வே என்பதை ''வேதமெய் யுணர் விலாத விலங்குணர்வுடையார்'' (இராமாய.யுத்த. 63. 14-15.தமிழ்செய்தது) என்றும் இராமாயணம் கூறியது. ஆதலின் மாக்கள் என்னப் பட்டார். ''இவ்வளவும் விலங்குகளே இருகாலும் நாற் காலும்'' (வேதம்.தமிழ்செய்தது)என்று வேதம் உணர் வித்தது. இவ்வுண்மையைக் கலைக்கோட்டு முனிவர் வரலாற்ருல் இராமாயணம் விளக்கிற்று. இம்முனிவர் இறைவன் இராமபிரானுய்த் திருவவதாரம் செய்தருள் வதற்குப் புரிந்த புத்திர வேள்வியில் ஆவுதி ஓதி யிடுதற்குத் தனித்ததோர் உரிமை சான்ற பொறியவித்த பெரும்புனிதராகிய தவப்பெருஞ் சுடர் என்றும் இம் முனிவர் ஆவுதியைத் தீயில் ஓதியிட்டவாறே இறைப் பரஞ்சோதியாம் திருமால் சங்கு சக்கர தண்டுக் கையனுய்ப் ப்பீதகவாடைப் பிரானுய்த் தோன்றியருளினன் என்றும் இராமாயணம் போற்றியுள்ளது. (இராமாய. பால. 15.2-3) இப்பொருளைத் ''திருகலை யுடைய விந்தச் சகத்துளோர் தன்மை தேரா, ஒருகலை முகச்சி ருங்க வுயர் தவன்''(பால. திருவவதார.33) என்றும் ''பாந்தளின் மகுட கோடி பரித்தபா ரதனில் வைகும் மாந்தரை விலங் கென் றுன்னும் மனத்தன்மா தவத்த னெண்ணில், பூந்தவி சுகந்து ளோனும் புராரியும் புகழ்தற் கொத்த. சாந்தனுல் வேள்வி முற்றில் தனயரு முளரா மென்ருன்''

(ஷி.34)என்று கம்பர் எழிலுறப் பாடினர். ''விலங்கொடு மக்க ளனையர் இலங்கு நூல் கற்ருரோ டேனை யவர்.'' (குறள்.410) என்ற கல்லாமை என்னும் அதிகாரத்துக்கு மகுடமாய்த் திகழும் அருங்குறளின் மெய்ப்பொருள் கம்பர் தீங்கவிகளில் எழில் நலம் பொலியும் சீர்மையை நோக்குக. இக்குறளில் இலங்கு நூல் என்றது இராமாயணத்தை என்று அறிக. இராமாயணம் உபப்ரும்ஹண நூல். உபப்ரும்ஹண நூல்எனினும் இலங்கு நூல் எனினும் ஒக்கும். வேதப்பொருளை விளங்கவைக்கும் நூல் உபப்ரும்ஹணம் என்னப்படும். வேதத்துக்கு உபப்ரும்ஹண நூலாய் (இலங்குநூலாய்) இராமாயணம் தோன்றியதை இராமாயணம் தானே கூறியுள்ளது. (இராமாய. பால.4.6) வேதம் கண்டுணர்ந்த மெய்ஞ் ஞான முனிவர்கள் பணித்த நூல்கள் உபப்ரும்ஹணம் (இலங்குநூல்)என்னப்படும். அவற்றுள் இராமாயணம் முதன்மை பெற்றது. ஆதலின் உபப்ரும்ஹணம் (இலங்கு நூல்)என்றது இராமாயணத்தைச் சிறப்பாக உணர்த்தி நின்றது. ''அவ்விராமாயணம் முதல்''(தத்தவமுக்தா: நாயக 11. தமிழ் செய்தது) என்று வேதாந்ததேசிகர் அருளிச்செய்தார். வேதச்சுவை(செவியிற்சுவை)யுணரா தவர் விலங்கனையர் என்னும் வேதமுடிப் பொருளை விளங்கவைக்கும் நூல் (இலங்குநூல்) இராமாயணம் என்ற உண்மை இதனுல் காட்டப்பட்டது. வியாச முனிவர் பணித்த பிரமசூத்திரத்தை நிரம்பிய நூல் என்ருர். (குறள். 401) நிரம்பியநூலும் உபப்ரும்ஹணமே (இலங்குநூலே). அது ஒரு பாற்கோடாமையில் நின்று சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் மெய்ப்பொருளை ஐயப்பாடறுத்துக் காட்டித் தரும் நீதி நிரம்பிய சால்பு நோக்கி நிரம்பிய நூல் என்ருர். அது சாரீரக நீதி. அதன் நலம் நிரம்பிய நூலாய் நிலைகொண்டமையின் நிரம்பிய நூல் என்னப்பட்டது. அந்நூலின்றிக் கோட்டி கொளலை ''அரங்கின்றி வட்டாடி யற்றே''(குறள் 401) என்ருர். இங்குக் கோட்டி என்றது வாத கோட்டியை. அரங்கு என்றதால் வியாசமுனிவர் வகுத்துள்ள அதிகரணங்களைக்

குறித்தபடி. அத்திற நெறிமுறைச் செறிவில் சாரீரக நீதி நிரம்பியுள்ள மறை முடித் துணிபு நூலாதலின் அவ்வாறு கூறினர். ஆதலால் அந்நூலேச் 'சமய நீதிநூல்' (திருவாய். 3-4-6) என்று சடகோபர் ஓதினர். இங்குச் ''சமயம் என்னும் சொல்லுக்கு உடம்பு என்பது பொருள். ''யாவையும் யவருந் தாஞயவரவர் சமயம் தோறும் தோய்விலன்'' (திருவாய்.3-4-10) என்று சடகோபர் தாமே இப்பொருளே விளக்கினர். ''உடல்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்து உளன் சுடர்மிகு சுருதியுள்'' (திருவாய். 1-1-7) என்று சிற்பொருள் அசிற்பொருள் அனைத்தையுமே உடலாய் (சமயமாய்)க்கொண்டு அவை அனைத்துக்கும் இறைவன் உள்ளுயிராய் (அந்தராத்மாவாய்)க்கரந்து எங்கும்பரந்து உளன் என்று சமய நீதி நூலாம் வியாசமுனிவர் நூற்ற பிரமசூத்திரம் விளக்கிக்காட்டும் மெய்ப்பொருளாய் உபநிடதங்களில் திகழ்கின்றன். ஆதலின் அந்நூல் சமய நீதிநூல். உரிய நியாயங்கள் கொண்டு இறைவனுக்கும் உலகுக்கும் உற்றுள்ள சம்பந்தம் ஆத்துமாவுக்கும் (உயிருக்கும்) சரீரத்துக்கும் (உடலுக்கும்) உற்றுள்ள சம்பந்தம் போன்றது. அவ்வுண்மையை விளக்கிக் காட்டும் நீதி நிரம்பிய நூல் வியாசர் நூற்ற சமய நீதி நூல் என்று சடகோபர் தேற இயம்பினர். ''சந்தமாய்ச் சமய மாகிச் சமயவைம் பூதமாகி, அந்தமா யாதி யாகி யருமறை யவையு மாஞய்'' (பெரிய திருமொழி. 4-6-9) என்று மங்கையர்கோன் அநுவதித்தருளினர். சமயம் என்னும் சொல்லுக்கு உடம்பு பொருள் என்றது உணர்த்தப்பட்டது. ''கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம், எல்லையின் மறைக ளாலு மியம்பரும் பொருளீ தென்னத் தொல்லையி லொன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப், பல்பெருஞ் சமயம் சொல்லும் பொருளும்போல் பரந்த தன்றே'' (பால.ஆற்றுப்.19) ''ஓதிய உடம்பு தோறும் உயிரென வுலாய தன்றே'' (ஷை.ஷை.20) என்று கம்பர் பாடினர். இப்பாடல்களில் பரந்தசூழ்ச்சி என்றும் பெருஞ்சமயம் என்றும் சொல்லும் பொருளும்போல என்றும் உடம்பு

தோறும் உயிரென என்றும் கூறி அது வேதம் ஓதியது என்பது தோற்ற ஓதிய என்றும் உரைத்தார். சொற்களுக்கும் பொருள்களுக்கும் ஒக்கவே விரிவும் ஒடுக்கமும் தூலமும் சூக்குமமும் மாண்மையும் நுண்மையும் பிரபஞ்சமும் பிரளயமும் ஆம் நிலைகள் (அவத்தைகள்) உற்றுள்ளன என்ற உண்மையை உணர்த்தியுள்ளது அறியத்தக்கது. ''கற்பகமனையவக் கவிஞர் நாட்டிய சொற்பொருளாமெனத் தோன்றல் சான்றது (இராமாய. கிட்கிந்தா பம்பை.6)என்று பின்னும் கூறினார். வியாசர் பணித்த பிரமசூத்திரம் சாரீரக நீதி நிரம்பிய நூல் ஆதலின் அது சமய நீதிநூல் நிரம்பிய நூல் என்ற மெய்ப் பொருள் காண்க.

பதினான்கு தரும வித்தியாஸ்தாநங்களுள் மீமாம்ஸா என்பது ஒன்று. அதை மீமாம்ஸா சாஸ்த்ரம் (மீமாஞ்சை நூல்)என்பர். மீமாஞ்சைக்கு இதிகர்த்தவ்யதாபாகம் என்று பெயர். அதாவது நிரப்பும் பாகம் என்றபடி. தருமம் சாத்தியம் என்னப்படும். அதை உணர்த்தும் வேதம் சாதநம் என்னப்படும். கரணம் என்னவும் படும். வேதமாகிய சாதநத்தால் சாத்தியமாகிய தருமத்தை எவ்வாறு சாதித்தல் வேண்டும் எனின் இவ்வாறு தான் சாதித்தல் வேண்டும் என்று சான்றுகள் அனைத்தையும் முரணின்றி ஒன்றுமாறு நியாயங்களைத் தகப் பரிமாறி உரிய பொருளை விளக்கலின் அந்த நியாயங்கள் நிரம்பி யுள்ள சால்பு நோக்கி இதிகர்த்தவ்யதா பாகமாகிய மீமாஞ்சையை நிரப்பும் நூல் என்றும் சாதநமாகியவேதம் அதனால் நிரம்பிய நூல் என்றும் கூறப்படும். மீமாஞ்சை நியாயங்கள் நிரம்பிய நூல் என்றவாறு. ஜைமினி முனிவர் நூற்றது பூருவ மீமாஞ்சை என்னப்படும். இப்பொருளைக் "கரணம் (சாதநம்) ஆகிய வேதத் தால் தருமம் தேறப்படுங்கால் மீமாஞ்சை இதி கர்த்தவ்யதாபாகத்தை நிரப்புகிறது'' (தந்த்ரவார்த் திகம்.தமிழ்செய்தது)என்று குமாரில பட்டர் கூறினார். இது வேதத்தின் முற்பாகமாகிய கரும(தரும)பாகத்துக் குக் கூறியது. அது வேதத்தின் முடிப்பாகத்துக்கு வியாச

முனிவர் நூற்ற பிரமசூத்திரம் கரணமாகிய உபநிடதத்துக்கு இதிகர்த்தவ்யதாபாகமாய் நிகழ்ந்து நிரப்புகிறது. பரமாத்துமா சாத்தியம். உபநிடதம் சாதநம் (கரணம்). வேதவியாசர் நூற்ற பிரமசூத்திரம் அதன் இதிகர்த்தவ்யதாபாகம். ஆதலின் உபநிடதம் நிரம்பிய நூல். வியாசர்நூல் நிரப்பாக்கால் உபநிடதம் நிரம்பியநூல் ஆகாது என்றவாறு, இப்பொருளைக் ''கரணங்களாகிற வேதாந்தங்களால் பரமாத்துமா தேறப்படுங்கால் இந்த உத்தரமீமாஞ்சையை (பிரமசூத்திரத்தை) இதிகர்த்தவ்யதை என்று (சான்றோர்கள்)அறிகின்றார்கள்'' (நியாய சுதர்சநம். தமிழ்செய்தது) என்று வரதநாராயண பட்டாரகர் கூறினர். இவ்வாசிரியர்க்கு வகுளாபரண தாசர் என்பதும் பெயர். ஆதலின் வியாசர் நூற்ற பிரம சூத்திரத்தை வேதாந்ததேசிகர் ''நீதிசூத்திரம்''(நீதி நூல்)என்றார் (அதிகரணஸாராவளி. 26).நீதி நயம் நியாயம் என்பன ஒருபொருட் சொற்கள் நிரம்பியது. என்றதால் வேதவாக்கியங்கள் ஒன்றோடொன்று முரணாதும் மற்றுமுள்ள சான்றுகளோடும் முரணாதும் உரிய பொருளை ஐயந்திரிபற உள்ளவாறு உணர்த்தும் முழு நலமுடைமை அறிவிக்கப்பட்டது. அவ்வாறு உணர்த்தலை ஆரியத்தில் உபபாதநம் என்பர். உபபாதநம் உபப்ரும்ஹணம் என்னும் சொற்கள் நிரப்புதல் என்னும் பொருளை உணர்த்தி நின்றன. ''நிரப்புதி நிலைமை என்றான்'' (உயுத்த, இரணியன்.123)என்ற கம்பர் பிரயோகம் இப்பொருளைக் காட்டி நின்றது. நிரம்பிய நயம் செறிய நீ கூறும் இறைநிலைமையை உபபாதநம் செய்து காட்டுதி என்பது இப்பாடற் பொருள். உபபாதநம் உபப்ரும்ஹணம் நிரம்பிய நூலைத் திருவள்ளுவர் நிரம்பிய நூல் என்றார். நிலைமை நிரப்புதலை மீமாஞ்சைநூலார் உபபத்தி என்பர். கோட்டி கொளஎல் நிரம்பியநூல் என்ற பிரயோகங்களை ஓர்ந்து திருவள்ளுவர் எத்திற மீமாஞ்சை வல்லார் என்பது காணலாகும். இக்குறளில் திருவள்ளுவர் நிரம்பிய நூல் என்றதால் பொய்நிரம்பிய நூலையோ மருள் நிரம்பிய நூலையோ கூறவில்லை. இங்கு நூல்

என்றது பொய்யாநூலாகிய வேதத்தை என்றும் நிரம்பி நூல் என்றது உரிய முறையில் சான்றுகளை மேற் கொண்டு திடப்பொருளைத் தெளிய விளக்கும் நீதி நிரம்பிய வேதநூலை என்றும் அறிக. ''சமய நீதிநூல்'' (திருவாய். 3-4-6)''சுடர்மிகுசுருதி'' (ஷை-1-1-7)என்ற திருவாய்மொழி இங்கும் நோக்கத்தக்கது. திருவாய் மொழி சுடர்மிகுசுருதியும் திருக்குறள் இலங்குநூலும் ஒன்றே என அறிக. நிரம்பிய சாரீரக நீதியால் சுருதி சுடர்மிக இலங்கும் நலம் இதனுல் உணர்த்தப்பட்டது. கற் பவை வேதம். அதைக் கசடறக் கற்பிப்பது (உணர்விப் பது)சாரீரகநூல் ஆதலால் ''கற்க கசடறக் கற்பவை'' (குறள்.391.) என்ருர் ''அரங்கின்றி வட்டாடி யற்றே. நிரம்பிய, நூலின்றிக் கோட்டி கொளல்'' (குறள்.401) என்ற இவ்வருங்குறளில் நிரம்பியநூல் என்றதற்குத் தானிரம்புதற்கேதுவாகிய நூல்கள் என்று பொருள் உரைத்தல் பொருந்தாது என்க. நிரம்பியது நூலே யன்றித் தான் அன்று. நீதிகள்(நயங்கள்நியாயங்கள்) நிரம்பிய தெள்ளிய திடநூல் என்பதே நிரம்பியநூல் என்றதன் உரிய சீரிய பொருள். அந்நூல் பலதலையுணர் வையும் மருளையும் அறுத்து மெய்ப்பொருளை உள்ளவாறு உணர்விக்கவல்லது. ஆதலின் அந்நூலைச் சமயநீதிநூல் என்ருர் சடகோபர். நிரம்பிய நூல் என்ருர் வள்ளு வர். இக்குறள் கல்லாமை என்னும் அதிகாரத்துத் தொடக்கக் குறள். ''விலங்கொடு மக்களனையர் இலங் குநூல் கற்ருரோ டேனையவர்'. (குறள். 410)என்பது முடிக்குறள். தொடக்கமுடிபு (உபக்ரம உபஸம்ஹார) நியாயத்தின் வலிமையும் நலமும் கண்டு வேதமுடி உணர்த்தும் செவியிற் சுவையாம் பரமாத்துமாவைப் பற்றிய மெய்யுணர்வு இல்லாதார் உணர்வை விலங்கு ணர்வு என்றும் ஆதலின் அவர்கள் வாயுணர்வின் மாக்கள் என்றும் அம்மாக்கள் அவியினும் வாழினு மென் என்றும் திருவள்ளுவர் இகழ்ந்து கூறிய திடனை ஆழ்ந்து ஓர்ந்து கண்டுணர்க. இத்திடனை ''உளரென் னும் மாத்திரைய ரல்லாற் பயவாக் களரனையர் கல்லா தவர்'' (குறள்.405) என்று மேலும் திடப் படுத்தினர்.

''உளனல்லனே யாகின்றுன்'' (தைத்திரீய, தமிழ் செய்தது. அஸந்நேவ ஸ பவதி என்பது அங்குள்ள உபநிடதம்)என்று தைத்திரீய உபநிடதம் ஓதியதையே இக்குறள் அநுவதித்துக் கூறிய ஒண்மை காண்க. திருவள்ளுவர் வைதிகமாண்புக்குப் பிறிதெச்சான்றும் சான்ருேர் வேண்டார். இவ்வுண்மையை மேலும் காண்பாம்.

——

## பதினைந்தாமத்தியாயம்

வேதமும் இராமாயணமும் உணர்த்திய திடன் மேலே கூறப்பட்டது. பிரமசூத்திரமும் இப்பொருளைத் திடனாக உரைத்துள்ளதைக் கூறுவாம். ஆத்துமதத்துவ உணர்வு (இறைநிலை உணர்வு)இல்லாதாரை விலங்குகளை ஒத்தவர் என்று பிரசூத்திரம் உணர்த்தியது. (பிரமசூத்தி. 3-1-7)இது வைராக்கிய (பற்றின்மை) பாதத்தில் நூற்கப்பட்ட சூத்திரம். இவ்வுலகின்கண் வேள்வி முதலிய செய்து அதன் பயனாகப் புத்தேளிருலகம் சென்று அங்குப் பசுங்கதிர்போல் வளர்கலைமேனியராய் நிகழும் அவர்களைத் தேவர்கள் பட்சிக்கின்றார்கள் என்று உபநிடதம் ஓதியது. (சாந்தோக்கிய.5-10-4). இங்குப் பட்சிக்கின்றார்கள் (பக்ஷயந்தி)என்ற சொல்லுக்கு இரையாகின்றார்கள் என்று பொருள். சுவர்க்கம் சென்று அங்கு வளர்கலையாக்கையில் கிளர்வாராயினும் வேதாந்தம் உணர்த்தும் பரமாத்தும தத்துவத்தைப் பற்றிய மெய்யுணர்வில்லாராதலின் அவர்கள் விலங்கையொத்தவரே. அது காரணமாய் அவர்கள் தேவர்களுக்கு இரை என்னப் பட்டார்கள். ஆதலால் உபநிடதம் அவர்களைப் பக்ஷணம் (இரை)என்று இகழ்ந்து கூறிற்று. ''தேவர்களுக்கு ஏவல் செய்யும் விலங்கு(பசு)'' (ப்ருஹதாரணிய.3-4-10 தமிழ்செய்தது)என்று பின்னும் அவர்களை உபநிடதம் இகழ்ந்தது. தேவஉடம்பு பெற்றாராலும் சிறுபயன்களிற் படிந்து அழிந்தொழியும் சிற்றின்பமாகிய ஆக்கைப் போகத்தையே காமுற்றுத் துய்த்துக் கழிவாராதலின் அவ்வாறு இகழப்பட்டார். அவர்களின் உணவும் உணர்வும் விலங்குகளின் உணவும் உணர்வும் போன்றதே என்று இச்சூத்திரத்தில் வியாசமுனிவர் கூறினார். இதன் தமிழ் விலங்கொடு மக்களனையர் செவியிற்சுவை யுணரா முதலிய குறள்கள் என்னும் உண்மையை ஓர்ந்துணர்க. நித்தியனாகிய ஆத்துமப் பொருளை (உயிர்ப்பொருளை)ப்

பட்சித்தல் என்பது அசம்பா விதமன்றே என்று எழுப்பும் ஐயத்துக்கு இங்குப் பட்சித்தல் என்றதற்கு ஒப்புமையடியாக இங்குக்கூறியது இலக்கணை (பாக்த)ப்பொருள் என்றும் பரமாத்துமாவைப் பற்றிய மெய்யுணர்வில்லாராதலால் விலங்கோடு ஒப்புமை என்றும் விடைகூறினர். ''அணிநிழல் வயங்கொளி யீரெண் தீங்கதிர்ப் பிறை வளர நிறை மதியுண்டி, அணிமணிப் பைம்பூ ணமரர்க்கு முதல்வன்'' (பரிபாடல்.3-51-53)என்ற பரிபாடலையும் நோக்குக.

மேலே கூறிய உபநிடத பிரமசூத்திரங்களில் வேள்விகள் செய்து சுவர்க்கம் செல்வாரைப் புத்தேளிர் பட்சிக்கின்றூர்கள் என்று கூறப்பட்டுள்ளது. இதனல் பட்சிக்கும் புத்தேளிர் தாமும் (இரையாக விழுங்கும் சுவர்க்கத்துள்ளார்தாமும்)அத்தகையரே என்ற உண்மையும் குறிக்கப்பட்டது. சுவர்க்கம் செல்வார் சுவர்க்கத் துள்ளார்க்கு இரை என்றதால் இரையாகக் கொள்ளும் சுவர்க்கத்துள்ளாரும் இரையாவாரை ஒத்த விலங்கே (பசுவே)ஆவார் என்பது அக்குறிப்பு. இக்கருத்தை:— ''தன்னேடொக்க ஒழுகு சங்கிலியிலே கோப்புண்டு உழலுகிற தேவர்களுக்கு இறைக்குடிமகனுய் நெடு நேர்த்திகளோடும் நெடுங்காயக் லேசங் களோடும் (ஆக்கை வருத்தல்களோடும்)நெடுநாள் பண்ணின யஞ்ஞாதி ப்ரயாஸத்திற்குப் பலமாக (வேள்வி முதலிய முயற்சிக்குப்பயனுக)ஸ்தூல (தூல)சரீரம் விழுந்தால்... ...ஸ்வர்க்கப்பரணிலே ஏறி அங்கே தேவசாதி என்னும்படி ஒரு தேகத்தை எடுத்து எருது பரதேசம் போன கணக்காய்த் தனக்கு மேலான தேவர்களுக்குப் பசு (எருது)என்னலாம்படி எடுத்துச் சுமந்து திரிந்து ஏற விட்ட கர்மம் விசையற்ற வளவிலே ......தள்ளுண்டு தகரவிழுந்து அங்கே தேவசரீரத்தையும் இழந்து ...... ஏதேனுமொரு வயஸ்ஸிலே (வயதிலே)மரண வேதனை யோடே தலைக்கட்டிப் பழைய வட்டத்திலே சூருவளிக் காற்றுப்போலே சுழலும் படிகளைக் கேட்டால் ஸ்வர்க்காதி

சுக சங்க நிவ்ருத்தி யுண்டாம் (பாம பத.விரக்தி)என்று வேதாந்தேசிகர் விளக்கிக் கூறினர். இதனுல் இரையா வாரும் இரையெடுப்பாரும் ஒக்க ஒழுகு சங்கிலிக் கோப்பி லுழலும் இயல்வினராதலால் ஒக்கவே விலங்கை ஒப்பார் என்ற உண்மை காட்டப்பட்டது.



## பதினைருமத்தியாயம்

இனி அரக்கருடைய புலாலுணர்வாம் வாயுணர்வைப் பற்றிக் கூறுவாம். ''பிணம்தின்பவர்கள் புலால் உண்பவர்கள் இரத்தம் குடிப்பவர்கள் முதலியன அரக்கரின் பிரசித்தமான பெயர்கள்.(அமரம்.118). ''கொடுந்தொழிலர்கள் மக்களின் மாமிசங்களை உண்டு வாழ்பவர்கள் தண்டகவனத்தில் தவம் செய்யும் முனிவர்களைப் பட்சிப்பவர்கள் அரக்கர்கள்'' இராமாய. ஆரணிய. 10-5-6-தமிழ்செய்தது.)என்று இராமபிரான் கூறினன். அரக்கரின் பெயர்ப் பிரசித்தியே அவர்களது புலாலுணர்வாம் வாயுணர்வுடைமையின் பிரசித்தியை விளக்கப் போதிய சான்றும். பொதுவாக மக்கட் புலாலையும் சிறப்பாக இருடிகளின் புலாலையும் உகந்த வாயுணர்வுடைய கொடியர்கள் அரக்கர்கள் என்பார்கள். இருடிகளின் புலாலை உண்டு வாழ்பவன் என்று தன் தன்மையை விராதன்தானே கூறினன். (இராமாயண. ஆரணிய. 2-12) அரக்கியர்களும் இரத்தத்துடன் புலால் புசிப்பவர்கள் என்று இராமாயணம் கூறியது. (சுந்தர.17-16) சீதைப்பிராட்டியை நோக்கி 'இரண்டுமாதத்திற்குள் நீ என்னை ஏற்காவிடில் உன்னை எனக்குக் காலை உணவாக்குவதற்கு மடைப்பள்ளியில் தொடங்கி விடுவார்கள்'' (சுந்தர. 22-9. தமிழ் செய்தது) என்று இராவணன் கூறினன். ''பிறர் பெண்டிரைக் கவர்தலும் நுகர்தலும் அரக்கர் தருமம்'' (சுந்தர .20-5.தமிழ்செய்தது)என்று பின்னும் அரக்கர் தருமத்தைப் புகழ்ந்து கூறினன். அசுர இராவணன் பிராட்டியை நோக்கிக் கூறியது போல் அசுர இரணியன் பிரகலாதனை நோக்கி ''கம்பத்தின் வழியே காணக் காட்டுதி காட்டிடாயேல் கும்பத்தின் கரியைக் கோண்மாக் கொன்றென நின்னைக் கொன்றுன், செம்பொத்தகுருதி தேக்கி நின்னையும் தின்பேன் என்ருன்'' (இராமாய. உயுத்த. இரணியன்.125) என்று

கூறினன். "கொன்றுணலஞ்சாக் கொடுவினைக் கொலைறகை மாயஅவுணர் மருங்கறத் தபுத்தவேல்" (பரி பாடல்.5-6-7) என்றுகடுவனிளவெயினனார். அவுணரென் பார் கொன்றுண்ணும் பாவத்துக்கு அஞ்சாதவர் என்றும் மாயாவிகள் என்றும் தீவினையர்கள் என்றும் கூறி அத்தகைக் கொடியரை வேரற மாய்த்த முருகக்கடவுளின் வேற்படைத் திறலைப் போற்றினார். இவர் வேறிடத்துத் திருமால் உலகளந்த காலத்தில் அவுணர்கள் திருமாலுக்கு அஞ்சி ஓடிக் கடற்பாய்ந்த வரலாற்றை "அமரர்க்கு முதல்வனீ, திணி நிலங் கடந்தக்காற் றிரிந் தயர்ந்தகன்றோடி, நின்னஞ்சிக் கடற்பாய்ந்த பிணி நெகிழ்ப விழ் தண்டா, அன்னவர் படவல்லா வவுணர்க்கு முதல்வனீ, அதனால் பகைவரிவ ரிவர் நட்டோ ரென்னும் வகையு முண்டோ நின்மர பறிவோர்க்கே" (பரிபாடல். 3-53-58)என்று தனக்கஞ்சிக் கடற்பாய்ந்து பிழைசெய் யாது நின்ற அவுணர்க்கும் காப்பளித்த முதல்வன் அவனுக்குப் பகைவர் நட்டோர் என்னும் வகையில்லை. அவர்கள் செய்யும் கொடுமைகளுக்காக அவர்களை மாட்டு கின்றான். அவுணரும் நல்லாராய் ஒழுகி ஆட்பட்டால் அவர்களுக்கும் வேற்றுமை யின்றிக் காப்பளித்து ஆட் கொள்ளும் இயல்வினன் என்ற உண்மையை விளக்கினார். அவுணரைச் செகுக்கும் திருமாலின் படைத்திறலை.- "நனிமுரல் வளைமுடி யழிபிழிபு தலையிறுபு தாரொடு புரள, நிலைதொலைபு வேர்தூர்மடல், குருகு பறியா நீளிரும் பனைமிசைப் பலபதினுயிரம் குலை தரையுதிர்வு போல், நில்லா தொரு முறை கொய்பு கூடி, ஒருங்கு ருண்டு பிளந்து நெரிந் துருள்பு. சிதறு, பளறு சொரிபு நிலஞ்சோரச் சேராரின், னுயிர் செகுக்கும் போரடு குரு சினீ யேந்திய படையே" (பரிபாடல்.2-40-49) என்று கீரந்தையார் போற்றினார். இப்பாடலில் சேரார் என்ற சொல்லாலும் உவமைகளாலும் இராவணன் சிறப்பாக உணர்த்தப்பட்டுள்ளது காணலாம். "நண்ணு அசுரர்" (திருவாய்.10-7-4) 'வணங்கா மன்னன்" (பெரிய. திரு மொழி. 8-8-7இராவணன்)"வணங்கலி லரக்கன்" (ஷை

9-8-5 இராவணன்)முதலிய பிரயோகங்கள் நோக்கத் தக்கவை. 'சேரார்'என்றது தாள்சேராரை என்று அறிக. ''தாள் சேர்ந்தார்''(குறள்.7-8) 'அடி சேர்ந்தார்', (குறள்.3-4)''வண்புகழ் நாரணன் திண்கழல் சேரே'' (திருவாய். 1-2.10)''இறை சேர்மின், உயிர்க்கு அதன் நேர்நிறை யில்லே'' (ஷை.1-2-3)''விரைந்தடி சேர்மினே (ஷை.4-1-2)என்பன காண்க. ''இரண்டாய்ப் பிளந் தேனும் போவேன் எவரையும் வணங்கேன்'' (இராமாய. யுத்த. 36.11. தமிழ் செய்தது) என்று இராவணன் கூறினன். ''வானுளாரவரை வலிமையால் நலியும் மறிகட லிலங்கையர் கோனைப் பானுசேர் சரத்தால் பனங்கனி போலப் பருமுடி யுதிர வில்வளைத்தோன்'' (பெரிய திருமொழி.9-1-7)என்றூர் மங்கையர்கோன். ''உத்தமவ மர்த்தலம மைத்ததொ ரெழிற்றனுவி னுய்த்த கணையால் அத்திறவ ரக்கன்முடி பத்துமொரு கொர்த்தெனவு திர்த்த திறலோன்'' (தேசிகமாலை. அதிகார.44)என்றூர் வேதாந்ததேசிகர். கூறுதற்கு நாக் கூசும் அத்திறக் கொடிய பாவங்களுக்கு அஞ்சா வஞ்ச விராவணன் தலை பத்தினையும் அவலீலையாய் ஒரு கொத் தென உதிர்த்த படைத்திறற் பரமன் இராமபிரான் என்று செந்தமிழ்ச் செல்வச் செந்நா வீரர்கள் போற்றி யுள்ள வாய்மைக்கு ஆட்பட்டு வாழ்வாரே நற்றமிழரா வார் என்னும் வாய்மைக்குப் பிறிதெச்சான்றும் வேண்டா வாறு திகழும் இங்குக் கூறிய பாடல்களே போதியவாம். தெய்வத் திருப்படை யேந்திய அத்திருப்பரனை அபிமு கஞக்கி (முன்னிலைப்படுத்தி) நின்னொளி திகழ்கின்ற சிறந்த நீலமணியை ஒக்கும் ''நின்னது திகழொளி சிறப்பிரு டிருமணி'' என்றும், நின்கண் அன்றலர்ந்த செய்ய தாமரைமலர் இரண்டைப் பிணைத்ததனை ஒக்கும் ''கண்ணே புகழ்சால் தாமரை யலரிணைப் பிணையல்'' (இறைமைக்கு உற்ற அடையாளமாய்த் திருப்பரன வனதேயாம் தாமரைக் கண் என்ற உண்மையை ஏகாரம் கொடுத்துக் காட்டிய திடம் காண்க.)என்றும் நின் வாய்மை தப்பாது வருகின்ற நாளை ஒக்கும் ''வாய்மை

வ்யங்கிய வைகல் சிறந்த'' (இவ்வுவமை உலகம்பெறும்) என்றும், நின் பொறை நிலத்தை ஒக்கும் “நோன்மை நாடி னிருநிலம்''என்றும் நின் அருள் யாவர்க்கும் ஒத்தது அது நீரால் நிறைந்த மேகத்தை ஒக்கும் “சாய னினது வானிறை யென்றும் நாவ லந்தணரரு மறைப் பொருள்'' என்றும் (பரிபாடல்2.49-56),வேதம் சரணுகதி வேதமாம் இராமாயணம் முதலிய விளம்பும் மெய் இது என்று தேற இயம்பிய பெருஞ் சான்ருேராகிய கீரந்தை யார் இப்பரிபாடலைப் பாடிய பெருந்தகையார் என்ற உண்மை காண்க. இப்பரிபாடல் இங்குற்றதால் அஃதுணர்த்தும் மற்ருேர் வைதிக உண்மையும் இங்குக் கூறவேண்டியதாயிற்று. அதைக் கூறிப் பின்னர்த் தொடர்ந்து கூறுவாம். இறைவன் திருவவாதாரம் செய்தருளப் புத்திர வேள்வி புரியுங்கால் அங்கவ்வேள்வி வாடத்தே அபயமளித்துக் கொண்டே அபயாவதாரப் பரன் தான் என்ற உண்மையைக் கண்கூடாகக் காட்டித்தரச் செய்த அவ் வேள்வியின் தூய்மையையும் மான்மியத்தையும் கூறியுள்ள உண்மை அது. ‘‘உவணத்துயர் கொடியோயே, கேள்வியுட் கிளந்த வாசானுரையும் படிநிலைவேள்வியுட் பற்றியாடுகொள லும் புகழியைந் திசைமறையுறு கனன்முறைமூட்டித் திகழொளி யொண்சுடர் வளப்பாடு கொளலும், நின்னுரு புடனுண்டி பிறருடம்படுவாரா நின்ஞெடு புரைய அந்த ணர் காணும் வரவு''(பரிபாடல்.2.60-68)என்பது. கருடக் கொடியுடையோய்! வேள்வியா சானுடைய உரை உன்னுருவம், வேள்விக்குரிய சாகபசுவைக் கொள்ளல் யூப(வேள்வித்தறி)உருவாகிய உனக்கு உணவு. வேள்வித் தீயை முறையால் மூட்டிக்கொள்ளல், அத்திகழொளியை யுடைய ஒண்சுடரின் பெருக்கத்தை உண்டாக்கிக் கொள்ளல். இவை உன் உருவும் உண்டியுமாம். கடவுள் இல்லை என்பாரும் அதுகண்டு உண்டு என்று உடன்படு வார். அஃதுண்டாகவும் உன்பெருமைக்குத் தகவும் அந்தணர்காண்கின்ற உன் திருஅவதாரம் என்று அதன் பொருள். முற்பாடியவடிகட்குத்(42-59) தகச் சிறப்புப்

பொருள் உரைத்தது என்று அறிக. ஆதித்தன் யூபம் (சூரியன் வேள்வித்தறி)என்ற வேதவாக்கின் மெய்ம்மை யையும் மெய்ப்பொருளையும், அதுகாணும் நாத்திகரை யும் ஆத்திகராக்கவல்ல அதன் மான்மியத்தையும் ஆர்வத்தால் பாடிய கீரந்தையாரின் வைதிகத் திண்ண மும் வண்ணமும் எத்தன்மைத்து என்று தெரியக் காணலாம்.

இனித்தொடர்ந்து கூறுவாம். ''இராமனிருமுறை யியம்ப கில்லான்'' (இராமாய. அயோத்தி. 18-30. தமிழ் செய்தது)''இராம னலர்ந்த தாமரைக் கண்ணன்'' (ஷை.சுந்தர. 35.8. தமிழ் செய்தது) ''பொறையாற் பூமியை ஒப்பான்''(ஷை.35-9.தமிழ் செய்தது) ''உலகுக் கெல்லாம் சரணியன்'' (ஷை.யுத்த.17.15 தமிழ் செய்தது) ''உயிர்கட் கெல்லாம் ஒக்கநீ சரணியன்'' (ஷை. 19.5. தமிழ்செய்தது)''ஆரியன் அனைவர்க்கும் சமன்'' (ஷை. பால.1.16. தமிழ் செய்தது) ''இராமன் ''வாய்மை வீரன்'' (ஷை1-19;19-14. தமிழ் செய்தது) ''கருணைக் கண்ணன்'' (ஷை.அயோத்தி. 45.19.தமிழ் செய்தது) ''வீடணனுயினும் இராவணன்தானே யாயினும் நட்பில் வந்தடைந்தானை ஒருக்காலும் கைவிடேன்'' (ஷை.யுத்த. 18.35. தமிழ் செய்தது) முதலிய இராமயணத்தை மேற் கூறிய பாடல் அடியாக் கொண்டுள்ளதைக் காண்க. இராமனுடைய வாய்மையின் மாண்பை ''இருமுறை யம்பினை எய்த லில்லையே, இருமுறை யடைவரை நிறுத்த லில்லையே, இருமுறை யிரந்தவர்க் கீத லில்லையே, இரு முறை யிராகவ னியம்ப லில்லையே'' (தமிழ் செய்தது வேதாந்ததேசிகர் அபயப்ரதாநசாரத்தில்(10) இந்த சுலோகத்தை எடுத்துக் காட்டியிருக்கிறார்). இராமபிரான் வாய்மையும் தாய்மையும் தூய்மையும் எத்திற வீறும் சீரும் உடையது என்பது இதனுற் காணலாம், ''கடுந் தெற லிராம னுடன்புணர் சீதையை, வலித்தகை யரக் கன் வௌவிய ஞான்று''(புறநா.378.18-19) என்று இராவணன் அரக்கன் என்பதையும் அவன் இராமன்

பத்தினியாகிய சீதையைக் கவர்ந்த கொடுந்தொழிலன் என்பதையும் புறநானூறு கூறிற்று. ''சோவரணும் போர் மடியக் தொல்லிலங்கை கட்டழித்த சேவகன்சீர் கேளாத செவி யென்ன செவியே'' (மதுரை.ஆய்ச். 37-38) என்று சிலப்பதிகாரம் இராக்கதர்வாழிலங்கையைக் கட்டழித்த சேவகன்சீர்பாடிற்று. ''சோவினருமை யழித்த மகன்'' என்று நான்மணிக் கடிகை சக்ரவர்த்தித் திருமகனைப் போற்றிற்று. ''தென்னவற் பெயரிய துன்னருந் துப்பின், தொன்முது கடவுட் பின்னர் மேய'' (மதுரைக்காஞ்சி. 40-42) என்ற பாடலில் தென்னுட்டை ஆக்கிரமித்துக் கொண்டு குடிகளைத் துன்புறுத்திய இராவணன் அங்கு இயங்காவாறு அகத்தியக் 'கடவுள் பொதியில்மலை உருகும்படி காந்தருவ இசை பாடி இராவணனைப் பிணித்து இலங்கைக்குப் போக்கி இராக்கதர் ஆக்கிர மிப்பை நீக்கினுர் என்ற வரலாறு உணர்த்தப்பட்டது. அதன் விரிவை உரையுள்ளும் பிறநூல்களுள்ளும் காண்க. இராவணன் கொடிய இராக்கதன் மக்களைத் துன்புறுத்து பவன். தென்னனென்னும் பெயருடைய அகத்திய முனிவர் தமது இசைவலியால் அவனைத் தென்னுட்டி னின்று இலங்கைக்குப் போக்கித் தென்னுட்டுக்கு வந்த கேட்டை நீக்கினுர் என்பது தமிழ் முன்னூல்கள் கூறும் உண்மை கண்டு இராவணன் அரக்கன் தென்னுட்டவ னல்லன் தென்னுட்டினின்று துரத்தப்பட்டு இராக்கதர் நாடாகிய இலங்கைக்குப் போக்கப் பட்டவன் என்று அறிக.

வேதம் போற்றும் தெய்வங்களைப் போற்றிப் பாடு தலே வேதமுறை என்ற வைதிகச் சான்றேர் தூநெறி யைக் காட்டித் தரும் வைதிகமுதியோர் கடுவனிள வெயினனுர் என்று அறிக. ''தெய்வமிகழேல்'' என்பது நற்றமிழர் கோட்பாடும் பண்பாடுமாம். இதற்கு மாருக வேதம் போற்றும் தெய்வங்களை இகழ்தலும் பழித்தலும் இழிவுசெய்தலுமே தொழிலாக இன்று தோன்றிய ஒரு சிலர் வாக்கில் வரம்பின்றி நாக்கில் நரம்பின்றிப் பறை

வதும் வரைவதும் தமிழர்க்கு அழகாகாது. அது தமிழரை அரக்கரையே ஒத்த இழிசந்துக்களாக்கும் அடாச் செய்கையேயாம்.

குமரக்கடவுள் தோன்றிய வரலாற்றை வான்மீகி முனிவர் இராமாயணத்துட் பாடியிருக்கிறார். (இராமாய. பால. 36,37) இவ்வரலாறு இராமபிரானுக்கு விசுவாமித்திரமுனிவர் கூறியது, ''நிவந்தோங்கிமயத்து நீலப்பைஞ் சுனைப் பயந்தோ ரென்ப''(பரிபாடல். 5.48-49) என்ற பரிபாடலிலும் ''நெடும்பெருஞ் சிமையத்து நீலப்பைஞ்சுனை, ஐவரு ளொருவனங்கையேற்ப, அறுவர் பயந்த வாறமர் செல்வ''(திருமுருகாற்றுப் படை. 253-255) என்ற திருமுருகாற்றுப் படையிலும் இராமாயணம் மேற்கொள்ளப்பட்டுள்ளது உணர்த்தப் பட்டது. வான்மீகிமுனிவரைப் பின்பற்றி ரகுவம்சத்தையும் குமாரஸம்பவத்தையும் ஆரியமாக்கவிஞர் காளிதாஸர் பாடினர். குமாரஸம்பவம் என்று வான்மீகி இட்ட பெயரையே (பால.37-31) வான்மீகிஅநுக்கிரகம் என்று கருதி உச்சிமேற்கொண்டு அதையே தமது காவியத்துக்குப் பெயராக வைத்துக் கொண்டார். குமாரஸம்பவம் (குமரக்கடவுள்தோற்றம்) அசுரரை ஒழித்தற்குச் செய்த தேவகாரியம் என்று இராமாயணம் கூறியது (இராமாய. 37.11) இப்பொருளையே ''கொன்றுண லஞ்சாக் கொடுவினைக் கொஃறகை மாய அவுணர் மருங்கறத் தபுத்தவேல்'' (பரிபாடல்,5-6-7) என்று கடுவனிளவெயினனர் அநுவதித்தார். அவ்வாறே இராவணசங்காரம் செய்தவுடன் தேவர்குழாம் திரண்டு வந்து கமலத்தண்ணலாகிய நான்முகனை முன்னிட்டுக் கொண்டு இராவணவதம் நிறைந்தேறியது எங்கள் காரியம்(தேவகாரியம்) செய்யப்பட்டு விட்டது. இனி உகந்த உள்ளத்தனாய் உன்னுடைச் சோதிக்கு எழுந்தருள்வாயாக என்று விண்ணப்பம் செய்துகொண்டார்கள். இது கொண்டு குமாரஸம்பவமும் அரக்கரைக்களைதலாம் தேவகாரியம் செய்தற்பொருட்டு என்ற உண்மை காண்க,

இங்கு இராமாயணத்தில் ஷடாநநன் (ஆறுமுகன்) கந்தன் குமாரன் கார்த்திகேயன் சரவணபவன் சேநாபதி முதலிய நாமங்கள் கூறப்பட்டுக் குமாரஸம்பவ வரலாறு புண்ணியம் கார்த்திகேயபக்தர்கள் இம்மையில் ஆயுள் புதல்வர் செல்வம் முதலியவை உடையராய்க் கந்தசா லோக்கியத்தைப் பெறுவார்கள் என்று பயனும் கூறப் பட்டுள்ளது. குமாரஸம்பவத்துக்கு இராமாயணம் முத னூல் என்பது இதனால் நன்கு காணலாம். அதன் வழி நூல்களுள் சில வேறுபாடுகள் அமைதலும் சாலும் என்க. இராமாயணத்தில் கூறியபடியே கந்தர் நாமங்கள் அமர கோசத்துள் கூறப்பட்டுள்ளன. (77-80). அமரகோசம் இராமாயணத்துக்குப் பிற்பட்டது என்பது இதனாலும் புலனாகும்.

''தண்கடல் வட்டத் துள்ளாரைத் தமக்கி ரையாத் தடிந்துண்ணும் திண்கழற்கா லசுரர்க்குத் தீங்கி ழைக்கும் திருமால்'' (திருவாய்.3-5-2)என்று திருமாலின் அவதார நோக்கத்தையும் அவதாரப்பயனையும் சட கோபர் கூறினார். நல்லாரை வாட்டிக் கொன்றுண்ணும் கொடுவல்லசுரர் குலத்தை வேரறுத்து நல்லாரைக் காத்தளித்து நல்லறத்தை நாட்டற்பொருட்டுத் திருமாலின் தோற்றமும் செய்கையும் என்றவாறு. அவ் வாறே முருகக்கடவுளின் தோற்றமும் செய்கையுமாம். ''தமக்கிரையாத் தடிந்துண்ணும்'' (திருவாய். 3-5-2) என்றார் சடகோபர். ''கழிபேரிரையான்'' (குறள்.946) என்றார் வள்ளுவர். அரக்கருணர்வு புலாலுணர்வே. ஆதலால் அரக்கர்கள் விலங்குகள்போல் மோப்பத்தால் உணர்வாராயினர். அவ்வுணர்வைப் பயப்பது மூக்கு. ஆதலின் புலாலை உணரும் சூர்ப்பணகையின் மூக்கை இராமபிரான் நீக்கியருளினான் என்று அறிக.

---

## பதினேழாமத்தியாயம்

செவியில்தான் சுவையுணர்வு விலங்குகளின் வாயுணர்வு சுவையற்ற புல்லுணர்வாம் அரக்கரின் வாயுணர்வு நவையுற்ற புலாலுணர்வாம் என்பது மேலே உரைக்கப்பட்டது. செவியிற் சுவையுணர்வு என்பது உபநிடத உணர்வும் அதன் விளக்கங்களாகிய இலங்கு நூலுணர்வும்நிரம்பிய நூலுணர்வுமாம். அவை பொய்யா விளக்கு. அவை பயப்பது மெய்யுணர்வு. அஃதே மெய்ஞ் ஞானம். வேதம் எனினும் ஞானம் எனினும் ஒக்கும். ஞானம் என்பது மெய்ஞ்ஞானம். அவ்வொன்றே ஞான மாதலால் அப்பெயர்த்து. கேட்கக்கேட்கத் தெவிட்டாத அமுதம் அஃதொன்றே. அஃது இறைநிலை ஞானம். இறைவன் விசுவரூபன் விசுவாத்மா. அவனே உயிர் களுக்கு உற்ற தஞ்சம். அவ்வுணர்வொழிந்த உணர்வெல் லாம் அசுரருணர்வு அரக்கருணர்வு என்று கீதை உணர்த்தும் திவ்விய உணர்வு (கீதை.9-1.12:10-18.20: 15-15:19) வீடென்னும்பேரின்பம் பயத்தற்காகும் அவ் வுணர்வொன்றே ஞானம், பிற அஞ்ஞானம் என்று பராசரமுனிவர் கூறினர். (விஷ்ணுபுரா.1-19-41) இராமாயணம் எல்லாச் செவிக்கும் இன்பம் (பால. 3-8: ஸர்வச்ருதிமநோஹரம்)என்றும் அஃதுணர்த்தும் பரம் பொருளாம் இராமபிரான் எல்லாஉயிர்க்கும் இன்பன் (சுந்தர. 35-8. ஸர்வஸத்த்வமநோஹர:) என்றும் இராமாயணம் ஒதியது. ராமகர்ணாம்ருதம் க்ருஷ்ண கர்ணாம்ருதம் என்னும் பிரசித்தியையும் காண்க. அத் திறச் செவிக்கமுதமாம் ஞானம் ஒன்றே ஞானமாதலின் அது வேதம் என்னப்பட்டது ஆதலின் அஃதொன்றுக்கே புலம் என்பது பெயராயிற்று. வேதம் எனினும் ஞானம் எனினும் ஒக்கும். தத்துவத்தை உள்ளவாறு கண்முன் திகழ்வதுபோல் காட்டித்தரும் சால்பு உடை யதாதலால் புலம் (அறிவு.காட்சி) என்பது வேதத்தின்

பெயராயிற்று. அதுகாரணமாக வேதம் கண்கூடு (ப்ரத்யக்ஷம், தரிசனம்) என்று பிரமசூத்திரத்துள் ஓதப்பட்டது (1-3-27, 2-1-30; 3-2-17; 4-4-4 4-4-20). புலம் என்னும் சொல்லுக்கு வேதம் என்பது பொருள் என்றதைப் ''புலம் புரிஅந்தணர்'' (பரிபாடல்.6-45) என்ற பரிபாடல் காட்டி நின்றது. புலம் என்னும் சொல் பாகதம் (பிராகிருதம்) பார்த்தல் என்னும் பொருளை உணர்த்தும் த்ருசி என்னும் ஆரியவினைப் பகுதி ''புல'' என்னும் ஆதேசம் (திரிபு)பெற்றுப் புல என்னும் பாகதவடிவம் கொள்கின்றது. ''புல இ அஸபர ஸஹாவா புரி ஸாகேத்தூண ஸாமிஞ்ஞேதுஹ ஸீலம் ஞுஹண அஸச்ச ஸகிஞுணமு அதிகஹ்வி ஸவ்வ ஜண ஸோஹத்தம்'' (அச்சுதசதகம். 50. பாகத நூல்)என்று வேதாந்த தேசிகர் பாடினுர். திருவயிந்தையில் கோயில் கொண்டருளும் அடியவர்க்கு மெய்யனைப் போற்றும் பாகதப்பாடல் இந்நூல். இப்பாடலில் புல என்னும் சொல்லுக்கு ஞானம் என்பது பொருள். இப்பாடற்பொருள்:—அடியவர்க்கு மெய்யனே! நாதனே! தத்துவமெய்ம்மையைக் கண்டுணர்ந்த ஞானியர்கள் நீ உயர்வற உயர்நலமுடைய இறைவனுயிருக்கச் செய்தே உன் தாள் சேர்ந்த எத்திறத் தண்ணியரும் நின்னிறைமை நோக்கிக் கூசி அகலாவாறு அவரோடு ஒருநீராய் ஒக்கக்கலந்து பரிமாறும் உன்னுடைய அத்திற உத்தம சீலப்பண்புடைமையைக் கண்டு அப்பண்புடைமையே தங்களுக்குத் தஞ்சம் என்று தேறித் தாங்களும் அதற்குத்தக எல்லா உயிர்களிடத்தும் ஒக்கவே உள் கலந்து அன்பு கூர்ந்து ஒழுகும் தகவை என்றுமே விடாராயினர் என்பது. இதனுல் நீத்தார் பெருமை உணர்த்தப்பட்டது. ''அந்தண ரென்போ ரறவோர் மற்றெவ் வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்'' (குறள். 30) என்ற திருக்குறட்பொருளையும் புலம் புரியந்தணர் (பரிபாடல். 6-45) என்ற பரிபாடற் பொருளையும் வேதாந்ததேசிகர் பாகதப்பாடல் இனிது விளங்கவைக்கும் நயம் காண்க. புலவர் புலமை என்னும் சொற்கள் பாகதம் என்று அறிக. ''சீலங் கவர்ந்திடும் தேசிகர் தேசின் பெருமையினுல்'' (தேசிகமாலை. அமிர்தரஞ்சநி.

15)என்ற தேசிகமாலைப்பாடலில் இப்பொருள் பின்னும் தேசுறுமாறு காண்க. இப்பாடலைப் பாடியருளிய செந் தண்மை பூண்டொழுகும் அந்தண அறவோராயும் வேதாந்ததேசிகர் என்னும் பெயர் இவரதேயாமெனத் திருவரங்கத் தரவணையிற் பள்ளிகொண்டருளும் பெரிய பெருமாளால் அநுசாஸநம் செய்தருளப்பெற்ற பேறுடை யோராயும் திகழும் இம்மாதேசிகரையும் இப்பாடல் உணர்த்தி நின்றதுமாம். ''ஸம்ஸார ஸாஅரா ஓஉக்கித் தம்திஅஸஞ்ஹபுரி ஆலோஅம் காஹே காஹிஸிஹிஅஏ கோத்துஹ மணிதப்பண வலச்சி புல இஅம்''(அச்சுத சதகம்.87).இப்பாடலும் அடியவர்க்கு மெய்யன் சீல குணத்தைப் பரவும் பாடல். இதன்பொருள்:— தேவ நாதனே! கடத்தற்கரிய பவக்கடலினின்றும் கரையேறும் கருத்தால் மெய்ஞ்ஞானஒளி கிளரத் திருமகள் அருள் கூர்ந்து நல்கிய உன் திருவடிப்பற்றில் அடியேனைத் திருமகளை ஒக்கவே நீ தோள்களாலாரத் தழுவி உன் திருமார்வில் திகழும் கௌத்துவமணிபோல் உன் அணி யாக என்று பூண்டு மகிழ்வாயோ? என்பது. இப்பாகதப் பாடல்களில் புல என்னும் சொல் பாகதம், மெய்ஞ் ஞானம் (வேதம்)என்பது அதன் பொருள் என்றது காட்டப்பட்டுள்ளது. ஆதலின் புலம் உணர்வு ஞானம் வேதநம் என்னும் சொற்கள் உபநிடதம் உணர்த்தும் இறைநிலையுணர்வைக் கூறும் இயல்புடையன என்று அறிக. ''ஒண்டாமரையாள் கேள்வ னொருவனையே நோக்கும்'உணர்வு'' (முதல்திருவந்.67) என்று உப நிடத வேதநமும் பிரமசூத்திர தரிசனமும் ஒன்றும் உணர்முழுநலத்தன்மையைப் பொய்கைப்புனிதர் காட்டி யருளினர். இதனல் புலவர் என்னும் சொல் உபநிடத உணர்வு உடையாரை உணர்த்தி நிற்கும் புலனாகும். அவ்வுணர்வில்லாரையும் புலவர் என்று கூறுதல் உபசார வழக்கு எனக் கொள்க. ஆதலின் செவிற்சுவை உணர்வு என்பது வேதவுணர்வு என்று தேறி நிற்கும்.

———

## பதினெட்டாமத்தியாயம்

செவியிற்சுவை என்பது வேதத்தையும் அதன் விளக்கங்களாம் ஆரிடப்பனுவல்களையும் உணர்த்தி நிற்றல் மேலே கூறப்பட்டது. அதனுள்ளும் இராமாயணத்தைச் சிறப்பாக உணர்த்தும் சக்தி உடைமையை இங்கண் விளக்கிக் கூறுவாம். இராமாயணம் என்னும் சொல் வான்மீகி முனிவர் தருமவீரியத்தால் கண்டு நல்கிய இருபத்து நாலாயிரம் சுலோகங்களாலாகிய அம்மையப்பராம் சீதாராமர்களுடைய தெய்வத்திருச்சரிதைக்கே உற்ற பெயர். அச்சொல் அந்நூல் ஒன்றையே தான் உணர்த்தும் சக்தி உடையது. சீதாராமர்கள் சரிதையேயாயினும் மாக்கவிஞர்கள் நூற்றதேயாயினும் பிறர் நூற்ற அச்சரிதைகளை இராமாயணம் என்னும் சொல் உணர்த்தும் சக்தி அற்றது. இது பாணிநிசூத்திரம் சிறப்புவிதியால் காட்டித்தரும் சொல்லுண்மை (8.4·3). இராமாயணம் என்னும் சொல்லில் உள்ள ணகரம் இவ்வுண்மையைக் காட்டி நின்றது. இதைப் பாணிநி முனிவர் ஸம்ஞையடியாக வந்த ணகரம் என்றார். அது நாராயண என்னும் சொல்லில் உள்ள ணகரம் போன்றது. நாராயண என்னும் சொல் திருமாலுக்கே உற்ற ஸம்ஞை. ஆதலின் திருமால் ஒருவனையே அச்சொல் உணர்த்தும். பிறரெவரையும் உணர்த்தாது. அஃதே ஸம்ஞை (உரிய பெயர்) என்றதன் சிறப்பு, ஸம்ஞை ஆகாக்கால் ணகரம் உறாது. நகரமே உறும். ணகரம் உற்றதால். ஸம்ஞை ஸம்ஞை ஆதலால் நகரம் விலக்கப்பட்டு ணகரம் விதிக்கப்பட்டது. அவ்வாறே இராமாயணம் என்னும் சொல்லும் அச்சொல்லில் உற்ற ணகரம் வான்மீகி நூற்ற சீதாராமருடைய திருச்சரிதை நூலையே ஸம்ஞை என்று உணர்த்தியும் பிறநூல்களை விலக்கியும் நிற்கும் வலிமை உடையது. இப்பாணிநி இலக்கணத்துக்கு இராமாயணம் தானே

இலக்கியமாய் நின்றது. (பால.2-42-43;3.7;9-37.4.7) ஆதலால் ஆரியமாக்கவிஞர்களாகிய காளிதாஸர் தமது காவியத்துக்கு ரகுவம்சம் என்றும் பவபூதி தமது காவியத்துக்கு உத்தராரமசரிதம் என்றும் முராரி தமது காவியத்துக்கு அநர்க்காரகவம் என்றும் பெயரிட்டார்கள். அவ்வாறே கவிச் சக்ரவர்த்தியாகிய கம்பரும் தமது காவியத்துக்கு இராமாவதாரம் என்று பெயரிட்டார். (பால. சிறப்பு.11) கம்பர் பாடிய இராமசரிதைக்கு இராமாவதாரம் என்பதே பெயர். அவ்வாறு கூறுதலே ஆன்ரூேர் வழக்கு. கம்பராமயணம் என்று சிலர் வழங்குகின்ருர்கள். அது கம்பர் பாடிய இராமசரிதை நூலுக்குப் பெயருமன்று ஆன்ரூேர் வழக்குமன்று. இராமாவதாரம் என்றே வழங்கல் வேண்டும். அஃதே உற்றதும் உரியதும் சிறந்ததுமாம். ஆதலின் இந்நூலுள் இராமவதாரம் என்றே கூறியும் மேற்கோள் குறித்தும் உள்ளோம்.

வான்மீகி செவித்தத்துவத்தின் தோற்றம் (சுருதி தத்துவத்தின் தோற்றம்) செவியிற் சுவைத் தத்துவத்தின் தோற்றம் என்ற உண்மையைத் திருக்குறள் குறித்து நிகழும் நயத்தை ஓர்வாம். வல்மீகத்தினின்றும் தோன்றியவர் ஆதலின் வால்மீகி என்பது அச்சொல் உணர்த்தும் பொருள். வல்மீகம் என்னும் சொல்லுக்குப் புற்று என்பது பொருள். பூமிதேவியின் செவி புற்று என்று வேதம் ஓதிற்று. ஆதலின் இங்குப் புற்று என்பது பொதுப்பொருளதோர் புற்று அன்று. பூமிப் பிராட்டியின் திருச்செவி என்னும் சிறப்புப்பொருளதோர் வைதிகச் சொல். ''பூமிப்பிராட்டியின் செவியாகிய வல்மீகத்தினின்று தோன்றியவர் கவிகளுக்கு இறைவரானுர்'' (கோதாஸ்துதி 7, தமிழ் செய்தது) என்று இந்த வைதிகச் சிறப்புப் பொருளை வேதாந்த தேசிகர் கூறினுர். வைதிகச் செவித் தத்துவம் வான்மீகி யாய்த தோன் றிற்று என்ற உண்மை இதனுல் விளக்கப்பட்டது. வேதம் (சுருதி, செவி) வான்மீகி இராமாயண வடிவம் கொண்டது என்றவாறு. ஆதலின் இராமாயணம் செவி

யிற்சுவை உணர்வு என்ற உண்மை புலனாகும். அவ் வாறே மூன்று பாதங்கள் கொண்ட காயத்திரியை அநுட்டுப் சந்தத்தில் நான்கு பாதங்களுடையதாய் விரித்து நன்கு நடைகொள்ளச் செய்ததால் வால்மீகி என்பது இராமாயணம் கண்டு நல்கிய ஆதிகவியாகிய வான்மீகுமுனிவர்க்குப் பெயராயிற்று. சஞ்சரித்தல் (நன்கு நடை கொள்ளல்) என்னும் பொருளுடைய வல என்னும் ப்வாதி வினைப்பகுதி வலே: ஈட் முக்ச என்னும் வியுற்பத்தியால் வால்மீகி என்னும் வடிவம் பெற்று வேதத்தை நன்கு நடை கொள்ளச் செய்தவர் என்னும் பொருளை உணர்த்தி நின்றது. ஆதலின் வான்மீகியை இராமாயணகவி என்றும் திவ்வியவாக்கை (வேதத்தை) வான்மீகி விரிவுறச் செய்தார் (நான்கு பாதங்களால் நன்கு நடைகொள்ளச் செய்தார்) என்றும் பவபூதி போற் றினர் (உத்தரராமசரிதம்). இதனால் இராமாயணகவி என்பது வால்மீகியின் பெயர் என்பதும் இராமாயணம் என்பது வால்மீகி பாடியருளிய திவ்வியகாவியத்தின் பெயர் என்பதும் காட்டப்பட்டது. வால்மீகி என்னும் சொல் உணர்த்தும் இவ்விரண்டு பொருளையும் ''பொய் யில் கேள்விப் புலமையி னோர்புகல், தெய்வ மாக்கவி மாட்சிதெரிக்கவே'' (பால சிறப்பு.6) என்றும்'' வாங்கரும் பாதம் நான்கும் வகுத்த வான்மீகியென்பான் தீங்கவி செவிக ளாரத் தேவரும் பருகச்செய்தான்'' (ஷி.நாட்டுப் 1) என்றும் கல்வியிற் பெரிய கவிச்சக்ரவர்த்தி கம்பநா டுடைய வள்ளல் கண்களில் தெரியக் காட்டித் தந்தார். முற்கூறிய பாட்டால் வான்மீகி வைதிகச் செவித் தத்து வத்தின் தோற்றம் என்பதும் பிற்கூறிய பாட்டால் நான்கு பாதங்கள் வகுத்து வேதத்தை நன்கு நடைகொள்ளச் செய்து செவியின் சுவையை வாரிவழங்கிய வள்ளல் என் பதும் காட்டப்பட்டது. ''பாவருங் கிழமைத் தொன்மைப் பருணிதர் தொடுத்த பத்தி, நாவருங் கிளவிச் செவ்வி நடை வரும் நடையள்'' கிட்கிந்தா நாடவிட்ட 64) என்று சீதைப் பிராட்டியின் நடை நலம் கூறிய பாடலில் இப் பொருள் பின்னும் விளங்க வைக்கப்பட்டுள்ள நலம்

காண்க. இப்பாடல் சடகோபர் திருவாய்மொழி நடை நலத்தை உணர்த்தும் நயம் பின்னும் சிறக்கும். இந்நயப் பொருளை வேறிடத்து விரித்து உரைப்பாம். இங்கு வான் மீகியைப் பாதம் நான்கும் வகுத்தான் என்று கூறியதால் வேதம் நான்கும் வகுத்தவர் வேதவியாசமுனிவர் என்னும் பொருள் குறிப்பால் பெறப்படும் நயம் காண்க. இதனுல் இலங்கு நூலும் நிரம்பிய நூலும் கூறப்பட்டும் குறிக்கப்பட்டும் நிகழும் ஓவியத் தெழுத வொண்ணுக் காவிய எழிலைக் கண்டு இன்புறுக. நிரம்பிய நூல் என்று இராமாயணத்தைக் குறித்தல் சாலவும் சிறக்கும். நான்கு பாதங்களால் நிரம்பிய நூல் என்றது குறிப்பு. இது பர்தம் நான்கும் என்ற உம்மை காட்டும் எழில். காவிய விசுவரூபம் காட்டினுன் கம்பநாடன் என்ற உண்மையை இங்கும் காண்க.

இதனுல் இராமாயணத்தின் தூய்மையும் வாய்மையும் பெருமையும் அதன்பால் திருவள்ளுவருக்கு உற்றுள்ள பற்றும் ஆர்வமும் நன்கு புலனுகும். இது பின்னும் கீழே விளக்கப்பெறும்.

---

## பத்தொன்பதாமத்தியாயம்

செவியிற்சுவையுணர்வு வாயுணர்வின் மாக்கள் என்றது இராமாயணத்தின் வழிமொழி என்றது மேலே கூறப்பட்டது. (இராமா. யுத்த. 63.14-15). இராவணன் என்பவன் கொடுவல்லரக்கன். மனிதனல்லன். அந்தணச் சாதியன். ஆரியப்பெயரோன், வே த ம் ஓதியவன். வைதிகவேள்விதவங்கள் செய்தவன். அவன் செய்த வேள்விதவங்களெல்லாம் புலானுகர்ச்சியைப் பெறு தற்கும் பெருக்குதற்குமே. அதனுல் தான் கெட்டது மல்லாமல் வேதத்தையும் வேதவேள்விகளேயும் கெடுத்த இழிதொழிலன். உலகத்தைக் கதறச்செய்து இராவணன் என்னும் தன்பெயரை மெய்ப்பித்துக்கொண்டவன். இருடிகளுக்கும் தவசிகளுக்கும் இவன் செய்த கொடுமை களுக்கு அளவில்லே. பிறர் பெண்டிரைக் கவர்தலே தன்னினத்தார்க்கு வகுத்த செய்தொழில் (தருமம்) என்று புகழ்ந்து அத்தொழிலேயே செய்துவந்தவன். இவன் செய்து வந்த கொடுமைகளே நோக்கி இவன் தந்தையே இவனுக்குச் சாபமிட்டான். நந்திகேசுவரர் சாபத்துக்கும் ஆ ள ா ன வ ன். இவன் பண்பு எத் தன்மைத்து என்பது இதனுல் தெளியக்காணலாம். இவனினத்தார் தமிழர் இவன் பண்பு தமிழர் பண்பு என்பாரினும் தமிழரை இழிமக்களாக்குபவர் பிறர் எவரா வார் ? இவன் ஆண்ட இலங்கை சிங்களத்துக்குத் தெற்கே ஆயிரம் மைலுக்கு அப்பால் இருந்தது ஆயிரம் மைல் அணேகட்டிக் கடலேக் கடந்து இராமபிரான் வானரர்களுடன் இலங்கை சென்று இராவணவதம் செய் தான். தந்தை சொல் காத்தற்கு இராமபிரான் நாடு துறந்து தவக்கோலம் கொண்டு சீதைப் பிராட்டியோடும் இலக்குமணனேடும் காடு போந்து அங்கு இருடிகளுக் கும் தவசிகளுக்கும் அபயம் தந்து இலங்கை சென்று இராவண சங்காரம் செய்து நல்லாரைக் காத்தருளி னன். இவ்வரலாறுகளெல்லாம் இராமாயணத்துள் கண்டவை.

உண்மை இவ்வாறு இருக்க இன்ஞெரு சிலர் தாங்களே தமிழர் என்றும் இராவணன் தமிழன் என்றும் இராமன் ஆரியன் என்றும் தென்னுட்டை ஆரியர் படையெடுத்து வென்ற வரலாற்றைக் கூறும் நூல் இராமாயணம் என்றும் பறைந்து கொண்டும் இராமாயணத்தை வெறுத்தும் இராமபிரானை இகழ்ந்தும் இராவணனைப் புகழ்ந்தும் போற்றியும் வருகின்ருர்கள். இவர்கள் பகைப்பதே தொழிலாகத் தோன்றியவர்கள். திருமாற் பகை வேதப்பகை ஆரியப்பகை பார்ப்பார்ப்பகை என்பன அப்பகை. அவற்றுள் ஒன்றே ஒருவனைக் கெடுக்கப் போதியதாகும். நான்கும் சேர்ந்தால் கேட்கவும் வேண்டுமோ. இதற்குச் சமயப்பற்றே அடி. ஓரளவுக்குச் சமயப்பற்று இருத்தல் இயல்பே. அது அவ்வளவுக்கு வேண்டியதுமாம். இவர்களுடைய பற்ருே எனில் பகைப் பதையே விடாக்கோட்பாடாகவும் பயனுகவும் கொண்டுள்ளதாதலால் அது அடாப் பற்ருயிற்று. இராவணன் சிவபக்தன். இராமன் சிவபக்தனைக் கொன்றுவிட்டான் ஆதலால் சிவபக்தனைக் கொன்ற இராமனைப் பகைத்தலும் பழித்தலுமே சிவதருமம் என்னும் கோட்பாட்டைக் கடைப்பிடித்துப் பகைத்து வருவாராயினர். இவர்கள் உள் மதப் பகையை வெளியினப் பகையாகக் காட்டிக் கொண்டு இராவணனைத் தம்மினத்தன் என்று கூறுவாராயினர். இராமன் வடநாட்டான். ஆதலின் அவன் ஆரியன். அந்த ஆரியன் தென்னுட்டின் மேற் படையெடுத்துத் தென்னுட்டுத் தமிழனுகிய இராவணனைக் கொன்று அவன் நாட்டைக் கைப்பற்றிக் கொண்டான். அந்த ஆரியர் படையெடுப்பாற் பெற்ற வெற்றியடியாக ஆரியப் பண்பாட்டையும் ஆரியமொழியையும் ஆரியர்கள் தென்னுட்டில் திணித்துவிட்டார்கள். ஆதலின் இராமன் (ஆரியர்) பண்பாட்டையும் மொழியையும் ஒழித்துக்கட்டியும் இராவணன் (தமிழர்) பண்பாட்டையும் மொழியையும் நிலைநிறுத்தவும் இவர்கள் பெருமுயற்சி செய்து வருகின்ருர்கள். பற்றிய தீயோடு காற்றும் சேர்ந்தாற்போல் மேனுட்டாருள் ஒரு சிலர்

கூற்று இவர்களுக்குப் பெரிதும் உதவியாயிற்று. அச் சில மேனாட்டார் நமது நாட்டில் தமது ஆட்சியை நிலை நாட்டற்கும் சமயத்தைப் பரவச் செய்தற்கும் வாணி பத்தை வளர்த்தற்கும் தமக்கு வேண்டியவைகளைப் பல முறைகளில் மொழிந்தும் வரைந்தும் வரலாயினர். சொல்பவன் சொன்னால் கேட்பவனுக்குப் புத்தி எங்கே போயிற்று என்று நம் மூதுவர் கூறுவர். நம்மவர் தமது புத்தியை ஒற்றிவைத்து விட்டு மேனாட்டார் முற்கூறிய தையே பிற்கூறுவாராயினர். அதனால் பகைப்பதே தொழிலாகத் தோன்றத் தலைப்பட்ட நம் நாட்டுச் சமயத் தாருள் ஒருசிலர் அம்மேனாட்டார்க்கு ஆட்பட்டாராய் அவர்களைப் போற்றிப் புகழ்ந்து வருவாராயினர். அவர் களைக் கோயிலில் வைத்துக் கும்பிடாதது ஒன்று தான் குறைவு. மற்றெல்லாம் செய்துவிட்டார்கள். மேலே கூறியபடி இவர்கள் சமயம் என்பதை மேற்காட்டிக் கொள்ளாமல் இனம் என்னும் பெயரை இட்டு அவ்வாயி லாய்த் தங்கள் சமயப்பகையைப் பரப்புவாராயினர். திராவிடம் என்பது அப்பெயர். தாங்கள் திராவிடர் (தமிழர்). இராமன் ஆரியன். அவன் தமிழரை இழி மக்களாக்கினான். ஆதலின் இராமனை இகழ்வதும் இரா மனுக்கு இழிவு செய்வதும் தங்களுக்கு வகுத்த தருமம் என்பது இவர்கள் கோட்பாடாயிற்று. இராவணன் சிவ பக்தன். சிவபக்தனைக் கொன்ற இராமனை இகழ்தலே இவர்களுக்கு வகுத்த தருமம் என்ற இவர்கள் கோட் பாட்டைச் சொல்லவும் மாட்டாமல் மெல்லவும் மாட்டா மல் மனத்துள்ளே கனன்று கொண்டிருக்கும் சமயப் பகை யைத் திராவிடம் ஆரியம் என்பதோரினவாயிலாக வெளி யிடுவாராயினர். நாட்டாட்சியைக் கைப்பற்றிக் கொள் ளும் கருத்துடைய நாத்திகர் சிலர் இவர்களோடு சேர்ந்து கொண்டு இவர்களுக்கு வெளிப்படைப் படையாளராயி னர். இவர்கள் உட்கருத்தும் வெளிப்பகட்டும் போலி என்பதை விளக்குவாம்.

---

## இருபதாமத்தியாயம்

இராவணன் சிவபக்தன் என்பது முதற்போலி. இது போலி. என்பதற்குச் சிவதத்துவசித்தர்களாய்ச் சிவ தரும நிட்டர்களாய்ச் சித்தமலமறுத்துச்சிவமாக்கி ஆட் கொள்ளப்பட்ட சிவபக்தர்கள் (சிவனடியார்கள்) எங்கே சித்தமலப்பருப் பதமாகிய இராவணன் எங்கே என்பதே போதியதாம். ஆயினும் பின்னும் கூறுவாம். இராவ ணன் சிவபக்தன் அல்லன். இதற்கு இராவணன் கூற்றே சான்ருகும். ''இரண்டாகப் பிளந்தேனும் போவேன் நான் எவரையும் வணங்கேன் (இராமாய. யுத்த. 36.11. தமிழ்செய்தது) என்றது இராவணன் கூற்று. ''கேளிது நீயுங்காணக் கிளர்ந்த கோளரியின் கேழில், தோளொடு தாளு நீக்கி நின்னையுந் துணித்துப் பின்னென் வாளினைத் தொழுவதல்லால் வணங்குதல் மகளி ரூடல், நாளினு முளதோ வென்ன வண்டங்கணடுங்க நக்கான்'' (இராமவ. உயுத்த. இரணிய. 146) என்றது இவனுக்கு வழிக்காட்டியாகிய இருட்பருப்பத இரணியன் கோட் பாடு இங்கு நோக்கத்தக்கது. அத்திறத் தன்னகம் தடித்த கொடிய அரக்கன் இராவணன். அவன் தானே கூறியதற்கு முரணுக அவன்மேல் சிவபக்தியை ஏற்றி அவனைச் சிவபக்தன் ஆக்கிக்கொள்ளற் கொண்ணுது. நந்தி சாபத்துக்கு ஆளானவன் சிவபக்தன் ஆகான். இவன் கைலாயத்தை எடுத்து ஆட்டியபோது உமாதேவி அஞ்சிச் சிவபிரானைத் தழுவிக் கொண்டாள். அப்பொழுது சிவபிரான் தனது காற்கட்டைவிரலால் கைலாயத்தை அழுத்த அது தரைப்பட்டு அழுந்தியவளவில் இராவணன் கைகள் அகப்பட்டுக் கொண்டு நசுக்குண்டன. கைகளை விடுவித்துக் கொள்ளச் சிவபிரானைப் போற்றினுன். அப் போது சைவக்கோலம் பூண்டான். நீறு பூசிக்கொண் டான். சிவபூசை செய்தான். அதனுல் பிரசன்னராகிய சிவன் அவன் கைகளை விடுவித்தார். இது கொண்டு இராவணனைச் சிவபக்தன் என்னற்கொண்ணுது. அது கைகளை விடுவித்துக் கொள்வதற்கு மேற்கொண்ட

தோர் உபாயமே யன்றிச் சிவபக்தி ஆகாது. அது பக்தி ஆகும் என்ருல் கார்த்தவீரிய அருச்சுனனுல் கட்டுண்ட இராவணன் அக்கட்டிலிருந்து தன்னே விடுவித்துக் கொள்ளக் கார்த்தவீரிய அருச்சுனனேக் கெஞ்சி இறைஞ்சி அவன் பிரசாதத்தால் விடுதலே பெற்றது காரணமாக (இராமாய. உத்தர.77—78) இராவணனேக் கார்த்தவீரிய பக்தன் என்றும் கூறவேண்டும். மாலியவானேப் புருடகாரமாக முன்னிட்டு அவன் வாயிலாகக் கார்த்தவீரியனேத் தஞ்சமாகப் பற்றினுன். கைலாயத்திலோ எனில் தன்கைகளுக்கு மட்டுமே விடுதலே. முன்னேர் புருடகாரமின்றி விடுதலே. கார்த்தவீரியனிடத்தில் தனக்கே புருடகாரபூருவகமாக விடுதலே. ஆதலின் இராவணன் கார்த்தவீரியபக்தன் என்பது சாலவும் சிறக்கும். அவ்வாறு கூறுவார் எவருமிலர். சிவபக்தன் என்பதும் அவ்வாறேதான். கைலாயத்தில் மேற்கொண்டது சைவவேடம். அது விடுதலேக்கே. அவ்விடுதலேதானும் பின்னும் புலானுகர்ச்சிக்கும் உலகத்தை வாட்டுதற்குமே உதவியது. இங்குப் பூண்ட சைவவேடம் பிராட்டியைத் தூக்கிப்போகப் பூண்ட சன்னியாசி வேடம் போன்றதே. இருவேடத்துக்கும் வாசிஇல்லே இராவணன் நீறுபூசிக்கொண்டவன் சிவபூசை செய்தவன் என்றவரலாறு கூறியிருத்தல் நீற்றின் பெருமையையும் சிவபூசையின் மகிமையையும் உணர்த்தற்கென்று அறிக. இராவணனே சிவபக்தன் என்று போற்றற்கன்று. இராவணன் போன்ற மாபாவியரும் அப்பூச்சாலும் பூசையாலும் நலம் பெற்ருர் எனில் நல்லார் நலம் பெறுவார் என்பது கூறவேண்டுவதில்லே என்று அவற்றின் பெருமை கைமுதிய நியாயத்தால் வலியுறுத்தப்பட்டவாறு என்க. திருமாலின் திருநாமப் பெருமையைக் கூறுமிடத்துக் ''கத்திர பந்து மன்றே பராங்கதி கண்டு கொண்டான்'' (திருமாலே.4.) என்று கத்திரபந்துவின் வரலாற்றைக் கூறியது போல் திருநீற்றுப் பெருமை கூறுமிடத்து இராவணன் வரலாற்றைக் கூறியபடி. இத்திருமாலேப்பாடலில்

திருமாலின் நாமமகிமையைக் கூறுவதில் தாற்பரியமே யன்றிக் கத்திரபந்துவைத் திருமால் பக்தன் என்பதில் அன்று. ''எம்மா பாவியர்க்கும் விதி வாய்க்கின்று'' (திருவாய் 5-1-7) என்ற உண்மை கத்திரபந்து வரலாற்ருல் விளக்கப்பட்டது. ''திருமால் தன்னைச் சரணம் அடைந்த எம்மாபாவியரையும் காத்தருளவான் என்றதே தாற்பரியம். கத்திரபந்து திருமால் பக்தன் என்று கூறுவதில் தாற்பரியமில்லை என்பதை இதனுல் நன்கு காணலாம். காகாசுரனும் அவ்வாறே. இராம பிரான் தன்னைச்சரணம் அடைந்த எவரையும் காத்தருள் வான் என்னுமிடத்துக் காகாசுரன் இராமபிரானைச் சரணம் அடைந்து உயிர் பெற்றுச் சென்ருன் என்று காகாசுரன் வரலாறு கூறப்பட்டுள்ளது. இதில் இராமபிரானுடைய சரணிய வண்மையையும் சரணுகதி யின் உபாய வொண்மையையும் விளக்குவதில் தாற் பரியமே யன்றிக் காகாசுரன் இராமபக்தன் என்பதில் அன்று காகாசுரன் இராமபிரானைச் சரணம் அடைந்து. உயிர் பெற்றுச் சென்றது பற்றிக் காகாசுரனுக்குக் கோயிலெழுப்பி அவனை இராமபக்தன் (திருமாலடியான்) என்று கும்பிடுவாரில்லை. இராவணன் ஒரு பூச்சாண்டி. நீறுபூசிக் கொண்டு உலகத்தாரை அஞ்சச் செய்வார்க்குப் பூச்சாண்டி என்று பெயர். அது இராவணனுக்குப் பொருந்திய உரிய பெயர். இராவணனை நோக்கப் பிறர் பால் அப்பெயர் உபசாரவழக்கு என்னலாம்படி ஆயிற்று. உலகவழக்கில் பூச்சாண்டி என்பதும் நாமம் சாத்திஞன் என்பதும் வேடம் பூண்டு பிறரை அஞ்சச் செய்வார்க்கும் வஞ்சிப்பார்க்கும் முறையே பெயராயின. ஏதோ ஒரு காலத்தில் நீறு பூசிய சிலரும் நாமம் சாத்திய சிலரும் மிகுதிகள் செய்தார்கள் என்னும் கருத்தை இச்சொற்கள் உட்கொண்டுள்ளன. இது சைவர்க்கும் வைணவர்க்கும் இழிவு என்று அவர்கள் வெதும்புவதற்காகாது. ஒரு காலத்தில் நிகழ்ந்த வரலாற்றை இச்சொற்கள் உணர்த்துகின்றன. அதையே ஊரார் கூறுகின்ருர்கள். இராவணன் பூச்சாண்டியே யன்றிச் சிவபக்தன் அல்லன் என்பது தெளியப் புலனுகும்.

மேலும் இராவணன் சிவபக்தனுனல் அதனிலும் பன்மடங்கு மிக்க நான்முகபக்தன் ஆதல் வேண்டும். இராவணன் நான்முகக்கடவுளைக் குறித்துப் புரிந்த நெடுங்கடுந்தவம் ஒப்பற்றது. கைலாயத்தில் சிவனைப் போற்றியது சிறிது காலமே தான். நான்முகனையோ எனில் பதினுயிரவருடம் கடுந்தவம் புரிந்து பிரசன்னனுக்கினுன். ஒன்பது தலைகளை ஒவ்வோராயிர வருடமுடிவில் அறுத்துத் தீயில் ஆவுதி செய்து பத்தாமாயிரவருடமுடிவில் பத்தாம் தலையையும் அறுத்திடவிருக்கும் போது நான்முகன் தோன்றி இராவணன் தீக்குஇட்ட ஒன்பது தலைகளையும் பின்னும் முளைக்கச்செய்து அவன் கோரிய வரங்களையும் கொடுத்துச் சென்ருன். அவ்வாறிருப்பினும் இராவணனை நான்முகன் பக்தன் என்னற்குமில்லை என்பாருமில்லை. ஆதலால் அவன் சிவபக்தன் என்பது போலி என்க.

சிவன் வாக்காலும் செய்கையாலும் இராவணன் சிவபக்தன் அல்லன் என்பது தெளியக் காணலாம். இராவணன் பிறப்பதற்கு முன்னமே அரக்கர்கள் செய்து வந்த கொடுமைகளைப் பொறுக்கமுடியாமல் தேவர்கள் சிவனை அடைந்து அரக்கரை அழிக்க வேண்டிக் கொண்ட போது அரக்கரைக் கொல்லத் தனக்கு இயலாது என்று சொல்லி அரக்கரை அழித்தற்காகும் மந்திரத்தைத் தேவர்களுக்கு உபதேசம் செய்து திருமாலைச் சரணம் அடையுங்கோள் பிரபுவாகிய திருமால் அரக்கரை அழித்திடுவார். (இராமாயண. உத்தர. 6-10-11) என்று சிவன் சொல்லியபடி தேவர்கள் திருமாலைச் சரணம் அடைந்து, திருமாலால் மாட்டப்பட்ட அரக்கர்கள் இலங்கையை விட்டு ஓடிப் போய் ரஸாதலத்தில் புகுந்து கொண்டார்கள். ஆதலின் அரக்கரை அழிக்க மந்திரத்தையும் திருமாலைச் சரணம் அடையும் உபாயத்தையும் உபதேசம் செய்த சிவவாக்கியத்தோடு முரணுதலான் இராவணன் சிவபக்தன் என்பது தகாது.

இராவண சங்காரம் நிகழ்ந்தவுடன் சிவனுள்ளிட்ட தேவர்குழாம் திரண்டுவந்து நான்முகனை முன்னிட்டுக் கொண்டு இராமனைத் தொழுதேத்தித் தேவகாரிய மாகிய இராவணவதம் நிறைவேறியது இனித் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளவேண்டும் என்று வேண்டிக்கொண்டார்கள். (இராமாய. யுத்தம். 120). பின்னர் உடனடியாகச் சிவபிரான் தனித்து நின்று ''அரிய போர் செய்து உலகனைத்தையும் மூடி வளர்ந்து போந்த கொடிய இராவண இருளை நீக்கி உலகத்துக்கு நேர்ந்த இராவணபயத்தைப் போக்கினீர்'' (ஷை. 122.2-3. தமிழ் செய்தது) என்று இராமபிரானை வாயாரப் போற்றினர். அவ்வாறு ஆர்வத்தால் போற்றிய சிவ பிரான் வாக்குக்கு முரணாக இராவணன் சிவபக்தன் என்று கூறுவார் வாய்மை இழந்தாரே ஆவார். சிவபிரானை இகழ்ந்தாரும் ஆவார். பொய்ம் மொழி யொன் றில்லாத சிவபிரானைப் பொய்யனுக்குவ தோடு தன்பக்தனைக் காக்கமாட்டாமல் பகைவன் கையில் காட்டிக்கொடுத்த ஆற்றலும் அருளும் அற்ற புல்லியன் என்பதையே நிலைநாட்டுவாராவார். முக்கண்ணப்ப னுக்கு இதனிலும் மிக்கதோர் இழிவு இல்லை என்பதை இவர்கள் அறியாராயினர்.

---

## இருபத்தொன்றுமத்தியாயம்

இனி ஆரியர் படையெடுப்பு என்பதைப்பற்றி ஆராய்வாம். தந்தை சொல் காத்தற்கு இராமன் நாடு துறந்து காடு அடைந்தான். தவக்கோலம் கொண்டான். இருவருடன் காடு சென்றுன். ஒருத்தி பெண். அவள் மனைவி. ஒருவன் ஆண். அவன் தம்பி. மூவரும் கால் நடையை மேற்கொண்டார்கள். கோதாவரிக் கரையை அடைந்தார்கள். பின்னர் அங்கு அவ்வொருத்தியை இராவணன் வஞ்சனையால் தூக்கிப் போய்விட்டான். மிகுந்தது இருவர். அவ்விருவரும் அப்பெண்ணைத் தேடிப் பெறுவதற்குத் தெற்கே சென்று கிட்கிந்தையை அடைந் தார்கள். அங்கு வானரர்களின் உதவியைப் பெற்றுர்கள். அங்கிருந்து வானரருடன் அப்பெண்ணை மீட்டுக்கொண்டு வரும் பொருட்டு அரக்கர் தலைநகராகிய இலங்கையை நோக்கிச் சென்றுர்கள். அது ஆயிரம் மைலுக்கு அப்பால் கடலில் உள்ளது. இது இராமாயணம் கூறியது. இந்த வரலாற்றைத் தென்னாட்டின்மேற் படையெடுத்த வரலாறு என்று கூறுதல் இராமாயணத்துக்கு முற்றுமே முரண். இரண்டு ஆண்களும் ஒரு பெண்ணும் தென் ஞட்டின் மேல் படையெடுத்தார்கள் தென்ஞட்டை வென்றுர்கள் அவ்வெற்றியடியாகத் தென்ஞட்டில் தங்கள் (ஆரிய) மொழியையும் பண்பாட்டையும் திணித்துவிட்டார்கள் என்று கூறுதல் உண்மையற்றது என்பது தானே தோன்றும். அக்கூற்றே யதன் மறுப் பாகும். இரண்டு வடநாட்டு ஆண்கள் தென்ஞட்டுக் குரங்குகளுடன் தென்ஞட்டுக்கு அப்பால் ஆயிரம் மைல் தூரத்தில் கடலிலிருந்த இலங்கைத் தீவை நோக்கிச் சென்றுர்கள் என்று தான் இராமாயணம் கூறுகிறது. இலங்கை தென்ஞடு அன்று. குரங்குகள் தென் ஞட்டவரே. இன்று ஆந்திரநாடு என்று கூறப்படும் வடுகநாட்டின் ஓர்பகுதி கிட்கிந்தை என்னும் குரங்கு

களின் நாடு. அது தமிழ்நாடுமன்று. இராமன் கிட்கிந்தை யிலிருந்து தெற்கே கடல்வரை சென்று அங்கிருத்து அணைகட்டித் தெற்கு நோக்கி இலங்கைக்குக் குரங்கு களுடன் சென்ருன். தமிழ் நாட்டுக்கு இராமன் வரவில்லை. வராத நாட்டின்மேல் படையெடுத்து அதை வென்று தன் (ஆரியப்)பண்பாட்டைப் பரவச்செய்துவிட்டான் என்பது காலில்லாக் கதையேயாம்.

தென்னுட்டினரைக் குரங்குகள் என்று இராமாயணம் இகழ்ந்தது என்பர் சிலர். இது மேற்கூறியதினும் மிக்க தோர் கற்பனையாம். தென்னுட்டாரைக் குரங்குகள் என்று இராமாயணம் கூறவில்லை. தயரதன் செய்த வேள்விக்கு எல்லாநாட்டு மன்னரையும் அழைத்த முறையில் தென்னுட்டு மன்னர்களும் அழைக்கப்பட்டார் கள் என்று இராமாயணம் கூறியுள்ளது. நரேந்திரர்கள் என்று இராமாயணம் தென்னுட்டுமன்னரைக் கூறியது. தென்னுட்டு நரேந்திரர்கள் என்றுதான் இராமாயணத் துள் உள்ளது (இராமாய.பால.13.25.)வாநரேந்திரர்கள் என்று கூறப்படவில்லை. நரேந்திரர் என்ற சொல்லுக்கு மக்கள் வேந்தர் என்பது பொருள். கிட்கிந்தையில் தேவர்கள் வானரர்களாய்ப் பிறந்தார்கள் என்றுதான் இராமாயணத்தில் உள்ளது. அக்குரங்குகளின் பிறப்புச் சிறப்பும் பெருமையுமே கூறப்பட்டது. குரங்குகள் என்று இகழப்படவில்லை. திருமால் பன்றிவடிவத்தில் தோன்றினன் என்பதால் எவ்வாறு திருமாலுக்கு எவ்வித இழிவும் இல்லையோ அவ்வாறே தேவர்கள் குரங்கு களாய்ப் பிறந்தார்கள் என்பதால் தேவர்களுக்கு எவ்வித இழிவுமில்லை. வராகமூர்த்தியாகிய திருமால் ஞானப் பிரான் என்று போற்றப்பட்டுள்ளதுபோல் வானரர் களாய்ப் பிறந்த தேவர்கள் ஞானம் சக்தி முதலிய மிகுந்தவர்கள் என்று போற்றப்பட்டுள்ளார்கள். (இராமாயண. பால. 7.3). இது உலகநலத்துக்குக் கொண்ட வடிவம் ஆதலால் தேவவடிவத்திலும் மிக்க பெருமை பெறும். வேதவாணன் வியாகரணப்பரவை

என்று அநுமன் போற்றப்பட்டுள்ளான். (இராமா. கிட்கிந்தா. 3-28-29) ஆதலால் படையெடுத்தார்கள் என்ற கதையும் தென்னாட்டு மக்கள் குரங்குகள் என்று இழிமக்கள் ஆக்கப்பட்டார்கள் என்ற கதையும் துஞ்சுமர் கண்ட கனுக்கதையாம்.



## இருபத்திரண்டாமத்தியாயம்

இனி ஆரியர் என்றதன் தன்மையை ஆய்வாம். ஆரிய என்னும் சொல் ஆரியம். அடையத்தக்கவர் பூசிக்கத்தக்கவர் அருள்உடையவர் என்பது ஆரியர் என்னும் சொல்லின் பொருள். ஆரிய என்பது குணத்தை உணர்த்தும் சொல். இனத்தை உணர்த்தும் சொல்லும் அன்று. இடத்தை உணர்த்தும் சொல்லும் அன்று. ஆரியத்தில் ரு என்னும் வினைப்பகுதி ண்யத் என்னும் விகுதி பெற்று ஆர்ய என்னும் நெடில் வடிவம் பெறுகிறது. ரு என்னும் பகுதிக்கு நடை என்பது பொருள். நடைப்பொருள் வினைகள் ஞானப்பொருளை உணர்த்தி நிற்கும் சக்தி உடையன என்னும் இலக்கண முறையால் ஆரிய என்னும் சொல் மெய்யுணர்வும் அருளொழுக்கமும் உடையாரை உணர்த்தி நின்றது. இச் சொல்லுக்கு ண்யத் விகுதியை விதித்த இலக்கணவிதியத் விகுதி விதிக்குப் புறனடை. யத் விகுதியை ஏற்குங்கால் அர்ய என்னும் குறில் வடிவம் பெற்று உடையவன் வணிகன் என்னும் பொருளை உணர்த்தும்என்று பாணிநி இலக்கணம் வகுத்தார். (3.1.103) ஆர்ய என்னும் நெடில் வடிவச் சொல்லுக்குத் தக்கார் அருளுடையார் என்பது பொருள். ஆராத் யாதா ''நெடுந்தூரம் சென்றவர்கள்) என்னும் நிருக்த முறையால் ''தத்துவமல்லாதவைகளினின்று எவர்களுடைய அறிவு வெகுதூரம், சென்றுள்ளதோ அவர்கள் ஆர்யர்கள் அறிஞர்கள்,'' என்று கீதையில் உள்ள .ஆர்ய என்னும் சொல்லின் பொருளைக் கீதா பாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையில் வேதாந்த தேசிகர் விளக்கினர்.(கீதை2.2. தமிழ்செய்தது) இச்சொல் தஸ்யு என்னும் சொல்லுக்கு எதிரிடை. தஸ்யு. என்னும் சொல்லுக்கு இரக்கம் இல்லாதவர் கள்வம் செய்பவர் என்பது பொருள். தஸி என்னும் வினைப்பகுதி யுச் என்னும் விகுதி ஏற்று தஸ்யு என்னும் வடிவம் கொள்கிறது. தஸி என்னும் வினைக்குக் கடித்தல் என்பது பொருள். இன்னுசெய்பவர்களும் கள்வம் செய்பவர்

களும் தஸ்யுக்கள் என்னப்படுவார்கள். அறிவற்ற இரக்கமற்ற தீயர்கள் தஸ்யுக்கள். அறிவுற்ற அருளுடைய நல்லார்கள் ஆரியர்கள். ஆர்ய என்னும் சொல் மெய்யுணர்வு உடையாரை உணர்த்தி நிற்றலை மேற்கூறிய கீதை காட்டித் தந்தது. இரக்கம் உடையார் தக்கார் என்பார் ஆர்யர் என்னும் பொருளை இராமாயணம் பன்னி உரைத்தது. "ஆரியன் கருணை செய்தல் வேண்டும்" (இராமாய யுத்த 116. 45. தமிழ் செய்தது) என்று பிராட்டி அனுமனுக்குக் கூறினள். அநுமன் ஆரியனுதலால் அவன் கருணை செய்யும் இயல்பும் கடமைப்பாடும் உடையனுதலின் தன்னை நலிந்த அரக்கியர்க்கு எவ்விதத் தீங்கும் செய்யக் கூடாது. கருணையே செய்தல் வேண்டும் என்று அநுமனுக்கு அறிவுறுத்தினள். இரக்கம் உடையவர் ஆரியர் என்பது இதனுல் தெளிய விளக்கப்பட்டது. "ஆரிய நெறியில் நின்ருன் ஆர்க்குமே போற்றற்காவான்" (இராமாய. அயோத்தி. 115. 6. தமிழ் செய்தது) என்று பரத்துவாச முனிவர் பாதுகம் புனைந்து வந்த பரதனை உகந்து போற்றினுர். பரதன் பாதுகம் புனைந்தபுனிதன். பாதுகம் புனைதல் சிறந்த சீரிய நெறி. ஆதலின் அது ஆரிய நெறி. அந்நெறி நின்ற பரதன் அனைவர்க்கும் பூசித்தற் கொத்தவன் என்பது இப்பாடற் பொருள். "ஆரியன் அனைவர்க்கும் சமன்" (இராமாய. பால 1.16 தமிழ் செய்தது) என்று இராமாயணம் இராமனைப் புகழ்ந்து இப்பொருளை மேலும் தெளிய விளக்கிற்று. இது அனைவர்க்கும் சமனுய் நிகழ்ந்து பரிமாறும் இராமனுடைய பெருமனமாட்சியைப் பாடியது. "ஆரிய சுபாவப் பெண்டிர்க்குப் பதியே பரதெய்வம்" (இராமாய. அயோத்தி 117.24 தமிழ் செய்தது) என்று அநசூயை சீதைக்குக் கூறினள். கற்புடைய உத்தம மங்கையர் ஆரியத்தன்மையர் என்று அவர்கள் மாமங்கலத் தூய்மைக் குணம் இதனுல் கூறப்பட்டது. ஆரிய என்னும் சொல்லின் உரியதுய்ய மெய்ப் பொருளை இச்சுலோகம் ஐயந்திரிபறக் காட்டித் திகழ்தல் காண்க. இதனுல் தூய்மையுடையார் ஆரியர். அஃதிலார் அரக்

கர். இரக்கமுடையார் ஆரியர் அஃதிலார் அரக்கர் என்ற உண்மையை இராமாயணம் தானே விளங்கக் காட்டி நிற்றல் காண்க. தஸ்யுக்கள் என்பார் திருடர்கள் என்றும் எந்த அரசர்களுடைய நாட்டில் குடிகள் தஸ்யுக்களால் வாட்டப்பட்டுக் கதறுகின்றூர்களோ அந்த அரசர்கள் உயிரோடிருந்தாலும் இறந்தவரே (மநு.7.143) என்றும் ஆரியத்தன்மை என்பது தக்கார்க்கு உற்ற ஞானம் சௌரியம் கருணை செய்தல் வள்ளன்மை என்பன (மநு.7.211)என்றும் மநு கூறினர். ஆரியத்தன்மை என்றதால் ஆரிய என்னும் சொல் ஞானம் கருணை முதலிய நற்குணங்கள் உடையவரை உணர்த்தும் சொல் இனத்தையோ இடத்தையோ கூறும் சொல் அன்று என்பது நன்கு காட்டப்பட்டது. "இரக்கமென்ருெரு பொருளிலாத நெஞ்சினர்,"அரக்க ரென்றுளர் சில ரறத்தி னீங்கினர்" (இராமாவ. ஆரணிய. அகத்திய. 12) என்று கவிச்சக்ரவர்த்தி கம்பர் இப்பொருளை விளக்கினர். ஆதலின் ஆரிய ரென்பார் ஓரினத்தாரல்லர் பிற நாட்டாருமல்லர். எல்லா இனத்திலும் எல்லா நாட்டிலும் பொதுவாகவும் நம் நாட்டில் சிறப்பாகவும் அநுமன் பரதன் போன்ற ஞானமும் அருளும் நிறைந்த பெருந்தகையாளர். ஆரியர் என்னப்படுவார் என்பதே உண்மை. ஆரியர் என்பவர் ஓரினத்தராகிய வெளி நாட்டார் அவர் நம் நாட்டின்மேல் படையெடுத்தவர் என்ற சில பிறநாட்டார் கூற்று முற்றுமே போலி என்பதும் அது பூருவபக்கமாகவும்கூட எடுத்துக் கழித்தற்குத் தகாத காலில்லாக் கற்பனை என்பதும் நன்கு தோன்றும். மேனாட்டாருள்ளுமே கருத்து வேறுபாடுகள் உள்ளன. இக்கற்பனை பொய் என்பதைப் புறநானூற்றுப் பாடலொன்றின் உரையில் "இவ்வாசிரியர் (உரைக்கப்பட்ட பாடலாசிரியர்) காலத்தில் இராம ராவணப் போர் வட புலத்தவர்க்கும் தென்புலத்தவர்க்கும் நடந்த போரென்னும் பொய்க்கருத்து நாட்டில் நிலவவில்லை" (புறநா. 378. சைவசித்.பதிப்பு.1968:பக்கம்.383) என்று உரைகாரர் கூறியிருத்தலும் இங்கு நோக்கத்தக்கது

''சீதையை வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்று''
என்று இராவணனை வலித்தகையரக்கன் என்று இப்
பாடல் கூறியது. இப்பாடல் மேலே எடுத்துக் காட்டப்
பட்டுள்ளது. இப்பொய்க்கருத்தை நம்நாட்டவருள் ஒரு
சிலர் திடமாகப் பற்றிக்கொண்டு ஆரியர்பண்பாடு என்ற
கற்பனைகளை மெய்யெனப் பறைந்தும் வரைந்தும் வரு
கின்றார்கள். இம்மருளும் இருளும் ஒழுதல் வேண்டும்.
இல்லையேல் நம்நாட்டுக்கு நற்காலமும் நல்விடிவும் நல்
வாழ்வும் இல்லை. நமக்குள் ஏற்பட்டுள்ள பிளவு பகை
கலக்கம் முதலியவைகளுக்கெல்லாம் இம்மருளே அடி.
அதைத் தீர்த்தல் சான்றோர் கடன்.

---

# இருபத்துமூன்றுமத்தியாயம்

இவ்வளவால் இராவணன் என்பவன் இரணியனுக்கு அடுத்தபடியான ஒரு பேரிருளின் தோற்றமாய் உலகத்தை வாட்டி வருத்திய கொடிய அரக்கன் என்றது கூறப்பட்டது. அந்த இராவணனுக்கு அடுத்தபடியாகச் சிசுபாலன் திருமாலைப் பகைப்பதே தொழிலாத் தோன்றிய இருட்பருப்பதம் ஆவான். ''கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றும் கேட்பரோ, கேட்பார் செவிசுடு கீழ்மை வசைவுகளே வையும், சேட்பால் பழம் பகைவன் சிசுபாலன் திருவடி, தாட்பாலடைந்த தன்மை அறிவாரை அறிந்துமே'' (திருவாய்.7.5.3) என்று திருவாய்மொழி கூறியது. முதலில் இரணியனுயிருந்து பின்னர் இராவணனுயிருந்து பின்னர்ச் சிசுபாலனுகிய தால் சிசுபாலனைப் பழம்பகைவன் என்றூர். அத்திறப் பழம்பகைவன்தன்னையும் ஒருவியாசம் கொண்டு தன் திருவடிப்பாற்படுத்திச் சாபவிமோசனம் செய்தருளிய சருவசரணியனுன திருமாலின் ஆற்றலும் வண்மையும் பெருந்தகவும் இதனுல் காட்டப்பட்டது. பரமன்பாற் பகைதானும் இறுதியில் பரமன் திருவடி சேர்தற்கு ஏது வாயிற்று என்று பாகவதம் கூறிற்று. (பாகவதம்.7.1.32). ''ஏசியே யாயினு மீன்துழாய் மாயனையே, பேசியே போக்காய் பிழை'' (பெரிய திருவந். 38)என்று இந்நுட் பத்தை அழகுறச் சடகோபர் குறித்தருளினுர். இதனுல் வேதமும் அதன் விளக்கங்களாகிய இராமாயணம் முதலிய இலங்குநூல்களும் நிரம்பிய நூல்களும் பொய்யா விளக்குகளும் மெய்ந்நூல்களுமாம். அவற்றுக்கு முரணுன வைகள் இருள் நூல்களும் பொய்ந்நூல்களும் மயக்க நூல்களுமாம் என்பது குறளாசிரியர் உள்ளக்கருத்து என்பது காட்டப்பட்டது. இராமாயணத்தைத் திருவள்ளுவர் சிறப்பாக மேற்கொண்டவர் என்றது மேலே கூறப்பட்டது. அதைப் பின்னும் திடப்படுத்தி மிகுந்துள்ள முதலதிகாரக் குறட்பாக்களின் பொருளைக் கூறுவாம்.

முதற்குறளால் சருவசரீரியே உலகனைத்துக்கும் காரணம். அவன் ஒருவனே ஆகும் காரணமும் ஆக்கும் காரணமுமாகிய முழுமுதற்காரணம் என்பது உணர்த்தப் பட்டது. அவ்வொருவனே சருவசரணியன். அவனைச் சரணம் அடைந்து அவன் அருளால் பவக்கடலைக் கடந்து பேரின்பம் பெறுதலே உய்வுபாயமும் பேறுமாம் என்று பின் ஒன்பது குறட்களால் காட்டித்தந்தார். இறைவன் என்பான் சருவசரணியன் அவனைத் தாள்பற்றிச் சரணம் அடைவதே உய்வுபாயம் என்பதன் உறுதியை விளக்கும் நூல்களுள் இராமாயணம் தலைமை பெற்றது. நூல்கள் பிற இப்பொருளைக் கூறியிருப்பினும் இதை விளக்கு வதற்கென்றே தோன்றியும் முதல் இடை ஈறு (உபக்கிரம அப்யாஸ உப ஸம்ஹார) என்னும் நியாயத்தால் தொடக்கம் முதல் முடிவுவரை சரணுகதி என்னும் உபாயத்தைத் தெளிய விளக்கியும் இருத்தலால் இராமா யணத்துக்குச் சரணுகதி வேதம் என்பது உற்றதோர் சிறப்புப் பெயராயிற்று. (அபயப்ரதாநஸார.3). சரணுகதி ஒன்றையே உய்வுபாயமாகக் கூறும் திருவள்ளுவர் இராமாயணத்தைச் சரணுகதிதருமம் நிரம்பிய நூல் என்று போற்றி மேற்கொண்டவர் என்பது இதனுல் அறியலாம். அவ்வாறு இராமாயணத்தை மேற் கொண்டுள்ளவர் திருவள்ளுவர் என்பதை விரித்துக் கூறுவாம்.

''எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம் உய் வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு'' (குறள்.110) என்னும் குறளைஆய்வாம். எந்த நன்றியைக் கொன்ற வனுக்கும் அதைக்கொன்றதால் வந்த பாவத்தை நீக்கிக் கொள்வதற்குக் கழுவாய் (ப்ராயச்சித்தம்) உள்ளது. அவனுக்கு உய்வுபாயம் உள்ளது என்றவாறு செய்ந் நன்றியைக் கொன்றதால் வந்த பாவத்தை நீக்கிக் கொள்வதற்குக் கழுவாய் இல்லை. அவனுக்கு உய்வு பாயம் இல்லை என்பது இக்குறட்பொருள். இக்குறளைப் பற்றி : ''குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்

தூர் கிழார் பாடிய புறநானூற்றுச் செய்யுளொன்றில் அப்புலவர் திருக்குறளிற் சிறந்த குறளும் திருவள்ளுவர் மதியிலச்சினையை யுடையதுமாகிய ''எந்நன்றி கொன் ரூர்க்கும்' என்ற குறளைத் தம்பாட்டிற் கேற்ருங்கு மாற்றிப் பாடித் திருக்குறணூலை 'அறம்' எனச் சிறப் பித்து 'நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன், செய்தி கொன்ருேர்க் குய்தி யில்லென அறம் பாடிற்றே யாயிழை கணவ' என அழகுறக் கவிசெய்துள்ளார். செய்ந்நன்றி கோறலை உய்விலதொரு குற்றமெனத் திருவள்ளுவர் திருக்குறளிற் கூறியதனையே ஆலத்தூர் கிழார் இக்கவி யில் கூறுகிருர். அக்குற்றத்தை வேறு அறநூலாசிரியர் எவரும் அங்ஙனம் கண்டித்துக் கூறவில்லை'' (திருக்குறள் சைவசித் பதிப்பு. 1964 ஆராய்ச்சி முன்னுரை பக்கம் 8) என்று ஒருவர் எழுதியிருக்கிருர். அஃதன்று. இப்பொருள் இராமயணம் கூறியது. இராமயணம் இக்குறட்கு அடி என்ற உண்மையை விளக்குவாம்.

ப்ரஹ்மக்நே ச ஸுராபே சசோரே ப்க்ந வ்ரதேபி ச நிஷ்க்ருதி : விஹிதா ஸத்பி: க்ருதக்நே நாஸ்தி நிஷ் க்ருதி: (இராமய கிஷ்கிந்தா. 34.12) என்பது இராமா யணத்தில் உள்ள சுலோகம். இது இலக்குமணன் சுக்கிரீ வனுக்குக் கூறியது. ''பார்ப்பானைக் கொன்றவனுக்கும் கள்ளுண்டவனுக்கும் களவு செய்தவனுக்கும் விரதம் முரிந்தவனுக்கும் சான்ருேரால் கழுவாய் (உய்வுபாயம்) விதிக்கப்பட்டுள்ளது. செய்ந் நன்றி கொன்றவனுக்குக் கழுவாயில்லை'' என்பது அச்சுலோகத்தின் தமிழ். அச் சுலோகத்தில் பார்ப்பானைக் கொன்றவன் என்பதை விளக்க 'ப்ரஹ்ம' (பார்ப்பான்) என்றும் 'க்ந:' (கொன்ற வன்) என்றும் கூறப்பட்டது. அவ்வாறே செய்ந் நன்றி கொன்றவன் என்றதை விளக்க 'க்ருத' (செய்ந் நன்றி) என்றும் 'க்ந:' (கொன்றவன்) என்றும் கூறப்பட்டது. க்ருதக்ந: என்ற ஆண்பாற் சொல்லின் தமிழாய்ச் செய்ந் நன்றி கொன்ற மகற்கு என்று திருவள்ளுவர் பணித்தார். ''நன்றி மறவேல்'' என்பது மூதுரை ''நன்றி மறப்பது

நன்றன்று நன்றல்லது அன்றே மறப்பது நன்று''
(குறள் 108) என்று பணித்த திருவள்ளுவர் தாமே இக்
குறளில் நன்றி கொன்றவன் என்று பணித்துள்ளது
இளையபெருமாள் வாக்கின் வாய்மையையும் அதன்கண்
தமக்குள்ள ஈடுபாட்டையும் தெரிவித்தற்கு என்று
அறிக.'' நன்றிமறப்பது நன்றன்று. நன்றல்லது அன்றே
மறப்பது நன்று (குறள் 108) என்ற திருக்குறளும்
''ஏதேனும் ஒருபடி செய்த நன்றி ஒன்றினுலேயே உகப்பு
அடைக்கின்றன் நன்றல்லவை செய்தன நூறேயாயினும்
பெருமனத்தனுதலின் (இராமன்) அவற்றை நினைவிற்
கொள்வதில்லை'' (இராமாய. அயோத்தி 1.11. தமிழ்
செய்தது) என்ற இராமாயணமும் ஒருபொருளை
யுணர்த்தி நிற்றலை நோக்குக. இதனுல் இராமயணம்
திருவள்ளுவர் உள்ளத்தில் குடிகொண்டுள்ளது தெரியக்
காணலாம். திருவள்ளுவர் இராமயணத்தைச் சிறப்பாக
மேற் கொண்டவர் என்ற உண்மைக்கு இவ்விருகுறட்
பாக்களின் மிக்க சான்று வேண்டியதில்லை. இவ்விரண்டு
மே போதிய தக்க தனிப்பெருஞ் சான்றுய் நிகழ்கின்றன.
இதனுல் க்ருதக்ந: என்னும் ஆரியத்தைச் செய்ந்நன்றி
கொன்றவன் என்று தமிழாய்ச் சமைத்துள்ள நலம்
காணலாம். பார்ப்பார்க்கொலை செய்ந்நன்றிக்கொலை
என்னும் இருகொலைகளுள்ளும் பார்ப்பார்க்கொலை செய்த
வனுக்கு உய்வு உண்டு செய்ந்நன்றிக்கொலை செய்தவ
னுக்கு உய்வு இல்லை என்று அதற்குக்கழுவாயை விலக்
கினுர். கழுவாய் விதிக்கப்பட்டுள்ள தப்புக்கள் எவை
என்று சிறப்பித்துக் கூறவில்லை யாயினும் இராமாயணத்
தில் கூறப்பட்டுள்ள அவையே குறளிலும் கருதப்பட்டன
வாம். இராமாயணத்தில் ஐம்பெரும் பாதகங்களுள்
நான்கு கூறப்பட்டும் ஒன்று பரிசேடத்தால் குறிக்கப்
பட்டும் உள்ளன. ''பார்ப்பார்க்கோறல் கள்ளுண்ணல்
களவு குருமனைக் கூடல் இவையுடையவனேடு
கூட்டுடைமை என்பன ஐம்பெரும் பாதகங்கள் என்று மநு
கூறினர். (மநு.11.55). ''ப்ரஹ்மஹத்யா ஸுராபாநம்
ஸ்தேயம் குர்வங்கநாகம: மஹாந்தி பாதகாந் யாஹு:
ஸம்ஸர்க்கச்சாபி தைஸ் ஸஹ என்பது மநு கூறிய

சுலோகம். இராமாயணம் கூறியது போல் மநுவும் சான்றோர் கூறுவர் என்று கூறினர். இம்மநுசுலோகத்தில் களவு என்று பொதுப்படக் கூறினரேனும் அது பொற்களவு என்பதை மனுதாமே வேறிடத்துச் சிறப்பித்துக் கூறினர். (மநு.11.99.102). விரதம் முரிந்தவன் என்று இளையபெருமாள் கூறியது அப்பாதகம் செய்த பிரமசாரியைக் கூறியபடி. பிரமசாரியின் விரதங்களுள் அக்கூடாமை தலையாதலின் அது காரணமாய் இவ்விரதம் முரிந்தவன் மாபாதகியானன். பிரமசாரியை ''என்றுமே திடவிரதன்'' என்று மநு கூறினர். (மநு 11.82). அத்தலைவிரதம் முரிந்தவனை விரதம் முரிந்தவன் என்று இளையபெருமாள் கூறினர். எவர் கொலையும் எதன் குடியும் எதன் களவும் எவர் மனைக்கூடலும் அது செய்வாருடன் கூட்டுக்கொள்வதும் மாபாதகமே. அதன் கொடுமை தோற்ற அவ்வவற்றின் சிறப்புப் பொருளின்மேல் அவற்றை வைத்துக் கூறியவாறு. பொற்களவு மாபாதகம் என்றதால் வெள்ளிக்களவு மாபாதகம் அன்று என்பது பொருளல்ல. சுரை குடித்தல் மாபாதகம் என்றதால் இளமதியம் குடித்தல் மாபாதகம் அன்று என்பது பொருளல்ல. அவ்வாறே பிறவும். இது ஒருசாதிக்கு ஒருநீதி அன்று. ஒருபொருளுக்கு ஒரு நீதி அன்று. கள்ளுண்ணலைத் திருவள்ளுவர் பெருங்குற்றம் என்றார். (குறள்.924) மஹாபாதகம் என்னும் மநுவின் ஆரியம் பெருங்குற்றம் என்னும் வள்ளுவர் தமிழ் என்பதை நன்கு நோக்குக. அவ்வாறே க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி: என்னும் இராமாயண ஆரியம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு என்னும் வள்ளுவர் தமிழ் என்பதையும் நன்கு நோக்குக. இக்குறளில் நாணைப் பெண்பாலிற் கூறியது ஆரிய நாமலிங்காநு சாஸந முறையால் என்று அறிக. கொல்லாமை என்னும் அதிகாரத்தில் ''தெரிவாரகத்து'' ''கொலைவினையர்.'' ''புலைவினையர்'' (குறள்.329) என்றதால் வேள்வியிற் கொலை இல்லை என்பது உணர்த்தப்பட்டது. ''அவி சொரிந் தாயிரம் வேட்டலின்'' (குறள்.259) என்று

வேள்வியில் இடுவது தேவருணவாகும் அவியாதலின் இங்கு அவியென்று கூறியதால் ''செவியுணர்விற் கேள்வி யுடையார் அவியுணவின், ஆன்றேரோ டொப்பர் நிலத்து'' (குறள் 413)என்ற குறளில் வேள்வியில் இடும் ஆவுதி அவியைத் தேவர்கள் அவிப்பாகமாகப் பெற்று அதை உணவாகக் கொண்டுள்ளவர்கள் என்றும் அவர் களை ஆன்ருேர் என்றும் கூறியதால் வேள்வி புரியப்பட வேண்டிய வேத தருமம் என்ற வைதிகக் கோட்பாட்டை வள்ளுவர் மேற்கொண்டவர் என்ற உண்மை காண்க. கொலேவினையரை மாக்கள் என்றும் அவியுணவினரை ஆன்ருேர் என்றும் கூறியுள்ளது காண்க. தேவர் பிதிரர் முதலியோர் வேள்வியைக் கூறியுள்ளதாலும் (குறள்.43) ''கொலேயிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ், களைகட்டதனேடு நேர் (குறள்.550)என்று கூறியுள்ள தாலும் வேள்வியிற் கோறல் கொலேயன்று என்பது காட்டப்பட்டது. ''வேள்வியிற் கொலே கொலேயன்று'' என்று மநு கூறினர்.(மநு.5.39. தமிழ் செய்தது). வேதம் விதித்தது அறம். வேள்வியை வேதம் விதித்தது. ஆதலின் அது அறம். அறமாதலின் கொலேயன்று என்றவைதிக அறநுட்பம் விளக்கப்பட்டது. இதுவைதிக முப்பாலற நோக்கால் கூறியது என்க. வீட்டறம் (மோக்ஷதர்மம்) தனிப்பட்ட சிறப்பு உடையது. வீட்டறநிட்டர்க்கு முப் பாலறம் பல விலக்கப்பட்டுள்ளன. வேதம் விதித்த அறம் என்று எண்ணுதும் இறைவன் உகப்புக்குப் புரியும் வழி பாடு என்று துணியாதும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்யாதும் தம்பத்துக்கும் பேர்பெறுதற்கும் செய்யும் வேள்வியெல்லாம் பேர்வேள்வியும் உயிர்வதையுமாம் என்று நூல்களுள் கூறப்பட்டுள்ளது. (கீதை.16.17; பாகவதம்.11.5.8—13; பாதுகா ஸஹஸ்ரம்.47). இதனல் வேள்வியின் அறத்தூய்மை வலியுறுத்தப்பட்டது. இது புலால்மறுத்தல் என்னும் அறத்துக்கு முரண் அன்று ''புலால் மறுத்தான் உலகத்தார்க்குப் பிரியன் ஆகின்ருன்.'' (மநு.5.50.தமிழ்செய்தது)என்று மநுதாமே கூறினர். அவ்வாறே திருவள்ளுவரும், ''கொல்லான்

26

புலாலை மறுத்தானைக் கைகூப்பி, எல்லா உயிருந் தொழும்'' (குறள்.260)என்று கூறினர். வேள்வியில் இடுமது அவி. அவியாதலின் புலால் அன்று. புலாலன்ருதலின் கொலையன்று. புலால் என்னும் சொல் அவியைக் கூருது என்ற சொற்சக்தி காண்க. மநுவும் வள்ளுவரும் ஒத்த கருத்துடையவர் என்பதை இதனுல் அறியலாம். இத்திற வைதிக அறத் திட்ப நுட்பங்கள் திருக்குறளில் விளங்குமாற்றை ஓர்ந்துணர்க.

"ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும், மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும், பார்ப்பார் (குரவர்)த் தப்பிய கொடுமையோர்க்கும், வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென, நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன், செய்தி கொன்ருேர்க் குய்தி யில்லென, அறம் பாடிற்றே''(34)என்பது இங்குற்ற புறநானூற்றுப் பாடல். இப்பாடலில் மூன்று குற்றங்கள் கூறப்பட்டு அவற்றுக்குக் கழுவாய் உள்ளது என்றும் நான்காவதாய தோர் குற்றம் கூறப்பட்டு அதற்குக் கழுவாய் இல்லை என்றும் கூறப்பட்டு அதை அறம் பாடிற்று என்று கூறப் பட்டுள்ளது. இங்குப் பாடிற்று என்றதால் இசைநூல் கூறப்படவில்லை. பாடம் என்னும் பொருளுடைய ஓதல் கூறப்பட்டது. வேதமும் அது கூறும் அறத்தை விளக்கும் மறைநூலும் பாடிற்று என்னும் சொல்லால் உணர்த்தப் பட்டது. புறநானூற்றில் கூறிய ஆன்முலையறுத்தல் கருச் சிதைத்தல் என்னும் குற்றங்கள் குறளில் கூறப்படவில்லை. அவை ஐம்பெரும் பாதகங்களுள் கூறப்படாதவை. எந் நன்றி கொன்ருர்க்கும் என்று குறளில் பொதுப்படக் கூறி யிருப்பினும் ஐம்பெரும் பாதகங்களைக் குறள் உணர்த்தி நிற்றலைக் குறள்தானே காட்டியுள்ளது. கள்ளுண் ணுமையைக் கூறி அஃதுண்ணலைப் பெருங்குற்றம் என்று குறள் கூறியது (குறள்.924). பெருங்குற்றம் எனினும் மகாபாதகம் எனினும் ஒக்கும். கள்ளுண்ணல் ஐம்பெரும் பாதகங்களுள் ஒன்று ஆதலின் அதைப் பெருங்குற்றம் என்ருர். அவ்வாறே பிறனில்விழைவாம் பெருங்குற்றத்

தையும் கூறினர். அதனுள்ளும் குருமனைவிழைதல் சாலக் கொடியதாதலின் அதை ஐம்பெரும் பாதகங்களுள் ஒன்றென அறநூல் படித்தது. அப்பாதகத்தின் கொடுமையை வலியுறுத்தப் பிறனில் விழையாமை என்று குறளாசிரியர் கூறினர். குருமனைவிழைதலின் கொடுமை கூறவும் வேண்டுமோ: அது கைமுதிகம் என்பது குறிப்பு. அவ்வாறே பொற்களவு என்ற குற்றத்தைச் சிறப்பித்துக் கூறுமல் கள்ளாமை என்று பொதுப்படக் கூறினர். அவ்வாறே கொலையும், கோறல் ஒன்றே பிறவினையெல்லாம் தரும் (குறள்.321),அதாவது பிற பாவங்கள் செய்வதால் விளையும் பாவபயன் அனைத்தையும் இவ்வொரு பாவமே விளைவித்துவிடும் என்று கூறினர். பார்ப்பார்க் கோறல் விளைவிக்கும் பயன் கைமுதிகம் என்றவாறு. அவ்வாறு தீநட்பு என்று பொதுப்படக் கூறினர். அப்பொதுமையே அத்திறத் தீயதென்றால் அதன் சிறப்பு எத்திறத் தீயதாம் என்பது கூறவும் வேண்டுமோ. அது கைமுதிகம் என்ற படி. இதனல் ஐம்பெரும் பாதகங்களை (ஐம்பெருங்குற்றங் களை) அவ்வவற்றுள்ளும் மிகக் கொடியவைகளின் மேல் வைத்து அற நூல் கூறியது பொதுவாகவே அக்குற்றங் கள் அனைத்தும் மாபாதங்களே என்னற்காம் என்று குறளாசிரியர் காட்டிய அறநுட்பம் கண்டுணர்க. இதனல் இராமாயணமும் மநுநூலும் கூறிய ஐம்பெரும் பாதகங்களையே குறள் கூறிற்று. புறநானூறு கூறிய நான்கினை யன்று என்பது தெளியக் காணலாம். புற நானூற்றுக்குக் குறள் அடியன்று. பிறிதோர் அறநூலே அடியாம் என்று அறிக. ''குறளைத் தம்பாட்டிற்கேற் றுங்கு மாற்றிப் பாடித் திருக்குறளை அறம் எனச் சிறப் பித்து'' என்று கூறியது பொருந்தாது. இல்லதை ஏற்றியோ உள்ளதை மாற்றியோ கூறில் ஏற்றப்பட்ட தையோ மாற்றப்பட்டதையோ அது அடியாகக் கொண்ட தாகாது. கொண்டது என்பது முரண்.

''எந்நன்றி கொன்றார்க்கும்'' (குறள்.110) என்ற குறளுக்குப் பரிமேலழகர் உரையில் பார்ப்பார்த் தபுதலும்

என்று அப்பொருளுடைய புறநானூற்றுப் பாடற் கருத்தைப் பரிமேலழகர் அநுவதித்திருக்கிருர். இவ்விடத்தில் ''குரவர்த் தப்பிய'' என்பது பார்ப்பார்த்தப்பிய கொடுமையோர்க்குமெனத் திருத்தப்பட்டிருக்கிறது. இத்திருத்தம் பரிமேலழகர் காலத்தேயே செய்யப்பட்டுள்ளது என்பது திருக்குறளுரையாற் காணப் படுகிறது'' என்று புறநானூற்றுக்கு விளக்க உரை வரைந்த ஒருவர் எழுதியிருக்கிருர். (புறநானூறு. 34 சைவ சித்தாந்த. பதிப்பு. 1967. பக்கம்.97). மேற்கூறிய பதிப்புக் கழகத் திருக்குறட்பதிப்பில் பரிமேலழகருரையில்''குரவர்த்தபுதலும்'' என்றே பாடம் காட்டப்பட்டிருக்கிறது. (ஷை பதிப். திருக்குறள். 1964.பக்கம்.43).அதில் அடிக்குறிப்பாகப் புறநானூறு. 34- என்று காட்டப்பட்டுள்ளது. யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலர் திருக்குறட்பதிப்பில்(1889) பரிமேலழகர் உரையில் பார்ப்பார்த் தபுதல் என்றே பாடம் உள்ளது. அடிக்குறிப்பில் புறநானூறு எடுத்துக்காட்டப்பட்டும் அதில் குரவர்த் தப்பிய என்ற பாடம் காட்டப்பட்டும் உள்ளது. கா. நமச்சிவாய முதலியார் பதிப்பித்த தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணை இயல் 87ல் கொடுப்போரேந்தி என்று தொடங்கும் சூத்திரத்துக்கு இளம்பூரணருரையில் பார்ப்பார்த் தப்பிய கொடுமையோர்க்கும் என்றே பாடம் உள்ளது. (தொல். பொருள். இளம்பூரணம். பகுதி 1 பக்கம் 205). இப்பதிப்பால் இளம்பூரணர் மேற்கொண்ட பாடம் பார்ப்பார்த்தப்பிய என்றதே என்பது தெளியக் காணலாம். சீவகசிந்தாமணியில் பட்டவர்த்தப்பலில் என்று தொடங்கும் பாடலில் (98) அடிக் குறிப்பாகத் ''தப்பல் கொல்லுதல், பார்ப்பார்த்தப்பிய (புறநானூறு, 34.3)'' என்று 57ம் பக்கத்தில் உ. வெ. சாமிநாதையர் பதிப்பில் பாடம் காட்டப்பட்டிருக்கிறது. அவ்வாறே சாமிநாதையர் புறநானூற்றுப் பதிப்பிலும் பாடம் உள்ளது. குறள் சக்திப்பதிப்பில் (1957) ''பார்ப்பார்த் தபுதலும் (புறநா. 34)'' என்றே பரிமேலழகருரை காட்டப்பட்டிருக்கிறது. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தொல் காப்பியப் பதிப்பில் (பொருள். புறத்திணை 87. 1967ம் ஆண்டு

பக்கம் 144) உரையில் (''குரவர்த்தப்பிய'' என்று பாடம் காட்டப்பட்டும் அடிக்குறிப்பாக "(பாடம்) பார்ப் பார்த்'' என்று பாடபேதம் காட்டப்பட்டும் உள்ளது. இதனுல் இரண்டு பாடங்களும் உள்ள பாடங்களே என் பதும் பரிமேலழகர் மேற்கொண்ட பாடம் பார்ப்பார்த் தப்பிய என்ற பாடம் என்பதும் நன்கு புலனுகும். இக் கழகப் பதிப்புக்கள் ஒன்ருெடொன்று முரணுமாற்றை எடுத்துக் காட்டுவாம். தொல்காப்பியப் பதிப்பில் குரவர்த் தப்பிய என்று இளம்பூரணர் உரையில் பாடம் காட்டி யும் அடிக்குறிப்பாகப் ''பாடம் பார்ப்பார்த்'' என்று பாடபேதம் காட்டப்பட்டும் உள்ளது. இதனுல் இரண்டு பாடங்களும் உள்ளனவே என்பது உணர்த்தப்பட்டது. இப்பதிப்பு. 1967ம் ஆண்டு. புறநானூற்றுப் பதிப்பில் ''குரவர்த்தப்பிய என்பது பார்ப்பார்த்தப்பிய கொடு மையோர்க்குமெனத் திருத்தப்பட்டிருக்கிறது. இத்திருத் தம் பரிமேலழகர் காலத்தேயே செய்யப்பட்டுள்ள தென் பது திருக்குறளுரையாற் காணப்படுகிறது'' என்று கூறப்பட்டுள்ளது. இதனுல் பரிமேலழகருரை திருத்தப் பட்ட பார்ப்பார்த்தப்பிய கொடுமையோர்க்கு மெனவே உள்ளது என்று கூறப்பட்டதாயிற்று. தொல் காப்பியப்பதிப்பில் பாடபேதம் என்றது புறநானூற்றுப் பதிப்பில் பரிமேலழகர் காலத்தேயே செய்யப்பட்ட திருத்தம் ஆயது. பார்ப்பார்த்தப்பிய என்ற பரிமேலழகர் காலத்தேயே திருத்தப்பட்ட அப்பாடம் திருக்குறட் பதிப்பில் பரிமேலழகருரையில் காட்டப்படாதொழிந்து திருத்தப்படாத குரவர்த் தப்பிய என்ற பாடமே பரி மேலழகர்உரையாகத் தோன்றலுற்றது. பாடபேதம் காட்டப்படவில்லை. இக்குறட்பதிப்பு 1964ம் ஆண்டு. புறநானூற்றுப் பதிப்பில் உள்ளது என்றது (பார்ப்பார்த் தப்பிய) திருக்குறட்பதிப்பில் இல்லதாயிற்று. இதனுல் இம்மூன்றுகழகப் பதிப்புகளும் ஒன்ருெடொன்று முரணுதல் தெளியப் புலனுகும்.

அது நிற்க. குரவர்த்தப்பிய என்றதே பாடமாயிருப் பினும் அதற்குப் பார்ப்பார்த் தப்புதல் என்று பொருள்

கொள்ளுதல் சாலவும் தகும். ''வருணங்களுக்குப் பார்ப் பான் குரு'' (தமிழ் செய்தது. வர்ணுநாம் ப்ராஹ்மணோ குரு: என்றது அறநூல்)என்று நூல் கூறிற்று. ''ஆவினைக் குரவ ரோடும் (உயுத்த. மீட்சி170) என்ற கம்பர்பாடலை நோக்குக. ஆவொடு சேரக்கூறியதால் குரவர் என்னும் சொல்லுக்குப் பார்ப்பார் என்பது பொருள் என்றறிக. ''ஆவுக்காயினும் அந்தணர்க்காயினும்'' ஆரணிய. அகத்திய.21) என்று முன்னும் கூறினர். கோ ப்ராஹ் மணேப்ய: என்ற பிரசித்தி காண்க. ''கோப்ராஹ்மண ஹிதார்த்தாய'' (இராமாய. பால. 15.25)''ஆ பயன் குன்றும் அறுதொழிலோர் நூல் மறப்பர்''(குறள்.)''ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்'' (புறநா.9)என்பன அப்பிரசித்தி. ஆதலின் குரவர் என்ருலும் பார்ப்பார் என்பது பொருள் என்று அறிக.

அன்றியும் எந்நன்றி கொன்ருர்க்கும் என்ற இக் குறளில் வேண்டுவது பார்ப்பார்த் தப்புதல் என்னும் பொருளே. இப்பொருளைக் கூறும் இராமாயணமும் மநு நூலும் மேலே எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. ஆதலால் பாடத்தாலோ பொருளாலோ எவ்வகைக் குறைவும் கூறு வதற்கில்லை. இவர்கள் குரவர் என்று பாடம் கொண்டு அதற்குத் தந்தை தாயாரைப் பிழைத்த கொடுந்தொழி லுடையோர் என்று பொருள் உரைத்தல் இவ்விடத்தில் பொருந்தாது. அது ஐம்பெரும்பாதகங்களுள் ஒன்று அன்று. அதுவுமோர் கொடிய பாதகமேயாயினும் ஐம் பெரும் பாதங்கள் என்று அறநூல் சிறப்பித்துக் கூறிய வற்றுள் ஒன்று அன்று. இங்கு இத்திருக்குறளில் கூறப் பட்டது பார்ப்பார்க்கோறலே. இது மநுநூல் கூறியது. இராமாயணம் அநுவதித்து. அதைக் குறள் அடியாக க்கொண்டுள்ளது என்று அறிக. இப்பொருளை ''சிதைவ கல் காதற் ருயைத் தந்தையைக் குருவைத் தெய்வப் பத வியந் தணரை யாவைப் பாலரைப் பாவை மாரை, வதை புரி குநர்க்கு முண்டா மாற்றலா மாற்றல் மாயா, உதவி கொன்ருர்க்கொன் றேனு மொழிக்கலா முபாய

முண்டோ'' (கிட்கிந்தா. கிட்கிந்தை. 62) என்று கம்பர் கூறினுர். நன்றிகொன்ருர் என்ருர் வள்ளுவர். உதவி கொன்ருர் என்ருர் கம்பர். அவை மாநவ இராமாயணங் களின் தமிழ். ஆதலின் இப்புற நானூற்றுப் பாடலில் அறம் பாடிற்று என்ற விடத்தில் அறம் என்றதால் மநு நூல் கூறப்பட்டது காண்க. பழைய உரையில் அறம் என்றது அறநூல் (தரும சாஸ்த்ரம்) என்றதை. தரும சாஸ்த்ரத்துளெல்லாம் தலையாகிய மநுநூலை உணர்த்தி நிற்கும் சக்தியும் பிரசித்தியும் உடையது. ''தர்மசாஸ் த்ரேஷுமாநவம் (அறநூலுளெல்லாம் மநு நூல் தலை) என்பது அப்பிரசித்தி, ''மநுநெறி கூறிற்றுண்டோ'. (கிட்கிந்தா, வாலிவதை. 79) என்றதும் அது.

---

## இருபத்துநான்காமத்தியாயம்

அந்தணர் அறவோர் அறுதொழிலோர் முதலிய பெயர்களுக்குப் பார்ப்பார் என்பது பொருளன்று என்று இன்றொருசிலர் கூறத்தொடங்கி அதற்குத்தகத் திருக்குறள் முதலிய முன்னூல்களில் அச்சொற்களுக்குப் பிறிதோர் பொருளை ஏற்றப் பார்க்கின்றார்கள். அது பொருத்தம் உடையதன்று. பார்ப்பார் என்பதுதான் அவற்றின் உரிய பொருள். இது பின்னர் விளக்கிக் கூறப் படும். அந்தத்தை அணவுவார் அந்தணர் வேதாந்தத் தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பார் என்ற வாறு என்று உரைத்தல் தக்கதாகாது. அந்தம் என்னும் சொல் ஆரியம். அடை முன்தொடர்ச்சி முதலியவை இன்றித் தனித்து நிற்கும் அந்தம் என்னும் சொல்லுக்கு நாசம் சாவு மரணம் என்பது பொருள் (அமரகோசம். 1700). அணவுதல் என்னும் சொல்லுக்குக் கிட்டுதல் என்பது பொருள். ஆதலின் அந்தத்தை அணவுதல் சாவை அடைதல் ஆம். கூற்றுவனுக்கு அந்தகன் என்பது பெயர். (அமரகோசம்.117).அந்தத்தை (சாவை)ச் செய் தலால் அவன் அந்தகன் என்னப்பட்டான். அந்தத்தை அணவுவார் அந்தணர் என்று கூறுவார்க்குச் சாவோர் அனைவருமே அந்தணர் ஆவார். அனைவரும் சாவோரே. ஆதலின் அனைவருமே அந்தணராகவேண்டிவரும். அது தக்கதன்று. அவமங்கலமுமாம். அந்தம் என்றக்கால் எதன் அந்தம் என்ற ஆராய்ச்சி எழுகிறது. அது அநந்தம் ஆதலின் இதன் அந்தம் என்று ஒருதலையாய்த் துணிதற் கியலாமையால் அநைகாந்தியம் என்னும் குற்றமுடைய தாகும். ஏதோ ஒரு படியால் வேதத்தின் அந்தம் என்று கூறப்பார்க்கில் அது அதிவியாத்தி என்னும் குற்றமுடை யதாகும். வேதத்தின் அந்தத்தை அணவுவார் யாரா யினும் அவரனைவருமே அந்தணராக வேண்டிவரும். அந்தணராதற்கு வேண்டுவது அந்தத்தை அணவுதல் ஒன்றே யாதலின் வேறு யாதும் வேண்டியதில்லை.

உரிமை நோக்கி அணவும் பார்ப்பார் என்று கூறப்பார்த்தால் அந்தணர் என்பார் பார்ப்பார் என்னும் உரிய பொருளை நேரே கூறிவிடலாமே. சுங்கக்குடியில் விடியலாய் இவ்வாறு விலகிச் சுற்றி வளைந்து கோடி முடிவில் கோடல் எதற்காக? ஆதலின் அதிவியாத்திக்குற்றம். அவ்வாறு கொள்வதில் வேதத்தின் முற்பாகமாகிய கரும (தரும)பாகம் விலக்கப்பட்டதாகும். அது வேதாந்தம் (வேதத்தின் அந்தம்) அன்று. முப்பாலின்பாற்படும் முற்பாகமாகிய கருமபாகம் அது. அப்பாகம் விலக்கப்பட்டால் முப்பாலறம் முற்றுமே விலக்கப்பட்டதாகும். அதன் விலக்கால் ஓதல் முத்தீ அறுதொழில் சந்தி கழுவாய் முதலியவை விலக்கப்பட்டவை ஆகும். அவற்றின் விலக்கால் ஓத்தந்தணர் முத்தீயந்தணர் அறுதொழிலந்தணர் என்பன உறுதற்காகாதொழிந்து முரணுய் முடியும். ஓதலின் விலக்கால் வேதத்தின் முடிப்பாகமாகிய அந்தமும் (வேதாந்தமும்) விலக்கப்பட்டு அதை அணவாதே ஒழிவான். அந்தமும் ஓதியே கொள்ளப்படவேண்டியதாதலாலும் ஓதல் என்றுமே செய்யப்படவேண்டியதாதலாலும் ஓதல் முற்பாகத்தில் வகுத்துள்ள முறைகட்கும் விதி விலக்குகட்கும் தகவே செய்யப்பட வேண்டியதாதலாலும் கருமபாகம் விலக்கப்பட்டால் வீட்டின்பாற்படும் அந்தமும் விலக்கப்பட்டதாய் அணுவுதற்கே இடமின்றி ஒழியும். முற்பாகம் விலக்கப்பட்டால் ஓதற்கே உரிமையற்றுப் போம். ஆதலின் அவன் பார்ப்பதற்கே இடமில்லாதொழியும். முப்பாற்பாகமாகிய முற்பாகத்தை மட்டிலுமே அணவி வீட்டுப்பாகமாகிய அந்தத்தை (முடிப்பாகத்தை) அணவாது இருத்தற்கு ஆகும். பலரும் முப்பாற்கே உரியர். ஒரு சிலரே அந்தமாகிய வீட்டுப்பாற்கு உரியராவார். ஓதலைச் செய்துகொண்டும் முத்தீயை வளர்த்துக் கொண்டும் வேள்விகளைப் புரிந்துகொண்டும் முப்பாலறத்தை மேற்கொண்டு ஒழுகி வாழ்பவர் அந்தணராகாதொழிய நேரிடும், முற்பாக ஒழுக்கம் அற்றதால் அணவிய அந்தமும் கெடும். ''பார்ப்பான் பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்'' (குறள். 134) என்றது காண்க.

இக்குறட்பொருள் மேலே விளக்கப்பட்டுள்ளது ஆதலின் அவியாத்தி என்னும் குற்றமுடையதாகும். விதிவிலக்கு களோடு முரணுதலும் அசம்பாவிதமுமாம்.

''அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது மன்னவன் கோல்'' (குறள். 543) என்ற திருக்குறளில் அந்தணர் நூல் என்றதால் வேதம் முற்றுமே உணர்த்தப்பட்டது. ஆதியை விலக்கி அந்தத்தை மட்டிலுமே திருவள்ளுவர் குறளடியால் அளக்கவில்லை. திருக்குறள் முப்பாலறத்தைக் கூறும் நூல் அந்தத்தை அணவுவார் நூல் என்பது குறளுக்கு முற்றும் முரணு தலின் அப்பொருள் போலி என்க. அந்தத்தை அணவு வார்நூல் அந்தணர்நூல் என்று கூறுதற்காகாது. அதற்குப் பொருளுமில்லை. ஏற்றிடினும் ஏற்காது. முரணு மாம். அந்தணர்நூல் கொண்டே தான் அறம் உணர்தற் காகும் என்பது திருக்குறள் விளம்பும் திடத்துணிபு. அந்தத்தை அணவுவார்நூல் அந்தணர்நூல் என்பார்க்கு முப்பாற்பாகம் உணர்த்தும் அறம் அணவப்படாதொழி யும். முற்பாகம் தருமபாகம் (அறப்பாகம்). மேற்பாக மாகிய அந்தம் (உபநிடதம்) பிரமபாகம். ஆதலின் அந்தத்தை அணவுவார்க்கு அறம் உருதொழியும். ''சிறப்பீனும் செல்வமு மீனும்அறத்தினூஉங்கு, ஆக்க மெவனோ உயிர்க்கு'' (குறள். 31) என்று சிறப்பை நல்கும் வீட்டுப்பாகமும் செல்வத்தை நல்கும் முப்பாற் பாகமும் சேர்ந்துள்ள வேதமே அந்தணர்நூல் என்பது குறள் காட்டித்தரும் உண்மை. அறம் சிறப்பு பொது என இருவகைப்படும். சிறப்பு வீட்டறம் (மோக்ஷதர்மம்). பொது முப்பாலறம் (த்ரிவர்க்க தர்மம்). இரண்டும் அறமே. வேதம் ஒன்றே தான் அதை உணர்த்த வல்லது அவ்வேதம் அந்தணர் நூல் என்றவாறு. அந்தணர் என்பார் பார்ப்பார். அவர்நூல் என்பது வேதம். அந்தணர்நூல் என்பது பார்ப்பார் ஓதிக்கொள்ளும் வேதநூல். வேதமே அறத்திற்கு ஆதி. வேதம்காட்டத் தாம்பார்க்கும் தகையோராதலின் அந்தணர் பார்ப்பார்

என்னப்பட்டார். பார்ப்பது அறத்தை. அதைக் காட்டு வது வேதம். வேதம் கண்ணுக அறத்தைப் பார்ப்பாராத லின் பார்ப்பார் என்பது அந்தணர்க்குப் பெயராயிற்று. அறத்திற்கு ஆதியாகிய வேதத்தையும் அந்தணர்நூலாம் அவ்வேதம் உணர்த்தும் அறத்தையும் காக்கும் கடமை உடையவன் மன்னவன். ஆதலின் அறத்துக்கும் வேதத் துக்கும் ஆதியாய் நின்றது மன்னவன் கோல் என்ருர். அறம் நடத்தற்கு மன்னவன் செங்கோல் செலுத்தல் ஏது வாய் நிற்றலின் அக்கோல் ஆதி என்ருர். ''வேதமனைத் தும் அறத்திற்கு மூலம்'' (மநு.2-6. தமிழ்செய்தது) என்றும் ''வேதத்தினின்றும் அறம் ஒளிமல்கத் தோன்றி யது'' (மநு. 5-54. தமிழ்செய்தது) என்றும் ''அறத்தை அறிய விரும்புவார்க்கு வேதம் பரமமான பிரமாணம்'' (மநு.2-13. தமிழ்செய்தது) என்றும் ''வருணங்கட்கும் ஆச்சிரமங்கட்கும் காவலனுய் அரசன் படைக்கப் பட்டான்'' (மநு.7-35. தமிழ்செய்தது) என்றும், ''நான்கு ஆச்சிரமங்களுக்கும் அரசன் ஆதி. அவனே தண்டம்'' (மநு. 7-17. தமிழ்செய்தது) என்றும் மநு கூறினுர். மநுநூலும் குறணூலும் ஒரு பொருளேயே உணர்த்தி நிற்றல் கண்கூடு. ஆபயன் குன்றும் அறுதொழி லோர் நூல் மறப்பர், காவலன் காவா னெனின்'' (குறள். 560) என்ற குறளில் அரசன் வேதத்தையும் அதை ஆதி யாக உடைய அறத்தையும் காவானுயின் பசு பால் குன் றும் பார்ப்பார் வேதத்தை மறப்பார் என்று கூறினுர். வேள்விகளிலும் கோயில்கள் முதலியவைகளிலும் தினந் தோறும் முப்போதும் வேதமந்திரங்கள் ஓதப்படுதலால் அவைகளே நாடு எங்கும் நாள்தோறும் குறையற நடை பெறச் செய்தல் மன்னவன் கடமை. அக்கடமையை மன் னவன் செய்தலால் அந்தணர் ஓதிக்கொண்ட வேதத்தை மறவாதிருப்பர். இல்லேயேல் மறப்பர் என்று உணர் வூட்டும் வள்ளுவரின் மிக்க வைதிகமாண்பர் யாராவார்? ஐம்பெருவேள்விகளும் தருமங்களும் நிகழ்தற்குப் பசு வின் பாலும் பார்ப்பார் வேதமந்திரமும் வேண்டும். ஆத லின் காவலன் காவாதொழிந்தால் தருமம் நடத்தற்

கேதுவாகிய ஆவின்பாலின் வற்றலும் பார்ப்பாரின் வேதமறத்தலும் ஏற்பட்டுத் தருமம் நடைபெருது போம் என்றவாறு. ஆபயன் குன்றும் அறுதொழிலோர நூல் மறப்பர் என்று ஆவையும் அறுதொழிலோரையும் சேரக் கூறியதால் பசுவும் பார்ப்பாரும் கூறப்பட்டுள்ளது ஐய மறப் புலனுகும். அந்தத்தை அணவுவார் அந்தணர் என்று கூறும் பொருள் போலி என்பதற்குப் பிறிதெச் சான்றும் ளேண்டாவாறு இத்திருக்குறளும் அந்தணர் நூற்கும்'' என்ற திருக்குறளும் கண்களில் தெரியக் காட்டித்தரவல்ல தனிச் சான்ருய் நின்றன. வேதத்தை ஓதும் கடமையும் உரிமையும் அந்தணர்க்கே சிறப்பாக உற்றது. பிறர்க்கில்லே. ஆதலின் வேதம் அந்தணர் நூல் என்ற வள்ளுவருள்ளத்தைக் கண்டுணர்க. இதற்கு முரணுகக் கூறுவார் தருமத்தையும் குறளேயும் மறுப்பாரா வார். பசுவையும் பார்ப்பாரையும் சேர்த்துக் கூறுதல் வேத நூலார் தொன் மரபு. ''பசு பார்ப்பார் இதத்திற் காக இவ்வரக்கியைக் கொல்'' (இராமாயண. பால. 25.15 தமிழ் செய்தது) ''பார்ப்பா ரிடத்திலும் பசுக்களி டத்திலும் காணப்படுகின்ருய்'' (ஷை யுத்த. 121.24 தமிழ் செய்தது) ''பசுக்கள் பொருட்டும் பார்ப்பார் பொருட்டும் உயிரை உடனே விடுதல் வேண்டும்'' (மநு 11.79. தமிழ் செய்தது) ''ஆவுக் காயினும் அந்தணர்க் காயினும், யாவர்க் காயினுமெளியவர்க் காயினும், சாவப்பெற்றவரே தகைவானுறை, தேவர்க்குந் தொழுந் தேவர்களாகுவார்'' (இராமாவ ஆரணிய அகத்திய.21) ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்'' (புறநா.9) என்பன காண்க.

இப்புறநானூற்றுப்பாடற்கு (9) ''விளக்கம். ஆனின தியல்பையுடைய பார்ப்பாரும் என்று ஏட்டில் காணப்படு கிறது. அந்தணரை மாக்களென்று வழங்காராதலால் ஏட்டிற் காணப்பட்டதே ஈண்டுக் கொள்ளப்பட்டது. அச் சுப்படி ''ஆனினதியல்பையுடைய அந்தணரும்'' என்று கூறுகிறது'' என்று சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1967 வருடப் புறநானூற்று அச்சுப்பதிப்பில் விளக்க

உரைகாரர் உரைத்திருக்கிறுர். இவ்விளக்க உரை சொற்பொருள் விளக்கமுமன்று. உரைநூற் பொருளின் விளக்கமுமன்று. விளக்க உரைகாரரின் மனப் போக்கின் விளக்கமே என்க. இவ்விளக்கம் பெரிதும் தகாதது. இலக்கிய இலக்கணங்களுக்கு முற்றும் முரண். அசம்பாவிதமுமாம்.

''மாவுமாக்களுமையறிவினவே'' (தொல். மரபு. சூ 32) என்பது கொண்டு பார்ப்பனமாக்கள் என்றதால் பார்ப்பனரை மாக்கள் என்று வழங்கற்காகும். அந்தணர் என்பார் பார்ப்பனரல்லர். அவர் வேறுசிலர். அவர் மன உணர்ச்சி உடையவர். ஆதலால் அவரை மாக்களென்று வழங்கார் என்று இவ்விளக்க உரைகாரர் வழக்கு வரையறை செய்தார். இவ்வரையறை மருள் என்பதை விளக்குவாம்.

பார்ப்பார் அந்தணர் அறுதொழிலோர் இருபிறப்பாளர் என்பன பரியாயங்கள். அவை சீரிய மன உணர்ச்சி உடைய பூசிக்கத்தக்க உயர்ந்தோரை உணர்த்தி நின்றன. அவற்றுள்ளும் பார்ப்பார் என்பது ஒருபடி பின்னும் சிறக்கும் ''விலங்குகள் மோப்பத்தால் பார்க்கின்றன. பார்ப்பார் வேதங்களால் பார்க்கின்ருர்கள் மன்னர்கள் ஒற்றர்களால் பார்க்கின்ருர்கள் மக்கள் பிறர் இரு கண்களால் பார்க்கின்ருர்கள்'' (காவ; பச்யந்நி கந்தேந வேதை: பச்யந்தி ப்ராஹ்மணு; சாரை: பச்யந்தி ராஜாந: சக்ஷுர்ப்யாமிதரேஜநா: என்று பாரதம் கூறிற்று. (பாரதம். உத்யோக. 34-35) ஆதலால் பார்ப்பார் என்னும் சொல் சீரிய ஞானமுடையாரையே கூறும். விலங்கையொத்த ஐயறிவுடைய இழிமக்களைக் கூருது. வேதஉணர்வே பார்ப்பாருணர்வு என்பது பார்ப்பார் என்னும் சொல் கூறும் மெய்ப்பொருள். அத்திற மெய்யுணர்வுடைய பார்ப்பாரை மனஉணர்ச்சி இல்லாதவர், ஆதலின் அவர்களை மாக்கள் என்று வழங்கற்காகும். அந்தணர் மனஉணர்ச்சி உடையவர். ஆதலின் அந்தணரை மாக்கள் என்று வழங்கார் என்ற விளக்க உரை எத்துணை அசம்பாவிதம் என்பது தானே தோன்றும்.

உயர்ந்தோரை மாக்கள் என்று நன்கு வழங்கற்காகும். மாக்கள் என்ற சொல்லை வழங்கிய விடதது வழங்கப்பட்டவர் யார் என்றது கண்டு அதற்குத்தக மாக்கங் என்றதன் பொருள் கொள்ளப்படவேண்டும். மாக்கள் என்றதை மட்டிலுமே கொண்டு வழங்கப்பட்டவர் யாராயிருந்தாலும் அவர் மனஉணர்ச்சியற்ற இழிமக்களே என்று பொருள் கொள்ளற்காகாது. உயர்ந்தோரை மாக்கள் என்று வழங்கியவிடத்து மாக்கள் என்னும் சொல் வழங்கப்பட்டவர் மதிமுதியோர் அறநெறியோர் உயர்ந்தோர் சிட்டர் தெய்வத்தன்மையர் என்னும் பொருளைத்தான் உ ண ர் த் து ம். இவ்வுண்மையைக் காட்டித்தரும் பேரிலக்கியங்கள் வருமாறு:—

''பார்ப்பா ரறவோர் பசுப் பத்தினிப் பெண்டிர், மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டுத், தீத்திறத் தார் பக்கமே சேர்கென்று காய்த்திய, பொற்ருெடி யேவப் புகையழன் மண்டிற்றே'' (சிலப் மதுரை வஞ்சின. 53-56) என்ற இளங்கோவடிகள் பாடலால் பார்ப்பார் போற்றத்தக்கவர்கள் என்பதும் இப்பாடலிற் கூறிய பார்ப்பார் முதலாயினேரை யொழிந்த பிறர் தீத்திறத் தார் என்பதும் நன்கு காணலாம். இப்பாடலில் பார்ப் பாரையும் பசுவையும் பத்தினிப் பெண்டிரையும் சேரக் கூறியதால் அவர்கள் தூய்மையும் மாட்சியும் தெளியக் காட்டப்பட்டது. இச்சிலப்பதிகாரப் பாடலும் மேற்கூறிய புறநானூற்றுப் பாடலும் (9) ஒத்த கருத்துடையவே. பார்ப்பார் போற்றற்குரியர் என்பது அக்கருத்து.

''ஒன்றுபுரி கொள்கை யிருபிறப்பாளர், முத்தீச் செல் வத்து நான் மறை முற்றி, ஐம்பெரு வேள்வியும் செய்தொழி லோம்பும், அறுதொழி லந்தணர் பெறு முறை வகுக்க நாவலங்கொண்டு நண்ணு ரோட்டிப், பார்ப்பன வாகை சூடி யேற்புற, நன்கலங் கொண்டு தன் பதிப் பெயர்வோன்'' (ஷை மதுரை கட்டுரை. 67-73) ''புன்மயிர்ச் சடை முடிப் புலரா வுடுக்கை, முந்நூன் மார்

பினன் முத்தீச் செல்வத், திருபிறப் பாளர்'' (ஷை வஞ்சி காட்சி 126-128) ''வானவர் போற்றும் வழிநினக் களிக்கும், நான்மறை மருங்கின் வேள்விப்பார்ப்பான் அருமறை மருங்கி னரசர்க் கோங்கிய வேள்வி நீ செயல் வேண்டும்'' (ஷை. ஷை. 175-178) என்ற சிலப்பதிகாரப் பாடல்கள் பார்ப்பார் மெய்யுணர்வுடையவர் முத்தி நெறி நிற்பவர் முத்தீச் செல்வர் என்பதையும் பார்ப்பார் அந்தணர் அறு தொழிலோர் இருபிறப்பாளர் என்னும் சொற்கள் பரியா யங்கனே அவர் முந்நூல் மார்பினர் நான்மறை முற்றிய வர் பூசிக்கத்தக்கவர் என்பதையும் கையிற்கனிபோல் காட்டித்தந்தன. ''நன்பால் பசுவே துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பார் என்பாரை யோம்பே னெனின் யான வனுக வென்ருன்'' (சிந்தா, 443) என்ருர் திருத்தக்க தேவர்.

''இருமூன் றெய்திய இயல்பினின் வழா அ, திரு வர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி, அறுநான் கிரட்டி யிளமை நல்லியாண், டாறினிற் கழப்பிய வறநவில் கொள்கை, மூன்று வகைக்குறித்த முத்தீச் செல்வத் திருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல, ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்'' (திருமுருகாற் 177-183) ''அந் தியந்தணர் அருங்கட னிறுக்கும் முத்தீவிளக்கு'' (புற நா.2-22-23) ''ஒன்று புரிந்தடங்கிய இருபிறப்பாளர் முத்தீ'' (புறநா. 367-12-13) ''ஓதல் வேட்டலவை பிறர்ச் செய்தல் ஈத லேற்ற லென்ருறு புரிந்தொழுகும் அறம் புரியந்தணர்'' (பதிற் 24-6-8) இது மநுநூலின் தமிழ் அத்தியாபநம் அத்தியயநம்யாஜநம் யஜநம் ததா தாநம் ப்ரதிக்ரஹம் சைவ ப்ராஹ்மணு மகல்பயத் (மநு.1-88) ''கற்ரேய்ந் துடுத்த படிவப் பார்ப்பான், முக்கோ லசைநிலே கடுப்ப'' (முல்லேப்பாட்டு 37-38) என்ற பேரிலக்கியங்கள் காண்க.

''பார்ப்பனச்சிட்டர்கள் பல்லா ரெடுத்தேத்தி'' (நாச்சியார்.6-4) என்பது கோதைப் பிராட்டி பிரயோகம்

முருகக் கடவு ளவதாரத்தைப் பாடுமிடத்துக் கடுவனிள வெயினனர் ''அமரர் வேள்விப் பாகமுண்ட பைங்கட் பார்ப்பான்'' (பரிபாடல் 5-26-28) என்ற பாடலில் முக்கண்ணப்பனைப் பார்ப்பான் என்று பாடினர்.

மதிமுதியோரும் அறநெறியோரு மாகிய உயர்ந் தோரை மாக்கள் என்று நன்கு வழங்கற்காகும் என்பதைக் காட்டித்தரும் இலக்கியங்களைக் காண்பாம் ''நான்மறை மரபி னயந்தெரி நாவின், கேள்வி முடித்த வேள்வி மாக் களை, மாடல மறையோன் சொல்லிய முறைமையின், வேள்விச் சாந்தியின் விழாக் கொளவேவி'' (சிலப்.வஞ்சி. நடுகற் 191-194). ''மேலோர் விழையு நூ னெறி மாக்கள்'' (ஷை.ஷை. 224) என்பன சிலப்பதிகாரப் பிரயோகம். "அறஞ்செய் மாக்கள்'' (மணிமேகலை. 14-43.) ''பார்ப்பான் தன்னெடு கண்ணிழந் திருந்தவித், தீத்தொழிலாட்டி'' (ஷை.6-132-133) என்பன மணிமே கலைப் பிரயோகம். முத்தீயோம்பும் உரிமைபயக்கும் அந்தணர் மனைவியைப் பார்ப்பனி என்று பெண்பாலால் கூறுவதும் அம்மனைவியால் அவ்வுரிமை பயக்கப்பட்ட அந்தணக் கணவனைப் பார்ப்பான் என்று ஆண்பாலால் வழங்குவதும் மரபு. பார்ப்பார் முத்தீபேணும் சிறப்பும் உரிமையும் இதனல் உணர்த்தப்பட்டது. "அந்தணர்களிற் கணவனைப் பார்ப்பானென்றும் மனைவியைப் பார்ப்பனி என்றும் கூறுதல் மரபு. பார்ப்பான்றன்னெடு கண்ணிழந் திருந்த வித்தீத்தொழிலாட்டி (6-132-3) என்று முன்பு வந்திருத்தல் காண்க'' என்ற உ. வெ. சாமிநாதையர் உரை இங்கு நோக்கத்தக்கது.

இனி இலக்கணத்தை நோக்குவாம். ''அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்'' (தொல்.புறத்.20) என்ற சூத்திரத்தால் ஆறுதிறனகிய பார்ப்பார்ப் பக்கம் கூறப் பட்டது. அவையாவன: ஓதல் ஓது வித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல் ஏன்பன. இது மநுநூல் கூறியது. (மநு 1-88) ''(ஓதலும் தூதும் உயர்ந்தோர்

மேன'' (தொல், அகத்.28) ''உயர்ந்தோர்க்குரிய ஓத்தி னன'' (ஷெ. ஷெ.33) என்ற சூத்திரங்களால் ஓதல் காரண மாகப் பிரியும் பிரிவும் தூதாகப் பிரியும் பிரிவும் நால்வகை வருணத்திலும் உயர்ந்த அந்தணர்க்கும் அரசர்க்கும் உரிய என்றதாலும் ஓதல் தொழில் புரியும் பார்ப்பார் உயர்ந்தோர் என்றதாலும் பார்ப்பார் மன உணர்சியற்ற ஐயறிவினர் அல்லர் என்று தொல் காப்பியந்தானே காட்டி நிற்றல் கண்கூடு. ''அந்தணர்மறைத்தே''(தொல்.எழுத். 102) பார்ப்பார் வேதத்துக் கண்ணது'' என்று இளம் பூரணர் உரை.) நூலே கரகம் முக்கோல் மணையே, ஆயுங் காலை அந்தணர்க் குரிய'' (ஷெ. மரபு. 77) என்பனவும் காண்க. ஆதலால் புறநானூற்று விளக்க உரையும் இன் ரெருரு சிலர் அந்தணர் அறுதொழிலோர் என்னும் சொற்களுக்குக்கூறும் கற்பனைப் பொருளும் இலக்கிய இலக்கணங்களுக்கு முற்றும் முரண் என்பது தெளியத் தோன்றும்.

''அறவோர்...... அறுதொழிலாளர்... இருபிறப் பாளர்......அந்தணர்...மறையவர்... முப்புரி நூலோர்... பார்ப்பார் தொல்பெயராமே'' (பிங்கல5.1) என்று நிகண்டு படித்தது. பார்ப்பார் தொல் பெயரே என்று படித்ததால் தொன்று தொட்டே அந்தணர் மறையோர் அறவோர் அறுதொழிலோர் முப்புரிநூலோர் முதலிய பெயர்கள் பார்ப்பார்க்கு உற்ற உரிய உருடிப் பெயர்கள் என்ற உண்மை வலியுறுத்தப்பட்டது. செந்தமிழிலக் கிய இலக்கணங்கள் முழங்கும் உண்மை அது என்று அறிக.

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல் மறப்பர் என்ற குறளில் அறுதொழிலோர் நூல் என்றதை ''மறப் பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான், பிறப்பொழுக் கம் குன்றக் கெடும்'' (குறள்-134)என்ற குறளில் பார்ப் பான் ஓத்து என்ருர். அங்கு அறுதொழிலோர் என்றவரை இங்குப் பார்ப்பான் என்ருர். அங்கு நூல் என்றதை இங்கு

ஓத்து என்ருர். ஓத்து என்பது வேதம். ஓதியே கொள்ளு தற் காகுமாதலானும் வரிப்பாட்டாற் கொள்ளுதற் காகா தாதலானும் வேதத்தை ஓத்து என்ருர். அங்கு அறுதொழி லோர் நூல் என்றதை இங்குப் பார்ப்பான் ஓத்து என்ருர். ''அந்தணர்நூற்கும் அறத்திற்கு மாதியாய் நின்றது மன்னவன் கோல்'' (குறள்.543) என்ற குறளில் அங்கு அறுதொழிலோர் பார்ப்பான் என்றவரை அந்தணர் ஏன்ருர். அங்கு அறுதொழிலோர்நூல் பார்ப்பான் ஓத்து என்றதை இங்கு அந்தணர்நூல் என்ருர். அறுதொழி லோர் பார்ப்பார் அந்தணர் என்ற சொற்கள் பரியாயங் கள் என்பதையும் இருபிறப்பாளர் என்பது அவற்றின் உரிய மெய்ப்பொருள் என்பதையும் அறுதொழிலோர் நூல் பார்ப்பான் ஓத்து அந்தணர் நூல் என்ற சொற்கள் பரியாயங்கள் என்பதையும் அவை வேதம் என்பதையும் திருக்குறள் கையிலங்கு கனிபோல் காட்டித் திகழ் கின்றது. ஆதலால் அந்தத்தை அணவுவார் அந்தணர் என்று கூறும் பொருள் போலி என்பதை ஐயமறக் காண லாம். கற்பனைகள் பிறவும் அவ்வாறே என்க. இவ்வுரிய மெய்ப் பொருளை மறுப்பார் குறளை மறுப்பாராவார். முத்தீயந்தணர் அறுதொழிலந்தணர் ஓத்தந்தணர் வாய் மொழியந்தணர் நான்மறையந்தணர் நாத்தொழிலந் தணர் ஆகுதியந்தணர் ஐவேள்வியந்தணர் என்னும் முதுரைகட்கு முற்றும் முரணுக அந்தத்தை அணவுவார் அந்தணர் என்று கூறுதல் தகாது என்ற உண்மை காண்க. ''வேதவாய்மொழியந்தணர்'' (பெரியதிரு மொழி 5-8-8) ''நாத்தொழில் மறைவல்லார்கள் நயந் தறம் பயந்த வண்கைத் தீத்தொழில்'' (ஷ.4-5-3) என்றது காண்க. அறவோர் என்பதன் மெய்ப்பொருளை இதனுல் அறிக. அந்தணர்தமாகுதியின் புகையார் செல் வத்தணியழுந்தூர் நின்றுகந்த அமரர் கோவே'' (ஷ. 7 8-7) ''நல்ல வெந்தழல்மூன்று நால்வேதம் ஐவேள்வி யோடு ஆறங்கம் வல்ல அந்தணர்'' (ஷ 4-2-2) என்ற அறிவு தரும் மங்கையர்கோன் பெரியதிருமொழியை யும் ''அந்தணரருமறை'' (பரிபாடல் 3-14; 4-65)

''நாவலந்தண ரருமறைப் பொருளே'' (ஷை 1-13) ''இருபிறப் பிருபெயரீர நெஞ்சத், தொரு பெய ரந்தண ரறனமர்ந்தோயே'' (ஷை 14-27-28) என்ற பரி பாடலையும் ''நான்மறை யந்தணர் நவின்ற வோதை'' (சிலப். மதுரை. புறஞ்:141) ''அருமறை யந்தண ராங் குளர் வாழ்வோர், பெருநில மன்ன! காத்தனின் கடன் (ஷை. வஞ்சி. கால்.102-103)என்ற சிலப்பதிகாரத்தையும் நோக்குக. அவரைக் காக்கும் கடமைப்பாடுடையான் மன்னன் என்றார் இளங்கோ. காவானெனின் அதனால் விளையும் கேட்டை ''ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர் காவலன் காவானெனின்'' (குறள்.560) என்றார் வள்ளுவர். இவர்களுடைய சீரிய வைதிக வீறு எத்திற மாண்பு உடையது என்பதை இதனால் கண்டு ணர்க.

அறவோர் அந்தணர் என்பன பார்ப்பார்க்குப் பெய ராயிருத்தற்கு அவர் பார்ப்பாராயிருத்தல்காரணம் என்று இருமொழி அறநூல்களும் நீதி நூல்களும் அவற்றின் வழிமொழி நூல்களும் முழங்குகின்றன. வேதத்தைக் கண்ணாகக் கொண்டு வேதம் ஒன்றாலேயே உணர்த்தற் காகும் விதிவிலக்குகளாலாகிய அறத்தைப் பார்ப்பவர் களாதலால் அவர்கள் பார்ப்பார் அறவோர் என்னப் பட்டார்கள். ஆதலின் வேதத்துக்கு அந்தணர் நூல் என்பது பெயராயிற்று. அது காரணமாய் வேதம் அந் தணர் மாடு என்று சிறப்பிக்கப்பட்டது. (திருநெடுந். 4; தேசிக, பரமபத. 1). வேதம் காட்டுவது அறம், அறத்தை காண்பது வேதக்கண் கொண்டே. ஆதலின் வேதக்கண் கொண்டு அறத்தைப் பார்க்கும் இருபிறப் பாளர்க்குப் பார்ப்பார் என்பது பெயர். அதுபற்றி அவர் அறவோர் என்னப்பட்டார். அறம் பார்ப்பார் அறம் கண்டு அந்தண்மை பூண்டு ஒழுகுவாராதலின் அந்தணர் என்பது பார்ப்பார்க்குப் பெயராயிற்று. தில்லை நகர்த்திருச் சித்ரகூடம்தன்னில் அந்தணர்கள் ஒரு மூவா யிரவரேத்த, அணிமணியாசனத்திருந்த அம்மான்''

(பெருமாள். திரு. 10,2) என்ற பாடலும் ''தில்லை வாழந் தணர்களடியார்க்குமடியேன்'' என்ற பாடலும் அந் தத்தை அணவுவார் அந்தணர் என்று கூறும் பொருள் போலி என்பதைக் கையிற்கனிபோல் காட்டித்தரும்.

இவ்வுண்மையை "அந்தண ரென்போர் அறவோர் மற் றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்'' (குறள். 30) என்று திருக்குறள் காட்டித் தந்தது. மெய் யுணர்வையும் ஆத்தும குணத்தையும் அதற்குத்தக்க ஒழுக்கத்தையும் ஏதுவாகக் காட்டித் துணிந்த குறள் துணிபின் திடம் காண்க : இரக்கமடியாக நிகழும் ஒழுக்க மாதலின் அவ்வாறு துணியப்பட்டது. ''எல்லா உயிர் களும் உண்டு வாழ்வது பார்ப்பாரிரக்கமுடைமையால்'' (மநு. 1, 101: தமிழ் செய்தது) ''பார்ப்பான் மைத்திரன் (அன்பன்) என்று சொல்லப்படுவான்'' (மநு. 2.87 தமிழ் செய்தது) என்று மநு கூறினர். ''எல்லா உயிர்களுக்கும் இதத்தைச் செய்ய வேண்டியது. எவ்வுயிர்க்கும் இன்னா செய்யக் கூடாது. எல்லா உயிர்களிடத்திலும் அன்பு பார்ப்பாற்கு உத்தமமான செல்வம்'' (விஷ்ணு புராணம்- 3. 8. 24. தமிழ் செய்தது) என்று பராசர முனிவர் கூறினர். ''எல்லா உயுர்களிடத்திலும் தயை யுடைமை பார்ப்பானுக்கு வேண்டிய ஆத்தும குணம்'' (கௌதம தரும சூத்திரம், 8. தமிழ் செய்தது) என்று கௌதம முனிவர் கூறினர். கௌதம முனிவர் தரும சூத்திரத்தில் பார்ப்பானுக்கு வேண்டிய ஆத்தும குணங்கள் எட்டு என்றும் அவற்றுள் எல்லா உயிர் களிடத்திலும் தயையுடைமையை முதற்கண்ணும் கூறினர். எல்லா உயிர்களிடத்திலும் தயை பொறுமை அழுக்காறுமை தூய்மை சோர்வின்மை மங்கலம் கார்ப் பணியமின்மை அவாவின்மை என்பன அவ்வெட்டுக் குணங்கள் இம்முறையால் பார்ப்பானும் எண்குணத் தான் ஆவான். கௌதமர் பார்ப்பானுக்கு நாற்பது செம்மை செய்தலை (ஸம்ஸ்காரங்களை)க் கூறி அவைகளை முற்றிலும் பெற்றிருந்தாலும் ஆத்தும குணமற்றவனாயின்

அவனுக்குப் பரகதிஇல்லையென்றும் ஆத்துமகுணங்கள் நிறைந்தவனுயின் செம்மை செய்தவற்றுள் குறைவு இருந்தாலும் பெற்றது கொண்டு பரகதி பெறுவான் என்றும் கூறினர். (ஷை.8) ''இருபிறப் பிருபெய ரீர நெஞ்சத், தொருபெய ரந்தண ரறனமர்ந்தோயே'' (பரிபாடல். 14.27-28) என்றும் ''விறன்மிகு விழுச்சீ ரந்தணர் காக்கும் அறன்'' (பரிபாடல். 1-37-38) என்றும் பரிபாடல்கூறிற்று. மநு இரக்கம் மைத்திரம் என்ருர் பராசரர் மைத்திரி என்ருர். கௌதமர் தயை என்ருர். வள்ளுவர் செந்தண்மை என்ருர். கேசவனுர் ஈரநெஞ்சு என்ருர். அஃதுடையாராதலின் பார்ப்பார் அந்தணர் என்னப்பட்டார். அந்தத்தை அணவுவார் என்ற கற்பனை போலி என்பதைப் பண்டைப் பேரிலக்கியங்கள் காட்டி நின்றன.

பார்ப்பார் பிறப்புமுதல் இறப்புவரை உயிர்கள் வாழவே தாம்வாழப் படைக்கப்பட்டு வேதம் வகுத்த விதிவிலக்குகளாலாகிய அறம் கண்டு காத்து ஒழுகும் நியதி உடையாராதலின் அவரை மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுவார் என்ருர் திருவள்ளுவர். வேதமந்திரங்களை ஓதி வேள்விகளை முறைப்படி செய் தால் மழைபெய்கிறது. வேள்வி இல்லையேல் மழை இல்லை. மழைஇல்லையேல் பசி நின்று உடற்றும். உழவர் ஏரின் உழார். பசும்புல் தலைகாண்பது அரிது. தேவர்க் குப் பூசைசொல்லாது. தானம் தவமிரண்டும் தங்கா என்று வள்ளுவர் கூறினர். ''முறை கோடி மன்னவன் செய்யின் உறை கோடி, ஒல்லாது வானம் பெயல்'' (குறள்.559) ''ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல் மறப்பர், காவலன் காவா னெனின் (ஷை. 560) ''அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது மன்னவன் கோல்'' (ஷை.543) ''விண்ணின்று பொய்ப் பின் விரிநீர் வியனுலகத், துண்ணின் றுடற்றும் பசி'' (ஷை.13) ''ஏரினுழாஅர் உழவர் புயலென்னும் வாரி வளங் குன்றிக்கால்'' (ஷை14) ''விசும்பின் துளி வீழினல்

லால் மற்ருங்கே, பசும்புல் தலைகாண்ப ரிது'' (ஷை.16) ''சிறப்பொடு பூசனை செல்லாது வானம், வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு'' (ஷை.18) ''தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம், வானம் வழங்கா தெனின்'' (ஷை. 19) முதலியன காண்க. வள்ளுவர் வைதிகவீறு எத்துணை மாட்சித்து என்பது இவற்ருல் தெளியக் காணலாம். ஆபயன் குன்றும் என்ற குறட்குப் ''பசுக்கள் பால் குன்றியவழி அவியின்மையானும் அது கொடுத்தற் குரி யார் மந்திரம் கற்பம் என்பன ஓதாமையானும் வேள்வி நடவாதாம். ஆகவே வானம் பெயலொல்லா தென்பதா யிற்று' என்ற பரிமேலழகருரையின் அழகே அழகு என்க. ''உணவால் உயிர்கள் உண்டாகின்றன மழையால் உணவு உண்டாகின்றது வேள்வியால் மழை உண்டா கின்றது'' (கீதை. 3-14. தமிழ்செய்தது) என்று கீதை ஓதிற்று. வேள்வி நடவாத விடத்திலும் மழை பெய்ய வில்லையோ எனில் ''நல்லா ரொருவ ருளரேல் அவர் பொருட் டெல்லார்க்கும் பெய்யும் மழை'' என்றது கண்டு வேள்வி நடத்துவாரால் நடத்தாரும் பயன் பெறு கின்ருர்கள் என்று அறிக.

---

## இருபத்தைந்தாமத்தியாயம்

அத்திற வைதிகப் பெருந்தகையாளராகிய வள்ளுவர் திருக்குறளில் இன்ருெரு சாரார் தமது நாத்திகத்தையும் திருமாற்பகையையும் வேதப்பகையையும் பார்ப்பார்ப்பகையையும் ஆரியப் பகையையும் ஏற்றிக் குறட்கருத்தை முரிக்கப் பார்க்கின்ருர்கள். அது தகாச் செய்கை. உயிர்கள் உண்டு வாழ்வதற்கே பார்ப்பார் வேள்வி புரிகின்ருர்கள். ஆதலால் பார்ப்பார் செந்தண்மையால் உயிர்கள் உண்கின்ருர்கள் என்று மநு கூறினுர். அக்கருத்தையே வள்ளுவர் ''செந்தண்மை பூண்டொழுகலான்'' என்று கூறினுர். வறுமையே பார்ப்பார்க்கு உற்றது. ஆபத்து நோக்கிக் குஸூல (குதிர்) தானியராகவோ கும்பீ(குட) தானியராகவோ பார்ப்பார் இருத்தற்கு ஆகும் என்ருர் மநு (மநு. 4.7). ஆபத்துக் காலத்தில் உதவுவதற்கு ஒரு குதிரளவோ அல்லது ஒருகுடத்தளவோதான் பார்ப்பான் உணவும் பொருளை (தானியத்தை) வைத்துக் கொள்ளலாப் அதற்குமேல் வைத்துக் கொள்ளக் கூடாது என்றவாறு. இது ஒரு குலத்துக்கு ஒரு நீதி அன்று. மறை வகுத்த அறநீதி. ஓத்துக்கு விரோதமான பொருளைக் கழிக்க. வேண்டும் என்று மநு பின்னும் கூறினுர்(மநு. 4.17) சம்மாநத்தை விடம்போல் அஞ்சவேண்டும் என்ருர் (மநு. 2.162). முக்காலமும் குளித்தல் ஓதல் காலை மாலை ஓமம் சந்திவந்தநம் விரதம் பொது வேள்வி ஐம்பெரு வேள்வி தருப்பணம் முதலியவைகளை விதித்தவாறு விடாது புரிதல் வேண்டும். (மநு. 2, 28, 176) ''செய் தொழில்களாகிய வேட்பித்தல் ஓதுவித்தல்களில் நியாய முறையில் வெள்ளைப்பொருளைப் பார்ப்பான் ஏற்கலாம்'' (விஷ்ணு புராணம். 3.8.23. தமிழ் செய்தது) என்று பராசர முனிவர் கூறினுர். அம்முனிவர்காலத்திலும் 'கறுத்த பொருள்' இருந்தது போலும். பார்ப்பானுடைய உடம்பு இன்பம் துய்த்தற்கன்று. இவ்வுலகில் மிகவும்

வருந்துவதற்கே (ப்ராஹ்மணஸ்ய சரீரம் து நோப போகாய கல்பதே இஹ க்லேசாய மஹதே) என்று நூல் கூறிற்று. உலகு வாழ்வதற்குத் தாம்வாழும் தரும சிந்தையும் ஒழுக்கமும் துறவும் அருளும் உடையரா தலின் பார்ப்பாரை மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அறவோர் என்று வள்ளுவர் கூறினர். பார்ப்பார்க்கு வகுத்த தொழிற்பாகுபாடுகள் எல்லாம் உலகு வாழ்வதற்கே என்றும் அது நிகழ்வது துறவில் என்றும் இதனல் உணர்த்தப் பட்டது. பார்ப்பாரை மட்டிலுமே நோக்கில் அவர்களுக்கு உற்றது மெய்வருத் தலும் வறுமையுமே. அவ்வாறு பார்ப்பார் ஒழுகுகின் ரூர்களா என்ற கேள்வி எழுவதற்கில்லை. ஒழுகுவாரைப் பற்றியும் அவர்களுக்கு வகுத்த ஒழுக்கத்தைப் பற்றியுமே நூல் கூறும். குறள் கூறுவது ப னு வ ற் று ணி பு (குறள்.21) இது மேலேயும் கூறப்பட்டது. த ரு ம விருடிகள்துணிபே திருவள்ளுவர் துணிபு என்ற உண்மை காண்க. ஒழுகாதாரின் இழிவும் அவர்களுக்கு வரும் கேடுகளும் நூல்களுள் பரக்கக் கூறப்பட்டுள்ளன. குற ளிலும் கூறப்பட்டுள்ளது. "சாதிய தொன்றே தான் சரணகப் புறம்பட்டார். ஆதரமேவிச் சகனிய விருத்தி யாழ்வர் சிலர். மோத வெகுண்டெதிர் மேல்விழப் பாய் வர்க ளோ ரிலச்சை, யாதுமிலார் நரர் யாவரும் நாணிட வாடுவரே" (சங்கற்பசூரி. 5.39; சுபாஷித. 4-11 தமிழ் செய்தது. இது பிறப்பொழுக்கம் கெட்ட பார்ப்பார் துர்வாதியர் குப்பை நாய் இம்மூவரையும் பொருளாகக் கொண்ட சிலேடைச் சுலோகம்) என்று வேதாந்ததேசிகர் கூறினர். ஒழுகாதாரைக் காட்டி ஒழுகுவாரையும் அற நூல்களையும் இகழ்தற்கும் பழித்தற்கும் ஆகாது.

இவ்வளவால் பார்ப்பார்த் தப்பிய என்றது பரி மேலழகர்காலத்திலேயே திருத்தப்பட்டது என்று கூறு வது தகாது என்பது நன்கு புலனுகும். மேலே கூறியபடி சமயப்பகைதான் இவர்கள் பரிமேலழகரைப் பழித்தற்கும் அவருரையை இகழ்தற்கும் அடியாகும். பரிமேலழகர்

பார்ப்பார். திருமாலடியார். திருவத்திகிரிப் பேரருளாளப் பெருமாள் திருநாமம் பூண்டவர். "அத்திகிரி யருளாளப் பெருமாள் வந்தார், ஆனைபரி தேரின்மே லழகர்வந்தார்" (தேசிகமாலை. திருச்சின்ன. 10) என்ற வேதாந்ததேசிகர் திருச்சின்னமாலை ஆனைமேலழகர் பரிமேலழகர் தேரின்மேலழகர் என்பன திருவத்திகிரித் திருமாலின் திருநாமங்கள் என்றதைக் காட்டித்தரும் பரிமேலழகர் என்ற இவரதுபெயர்க்கு ஏதுகூறும் ஐதிகம் கற்பனையே என்க. சடகோபரைப் பெரியார் என்று போற்றிய பெருஞ்சான்றோர் பரிமேலழகர் (குறள்.இறைமாட்சி. தொடக்கம்). உரைகாரர்களுக்கு வழிகாட்டியாய்த் திகழும் உத்தமர். ஆரியமும் செந்தமிழும் ஆய்ந்துணர்ந்த பேரறிஞர். உரைக்குமிடத்து ஆக்கியோன் கருத்தை அறிந்து விளக்கும் தகையாளர். திருமாலடியாராகிய இவரது செவ்வேளைப் பற்றிப்பாடிய பரிபாடலுரை இவருடைய ஒப்பற்ற பெருமைக்கும் நேர்மைக்கும் தகைமைக்கும் தக்கசான்றாய்த் திகழாநின்றது. பிறருரைகளில் அத்தகைய நேர்மை காண்பது அரிது. மேலும் உரைகாரர்கள் பிறர் பார்ப்பாராயிருப்பினும் தமது சமயத்தவராயிருந்தால் அவர்களைப் பரிமேலழகரைப் பழிக்கும் இவர்கள் போற்றுகின்றார்கள். ஆதலின் சமயப்பகையின் மிகையே பரிமேலழகர்பாற் பகைக்குக் காரணம் என்பது தெளியக் காணலாம். இவ்வாறு பழிப்பவர்கள் ஒரு சிலரே என்றது மேலே கூறப்பட்டது. அதை இங்கும் யாப்புறுத்துவாம். முதிர்ந்து கனிந்த சைவச் சமயப் பெருமனச் செல்வர்கள் ஒருமனப் பண்பராய்ப் பரிமேலழகரைப் போற்றியுள்ளார்கள். "வள்ளுவர்சீ ரன்பர்மொழி வாசகம் தொல் காப்பியமே தெள்ளுபரி மேலழகன் செய்தவுரை—ஒள்ளியசீர்த் தொண்டர் புராணம் தொகுசித்தி யோராறும் தண்டமிழின் மேலாந்தரம்" என்று சைவசமய சந்தானகுரவருள் ஒருவராகிய உமாபதி சிவாசாரியர் பாடிய இவ்வெண்பா இங்கு யாங் கூறியதைத் திடப்படுத்தும். நந்தமிழகத்தில் நிலவி

வரும் சைவத் தொன்மடச் சான்ரோர் அனைவரும் அத் தகையரே. ஆதலின் பரிமேலழகர்மேல் இன்ரெருசிலர் சுமத்தும் பழி தகாது, அதன் தகாமையைப் பின்னும் தெரியக் காட்டுவாம்.

---

## இருபத்தாருமத்தியாயம்

புதல்வரைப் பெறுதல் என்னும் திருக்குறளதிகாரத்தில் மக்கட்பேறு என்றதற்குப் புதல்வர் புதல்வியர் என்னும் இருவருமே பொருளாயிருக்கப் புதல்வரைப் பெறுதல் என்று பரிமேலழகர் உரைத்தது போலி என்றும் அது அவர் ஏற்றிய ஆரியப் பொருளேயன்றி உரிய தமிழ்ப்பொருளன்று என்றும் இவர்கள் பரிமேலழகரைத் தூற்றுகின்ருர்கள். இவர்கள் அலியை ஏன் விலக்கினரோ ? இவர்பால் அலி என்பிழைத்ததோ ? அது நிற்க, திருக்குறள், அறநூல், அதனுட் கூறிய பொருள் முற்றுமே அறநோக்கால் கூறியதேயன்றிப் புற நோக்கால் கூறியதன்று. அறத்தான் வருவதே இன்பம்'' (குறள் 30) என்றது இன்பத்துக்கு வகுத்த இலக்கணம். அவ்வாறு இலக்கணம் வகுத்த வள்ளுவர் கூறும் இன்பம் அறநோக்கால் கூறிய அறத்தான் வரும் இன்பத்தையே என்று அறிக. அறங்களுள் இல்லறம் தலைமை பெற்றது. ''இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு நல்லாற்றி னின்ற துணை'' (குறள் 41) ''துறந்தார்க்கும் துவ்வார்க்குமிறந் தார்க்கும் இல்வாழ்வா னென்பான் துணை'' (குறள் 42) என்று இருப்பாராகிய பிரமசாரி வானப்பிரத்தன் சந்நியாசி என்னும் மூன்று நிலையினர்க்கும் இறந்தோராகிய பிதிரர்க்கும் இல்வாழ்வான் துணையாதல் பற்றி இல்லறம் தலையறம் என்ற பொருள் விளக்கப்பட்டது. இல்லறத்தின் மேன்மை இராமாயணத்துள்ளும் (அயோத்யா. 106. 22) மநு நூலுள்ளும் (6-89-90; 7-17, 39) கூறப்பட்டுள்ளது. அத்துணை மேன்மையுடைய இல்லறத்தான் வரும் இன்பத்துள் புதல்வரைப் பெறுதலும் ஒன்று என்று வள்ளுவர் கூறினர். நால்வகை ஆச்சிரமங்களையும் அவற்றுக்கு வகுத்த அறங்களையும் பேணும் வள்ளுவர் பரமவைதிகர் என்பதை இவ் விருகுறளும் காட்டித்தரும். பிரமயாகம் தேவயாகம் மானுடயாகம் பிதிரர்யாகம் பூதயாகம் என்பன

ஐம்பெருவேள்விகளாம். அவைகள் பஞ்சமகாயக்ஞங்கள் என்னப்படும். பிரமயாகம் என்பது வேதம் ஓதல் தேவ யாகம் என்பது ஓமம் வளர்த்தல் மானுடயாகம் என்பது விருந்தோம்பல் பிதிரர்யாகம் என்பது நீர்க்கடனாற்றல். பூதயாகமென்பது மானுடமொழிந்த பூதங்கட்குப் பலி இடல். ''தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங் கைம்புலத்தா றோம்பல் தலை'' (குறள் 43) என்ற குறள் இல்வாழ்க்கை என்னும் அதிகாரத்தில் உள்ளது. அவை இல்வாழ்வானுக்கு வகுத்த தருமம் என்பது இதனால் காட்டப்பட்டது. தருமம் செய்வார் பெறுவது இன்பம் அது தருமத்தான் வருவது என்பது குறள் உணர்த்தும் தருமத்திட்பம். புதல்வரைப் பெறுதல் தருமத்தால் வரும் இன்பம் என்பது அத்திட்பம். தாம் இருக்குமளவும் தம்மைத் தெய்வமெனப் பரிந்து பேணு வான் என்றும் இறந்தபின் நீர்க்கடன் பிதிரர் வேள்வி முதலிய ஆற்றி நற்கதி அடைவிப்பான் என்றும் கருதிப் பெற்றோர் தாம்நோற்றதன் பயனாகப் புதல்வரைப் பெற்று மகிழ்வார் என்ற பொருள் இதனால் உணர்த்தப்பட்டது. தாம் புரிந்த அறத்தின் பேறே புதல்வர், புதல்வர் புரியும் அறத்தின் பேறே தாம் இம்மை மறுமைகளில் நலம் பெறு தல் என்று எண்ணி ஈன்றோர் இன்புறுவர் என்றவாறு. "இவன்தந்தை என்னோற்றான் சொல்'' (குறள் 70) என்ற தால் புதல்வரை நோற்றுப் பெறுதல் என்னும் பொருள் காட்டப்பட்டது. அறம் நோக்கிக் கூறியபொருள். ஆக்கையை மட்டிலுமே நோக்கிக் கூறியதன்று ''யானென தென்னுஞ்செருக் கறுப்பான் வானோர்க், குயர்ந்த வுலகம் புகும்'' (குறள் 346) ''தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி, வலைப்பட்டார் மற்றை யவர்'' (குறள் 348) என்று கூறிய திருவள்ளுவர் புதல்வரைப் பெறுதல் என்னும் இவ்வதிகாரத்தில் எனது புதல்வன் எனது புதல்வி என்னும் புறப்பற்றால் புறத்தே வரும் உணர்வை இன்பம் என்றும் அதை நிகர்த்ததோரின்ப மில்லையென்றும்கூறினார் என்பதுமுரண். மக்கட்பேறு எனப்

பொதுப்பட இருப்பினும் "எழுபிறப்பும் தீயவை தீண்டா பழி பிறங்காப், பண்புடை மக்கட் பெறின்" (குறள் 62) "அறிவறிந்த மக்கட் பேறு" (குறள் 61) என்றதால் எழு பிறப்பும் தன்னைத் தீவினை தீண்டாது:தேய்ந்து ஒழியும்படி தனது பண்புடை மக்களின் நல்வினையாம் அறம் பயக்கும் நன்மையைக் கருதிப் பெற்ருேர் இன்புறுதல் இவ்வதி காரத்தில் கூறப்பட்டுள்ளது. "யாமறிவதில்லை (குற்ள். 61) என்றது அறக்காட்சி. மறைக்காட்சி பல்பிணி யிடும்பை கூர் புறக்காட்சியன்று. அதை நூல் உணர்த்த வேண்டுவதில்லை- மக்கள் தாமே தமது புலால் விழியாலும் புறத்தோலாலும் கண்டு தீண்டி உணர்தற்காகும். அவ்வுணர்வை நூல் கூறில்அது அநுவாதமே (வழிமொழிதலே) யாமன்றி நூலுணர்த்தும் பொருள் ஆகாது. பசித்தவனுக்கு உண்ணும் இன்பத்தை ஒத்ததோரின்பமில்லை களைத்தவனுக்கு உறங்கும் இன்பத்தை ஒத்ததோரின்பமில்லை என்பது நூல் உணர்த்த வேண்டுவதொன்றன்று. அத்தகையதோ ரின்பத்தை இங்குக் குறள் உணர்த்தவில்லை. இங்குக் கூறியது பனு வற்றுணிபாம் சிறப்புற்ற அறமாட்சி யுண்மை. தம்புதல்வன் தாமிருக்கும் வரை மறையோ தும் வாயால் மதலைமொழி தொடக்கமாய் முதுமொழி யீருக அவ்வப்பருவங்களுக்குத்தகத்தன்மொழியால் மகிழ்வித்தும் அறவோர் குழாத்துச் சான்ருேன் எனப் புகழ்பெற்றும் கைகளால் பணிவிடை செய்தும் கட்டிக் காத்துப் பேணியும் தாம் இறந்தபின் தனது அளவுடைய சிறுகை யளாவிய பிதிருணவாம் பிண்டம் முதலாம் கூழிட்டு நீராற்றிப் பரலோகம் அடைவித்தும் தமக்கு உற்ற துணையாவான் என்று எண்ணி இன்புறுவார் என்பது குறளின் மெய்ப்பொருளும் தாற்பரியமுமாம். வீடு பெற்ற சீவாத்துமா பரமாத்துமாவுக்குப் பரமபதத் தில் முதல் முதலாகச்செய்யும் விண்ணப்பத்தின் பெற் றியைக் கூறும் உபநிடதப்பொருளை விளக்குமிடத்து "இப்பாசுரங்களைக் கேட்டருளிய ஸ்ரீய:பதி (திருமகள் கேள்வன்) முலைபிரிய மாட்டாத முக்தனை (மதலையான)

புத்திரனுடைய முதல் வார்த்தையைக் கேட்டாற் போலே உகந்து'' (பரமபத. பராப்திபர்வ) என்று வேதாந்த தேசிகர் பணித்த பாசுரம் இங்கு நோக்கத் தக்கது. அறத்தான் வரும் இன்பத்தை உலகவழக்கோடு ஒட்டச் சமைத்து ஊட்டும் திவ்விய கவியொண்மை அத்தகைத் தாம். ''தம்மக்கள்'' என்று புறப்பற்ருல் கூறியதன்று. அது முரணும் என்று மேலே கூறப்பட்டது. ''நன்மக்கட் பேறு'' (குறள். 60) என்று முன்னதிகாரம் முற்றலான் அந்நன்மக்களைத் தம்மக்கள் என்று அற மார்க்கத்தை அகமார்க்கமாக்கி அறத்தாள் வருவதே இன்பம் என்ற உண்மையின் இனிமை உணர்த்தப் பட்டது. முற்குறள் கூறியது அறத்தின் நலம். பிற் குறள் கூறியது அறத்தின் நயம் என்ற நயம் காண்க.

முன்னூல்கள் விளக்கும் பொருளும் புதல்வரைப் பெறுதல் என்பதே ''தென்புலவாழ்நர்க் கடனிறுக்கும் பொன்போற் புதல்வர்'' (புறநா. 9). ''பொன்போற் புதல்வனே டென் னீத்தோனே'' (ஐங்குறு 265). ''புதல் வனை ஈன்றெனப் பெயர்பெயத் தவ்வரி'' (நற்றிணை 370) ''புதல்வற் பயந்த புனிறுதீர் பொழுதின் நெய்யணி மயக்கம் புரிந்தோள் நோக்கி அய்யர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும் செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற் கண்ணும்'' (தொல் பொருள். கற்பு-144. சாதகருமச் சடங்கும் பிதிரர் கடன் தீர்ந்தமையும் கூறியவாறு) ''நல் லோள் கணவனொடு நனியழல் புகீஇச், சொல்லிடை யிட்ட பாலை நிலையும் அரும்பெருஞ் சிறப்பிற் புதல்வற் பயந்த தாய்தப வரூஉந் தலைப்பெய னிலையும்'' (ஷை ஷை புறத்திணை 77) என்பன காண்க. தென்புலத்தார் என்னும் சொல்லுக்கு இன்ருெரு சிலர் கூறும் பொருள் கற்பனை என்பதும் காண்க.

''தம்பொரு ளென்ப தம்மக்க ளவர்பொருள், தந்தம் வினையான் வரும்'' (குறள் 63) என்ற குறளில் தம்மக் களைத் தம்பொருள் என்று அறிந்தோர்சொல்லுவர் என்று

பனுவற்றுணிபை உணர்த்தினர். அது அறவோர் துணிபு. நன்மக்களைப் பெற்றார் பெறும் மறுமைப் பயன் இக்குற ளில் கூறப்பட்டுள்ளது. அது அறநோக்கால் என்று அறிக. இக்குறளில் தம்மக்கள் என்னப் பட்டவரைத் ''தம்பொருள்'' என்றார். அதனால் புதல்வர் உணர்த்தப் பட்டுள்ளது பின்னும் திடனாகும். பெண்ணைப் "பிறன் பொருள் (குறள் 141) என்றும் ''பிறனியலாள்'' (குறள். 147) என்றும் ''பிறற்குரியாள்'' (குறள் 149) என்றும் ''பிறன் வரையாள்'' (குறள் 150) என்றும் திருக்குறள் பன்னியுரைத்துள்ளதாலும் புதல்வர் தம் பொருளாத லாலும் பெண் பிறன் பொருளாதலாலும் தம்பொரு ளாகாமையாலும் மக்களைப் பெறுதல் என்பது இவ்வதி காரத்தில் புதல்வரைப் பெறுதல் என்ற பொருளையே உணர்த்திப் புதல்வியை விலக்கி நிற்றல் கண்கூடு. பிறன்பொருள் பிறற்குரியாள் பிறனியலாள் பிறன்வரை யாள் என்று ஒருமையிற் கூறியதால் அறநோக்கால் கூறிற்று என்பது திடனுறும், '' தந்தை மகற்காற்று நன்றி'' (குறள் 67) ''தன்மகனைச் சான்றோ னெனக் கேட்டதாய்'' (குறள் 69) ''மகன் தந்தைக் காற்று முதவி'' (குறுள் 70) என்ற ஆண்பாற் பிரயோகங்களையும் நோக்குக: ஆதலால் மக்கள் என்னும் பொதுச்சொல் இவ்வதிகாரத்தில் புதல்வரையே உணர்த்திநின்றது. அஃதுணர்த்திய அறங்களைச் செய்தல் புதல்வர்க்கே உற்றனவும் உரியனவு மாதலின் புதல்வரே உணர்த்தப் பட்டுள்ளது கையிற் கனியாம். இதைச் "சாகபசு'' நியா யம் என்ப. வேள்வியில் இடுதற்குப் ''பசு'' வை (விலங் குப்பொதுவை) வேதம் விதித்தது. ஆரியத்தில் 'பசு' என்னும் சொல் விலங்குப் பொதுவைக் கூறும். வேள்விப் பிரகரணத்தில் வேதம் ஓரிடத்தில் ''சாகத்தை'' (வெள்ளாட்டை) விதித்தது. இச்சிறப்பைக் கொண்டு பொதுப்படப் பசு (விலங்கு) என்று ஓதிய இடங்களிலும் சாகம் (வெள்ளாடு) என்ற சிறப்புப் பொருளே கொள்ளப் படவேண்டும் என்ற நியாயம் வகுக்கப்பட்டுள்ளது. அந்த நியாயம் சாகபசு நியாயம் என்னப்படும். அந்த

நியாயத்தால் இவ்வதிகாரத்தில் மக்கள் என்ற பொதுச்சொல் புதல்வர் என்ற சிறப்புப் பொருளேயே உணர்த்தி நின்றது. இதை ஒன்ருெழி பொதுச்சொல் என்று கூறுவர். (நன்னூல் 352.)இப்பெற்றங்கள் பால் சொரிந்தன என்றவிடத்திற்போல் பொருள் கொள்ளப்படும். பெற்றம் என்றது ஆணுெழி பசுப்பெயராயது போல் மக்கள் என்றது பெண்ணுெழி புதல்வர்ப் பெயராயது. இக் குறளதிகாரத்தில் மக்கள் என்பது பொதுச்சொல்லாதலின் புதல்வியையும் உணர்த்தும் என்பார்க்குப் பெற்றங்கள் பால் சொரிந்தன என்றவிடத்தில் எருதுகளும் பால் சொரிந்தன என்று பொருள் கொள்ளவேண்டிவரும். "பெற்றம் புலியின் தோல் போர்த்து மேய்ந்தற்று" (குறள். 273) என்ற குறளில் பெற்றம் என்ற சொல் பசுவைக் கூறியுள்ளது. இங்கு நோக்கத் தக்கது. புதல்வரைப் பெறுதல் என்பதே இக் குறளதிகாரத்து உரிய பொருள் என்ற உண்மையும் சான்ருேர் போற்றும் பரிமேலழகர் மேல் பழிசுமத்தல் தகாச்செயல் என்பதும் இதனுல் காட்டப்பட்டது. பரிமேலழகருரை மறுத்தற் காகாதோ எனின் மறுக்கத் தக்கவை இருப்பின் அவை நன்கு மறுத்தற்காகும். மறுப்பு என்பது நெறியில் நிகழும் அறிவின் செயல். அது அறிஞர்க்குத் தக்கதே. உரைகாரர்கள் ஒருவரை ஒருவர் மறுத்திருக்கின்ருர்கள். இந்நூலுள்ளும் மறுப்புக்கள் உள்ளன. பல பொருள்கள் பொருந்துவன போல் தோன்றுமிடத்தில் முன்னூற்றுணிபையும் ஆக்கியோன் கருத்தையும் நன்கு ஆராய்ந்து சான்றுகளேத் தகப் பரிமாறிப் பொருத்தம் பயன் முதலியவைகளே ஓர்ந்து உரிய பொருளேத் துணிதலும் தெளிதலும் நல்வாதியர்க்குத் தக்க கருமமும் தருமமுமாம். மறுப்பு என்பது பகைத்தலன்று பழித்தலன்று. அது ஒருதருமம். மறுக்கப்பட்டார்க்கு மறுப்பார் செய்யும் பாராட்டு அது எனக் கொள்ளவுமாம்.

---

## இருபத்தேழாமத்தியாயம்

ஆரியம் என்னும் சொல் இடத்தையோ இனத்தையோ கூறும் சொல் அன்று என்றும் குணத்தை உணர்த்தும் சொல் என்றும் நல்லறிவுடையார் அருளுடையார் என்பது ஆரியர் என்னும் சொல் உணர்த்தும் உரிய பொருள் என்றும் அக்குணமில்லாதார்க்கு தஸ்யுக்கள் என்பது பெயர் என்றும் மேலே விளக்கப்பட்டது. ஆரியரல்லார் பூரியராவார். இனி ஆரியம் தமிழ் என்னும் மொழிகள் என்றுமே ஒன்றி நிலவிவரும் திவ்விய செவ்விய தூமொழிகள்என்ற உண்மையை விளக்குவாம்.

தமிழ் என்னும் சொல் த்ரமிட என்னும் ஆரியத்தின் தமிழ் வடிவம். இதை இன்றொரு சிலர் மறுக்கின்றூர்கள். தன்மொழியில் தனக்கோர் பெயரில்லாமல் பிறிதோர் மொழியின் சொல்லைத் தனக்குப் பெயராகத் தமிழ் கொண்டது என்பது தகாது என்பது இவர்கள் கூறும் ஏது. தமிழ் ஒன்றுதான் ஆரியத்தை எதிர்த்து நின்று தன் தன்மை குன்றுத் துய்ய மொழியாய் நின்றது. கேரளம் ஆந்திரம் கன்னடம் முதலிய பிற பழந்திராவிட மொழிகள் ஆரியத்தை எதிர்த்து நிற்க இயலாமல் ஆரியமயமாய்த் தேய்ந்து விட்டன. எவ்வளவு தேய்ந்து மெலிந்தாலும் சந்தனக்கோல் வேப்பங்கோலாகாது என்கின்றூர்கள். இவ்வாறு கூறுபவர் வைதிகச் சிறப்புச்சமயமொன்றைச் சேர்ந்தாருள் ஒரு சிலரே. உங்கள் சமயமும் சமயப் பெயரும் சமயநூலும் அது கூறும் இறைப் பொருளின் பெயரும் சமய மந்திரமும் பிறவும் முற்றுமே வேப்பங்கோல் தேய்ந்துதானே உங்கள் சமயச் சந்தனக்கோலாயிற்று என்று இவர்களைக் கேட்டால் விடை கூற வாயில்லையே என்றதை இவ்வாறு கூறுபவர் அறியாராயினர்.

தமிழ் என்னும் சொல்லுக்கு உலகத்தில் இயலும் மொழிகளுள் ழகரத்தைத் தனக்கே சிறப்பெழுத்தாக

உடையது என்றது பற்றி இம்மொழி தமிழ் என்னப்பட்டது என்பர் சிலர். அது பொருந்தாது. அவ்வாறு கூறுவதற்கு மகரம் பெருந்தடையாம். மேலும் உலகத்தில் நிலவும் எல்லா மொழிகளையும் ஆய்ந்து அவைகளுள் ழகரம் இல்லை என்றும் தேர்ந்து அதன் பிறகு ழகரத்தைச் சிறப்பெழுத்தாக உடைய இம்மொழிக்குத் தமிழ் என்றும் பெயர் இடப்பட்டது என்பது பொருந்தாது. இவ்வாறு பெயரிடுமுன் இம்மொழிக்குப் பெயரில்லாதிருந்து பின்னரே இப்பெயர் இடலாயிற்று என்பது பெறப்படுமாதலின் இவர்கள் கூறும் பொருள் போலி என்பது தானே புலனாகும். றகர னகரங்களும் தமிழுக்குச் சிறப்பெழுத்தாதலின் தமிற் தமின் என்று கூருமைக்குக் காரணம் யாதோ? பிறவும் அத்தகையவே. ஆரியமும் திராமிடமும் என்றுமே ஒன்றித் திகழும் மொழிகள் என்ற உண்மை காண்பார்க்குத் திராமிட என்னும் ஆரியச்சொல் தமிழ் என்று தமிழ்மொழிக்குப் பெயராயிருத்தலின் தகைமை தானே தோன்றும். இதனால் தமிழுக்கு எவ்விதக் குறைவுமில்லை. மருத்துவம் ரசாயநம் சோதிடம் பௌதிகம் கணிதம் சாகுநம் கற்பம் சிற்பம் நிருக்தம் அருத்தம் தருக்கம் மீமாஞ்சை சாமுத்திரிகை, முதலிய நூல்கள் பல ஆரியத்தில் உள்ளன. அவைகளை இருமொழியொருமனத்தமிழறிஞர்கள் நன்கு அறிந்தவர்கள். அவற்றுள் வேண்டும் பொருள்களை நடைத்தமிழ் நூல்களில் கூறியிருக்கின்றார்கள். ஆரியம் தெய்வமொழி. பாரதநாட்டுப் பெருமொழி. தமிழ்நாடு பாரதநாட்டுள் அடங்கியது. ஐந்து திராமிடம் (பஞ்சத்ராமிடம்) என்னும் பிரசித்தி மறுக்க வொண்ணாது. கடல் கொண்டது என்ற கதையே இவர்கள் எத்தடைக்கும் கூறும் விடை. இருமொழிகளும் தொன்றுதொட்டே ஒன்றிப் பயின்று வரும் உண்மை கண்கூடு. அது கதைகளாலும் கற்பனைகளாலும் மறுத்தற்காகாது.

ஆரியம் தமிழ் இரண்டுக்கும் எழுத்து ஒன்றே. ''எழுத்தெல்லாம்'' (குறள். 1) என்ற திருக்குறள்

இதற்குச் சான்றும். கிரந்த எழுத்துக்கள் இதை மெய் பிக்கும். வடிவத்தாலும் நாதத்தாலும் சங்கு பிரண வத்தை ஒத்துள்ளளது. "யாதொன்றின்கண் வடிவத் திலும் நாதத்திலும் தாரத்தன்மை (பிரணவத்தன்மை) காணப்படுகிறதோ அந்தப் படைக்கலவிறைப் பெருமா னுடைய பாஞ்சசன்னியம் (சங்கு) நம்மைக் காத்தருள்க" (ஷோடசாயுத. 10.தமிழ் செய்தது) என்று வேதாந்த தேசிகர் கூறினர். ஆரியம் தமிழ் என்னும் இருமொழி களுக்கும் பொதுவாகிய கிரந்த எழுத்து ஒன்றுக்கேதான் இவ்விலக்கணம் பொருந்தும். ஆதலால் கிரந்த எழுத்துத் தான் தொன்று தொட்டு இயன்றுவரும் எழுத்து என்ற உண்ணம நன்கு காணலாம். தேவநாகரி எழுத்துக்கு இது பொருந்தாதாதலின் அது பிற்கால் எழுத்து என்க. இருமொழிகளுக்கும் பொது எழுத்துக்கள் பல சிறப்பெழுத்துக்கள் சில. அச்சிறப்பெழுத்துக்களும் இடமுயற்சிகளின் வேறுபாட்டினடியாக ஆரியத்தில் அதற்கு வேண்டிய சிலவும் தமிழில் அதற்கு வேண்டிய சிலவும் எழுத்தில் இயன்று வருகின்றன. டகர.ரகர லகர ழகர ளகரங்களும் ஞகர நகர யகரங்களும் பகர மகரங்ளும் பிறவும் இடமுயற்சிகளால் ஒருபுடை ஒப்புமை உடையனவாம். பாணிநீய சிக்ஷையையும் சூத்திரத்தையும் தொல்காப்பியத்தையும் ஓர்ந்து இவ் வுண்மை காணலாகும். வளியின் தன்மை நுண்மைகளின் பரப்பை மறைநூல் களுள்ளும் மருத்துவ நூல்களுள்ளும் வியாசமுனிவர் பணித்த பிரமசூத்திரம் ப்ராணபாதத் துள்ளும் கண்டுகொள்க. பாணிநி சூத்திரத்தில் ளகரம் ஓதப்படவில்லே. ஆயினும் அவ்வெழுத்து இயன்றுள்ளது என்பதைச் சிவபிரான்ஓதிய அஹிர்புத்ந்யஸம்ஹிதை யாலும் இலக்கியங்கள் பிறவாலும் தெரியலாம். டகரம் வேதத்தில் சில இடங்களில் ளகரமாக உச்சரிக்கப் படுகிறது. வேதம் தமிழ்செய்த சடகோபர் கருடன் என்ற சொல்லேக் கருளன் என்று ஓதியருளினர். (திருவாய் 5. 7. 3), தமிழில் எழுத்து இல்லேயாயினும் ககரவோசை சிங்கம் செங்கமலம் பங்கயம் முதலிய

சொற்களிலும் ஜகரவோசை நெஞ்சு பஞ்சு மஞ்சு முதலிய சொற்களிலும் சகரவோசை அச்சம் எச்சம் தச்சன் முதலிய சொற்களிலும் டகரவோசை சட்டம் பட்டம் வட்டம் முதலிய சொற்களிலும்காணக் கிடக்கின்றன. பிறவும் ஓர்ந்துணர்க. ஆதலின் எழுத்து இல்லை என்பது கொண்டு ஓசை இல்லை என்பதற்காகது. பரிச (ஸ்பர்ச) ஊடும (ஊஷ்ம) ங்களின் பல்வேறு விகற்புகள் கூறிமுடித் தற்காகாது. வல்லோசை மெல்லோசை குழைந்தவோசை இடையோசை என்பனவற்றின் எண்ணிறந்த விகற்புகள் முற்றுமே இலக்கணநூலுள் அடக்குதற்கு இயலாவா தலின் சிலவே கூறப்பட்டுள்ளன. கூறப்படாதவை பல. கூறப்பட்டவை கூறப்படாதவைகளுக்கு உபலக்கணம் எனக்கொள்ளவும் அமையும். ஒருமை இருமை பன்மை களுள் இருமை உடன்பாடேயரம். ''ஓரெழுத் தொரு மொழி, இரண்டிறந் திசைக்கும் தொடர் மொழி யுளப்பட மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே'' (தொல். எழுத், 45) என்று ஒன்று (ஏக வசந) இரண்டு (த்விவசந) பல (பஹுவசந) என்னும் ஆரிய இலக்கண வழக்குப் பற்றித் தொல் காப்பியர் நூற்றுள்ள குறிப்புக் காண்க. ''சிறப்பினு மினத்தினும்'' (நன்னூல் எழுத். 73) என்னும் சூத்திரவிருத்தியுரையில் ''உயிருள்ளும் எகர ஒகரங்கள் ஒருவாற்ருற் சிறப்பெழுத்தாயினும் பிராகிருதமொழியுள் பயின்றுவருதல்ானும் சாமவேத முடையாருள் ஒருசாரர் இசை பற்றிக் குழூஉக்குறி போலக் கொண்டோதுபவவாகலானும் இறுதிக்கண் வையாது முறைபற்றி ஏகார ஓகாரங்களின் முன்வைக்கப் பட்டன'' என்று சங்கரநமச்சிவாயர் உரைத்துள்ளது இங்கு நோக்கத்தக்கது. ஆரிய பிராகிருத தமிழ்களுக்கு உற்றுள்ள இயைபும் ஒருமையும் எத்துணைச் சான்றும் சீரும் உடையது என்பது இதனல் நன்கு தெரியலாம்.

தமிழ் ஆரியத்தை எதிர்த்து ஒதுக்கியது என்பார் கூற்று போலி என்க. பிராகிருதச் சொற்களை அவ்வாறே தமிழில் வழங்கற்கு ஆகும். எல்லா நாட்டிலும் இயல்வது

பாகதம் என்பது பேரகத்தியம் என்று மேற்கொள்ளப் பட்டு வருகிறது. அதற்குத் தமிழிலக்கணவரம்பு இல்லை. ஆரியம் தெய்வமொழியாதலான் அதைத் தமிழில் வழங்கு வதற்குச் சில வரம்புகள் செய்யப் பட்டுள்ளன. அது மதிப்பேயன்றி எதிர்ப்புஅன்று, எதிர்க்கப்பட்ட மொழியை இலக்கணவரையறைகளால் இயைபுறச் செய்து உளப் படுத்தினர்கள் என்பது பொருந்தாது. அது முரணும் அசம்பாவிதமுமாம். ஆரியத்தையும் பிராகிருதத்தையும் உள்ளவாறே தமிழில் வழங்கத்தட்டில்லை. இதற்குச் சான்றோராட்சியே சான்றும். ''அர்ச்சிக்கின்று (திருவாய் 10. 2. 6) ''வைட்ணவர்'' (திருவாய் 5, 5, 11) தமிழில் ஷகர எழுத்தின்மையின் டகரம் வந்தது. அதுஷகரமாம். ஷகர பாடமே இருத்தற்குமாம்.) ''திருச்சித்ர கூடம்'' (பெருமாள் திரு. 10) ''பரமாத்மனை (பெரியாழ்வார் திருமொழி 1. 1. 12) ''சார்ங்கவில்'' (நாச்சியார் திருமொழி, 9.9) ''கோவர்த்தனனை'' (ஷை. 13.8) ''தர்க்கச்சமணர்'' (இராமாநுச நூற். 99) ''ப்ரபந்த சாரம்'' (தேசிக.ப்ரபந்த.18) ''கும்பகர்ணன்'' (பெரிய திருமொழி. 10. 3.2) ''அன்வயித்தாரும்'' (இராமாவ. உயுத்த. இரணியன். 136) ''வர்க்கமெல்லாம்'' (ஷை. ஷை. 172) ''அன்வயமேதும்'' (ஷை மாயா சீதை. 36) ''மஞ்சைநிகருந்த்யாக வள்ளலே'' (விறலிவிடுதூது. 902) ''பச்சையெறிக்கும்ப்ரபையன்'' (தக்கயாகப்பரணி) ' சந்திதர்ப்பணம்'' (சிவவாக்கியர்) ''ப்ரசண்டவாசல்'' (ஷை) ''தர்ப்பபூசை'' (ஷை) என்பன காண்க. ஆதலின் ஆரியமும் பிராகிருதம்போல் உள்ளபடியே தமிழில் வழங் கற்கு ஆகும். தமிழ் ஆரியத்தை எதிர்க்கவில்லை. இரண்டறத் தழுவியே நிற்கின்றது என்ற உண்மை இலக்கியம் கண்டார்க்குக் கண்கூடாதலின் அதற்கு மாருக இன்ரெருசிலர் கூறுவது கற்பனை என்க. தமிழில் பயின்றுவரும் சொற்கள் பல பிராகிருதச் சிதைவும் ஆரியச்சிதைவுமாம். அஃதுணராது அவற்றைத் தமிழ் என்று இவர்கள் கருதுகின்ருர்கள். அக்கருத்து மருள் என்றதைச் சிறிது விளக்குவாம்.

---

# இருபத்தெட்டாமத்தியாயம்

அறிவு என்னும் பொருளைக் கூறும் புலம் என்னும் சொல் பிராகிருதம் என்பது மேலே கூறப்பட்டது. தூண் என்னும் பொருளைக் கூறும் கம்பம் என்னும் சொல் பிராகிருதம். ஸ்தம்ப என்னும் ஆரியத்தில் உள்ள ஸ்த என்றதற்குப் பிராகிருதத்தில் க என்னும் ஆதேசம் (திரிபு) வந்து கம்பம் என்னும் வடிவம் பெறுகிறது. அவ்வடிவத்தில் அச்சொல் தமிழில் வழங்கலாயிற்று. ஸ்தூணு என்னும் ஆரியம் தூண் என்று தமிழில் வந்தது. பக(ல்)என்னும் சொல் பிராகிருதம். ''ப்ரபா'' (ஒளி) என்னும் ஆரியத்துக்குப் பஹ(க) என்பது பிராகிருதம். பகல் என்னும் தமிழ் பஹ என்னும் பிரா கிருதமடியாக வந்தது. கர்ம என்னும் ஆரியத்துக்குக் கம்ம என்பது பிராகிருதம். தொழில் என்பது கர்ம என்பதன் பொருள். அது செய்புவர்களுக்குத் தமிழில் கம்மாளர் கம்மியர் என்று பெயர். இவை பிராகிருதமடியாக வந்தவை. உபரி என்பது ஆரியம், உவரி அதன் பிராகிருதம். மேனிலை என்பது அதன் பொருள், உவரி என்னும் தமிழ் பிராகிருதச்சொல் ஸ்புர என்பது ஆரியம் புர(விளங்குதல்) என்பது அதன் பொருள். புரிதல் (விளங்குதல்) என்னும் தமிழ் பிராகிருதச்சொல். ஆர்ய என்பது ஆரியம். அய்ய என்பதும் அச்ச என்பதும் அதன் பிராகிருதம் அய்ய ஏஸம்மி (ஆர்ய ஏஷாஸ்மி - ஆரியம்.) (சங்கல்ப சூரியோதம். 1) என்ற வேதாந்த தேசிகர் பிரயோகம் காண்க. இது நடி சூத்திரதாரனை நோக்கிக் கூறியது. இங்கு அய்ய என்ற வடிவம் பெற்றபடி. அச்ச (அஜ்ஜ) வந்தே (ஆர்யவந்தே) அநர்க்கராகவ. 4) என்ற முராரி பிரயோகம் காண்க. இங்கு அச்ச என்ற வடிவம் பெற்றபடி. இது சூர்ப்ப ணகைமாலியவானை நோக்கிக் கூறியது. ஆர்ய என்பது இனப்பெயரன்று என்பதை இதனல் நன்கு காணலாம் மாலியவான் அரக்கருள் முதியோனுதலாலும் தனக்குப் பாட்டன் முறை யாதலாலும் வணங்கத்தக்கவன் என்ற

கருத்தால் அரக்கியாகிய சூர்ப்பணகை அரக்கனுகிய மாலியவானே ''ஆர்ய'' (அச்ச) என்று விளித்து வணங்கு கிறேன் என்ருள். அய்யர் என்னும் சொல் பிராகிருதம். இதைச் சிலர் ஐயர் என்று எழுதுகிருர்கள். அது வழு. ஐயர் என்னும் சொல் ஐயப்பாடு உடையவர் பல தலே உணர்வு உடையவர் சங்கை உடையவர் என்று பொருள் படும். அறிவு உடையவர் அருள் உடையவர் வணங்கத் தக்கவர் என்பது ஆர்ய என்னும் சொல் உணர்த்தும் உரிய மெய்ப்பொருள். அதன் பிராகிருதமும் தமிழும் அய்ய என்பதே. ஐய அன்று. அச்ச என்னும் பிராகிருத வடிவம் எழுத்தச்சன் என்னும் கேரளச் சொல்லில் பயின்று வருதல் காண்க. ஆர்ய என்னும் ஆரியத்துக்கு ஆசாரியன் (குரு) என்னும் பொருளும் உள்ளது. அப் பொருளே எழுத்தச்சன் என்னும் கேரளம் உணர்த்தி நின்றது. எழுத்தறிபவன் எழுத்தறிவிப்பவன் என்பது பொருள். ஆர்ய என்பது ஆண்பால். ஆர்யா என்பது பெண்பால். "ஆர்யே! கிம் நஜாநாஸி'' (சங்கல்பசூரி யோதய. 1) என்று சூத்திரதாரன் நடியை நோக்கிக் கூறியது. ஆர்யே! என்பது பெண்பால் விளி. தமிழில் ஐகாரவீறு பெற்று அய்யை என்னும் வடிவம் பெறு கிறது. ஐயை அன்று. சிலப்பதிகாரத்தில் அய்யை என்றுதான் பாடம் கொள்ளவேண்டும். ஐயை அன்று.

வ்ருத்தி என்பது ஆரியம். வட்டி என்பது அதன் பிராகிருதம். வட்டி என்னும் தமிழ் பிராகிருதம். விஞ்ஞாநம் என்பது ஆரியம். விண்ணுணம் என்பது அதன் பிராகிருதம் விண்ணுணம் என்னும் தமிழ் பிராகிரு தம் ஞானம் என்பது ஆரியம். நாணம் அதன் பிராகிரு தம். நாணம் என்னும் தமிழ் பிராகிருதம். பக்ஷ என்பது பக்கம் என்றும் குக்ஷி என்பது குக்கி என்றும் அத்க என்பது அக்கம் என்றும் க்ஷபண என்பது சமணம் என்றும் வ்ருத்தம் என்பது வட்டம் என்றும் கட்டம் என்பது கட்டம் என்றும் கோஷ்டம் என்பது கோட்டம் என்றும் சாஸ்தா என்பது சாத்தன் என்றும் கர்த்தா

என்பது கத்தன் என்றும் மூர்த்தா என்பது மூத்த என்றும் ஸ்நா ந என்பது நானம் என்றும் தரா என்பது தரை என்றும் ஸ்நேஹ என்பது நேயம் நெய் என்றும் தேவேந்த்ர என்பது வேந்தன் என்றும் பயஸ் (பால்) என்பது பயன் என்றும் (ஆபயன் குன்றும் என்ற திருக் குறளை நோக்குக) தக்ஷ என்பது தச்சன் என்றும் கல்யாணம் என்பது கண்ணாலம் கண்ணாடி என்றும் வருதல் காண்க. கல்யாணம் என்னும் ஆரியத்துக்கு மங்கலம் என்று பொருள். ஆதலின் அது மணம்கண்ணாடி என்னும் பொருளை உணர்த்தி நின்றது ''மங்கலம் என்ப மனைமாட்சி'' (குறள்.66) என்ற குறளை நோக்குக. மங்கல என்னும் ஆரியம் மங்கி என்னும் வினைப்பகுதியடி யாகப் பிறந்தது. மங்கை என்னும் சொல்லும் அவ் வினைப்பகுதியையே அடியாகக் கொண்டது. மங்கா என்பது ஆரியம். அது திருமகளைச்சிறப்பாக உணர்த்தும் இயல்புடையது. மங்கேச என்பது அலர்மேல்மங்கையுறை மார்பனாகிய (ஸ்ரீநிவாஸனாகிய) திருவேங்கடமுடையான் திருநாமத்துள் ஓதப்பட்டது. ''கண்ணாலம் கோடித்து'' (நாச்சியார்திருமொழி. 11-9) என்ற கோதைப்பிராட்டி பிரயோகம் காண்க. கண்ணாடியில் முகம் பார்த்தல் மங்கலம் என்று நூல்கூறும். கண்ணாடியில் முகம் பார்த் தலைக் கல்யாணாலோகநம் என்றும்அது பயப்பது மங்கலம் என்றும் நூல் கூறும் என்றும் வேதாந்த தேசிகர் விளக் கினார். (அதிகரண ஸாராவளி.89). திருவரங்கப் பெருமான் திருமுன்பே மங்கலமாமணிக் கண்ணாடிபோல் வேதமயனான கருடன் விளங்குகின்றான் (ஸ்ரீரங்கராஜ. பூர்வ.53)என்று பட்டரும் ''திருமகள்சேர் மார்பனுக்குத் திருக்கண்ணாடி போல் அபிமுகனாய் நிற்கிற காலார்ந்த கதிக் கருடன்'' (பரமபத. திவ்யதேச) என்று வேதாந்த தேசிகரும் அருளிச்செய்தார்கள். கல்யாணம் உடையது கல்யாணி. கல்யாணம் என்றது கண்ணாலம் என்றும் கல்யாணி என்றது கண்ணாடி என்றும் வந்தவாறு அறிக. அவ்வாறே வலயம் என்பது வளை என்றும் மலயம் என்பது மலை என்றும் வந்துள்ளது காண்க.

மலயம் என்னும் சொல் மலயமலைக்குப் பெயர். மலயம் என்னும் சொல்லுக்கு மலை என்று பொருள். ''மல மல்ல தாரணே'' (தாங்குதல் என்னும் பொருளில் மலமல்ல என்னும் தாதுக்கள். தமிழ் செய்தது) என்று தாது பாடம் படித்தது. இத்தாதுக்கள் (வினைப்பகுதிகள்) பூவாதியிலும் சுராதியிலும் தாதுபாடத்துள் படிக்கப் பட்டுள்ளன. தாங்குதலால் மலை மல்லை என்னும் பெயர் உடையன என்றபடி. ஆதலின் மலை மல்லை மலயம் என்பன குன்றத்துக்குப் பெயராயின. மலைமல்லைகள் பூவாதி. மலயம் சுராதி. நெடியோன் திகழும் திருக் குன்றத்துக்குத் திருமலை என்ற தனிச்சிறப்பு உற்றது போல் அகத்தியர் சடகோபர்களின் சம்பந்தம் பெற்ற குன்றத்துக்கும் மலயம் என்ற தனிச்சிறப்பு உற்றது என்று அறிக. மலயம் என்றதற்கு மலை என்றதே பொருள். ஆதலின் மலயமலை என்பது மீமிசைச்சொல். நைஷதம் பாடிய ஆரியமாக்கவிஞராகிய ஸ்ரீஹர்ஷர் தமது தாயின் பெயர் மாமல்லதேவி என்றும் தந்தையின் பெயர் ஸ்ரீஹீரர் என்றும் கூறினர். தந்தையின் பெயர் ஸ்ரீ என்னும் அடையடுத்துவந்தது போல் தாயின் பெயர் மா என்னும் அடையடுத்து வந்தது. ஸ்ரீ எனினும் மா எனினும் ஒக்கும். தாயின்பெயர் மாமல்ல தேவி என்றும் கூறியது இங்கு நோக்கத்தக்கது. திருக்கடல் மல்லை என்னும் பெயரில் இங்குக் கூறும் பொருள் தெளியக் காணலாம். திருக்கடல்மல்லை பூதந்தாழ்வார் அவதாரம் செய்தருளிய திருத்தலம். ஆதலின் அவரைக் கடல் மல்லைக்காவலனே! பூத வேந்தே!'' (தேசிகமாலை ப்ரபந்த. 3) என்று வேதாந்த தேசிகர் போற்றிப்பாடினர். திருமாமகளின் சாந்நித்தியச் சிறப்புத் தோன்றற்கும் திருத்தலச்சிறப்புத் தோன்றற்கும் திருக்கடல் மல்லை மாமல்லை என்னப்பட்டது. ''மாமல்லை'' (இரண்டாந்திரு வந் 70) என்றும் ''திருமங்கை நின்றருளும் தெய்வம்'' (ஷை. 57) என்றும் பூதத்தாழ்வார்தாமே பாடியருளினர். ''கடல்மல்லை மாயவன்'' (பெரியதிருமடல். 64) என்ருர் திருமங்கையாழ்வார். ஆதலின் இத்திருப்பதியில் சாந்

நித்திய நிலைகொண்டருளும் திருமாமகளுக்கு நிலமங்கை என்பது பெயராயிற்று. இறையும் அகலகில்லேன் என்று திருமாலின் திருமார்பில் நிலைகொண்டு அருள் செய்யும் நிறையருளின் சாந்நித்தியம் இதனால் விளக்கப் பட்டது. நிலமங்கை என்று இத்தலத்திருக்கோயிலில் வரைந்துள்ளது மருள் என்க. மாமயிலை என்றது போல் மாமல்லை என்றதும். ''மாடமா மயிலைத் திருவல்லிக்கேணி'' (பெரிய திருமொழி. 2-3-2) என்று மங்கையர்கோனும் ''மாமயிலைப் பதியதனில்'' தேசிக மாலை. ப்ரபந்த. 4) என்று வேதாந்த தேசிகரும் பாடி யருளியவை காண்க. ஆதலின் திருக்கடல்மல்லைத் திருப்பதி மாமல்லை என்றும் மாமல்லபுரம் என்றும் பெயர் பெற்றது. கடலில் மல்லை (மலை) இருத்தலால் அப்பெயர் பெற்றது. இத்தலத்தை மாவலி (மஹாபலி) புரம் என்று கூறுதல் மருள். இத்தலத்துக்கும் மாவலி (மஹாபலி)க்கும் எவ்வகைத் தொடர்பும் இல்லை. இவ் வாறே பல பெயர்களின் மெய்ப்பொருள் மறைந்து போலிப் பெயர்கள் பரவி வரலாயின. ஆதலின் மலை மல்லை என்பன ஆரியச்சிதைவு என்று அறிக.

நல என்னும் சொல் ஆரியம். லகர ளகரங்களுக்கு வேற்றுமையின்மை (லளயோரபேத) யால் நலன் என்பது நளன் என்றும் வழங்கலாயிற்று. நல என்னும் பூவாதி வினைப்பகுதிக்குக் கட்டுதல் மணம் கமழ்தல் என்பன பொருள். கட்டு என்பது சிறப்பாகத் தருமத்தை உணர்த்தி நின்றது. செய்வன தவிர்வன என்று இறைவன் வரையறைசெய்து கட்டியுள்ளதால் தருமத்துக்குக் கட்டு என்பது பெயராயிற்று. அது ஸேது என்னவும் படும். ஸேது என்னும் சொல்லுக்கும் கட்டு என்பது பொருள். ஸிநோதி இதி ஸேது: (கட்டுதலால் ஸேது. தமிழ்செய்தது) என்பது ஸேது என்னும் சொல் லின் வியுற்பத்தி. கட்டுதல் தாங்குதல் என்பது சேது என்னும் சொல் உணர்த்தும் பொருள்: ஸேது என்று உபநிடபதம் (சாந்தோ. 8-4-1; 9-4-2) ஓதிய சொல்

லுக்குத் தாங்குதல் (விதரணம்) கட்டுதல் (பந்தநம்) என்பன பொருள் என்று வேதாந்த தேசிகர் விளக்கினர். (அதிகரண. 313). ஆதலின் வேதம் வகுத்த அறம் தரும சேது என்னப்படும். ''வைதிகம் தர்மஸேதும்'' (ஸ்ரீஸ்துதி. 21) என்ருர் வேதாந்ததேசிகர். தருமத்தில் (நலத்தில்) நிலையுற்றவனுதலால் நளச்சக்ரவர்த்தி அப் பெயர் பெற்ருன். நலன் உடையவன் நல்லன் ஆதலால் நளன் என்றவாறு. வானரத்தச்சனுகிய நளன் கட்டிய அணைக்கு நளசேது என்பது பெயராயிற்று. கட்டுபவன் ஆதலால் நளன் என்னப்பட்டான். கட்டும் நளன் கட்டிய அணை என்னும் பொருளை நளசேது என்னும் சொல் உணர்த்திநின்றது. மணம் கமழ்தலால் தாமரைக்கு நளி(லி)னம் நள(லம்) என்பது பெயராயிற்று. கட்டுதல் (தருமம்) மணம் கமழ்தல் என்பன நல(ள)என்னும் ஆரியச்சொல்லின் பொருள் என்பது காண்க. சத்ருச என்பது ஆரியம். சரி என்பது பிராகிருதம். சரி என்பது தமிழ். கீர என்பது ஆரியம் கிளி என்று பொருள். கீரம் என்பது தமிழ். க்ஷீரம் என்பது ஆரியம். பால் என்று பொருள். கீரம் என்பது தமிழ். அமாத்ய என்பது ஆரியம். மந்திரி என்பது பொருள். அமைச்சன் என்பது தமிழ் அமா என்னும் சொல்லுக்கு உடன் என்று பொருள். த்ய என்னும் விகுதிக்கு வருதல் இருத்தல் என்று பொருள். அரசனுடன் கூட இருந்து மந்த்ரா லோசனை செய்தலால் அமாத்யன்என்னப்பட்டான். அமா என்று ஆரியத்தில் ஆகார ஈறு. தமிழில் அமை என்று ஐகார ஈறு, த்ய என்றும் ஆரியவிகுதி தமிழில்ச என்று நின்றது. நித்ய என்ற ஆரியம் நிச்ச என்று நின்றது போல். அமாவாஸ்யா (அமாவாசை) என்னும் சொல்லி லும் அமா என்பது உடன் என்னும் பொருளில் வந்துள் ளது காண்க. சந்திரன் சூரியனுடன் வரும் நாள் ஆத லால் அந்நாள் அமாவாஸ்யா என்னப்பட்டது.

நமந ஞபந என்பது ஆரியம். நமன் ஞமன் என்பன தமிழ். நான் ஞான் என்ருற்போல் இது மேலே

விளக்கப்பட்டுள்ளது. நான்று ஞான்று, நாயிறு ஞாயிறு நண்டு ஞண்டு, நயம் ஞயம், நாண் ஞாண் முதலியவும் காண்க. நமந உந்நமனத்தால் (இறங்குதல் ஏறுதலால்) தூக்கு கோல் நமன் ஞமன் என்னப்பட்டது. ஞபநத்தால் (உயிரைக்கொள்ளுதலால்) கூற்றுவன். ஞமன் நமன் என்னப்பட்டான். சீர்தூக்கும் கோலுக்கும் உயிர் நீக்கும் கூற்றுக்கும் ஒருபாற்கோடாமையால் ஒப்புமை. ஞபநம் என்னும் ஆரியத்துக்குக் கொல்லுதல் என்று பொருள். ஸம் என்னும் உபசர்க்கம் (அடையுருபு) சேர்ந்து ஸம் ஞபநம் என்றும் வரும் (அமரம். 1694; அதிகரண ஸாராவளி. 285) உயிரைக் கொள்ளுதலால் கூற்றுவன் ஞமன் நமன் என்னப்பட்டான். நமனத்தால் தூக்கு கோலுக்கும் ஞபநத்தால் கூற்றுவனுக்கும் ஞ(ந)மன் என்பது பெயராயிற்று என்றவாறு.

இங்கு இன்றொருசிலர், பாண்டியன் பல்யாகசாலை முது குடுமிப் பெருவழுதியைப் பற்றிக் காரிகிழார் பாடிய புறநானூற்றுப் பாட்டில் (புறநா. 6) ஞமன் என்னும் சொல் வழங்கப்பட்டுள்ளதாலும் ''ஆ எ ஒ என்னும் மூவுயிர் ஞகாரத்துக்குரிய'' (தொல், எழுத். 64) என்றும் சூத்திரத்தில் தொல்காப்பியர் இம் மூவுயிர்கள் ஞகார ஒற்றோடு முதலாதற்கு உரிய பிற உரிய அல்ல என்று கூறியிருத்தலாலும் தொல்காப்பியர் காலத்தில் ஞமன் என்னும் சொல் வழக்கத்தில் இல்லை என்பது தெளிவு என்றும் ஆதலின் ஐயாயிரம் ஆண்டுகட்டு முற்பட்ட பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிக்கும் முற்பட்டவர் தொல்காப்பியர் என்பது வலியுறுத்தப்படும் என்றும் கூறுகின்றார்கள். இவ்வாறு கூறும் இவர்களுடைய அநுமாநம் ஏதுவிலக்கணநெறி பிறழ்ந்து அசித்தி முதலிய மலிந்துள்ளதால் இவர்கள் தேறிய துணிபு போலி என்க.

பாண்டியன் பல்யாகசாலை முது குடுமி ஐயாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டவன் என்றது அசித்தியாதற்காம்

அது நிற்க, இச்சூத்திரத்தில் (எழுத். 64) ''ஞழியிற்று என்றாற்போல்வன விலக்கினவும் வருமால் எனின், அவை இழிவழக்கென்று மறுக்க'' என்றது இளம்பூரணர் உரை. இதற்கு அடுத்த சூத்திரம் ''ஆவோடல்லது யகர முதலாது'' (ஷை. 65) என்பது. யவனர் என்றாற் போல் வன வழக்கத்தில் உள்ளன. (சிலப்பதி புகார். 10) இச்சூத்திரத்தில் ''யவனர் என்றாற் போல்வன விலக்கின வும் வருமாலெனின் அவை ஆரியச்சிதைவு என்று மறுக்க என்றது இளம் பூரணர் உரை. விலக்கப்பட்டது தமிழே ஆரியச்சிதைவு அன்று என்பது இதனாற் புலனாகும். ஞமன் நமன் என்பன ஆரியச்சிதைவு என்று மேலே காட்டப்பட்டது. ஆதலின் தொல்காப்பியர் காலத்தில் ஞமன் என்னும் சொல் வழக்கத்தில் இருக்கத் தட்டில்லை.

மற்றுமோர் இலக்கிய இலக்கண நுட்பம் இங்குக் கூறப்பட வேண்டியிருத்தலால் அதைச் சிறிது விளக்கு வாம். மேற்கூறிய சூத்திரத்தில் (64) தொல்காப்பியர் தாமே ஞகாரம் என்று வழங்கியிருக்கிறார். வேறிடத்தும் அவ்வாறே வழங்கப்பட்டுள்ளன. (எழுத். 73; ஷை 297; செய்யுள் 240). ஞழியிற்று என்றதை இளம் பூரணர் இழிவழக்கென்று மறுக்க என்றார். அவ்வாறாயின் ஞகா ரத்துரிய என்ற வழக்கின் கதி என்ன? அது தானும் இழி வழக்கின்பாற் படாதோ எனின் அஃதன்று. அவர் கூறிய வாறே ஞகாரம் என்பது ஆரியச்சிதைவு என்று மறுக்க அகாரம் இகாரம் உகாரம் ககாரம் ஞகாரம் முதலியன ''வர்ணாத் கார :'' (3-3-103) என்ற பாணி நீட சூத்திர மடியாக வந்த ஆரியச் சொற்களாதலின் அவ்வாறு மறுத் தற்காகும்.

அன்றியும் ஞகாரம் என்னும் சூத்திர வழக்கு முதலா என்னும் சூத்திரவிலக்கோடு முரணுதலின் அது சேரும் படி எங்ஙனே. ஞழியிற்று என்ற வழக்கை இழிவழக்கு என்றாற்போல் ஞகாரம் என்னும் சூத்திரவழக்கு மறுத் தற்காகாது. அவ்விலக்கு இலக்கிய வழக்குக்கேயன்றி

இலக்கண வழக்குக்கு அன்று எனின் அஃதன்று. பாணிநீயமும் தொல்காப்பியமும் இலக்கண நூல்களாயினும் அவை தாமும் இலக்கியமே. மேலும் அவ்வரம்பு எங்குச் செய்யப்பட்டுள்ளது. செய்தவர் யார்? அவ்வித வரம்பு யாதுமின்றி உலகவழக்கையும் சான்றோராட்சியையும் (சிஷ்டப்ரயோகத்தையும்) இழிவழக்கென்று கழித்தற்காகாது. ஞழியிற்று என்றாற்போல் பிரயோகங்கள் பல உலக வழக்கிலும் இலக்கியங்களிலும் பயின்று வருகின்றன. ஞமலி (நாய்) ஞரலுதல் (ஒலித்தல்) ஞரு (மயிற்குரல்) ஞயம் (நயம்) ஞலவல் (மின்மினிப்பூச்சி) முதலிய காண்க. (பேரகராதி ப. 317) அவ்வாறே ''ஆவோடல்லது யகரமுதலாது'' (எழுத்65) என்பது சூத்திரம். இங்கும் யகரம் என்று வழங்கப்பட்டுள்ளது. ''உயர்வறவுயர்நல முடையவன் யவனவன்'' (திருவாய். 1-1-1) ''எப்பால் யவர்க்கும் நலத்தா லுயர்ந் துயர்ந்து அப்பாலவன்'' (ஷை. 1-7-2) ''சேயனணியன் யவர்க்கும் சிந்தைக்கும் கோசரமல்லன்'' (ஷை. 1-9-6) ''யவரும் யாவையும் எல்லாப் பொருளும் தன்னு ளொடுங்க'' (ஷை. 2-2-6) ''யாவரும் யவையுந் தானாய்'' (ஷை. 3-4-10) ''வயிற்றிற் கொண்டு நின்றொழிந்தாரும் யவரும்'' (ஷை8-7-9) ''மற்றெல்லா யவர்க்கும்'' (திருவிருத்தம்.99) என்று நாவீறுடைய பிரான் சடகோபரும் ''யமுனைத்துறைவன்'' (திருப்பாவை.5) என்று கோதைப்பிராட்டியும் ''எதிகட்கிறைவன் யமுனைத்துறைவன்'' (இராமாநுசநூற். 21) என்று அமுதனாரும் பிரயோகம் செய்துள்ளது காண்க.

---

## இருபத்தொன்பதாமத்தியாயம்

இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் கூறுதல் தான் இலக்கணநெறி. ''இலக்கிய இலக்கணங்கள் வியாகரணம்'' (தமிழ்செய்தது) என்பது காத்தியாயந முனிவர் வார்த்திகத்துள் வகுத்த இலக்கணம் இதன் விளக்கத்தை மாபாடியத்துள் கண்டுகொள்க. "இலக் கியங் கண்டதற் கிலக்கண மியம்பலின்'' (நன்னூல். 141) என்று நன்னூல் கூறிற்று. மேலே கூறியபடிபாணி நீயம்போல் தொல்காப்பியமும் இலக்கியமாம். தாம் கூறிய இலக்கணத்துக்கு மாருக சூத்திரம் நூற்றற்கா காது. பாணிநிசூத்திரத்துள் சூத்திரத்துக்கு முரண்போல் தோன்றும் சொற்களுக்கு வெற்றிலக்கண வாதியர் கூறிய தடை தகாது என்றும் வழக்குத் தக்கதே என்றும் காத்தியாயந முனிவர் விளக்கி விடை கூறியிருக்கிருர். பாணிநிசூத்திரத்திலுமே இலக்கணவழுக் கூறிய வெற்றி லக்கணவறிஞர்கள் அக்காலத்திலும் இருந்திருக்கிருர் கள். அவ்வாறே பிற்காலத்து வெற்றிலக்கணவாதியர் மாக்கவிஞர் பிரயோகங்களில் இலக்கணவழுக் கூறியிருக் கின்ருர்கள். அஃது அடாக் கூற்று என்பது இலக்கிய நடையும் இலக்கணச் சுவடும் தேற அறிந்த சான்ருேர் துணிபு. இராமாநுஜர் அருளிச்செய்த ஸ்ரீபாஷ்யச் சொல் ஒன்றில் இலக்கணவழுக் கூறுபவர்க்கு மும்மொழி (ஆரியம் தமிழ் பிராகிருதம்) இலக்கிய இலக்கணங் களுக்கு எல்லே தேர்ந்த வேதாந்த தேசிகர் அளித்தருளிய விடை இவ்வுண்மையை நன்கு விளங்கவைக்கும். அதன் சுருக்கு வருமாறு ;

பல்வேறு வியாகரணங்களே முற்றும் கற்றுணர்ந்த சான்ருேர்கள் மேற்கொண்ட பிரயோகங்களில் சொல் வழுக் கூறுபவர்களே இலக்கணம் அறிந்தவர் (சாப்திகர்) எனக் கருதோம். அத்தகைய பிரயோகங்களுக்கு விலக்கு வாராமைக்காகப் பாணிநிதாமே அஷ்டாத்யாயில் (சூத்திரத்தில்) பகுலம் முதலிய முறை பலவானும்

அமைதி ஓதியிருக்கின்ருர். (2-1-57; 2-3-62; 2-4-39; 2-4-73; 2-4-76; 2-4-84; 3-2-81; 3-2-88; 3-3-15 3-3-108; 4-1-148; 4-1-160; 4-3-37; 4-3-99; 6-1-70; 6-3-14; 6-4-128; 7-1-103; 7-3-97; 7-4-48; 8-3-52; 8-4-28 முதலியன). சந்தசி (வேதத்தில்) 5-4-142 முதலியன.) பாஷாயம் (உலக வழக்கில்) 3-2-108; 4-1-62; 6-3-20; 7-2-88; 8-2-98 முதலியன) வியுற்பத்தியும் (பகுதிவிகுதிகளாலாகிய சொற்புணர்ச்சியும்) அமையும். தாதுக்களினின்றும் (வினைப்பகுதிகளினின்றும்) பெயர் பிறத்தலே நிருக்தத்தில் யாஸ்கரும் வியாகரணத்தில் சாகடாயனரும் கூறுகின்ருர்கள். பகுதி விகுதிகளில் இயைபு கண்டு சொற்பொருள் இயறல் தேறுதற்காகும். மத (கருத்து) விகற்பால் பகுதி விகுதி எனப் பகுத்தற்கு ஏலாப் பகாப்பதமடியாகச் சொற்கள் இயன்று வருமாறும் உளவாம். விசிஷ்ட உத்திகளின் (சிறப்புச் சொற்களின்) தன்மை கண்டு அதற்குத்தக வியுற்பத்தியை (சொற்புணர்ச்சி இலக்கணத்தை) அறிஞர்கள் விளம்பியுள்ளார்கள். ஆன்றமுறையில் படியும் சொல்வடிவங்கள் பல்வகையாமாதலின் பகுல சூத்திரம் வகுக்கலாயிற்று. ஆதலின் சான்ருேர் வழக்கில் இழுக்குக் கூறுதல் எஞ்ஞான்றும் தக்க தன்று என்பது. இங்கு இலக்கிய வழக்குப் பல காட்டப் பட்டும் உள்ளன. (தத்துவடீகை மங்கல. உரை). இத்திற வெற்றிலக்கணப்புலவாகள் "சொல்லிலக்கணச் செய்தி (சப்தாநுசாஸநவ்ருத்தாந்தம்) அறியாதார்" (ஸ்தோத்ர பாஷ்யம் 12 தமிழ் செய்தது) என்று வேறிடத்தும் கூறினர்.

"செய்யுள் மருங்கினும் வழக்கியன் மருங்கினும் மெய்பெறக் கிளந்த கிளவியெல்லாம், பல்வேறு செய்தியின் நூனெறி பிறழாது, சொல் வரைந் தறியப்பிரித்தனர் காட்டல்" (தொல். சொல். 4-63) "கிளந்த அல்ல செய்யுளுள் திரிநவும் வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும் விளம்பிய இயற்கையின் வேறுபடத் தோன்றின்

வழங்கியல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்கல் நன்மதி நாட்டத் தென்மனுர் புலவர்'' (ஷ எழுத். 483) என்ற தொல்காப்பியத்தையும் நோக்குக.

அவ்வாறே பதஞ்சலி முனிவர் பணித்த மாபாடியத் துள் (மஹாபாஷ்யத்துள்) ''ஸபுநராவ்ருத்த : ஸுவர்ண பிண்ட : கதி ராங்கார ஸவர்ணே குண்டலே பவத:'' என்ற விடத்து ஸுவர்ணபிண்ட : (பொற்பிண்டம்) குண்டலேபவத: (இரு குண்டலங்கள் ஆகின்றன) என்று எழுவாய் ஒருமையிலிருக்க வினைமுற்று இருமையிற் (பன்மையிற்) கூறியது வழு என்பார்க்கு:- ''உத்தேசியத் துக்குத் தகவே வினைவேற்றுமையுருபு (திங் விபக்தி) கொடுத்தல் வேண்டும் என்னும் நியமம் இல்லை. உபா தேயத்துக்குத் தகவும் கொடுத்தற்காகும்'' (ந்யாயபரி சுத்தி. சப்தாத்யாயம், தமிழ் செய்தது) என்று வேதாந்த தேசிகர் மாபாடியப் பிரயோகம் தக்கதே என்று காட்டித் தந்தார். இப்பிரயோகத்தில் பொற்பிண்டம் உத்தேசியம் குண்டலம் உபாதேயம். உபாதேயத்துக்குத் தக வேற்றுமை உருபு அமைந்து ஆக்கியோர் கருத்தைப் புலப்படுத்தி நின்றது என்றவாறு. சான்ருேர் வழக்கே வையாகரணர்க்கு (இலக்கண நூலார்க்கு) ச்சரணம் (ப்ரயோகசரணு: வையாகரணு:) என்பது பதஞ்ஜலி முனிவர் செய்தருளிய அறுதியிடு. அஃதே தொல் காப்பியர் கருத்துமாம்.

இவ்வாறு மாபாடியத்தின் இலக்கணத்தூய்மையை யும் திருவாய்மொழியின் இலக்கியத் தாய்மையையும் (உபநிடதத்தாய்மையையும்) தெளிய விளக்கிய வாய்மை கண்ட நல்லார்கள் ''வாதாசந வராிவ(பதஞ்சலி)ரென வருமா பாடியம் வகைபெறுநாள், வகுளாபரணப் பெருமாள் தமிழின் வாசியறிந்திடு நாள்.... ஓதாதோதும் வேதாந்தாரிய னுதயஞ் செய்திடுநாள்'' என்று திருநாள் பாட்டுப் பாடி வேதாந்த தேசிகரைப் போற்றினுர்கள்.

ஆதலின் பாணிநீயம் தொல்காப்பியம் நன்னூல் முதலியவைகளிற் கூறியவை பொது. பகுல (ள) ம் புறனடை வியுற்பத்தி சான்றோர் வழக்கு (சிஷ்டப்ர யோகம்)முதலியவைகளால் அமைந்து இயலும் வழக்குக் களுக்குத் தகவே இலக்கணம் கூறும் உரிய பொருள் தெளிதற்காகும். இலக்கணம் ஒன்றைமட்டிலுமே கொண்டு அவை மறுத்தற்காகா என்பது இலக்கிய இலக்கண நுட்பம் கண்டுணர்ந்த ஆன்றோர்துணிபு என்பது தெளிக.

இது காறும் கூறிவந்தது கண்டு இலக்கணத்தோடு (தொல்காப்பியத்தோடு) இலக்கியம் (புறநானூறு) முரண்படுகின்றது ஆதலால் இலக்கணம் (தொல் காப்பியம்) இலக்கியத்துக்கு (புறநானூற்றுக்கு) முற் பட்டது என்று கூறிய ஏது போலி என்பது தெளியப் புலனாகும்.

———

## முப்பதாமத்தியாயம்

தமிழிற் பயின்றுவரும் ஆரிய பிராகிருதச் சொற்கள் சில மேலே காட்டப்பட்டன. பிறவும் கண்டுகொள்க. அவையெல்லாம் தமிழுடன் தேனும் பாலும் கன்னலும் அமுதும ஒத்துக்கலந்து ஒருபடிப்பட்ட மலர்மணம் கமழ்ந்து மதுவிரிந்தொழுகும் இயல்புகண்டு இன்புறுக. மணிப்பவளம் (மணிப்ரவாளம்) காட்டும் தோரா வெழிலும் ஊட்டும் ஆராவமுதும் ஒப்பற்றது என்பதற்கு அதுகண்டுணர்ந்து உண்டு நுகர்வார் உள்ளமே சான்ரும். நரங்கலந்த சிங்கம் போன்றதொன்று அது என்றறிக. ஆரியமும் பிராகிருதமும் அறியார் தமிழும் அறியாரே ஆவார். இதற்கு மாருக இன்ருெருசிலர் ஆரியத்தை ஒழித்துக்கட்டும் நோக்கத்தால் ஒப்பு மொழியாராய்ச்சி என்றதோர் தனித்தமிழ்ப் புத்தாராய்ச்சியில் இறங்கத் தலைப்பட்டிருக்கின்ருர்கள். அது வெறும் புளியைத் தின்று நாக்கெரியும் கதையாயே யொழியும். பகை தூண்டியதா தலின் இதனை நல்லார் உகவார். தொல்லிலக்கிய இலக்கணங்களுக்கு முரண் ஆதலாலும் ஒப்புமொழி என்பதற்குத் தனித்ததோரிலக்கிய மில்லாமையாலும் பொருளற்ற கடலொலி காற்ருெலிபோன்ற வெற்ருெலி யாராய்ச்சியே யாதலாலும் இவ்வாராய்ச்சி உணர்த்து மது துஞ்சூமர் கண்ட கனுப்போல்வதோர் காலற்ற கற்பனையேயாம். இதனுல் நற்பயன் யாதுமில்லை. தீங்கே பயனும். தமிழைத் தனிமை செய்யேன்மின். ''கூடியிருந்து குளிர்ந்து'' (திருப்பாவை. 27) என்ற கோதைப் பிராட்டி திருவாக்கு இங்கும் நோக்கத்தக்கது.

ஆரியம் அயற்சொல் என்று தமிழர் கூருர். கூறுவார் தமிழராகார். "செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும், தங்குறிப் பினவே திசைச்சொற்கிளவி" (தொல் சொல். 400) ''வடசொற்கிளவி வடவெழுத்து ஒரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே'' (ஷை. 401) என்ற சூத்திரங்கள் மேற்கூறிய பொருளைக் கையின்

மெய்யெனக் காட்டித்தரும் தீபமாய் விளங்குதல் காண்க. ''வடசொல் எல்லாத் தேயத்திற்கும் பொதுவாகலாலும்'' என்பது சேனுவரையர் உரை. ஆதலின் ஆரியம் அயல் மொழி என்னும் கூற்றுப் போலி என்பது தெளிவு. தொல்காப்பியத்தில் ஆரியம் மலிந்துள்ளது கண்கூடு. ''இயற்சொற் றிரிசொ லியல்பிற் பெயர்வினை யென விரண்டாகு மிடையுரி யடுத்து, நான்குமாந் திசைவட சொலணு காவழி'' (நன்னூல். பெயர். 270) என்று நன்னூலும் இவ்வுண்மையை உணர்த்திற்று. இச் சூத்திர உரையில் ''வடக்கும் ஓர் திசையன்றே திசைச் சொல்லன்றி வடசொல்லென வேறு கூறுவதென்னை யெனின்:- தமிழ் நாட்டிற்கு வடதிசைக்கட் பதினெண் மொழிகளுள் ஆரியமுதலிய பலமொழி யுளவேனுந் தென்றமிழ்க் கெதிரியது கடவுட் சொல்லாகிய ஆரிய மொன்றுமே யென்பது தோன்ற அவற்றுட் டமிழ்நடை பெற்றதை வடசொல்லென்றும் ஏனையவற்றுட் டமிழ் நடை பெற்றதைத் திசைச் சொல்லென்றும் சான்றோ ரானியமிக்கப்பட்டன வென்க. அன்றியும் ஆரியச்சொல் எல்லாத் தேயத்திற்கும் விண்ணுலக முதலியவற்றிற்கும் பொதுவாதலான் அவ்வாரியச் சொற் றமிழ்நடை பெற்றதைத் திசைச்சொல்லென்றல் கூடாதெனக் கோட லுமாம். அங்ஙனமாயின் வடசொல்லென்ற தென்னை யெனின் ஆண்டுப் பயிற்சி மிகுதிபற்றி யெனக் கொள்க'' என்று சங்கரநமச்சிவாயர் இவ்வுண்மையைப் பின்னும் விளங்கவைத்தார். அப்பயிற்சி மிகுதியும் ஒருகாலத்தில் தான். என்று மன்று. ஆயினும் அவ்வோர்காலத்தில் வழங்கப்பட்ட சொல்லே பின்னும் தொடர்ந்து வழங்கி வரலாயிற்று. வேதவோத்துப் பயிற்சியும் வேதாந்தப் பயிற்சியும் தென்னுட்டில் மிக்கது. வேதத்துக்கும் வியாசமுனிவர் நூற்றருளிய பிரமசூத்திரத்துக்கும் இறைவன் பாடியருளிய கீதைக்கும் பாடியம் பணித்த சான்றோர்கள் தென்னுட்டவர்களே. அவர்களுக்கும் முற் பட்ட பிரமசூத்திரத் தொல்லுரைப் பேராசிரியாராகிய த்ரமிடபாஷ்யகாரரும் தென்னுட்டவரே. அவர் தமிழர்

என்பதை த்ரமிடபாஷ்யகாரர் என்னும் அவர் திருநாமம் காட்டிநின்றது. ஆதலின் ஒருகாலத்தில் பயிற்சி மிகுதி காரணமாக வழங்கிவந்தசொல் வடசொல் என்பது தெளியப் புலனுகும். வேதவோத்துப் பயிற்சி வடநாட்டில் மிகவும் குன்றியது இன்றும் காணலாம். பாணிநி வியாகரண சூத்திரத்திற்கு வார்த்திகம் வகுத்த காத்தியாயநமுனிவர் தென்னுட்டவரே. இவர் பாடியம் வகுத்த பதஞ்சலி முனிவர்க்கு முற்பட்டவர். காத்தியாயநர் தமது வார்த்திகத்தில் கேரள அரசரையும் சோழ அரசரையும் கூறியிருக்கின்ருர். (பாணிநீய. 4-1-175). பிராகிருத சூத்திர விருத்திஉரைத்த காத்தியாயநரும் இவரே என்பர்.

''சிறப்பினு மினத்தினும்'' (நன்னூல்.73) என்னும் சூத்திரத்தில்:- ''இனி உயிர்களுள் அ இ உ என்பன முறையே அங்காந்துகூறு முயற்சியானும் அவ்வங்காப் போடு அண்பல்லடி நாவிளிம்புறக் கூறு முயற்சியானும் அவ்வங்காப்போடு இதழ்குவித்துக் கூறுமுயற்சியானும் பிறத்தலான் அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன. ஆகார ஈகார ஊகாரங்கள் அகர முதலியவற்றிற்கு இனமாதலின் அவற்றைச் சார வைக்கப்பட்டன. இனி எகரமாவது அகரக்கூறும் இகரக் கூறும் தம்மு ளொத்திசைத்து நரமடங்கல்போல் நிற்ப தொன்ருகலானும், ஒகரமாவது அகரக்கூறும் உகரக் கூறும் தம்முளொத்திசைத்து அவ்வாறு நிற்பதொன்ரு கலானும் அவை அவற்றின் பின் முறையே வைக்கப் பட்டன. ஏகார ஓகாரங்கள் இனமாதலின் அவற்றின்பின் முறையே வைக்கப்பட்டன. அகரமும் யகரமும் இகரமும் தம்முளொந்திசைத்து நிற்பதொன்ருகலின் எகர ஏகாரங் களின் பின்னர் ஐகாரமும் அகரமும் வகரமும் உகரமும் தம்முளொத்திசைத்து நிற்பதொன்ருகலின் ஒகர ஓகாரங் களின் பின்னர் ஒளகாரமும் வைக்கப்பட்டன. இவ்வாருதல் பற்றி ஏ ஓ ஐ ஒள என்னு நான்கனேயும் வட நூலார் சந்தியக்கரமென்பர். கையடனுர் நரமடங்கல்

போல் என்றுவமையுங் கூறினர். இக்கருத்தேபற்றி ஆசிரியர் ''அம்முனிகரம் யகரமென்றிவை, யெய்தினை யொத்திசைக்குமவ்வோ, டுவ்வும் வவ்வுமௌவோரன்ன'' (நன்னூல்.125) என்ருர். இவ்வாறே ஆசிரியர் தொல் காப்பியரும் ''அகர விகர மைகார மாகும்'' (எழுத்.54) ''அகரவுகர மௌகார மாகும்'' (ஷை.55) எனக் கூறி ஐயென்னு நெட்டெழுத்தின் வடிவு புலப்படுத்தற்கு அகர இகரங்களேயன்றி அவற்றிடையே யகரமும் ஒத்திசைக்கு மென்பார். “அகரத்திம்பர் யகரப்புள்ளியு, மையெனெ டுஞ்சினை மெய்பெறத்தோன்றும்'' (ஷை.56) என்றும் மெய்பெற என்ற இலேசானே ஔவென்னு நெட்டெழுத் தின் வடிவு புலப்படுத்தற்கு அகர உகரங்களேயன்றி அவற்றிடையே வகரமும் ஒத்திசைக்கு மென்றும் இம்பர் உம்பரென்ருற்போல்வன காலவகை இடவகைகளான் மயங்குமாகலின் இவற்றின் முதற்கணிற்பதியாதோ, இறுதிக்கணிற்பதியாதோ வென்னும் ஐயநீக்குதற்கு ''இகரமும் யகரமு மிறுதி விரவும்'' (ஷை. 58) என்றுங் கூறினர். மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனை முட்டின்று முடிததலென்னு முத்தியான் எகர ஏகாரங்கள் ஒகர ஓகாரங்கள் அவ்வாருதலுங் கொள்ள வைத்தார். மாபாடியத்துள் ஊகாரத்தின் பின் னின்ற வடவெழுத்து நான்குயிர்க்கும் இடையே ரகர லகரக்கூறுகள் ஒத்துநிற்குமென்ற ஆசிரியர் பதஞ்சலி யார்க்கு ஐ ஔ வென்புழியும் இடையே யகரவகரக்கூறு கள் விரவி நிற்குமென்பது உடன்பாடாதல் பெற்ரும். எகர முதலியவற்றுள் அகரக்கூறு குறைவும் இகரஉகரக்கூறு கண் மிகுதியுமாமெனவு முணர்க. இதுவும் மாபாடியத் திற் கண்டது'' என்றும் “வடமொழியின் லகரம் ளகர மாகவும் உச்சரிக்கப்படுவதன்றித் தனியே ஓரெழுத் தன்மையின் அச்சிறப்பின்மைபற்றி இடையெழுத்தாகிய ளகரம் ழகரத்திற்கும் பின் வைக்கப்பட்டது. இவ்வாறே உயிருள்ளும் எகர ஒகரங்கள் ஒருவாற்ருற் சிறப்பெழுத் தாயினும் பிராகிருதமொழியிற் பயின்று வருதலானும் சாமவேதமுடையாருள் ஒருசாரார் இசைபற்றிக் குழூஉக்

குறிபோலக் கொண்டோதுபவாகலானும் இறுதிக்கண் வையாது முறைபற்றி ஏகார ஓகாரங்களின் முன் வைக்கப்பட்டன. ஆகையான் முறை இவையென உய்த்துணர்ந்து கொள்க'' என்றும் சங்கரநமச்சிவாயர் உரைத்துள்ளார்.

இவ்வுரையில்:-ஸோதீர்ணோ மூர்த்ந்யபிஹத: வக்த்ரமாபத்ய மாருத: வர்ணுந் ஜநயதே தேஷாம் விபாக : பஞ்சதாக்ருத: ஸ்வரத : (ஸ்வரம்:சுரம்) காலத: (காலம்) ஸ்தாநாத் (இடம்) ப்ரயத்நா (முயற்சி) நுப்ரதாநத: (சேர்தல்) (சிக்ஷை), உச்சைருதாத்த: (உரத்தல்.1.2.9) நீசைரநுதாத்த: (தணிதல்) 1.2.30) ஸமாஹார:ஸ்வரித: (சமன் : 1-2-31) துல்யாஸ்யப்ரயத்நம் ஸவர்ணம் (1-1-9 இனம்) அகஸ்ஸவர்ணே தீர்க: (6-1-101: நெட்டுயிர்) அகுஹவிஸர்ஜநீயாநாம் கண்ட:(கழுத்து) இசுயசாநாம் தாலு (அண்ணம்) ருடுரஷாணும் மூர்தா (தலை) ல்ருதுலஸாநாம் தந்தா: (பற்கள்) உபூபத்மாநீயா நாம் ஓஷ்டௌ (உதடுகள்) யமஙணநாநாம் நாஸிகா (மூக்கு) எதைதோ: கண்டதாலூ (கழுத்தண்ணங்கள்) வகாரஸ்ய தந்தோஷ்டௌ(பல்லுதடுகள்) ஜிஹ்வாமூலீ யாநாம் ஜிஹ்வாமூலம் (நாவடி) அநுஸ்வாரஸ்ய நாஸிகா (மூக்கு) யத்நோத்விதா ஆப்யந்தரோ பாஹ்யச்ச (முயற்சி இருவகை: உள்ளும் புறமும்) ஆப்யந்தரச் சதுர்தா ஸ்ப்ருஷ்ட ஈஷத்ஸ்ப்ருஷ்ட விவ்ருத ஸம்வ்ருத பேதாத் (உள்|முயற்சிநால்வகை: தொடல்சற்றுத்தொடல் திறத்தல் மூடல்) ஸ்ப்ருஷ்டம் ப்ரயதநம் (முயற்சி) ஸ்பர்சாநாம், ஈஷத்ஸ்ப்ருஷ்டம் அந்தஸ்தாநாம். விவ்ருதம் ஊஷ்மணும் ஸ்வராணும்ச'' முதலிய பாணிநீய சிக்ஷை சூத்திரம் முதலியவற்றைத் தமிழிலக்கணம் மேற்கொண்டுள்ளதும் அது மாபாடியத்தோடு ஒத்துள்ளதும் விளங்கவைக்கப் பட்டது.

பின்னும் இந்நன்னூற்சூத்திரத்தில்(125) ''இனி, இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள் கொள்ளாது

தமிழ்நூற்பயிற்சி யொன்றுமே யுடையார் எழுத்துப்போலி யுணர்த்திற் றென்று பொருள் கொண்டு அ இ ஐ; அய் ஐ, க இ கை; கய்,கை, அ உ ஔ; அவ் ஔ; க உ கௌ; கவ் கௌ என உதாரணம் காட்டுமாற்ருற் பெரும் பயனின்மையானும் வட நூலோடு மாறுபடுமாதலானும் அது பொருந்தாதென்க'' என்று சங்சரநமச்சிவாயர் இப்பொருளைத் தெளிய விளக்கிக் கூறினர். ஆரிய இலக்கணமடியாக உற்றுள்ள சீரிய நேரிய வடிவம் கொண்ட சொற்களைத் தமிழிலக்கணத்தைத் தனிமை செய்து ஆரிய இலக்கணத்தை விடுத்துப் போலியாக்குதல் தகாது என்பதும் அவ்வாறு போலியாக்குதல் தொல் காப்பிய நன்னூல்களுக்கு உடன்பாடன்று என்பதும் காட்டப்பட்டதாயிற்று. வர்ணாத்கார: (3-3-103) என்ற பாணிநீயம் மேலே காட்டப்பட்டது. இருமை (த்விவசநம்) தொல்காப்பியர்க்கு உடன்பாடு என்பதும் மேலே காட்டப்பட்டது. அவ்வாறே பிறவும் கண்டு கொள்க.

———

## முப்பத்தொன்றுமத்தியாயம்

தமிழ் மக்கட் பொது கூறும் மொழியாதலின் அதற்குத்தக ஆரிய இலக்கணத்தில் வேண்டுவன கொண்டு வேண்டாதன விடுத்து இலக்கணம் கூறப் பட்டது. நாட்டில் நடையாடும் மொழியாதலின் அதற் கேற்பச் சில மாறுதல்களும் செய்யப்பட்டன. இது "சந்தஸி என்றும் "பாஷாயாம்'' என்றும் பாணிநிதாமே உணர்த்திய முறை. இம்மாறுதல்களை மட்டிலுமே. கொண்டு தமிழிலக்கணத்தைத் தனிமை செய்தல் தக்க தன்று. ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியம் என்ற சிறப்புப் பாயிரப்பொருளைக் கீழே விளக்குமிடத்துப் பின்னும் தெளிவுறும்.

உண்மை இவ்வாறிருக்க இன்றொரு சிலர் ஆரியம் தமிழ்ச் சிதைவு நிறைந்துள்ளது என்று கூறத்தொடங்கி இருக்கின்றார்கள். இது தகாக்கூற்று. ஆரியத்தைத் தமிழில் வழங்கற்குத் தமிழிலக்கணத்தில் முறை கூறப் பட்டுள்ளது. வகுத்த முறையால் ஆரியம் தமிழில் வழங் கற்காமாதலின் ஆரியம் தமிழில் இயறற்காயது. மக்கட் பொது வழங்கும் மொழியாதலின் அதற்குத்தக அவ் வரம்பு செய்யப்பட்டது. இதற்கு மாறாக ஆரியத்தில் தமிழ்ச்சொற்கள் மலிந்துள்ளன என்றது அடியற்ற கற்பனை என்க.

ஆரியத்தில் சொற்கள் நால்வகையாக வகுக்கப் பட்டுள்ளன. அவை நாம (பெயர்) ஆக்யாத(வினை) உபஸர்க (அடையுருபு) நிபாத(விழுக்காடு)ங்களாம். ''நாமா க்யாதோப ஸர்க நிபாதா:'' (மஹாபாஷ்யம். பஸ்பச) என்று மாபாடியம் கூறிற்று. அவற்றுள் நாம என்பது பெயர். நாமம் வினைப்பகுதி அடியாகப் பிறந்தது. வினைப்பகுதி தாது என்னப்படும். தாதுவினின்று பிறத் தலின் நாமம்(பெயர்) தாதுஜம் என்னப்பட்டது. ''நாம ச தாதுஜ மாஹ நிருக்தே வ்யாகரணே சகடஸ்ய ச தோகம்'' (பெயர் வினைப்பகுதியினின்று பிறந்தது என்று

நிருக்தத்திலும் வியாகரணத்தில் சாகடாயனரும் கூறு கின்றூர். தமிழ்செய்தது) என்று பதஞ்சலி முனிவர் கூறினர். (மஹாபாஷ்யம். பஸ்பச). ''பூவாதயோ தாதவ:'' (பூ முதலியவை தாதுக்கள். 1-3-1. தமிழ் செய்தது)என்று பாணிநி கூறினர். பூ முதலிய தாதுக்கள் தாது பாடத்தில் படிக்கப்பட்டுள்ளன. ஆதலின் ஆரியத்தில் பெயர் ஒன்று இருப்பின் அதற்கு வியுற்பத்தி கூறியாதல் வேண்டும். படிக்கப்பட்டவற்றுள் இந்த தாதுவினின்று (வினைப்பகுதியினின்று) இந்தப் பிரத்தியயம் (விகுதி) சேர்ந்து இந்த நாம (பெயர்) வடிவம் பெற்றது என்று காட்டியாதல் வேண்டும். அவ்வாறு காட்டுதற்காகா தவை ஆரியத்தில் புகுதற்கும் பயிறற்கும் ஆகாதொழி வனவாம். ஆதலின் மொழி பிற ஆரியத்துட் புக வொண்ணுவாறு இரும்புபோல் வலிய வரம்புகள் செய்யப் பட்டுள்ளன. எவ்வகைப் பிற மொழிப் புகுதலையும் பொருவாறு அவ்வரம்புகள் அமைந்துள்ளன.

ஆக்யாதம் என்பது வினை. நாமமும் (பெயரும்) ஆக்யாதமும் (வினையும்) அததற்குத்தக வேற்றுமை உருபு ஏற்றுப் பதங்கள் ஆகின்றன. பெயர்ப்பதம் ஸுபந்தம் என்னப்படும். வினைப்பதம் திங‌ந்தம் என்னப் படும். ஸுப்திங‌ந்தம் பதம் (1-4-14) என்று பாணிநீ சூத்திரம் செய்தார். கூறிய முறையால் ஸுபந்த மல்லாததும் திங‌ந்தமல்லாததும் பதமாகாமையால் ஆரி யத்துட் புக இயலாதொழியும்.

''உபஸர்கா: க்ரியாயோகே'' (1.4.59) முதலிய சூத்திரங்களால் உ ப ஸ ர் க ம் இயலுமாறு கூறப் பட்டுள்ளது. கூறிய முறையால் இயறற்காகாதன ஆரி யத்துட் புகுதற்காகாதொழியும்.

நிபாதம் என்பது விழுக்காடு. விழுக்காட்டால் வடிவம் கொள்ளும் சொல் நிபாதம் என்னப்படும். அது ''நிபாத ஏகாஜநாங்'' (1.1.14) முதலியவற்றுள் கூறப்

பட்டுள்ளது. ப்ரபு என்னும் சொல்லுக்குப் 'பரிப்ருட' என்னும் வடிவம் நிபாதத்தால் வந்தது. அது 'ப்ரபௌ பரிப்ருட:'' (7.2.21) என்ற சூத்திரத்தில் கூறப்பட்டது.

மேற்கூறியவாறு கடத்தற்கும் விலக்கற்கும் ஒண்ணு வாறு திடவரம்புகள் அமைந்துள்ளதால் எம்மொழி பிறவும் ஆரியத்தில் நுழைதற்காகா. தமிழிற் பயின்று வரும் வடசொற்களைத் தமிழெனக் கொண்டும் அவற்றி னியற் பகுதி ஆரியத்துட் காணப்படுதல் கொண்டும் அவை தமிழ்ச்சொற்கள் என்றும் அவை ஆரியத்துட் புகுந்து நிறைந்தன என்றும் கருதினர் போலும். ஆரிய இலக்கண நெறிப்பாடு பிற மொழிக்கலப்பைப் பொரு. கலப்பை விலக்கற்கே அத்திறத் திடவரம்புகள் செய்யப் பட்டுள்ளன. தமிழிற்போல் ஆரியத்தில் செய்யுள் விகாரம் முதலியவை இல்லை. தமிழிற் பயின்றுவரும் ஆரியச் சிதைவுகள் பல மேலே காட்டப்பட்டுள்ளன. அவைகளையும் அவைபோன்ற பிறசொற்களையும் தமி ழென்று கொண்டு ஆரியம் தமிழ்நிறைந்தது என்று கூறுவது மருள் என்று தெளிக. அவ்வவற்றுக்கு உரிய பகுதி விகுதிகளும் வேற்றுமை உருபுகளும் அடையுருபு களும் வகுத்த சந்தி முறையால் உரிய வடிவம் பெறு தலும் சூத்திரம் கூறிய நிபாத வடிவமும் அமைந்து மொழிபிற புகுதற்கும் கலத்தற்கும் இயலாவாறு பயின்று நிகழும் தெய்வமொழி என்ற உண்மை தெளிக. செந் தமிழ்க் கவியுலகச் செங்கோலுடைய கவிச்சக்ரவர்த்தி கல்வியிற் பெரிய கம்ப நாடுடைய வள்ளல் ஆரியத்தைத் ''தேவபாடை'' (பால, சிறப். 7) என்று முழங்கியது காண்க.

———

## முப்பத்திரண்டாமத்தியாயம்

தொல்காப்பியர் வைதிகர். முன்னூல் வல்லார். தொல்காப்பியரைப் பற்றிய கதைகள் பல. அவை கதைகளே. தொல்காப்பியம் ஐயாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டது என்பர் சிலர். பிற்காலத் தொகுக்கப்பட்ட தோர் தொகை நூல் என்பர் வேறு சிலர். இவற்றிற் கிடையே தத்தங்கருத்துக்குத்தகக் காலங் கூறுவார் மற்றுஞ் சிலர். ஆண்டு ஆயிரமாயினும் ஐயாயிரமாயி னும் ஐம்பதாயிரமாயினும்ஆயிடுக. பழமை புதுமை என் பதை மட்டிலுமே கொண்டு ஒன்றின் பெருமை சிறுமை கூறவொண்ணுது. இது நூலுக்கும் ஒக்கும். ''ஆதலாம் போதி யாவு மாமவை புதிய வாம்பிற், போதெலா மாய வாற்ருற் போமெலாம் பழைய வாயே, ஆதலாற் புதுமை தொன்மை யாயுங்கா லவையி ரண்டும் ஏதுவா காவ வற்றின் குணத்துக்கோதோடத் துக்கோ'' (யாதவாப்யு. 1-6 தமிழ் செய்தது) என்ருர் வேதாந்த தேசிகர். ஆத லின் கால ஆராய்ச்சிப் பூசலில் இழியாது நூல் கூறும் உரிய பொருளைத் தேறும் துறைப்படுவாம்.

தொல்காப்பியர் பாணிநிக்கு முற்பட்டவர் என்பது பொருந்தாது. பிற்பட்டவர் என்பதைத் தொல்காப்பி யத்தின் அமைப்பும் கருத்தும் புலப்படுத்தும் என்பதை மட்டிலும் இங்குக் குறித்து நிற்பாம். பாணிநிக்கு முற் பட்டவர் என்பதாலேயே ஆரியக்கலப்பின்மை தேறுதற் காகாது. பாணிநிக்கு முன்னர் இலக்கணம் வகுத்த ஆரியம் வல்லார் பலர். பாணிநிதாமே அவர்களைக் கூறி யிருக்கிருர். காச்யபர் (8-4-67) கார்க்கியர் (8-3-20; 8-4-67) காலவர் (7-1-74; 8-4-67) சாகடாயநர் (3-4-111; 8-3-18; 8-4-50) சாகல்யர் (1-1-16; 8-3.19; 8-4-51) பாரத்வாஜர் (7-2-63) ஆசார்யர்கள் (7-3-49; 8-4-52) என்பன காண்க. பாணிநிக்கு முன்னரே ஆரிய இலக்கணம் அத்திறப் பெருக்குடையது என்பது இதனல் நன்கு காணலாம். ஆதலின் தொல்காப்பியர் பாணிக்கு முற்பாடர் என்றதனல் ஆரியக்கலப்பு விலக்கப்பட்ட தாகாது.

தொல்காப்பியர் என்னும் சொல்லில் காப்பியர் என்னும் சொல் ஆரியம். தொல் என்பது அடை, வ்ருத்த என்னும் ஆரியத்துக்குத் தொல் என்பது தமிழ். வ்ருத்த மநு வ்ருத்த யாஞ்ஞியவல்கியர் வ்ருத்த சாதாதபர் என்பது போல். காப்பியர் என்பார் பிருகதாரணியக உபநிடதத்துள் ஓதப்பட்ட ஓர் கோத்திரவிருடி (5-7) இவ்வுபநிடத பாகம் அந்தர்யாமி ப்ராஹ்மணம் என்னப்படும். காப்பியர் ஓர் கோத்திர முனிவர் என்பதை இதனுல் அறியலாம். கபி என்னும் ஆரியச்சொல் கோத்திரப் பொருளில் யஞ் விகுதி ஏற்றுக் காப்பிய என்னும் தத்தித வடிவம் பெறுகிறது என்று பாணிநி கூறினர் (4-1-107) ஆதலின் காப்பியர் என்னும் சொல் ஆரியம் என்பது தெளிவு. கபி என்னும் சொல்லுக்குக் குரங்கு என்ற பொருளும் உள்ளது. கோத்திரப் பொருளில் பரணிநி கபிஷ்டல (டவர்க்க இரண்டாம் ட. கரம்) என்று சிறப்பு வடிவம் கூறினர். குரங்குப் பொருளில் கபிஸ்தல (தவர்க்க இரண்டாம் தகரம்) என்னும் பொது வடிவமே என்று காட்டப்பட்டது. ''கபிஷ்டலோ கோத்ரே'' (8-3-91) என்பது அச்சூத்திரம். தஞ்சை மாவட்டத்தில் கபி(வி)ட்டலம் என்ற ஊர் ஒன்று உள்ளது. கவிட்டலம் என்று கூறுவதே தகும். கவிட்டல(த்தல) மூப்பனர் என்று பிரசித்தி பெற்ற புலவர் ஒருவர் இவ்வூரில் இருந்தார். இவர் சில ஆரிய நூற்களைத் தமிழ் செய்தும் செய்வித்தும் உள்ளார். ஆதலின் ஆரியநூற்கூறும் கபி(காப்பியர்) என்பார் தென்னுட்டவர் என்பது பெரிதும் பொருந்தும். வியாசமுனிவர் பணித்த பிரமசூத்திரத்துக்கு ஆதிபாடியம் உரைத்த த்ரமிடாசாரியர் தென்னுட்டவர் என்பது மேலே கூறப்பட்டது. அவர்க்கும் முற்பட்டவர் பிரம சூத்திரத்துக்கு வாக்கிய உரை பணித்த பிரமநந்தி என்பார். டங்கர் என்பதும் அவர்க்குப் பெயர். சில திருக்குடந்தை அந்தணர்கள் தங்களைப் பிரமநந்தி மரபினர் என்று கூறுகின்றூர்கள். ''குடந்தை யந்தணர், மந்திர மொழியுடன் வணங்க ஆடரவமளியி லறிதுயில மர்ந்த பரம!'' (திருவெழுகூற்) என்ற மங்கையர் கோன் திருப்

பாடலில் குடந்தை யந்தணர் சிறப்புக் கூறப்பட்டுள்ளது இங்கு நோக்கத்தக்கது. அகத்தியர் மதங்கர் காத்தியாயநர் பிரமநந்தி த்ரமிடாசார் முதலிய வேத முனிவர்களும் வேதம் வல்லார்களும் விளங்கிய நன்னாடு தென்னாடு (தமிழ்நாடு) என்ற உண்மை காண்க. அகத்தியரைத் தென்திசையிலுறையும் முனிவர் என்று வான்மீகி கூறினார் (இராமா. உத்தர. 25. 1), காத்தியாயநர் தென்னாட்டார் என்று பதஞ்சலிமுனிவர் மாபாடியத்தில் கூறினார். (தாக்ஷிணாத்ய என்பது அங்குள்ள ஆரியம். மாபாடியம். பஸ்பசாந்ஹிகம்). வேதச்சொல் என்னும் சொல்லை வைதிகச்சொல் என்று காத்தியாயநர் தமது வார்த்திக நூலில் தத்திதமாக நீட்டிக் கூறிய தென்னையெனின் தென்னாட்டார் தத்திதப்பிரியர்கள் (தத்திதத்தை உகந்தவர்கள்) என்று பதஞ்சலி அதற்கு ஏது கூறினார். வையாகரணர் (ஆரிய இலக்கணநூலார்) அரைமாத்திரை குறையப் பெறின் அப்பேற்றைப் புதல்வரைப்பெற்ற விழாவெனக் கருதுவார் என்பது அக்கொள்கை (அர்தமாத்ரா லாகவேந புத்ரோத்ஸவம் மந்யந்தே வையாகரணா: என்பது அதன் ஆரியம்). காத்தியாயநர் சுருங்கச் சொல்லாது நீட்டிச் சொன்னதற்குப் பதஞ்சலி ஏது கூறியவாறு. இதனால் ஆரியம் தென்னாட்டில் இயன்றுள்ளதும் தத்திதவழக்குத் தென்னாட்டார் உகந்துள்ளதும் தெரியலாம்.

வடசொல் என்றது திசைச்சொல் அன்று. அயற்சொல் அன்று. எல்லா நாட்டிற்கும் உரிய பொதுச்சொல் என்பதை மாபாடியம் மேற்கூறிய விடத்தும் வேறிடத்தும் காட்டித்தந்தது. வியாகரணம் பயிலப் பதஞ்சலி தென்னாட்டிற்கு வந்தார் என்பது ஐதிகம். பதஞ்சலி காலத்தில் வடநாட்டிலும் தென்னாட்டில் ஆரியப் பயிற்சி மிகுத்திருந்தது என்பதை இவ்வைதிகம் திடப்படுத்தும்.

மேலும் கபி என்னும் சொல்லுக்குச் சூரியன் என்பதும் பொருள். கம் (நீரை) வெம்மையால் பிபதி

(பருகலான்) சூரியனுக்குக் கபி என்பது பெயராயிற்று. இது நிருக்த முறை. கபி என்னும் சொல் முனிவரைக் கூறுங்கால் எழுத்து (வருணம்) என்னும் பொருளை உணர்த்தும் கப்ரு(பவர்க்க மூன்றும் பகரம்) என்னும் பூவாதி வினைப்பகுதி ப (பவர்க்க முதலாம் பகரம்) என ஈறுதிரிந்து கபி என்னும் வடிவம் பெறுகிறது. கபிலர் என்னும் சொல்லும் இவ்வினைப் பகுதியடியாக அவ்வாறே ஈறு திரிந்து இலச் விகுதி ஏற்றுக் கபில என்னும் வடிவம் பெறுகிறது. சாங்கியம் நூற்ற முனிவர்க்குக் கபிலர் என்று பெயர். எழுத்து (வருணம்) என்றதால் எழுத்தறிவு (வேத அறிவு) உணர்த்தப் பட்டது. இது வியாகரணமுறை. கபி என்பது குரங் குக்கும் பெயர். குரங்கைக் கூறுங்கால் கபி சலநே (அலைதற்பொருளில்) கபி என்னும் பூவாதி வினைப்பகுதி இதித் ஆதலின் நகரம் கெட்டு இ என ஈறுபெற்றுக் கபி என நின்றது. இதுவும் வியாகரணமுறை, சலந (அலைவு) இயல்பு உடையதாதலால் குரங்குக்குக் கபி என்பது பெயராயிற்று. ஒருநிலைப் படாச் சஞ்சல (கம்பந) மனமுடைமையான் கபி என்னப்பட்டது.

சூரியன் எழுத்தறிபவன் குரங்கு என்னும் மூன்று பொருள்களும் அநுமனிடத்தில் நயம்படப் பொருந்தி நிற்றல் காண்க. சூரியன் பால் சாஸ்த்ரங்கள் எல்லா வற்றையும் பெற்று நாவீறுடையவனாய் விளங்கினான் என்றும் நவ (ஒன்பது) வியாகரணம் வல்லான் என்றும் வேத சூத்திர வியாகரணப் பொருள் தேர்ந்த பெற்றி யான் என்றும் (இராமாய உத்தர 36—13,14,45,46,47) கதியிலும் மதியிலும் வலியிலும் அநுமனை ஒப்பாரிலர் (ஷை 35-15) என்றும் இராமாயணம் கூறியது. இது அகத்தியர் வாக்கியம். இராமபிரான் தானுமே:—
"அன்புகூ ரமுத மூறும் நறிய வாக்கியம றிந்தான், நன்பக ரிருக்கி லங்க நாறெசுச் செறிவிற் சாமம் தன் படத் தகவ றிந்த தக்கநா வலர்க ளல்லால், இன்புற விவன்போல் யாரே இயம்பவல் லார்க ளாவர்"

''விளக்கவே இலக்க ணம்பன் முறையெலாங் கேட்டி ருப்பான், கிளக்கினும் பலவுஞ் சொற்க ளிழிவழக் கிறையுங் கூருன்'' (இராமா கிஷ்கிந்தா 3-37—29 தமிழ் செய்தது) என்று இளையபெருமாளுக்கு அநுமன் பெரு மையை எடுத்துக் கூறினன். ஆதலின் அநுமன் பெயரால் இலக்கணத்தின் பெயர் கூறலாயிற்று என்பது பொருந் தும். இலக்கணங்களுள் ஐந்திரம் சிறந்தது என்ற பிரசித்தி பெற்றது. ஐந்த்ரவ்யாகரண பண்டிதன் ஐந்திரப்பரவை ஐந்திரம் நிறைந்தவன் நவவியாகரண பண்டிதன் என்று அநுமன் தனித்ததோர் பிரசித்தி வாய்ந்தவன். இது வேறிடத்தும் விளக்கப்பட்டுள்ளது. ஐந்திரம் என்று உரைத்தல் அநுமனையும் உரைத்ததாம். ஐந்திரத்துக்கும் அநுமனுக்கும் உற்றுள்ள தொடர்பு அத்திற வாய்ப்பும் சிறப்பு முடையதொன்றென்க.

மேற்கூறிய பொருள்களைச் சுருங்கச்சொல்லி விளங்க வைக்கும் முறையில் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம் அமைந்துள்ளது. ''முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணிப் புலந்தொகுத் தோனே......பாண்டிய னவை யத்து, அறம்கரை நாவின் நான்மறை முற்றிய அதங் கோட் டாசாற்கு......எழுத்து முறைகாட்டி......ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியனெனத் தன்பெயர் தோற்றிப் பல்புகழ் நிறுத்த படிமையோனே'' என்பது அப்பாயிரம். அது நன்கு ஓர்ந்து அறியப்படவேண்டியது. இப்பாயிரம் செய்தார் இந்நூல் செய்தாரோடு ஒருங்கு கற்ற பனம் பாரனர் என்று இளம்பூரணர் கூறினர். முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப் புலந்தொகுத்தோன் என்று கூறியதால் தொல்காப்பியம் தொகுக்கப்பட்டதோர் வழி நூல் என்பது உணர்த்தப்பட்டது. முந்துநூல் கண்டு என்பது பொது, ஐந்திரம் நிறைந்தவன் என்பது சிறப்பு. ஐந்திரம் சிறந்த முந்துநூல் என்னும் பொருள் இங்குச் சிறக்கும். அகத்தியத்தின் வழிநூல் தொல்காப்பியம் என்ருர் நச்சினர்க்கினியர் (சீவக. 1 உரை) ஐந்திரம் முந்துநூல் என்பது ஏற்பும் சிறப்பும் மிகும். எம்முறை

யிலும் முதனூல் கண்டு தொகுக்கப்பட்ட வழிநூல் தொல் காப்பியம் என்பது தேற்றம். பாண்டியன் அவையத்து. அறம் சொல்லும் நாவுடைய நான்கு வேதத்தையும் முற்ற உணர்ந்த அதங்கோட்டாசாற்குத் தெரிந்து காட்டிய என்றதால் வேதம் வல்லார் ஏற்குமாறு தொல் காப்பியர் தொகுத்து உரைத்தார் என்பது உணர்த்தப் பட்டது. அவ்வாசான் எவராயிருப்பினும் அவர் வேதம் முற்றும் ஓதி உணர்ந்த மூதறிஞர் என்பது தெளிவு. அது இலக்கிய முதன்மையை விளக்கியவாறு. இது நூல் இலக்கணம். ஆதலின் இதை நூற்றற்கு உரிமை தோற்றற்கும் வேதத்தை இலக்கியமாகக் கொண்டு அமைந்தமை தோற்றற்கும் ஐந்திரம் நிறைந்த தொல் காப்பியன் என்ருர். ''லக்ஷ்ய லக்ஷணே வ்யாகரணம்'' (இலக்கிய இலக்கணங்கள் வியாகரணம். தமிழ் செய்தது) என்று காத்தியாயநர் கூறியது மேற்கொள்ளப்பட்டது என்று உணர்த்தியவாறு. வேதம் அங்கி. வியாகரணம் (இலக்கணம்) அங்கம். வேதத்துக்கு அங்கங்கள் ஆறு ஆம். அவ்வாறங்கங்களுள் வியாகரணம் தலைமை வாய்ந்தது என்று பதஞ்சலி கூறினர் (மஹா பாஷ்யம் பஸ்பசா), வியாகரணங்களுள்ளும் ஐந்திரம் சிறந்தது என்பர். இங்கு ஐந்திரம் என்று ஏனைய வியாகரணங் களையும் உளப்படுத்தியபடி. நூலின் சிறப்பும் நூற்ருரின் இலக்கிய இலக்கணநூற்பயிற்சிச்சிறப்பும் இம்முறையால் அறிவிக்கப்பட்டது. வியாகரணம் ஒன்பது. அவற்றுள் சாந்திரமும் ஒன்று. அது சந்திரன் தந்தது. ஆதலின் அது சாந்திரம் என்னப்பட்டது. பாணிநீயம் ஐந்திரம் நிறைந்தது. ''பலேக்ரஹி ராத்மம் பரிச்ச'' (3. 2. 26) என்னும் பாணிநி சூத்திரத்தை ''ஆத்மோதரகுக்ஷிஷு'' என்று சாந்திரர் ஓதுகின்ருர்கள் என்று கௌமுதி நூல் கூறிற்று. சாந்திரம் என்பது ஐந்தவம். ஆத்திரேயம் என்றும் கூறப்படும். அத்திரி முனிவரின் கண்ணினின்று தோன்றிய ஒளியாதலின் சந்திரனுக்கு ஆத்திரேவன் என்பதும் பெயராயிற்று. சாந்திரத்தை மேற்கொண்டவர் ஆத்திரேயர் என்னவும் படுவார். அத்திரி அகத்தியர்

என்பவர்கள் காப்பியர் போல் கோத்திரவிருடிகள் என்பதைப் பாணிநீயம் கூறிற்று (2.4.65; 2.4.70) பேரிலக்கிய நான்மறைவல்லார் பேரிலக்கண ஐந்திரம் வல்லார் முன்னூற் பொருள்களைக் கண்டு தொகுத்துக் கூறிய வழிநூல் தொல்காப்பியம் என்பது சிறப்புப் பாயிரத்தின் திரண்ட பொருள்.

மேலும் காப்பிய என்பது தந்திரமுறையால் (ஜைமிநீய. அத்தியா. 11) அநுமனையும் உணர்த்தியவாரும். காப்பிய என்பது கபி என்னும் சொல்லின் தத்தித வடிவம். தென்னாட்டார் தத்திதப் பிரியர்கள் என்ற பதஞ்சலிவாக்கால் காப்பியர் தென்னாட்டவர் எனக் கொள்ள அமையும். கோத்திரமரபை நோக்க உரிமையும் சாத்திரமரபை நோக்கத் தகைமையும் உணர்த்தப்பட்டவரற்ருன் ஐந்திரம் நிறைந்த தொல் காப்பியன் என்றது பெரிதும் சாலும். இலக்கணம் தொகுத்துக் கூறும் தகைமை சான்ற சிறப்பும் கூறிய தாம். பிறப்பால் இருடி அந்வயம் நூலால் அறிவந்வயம். அவற்றுள்ளும் அறிவந்வயம் சிறந்தது என்று ஆபஸ்தம்ப முனிவர் கூறினர், (தரும. 1.1.1). அநுமன் ஐந்திரம் நிறைந்தவன் என்பது தொன்னூற் பிரசித்தம். அப்பிரசித்தி பிறர்க்கில்லை. ''ஐந்திரம் நிறைந்தவன்'' (இராமாவ, யுத்த. விபீடணனடைக்கல. 42) என்று அப்பிரசித்தியைக் கம்பர் கூறினர். ''ஐந்த்ர வ்யாகரண பண்டிதன்'' (ரஹஸ்ய த்ரய) என்ருர் வேதாந்த தேசிகர். ஐந்திரம் நிறைந்த சிறப்பு அநுமனுக்கே உரியதொன்ருதலால் பனம்பாரனர் அநுமனையே கருத்திற்கொண்டு ஐந்திரம் நிறைந்தவன் என்று கூறினர் என்பது நன்கு தகும். கம்பர் முற்பட்டவரா பனம்பாரனர் முற்பட்டவரா என்றது கொண்டு ஐயம் எழுப்புவதற்கில்லை. கம்பர் முற்பட்டவராயின் பாயிரம் அநுவாதமாம். பிற்பட்ட வராயின் ப்ரத்யபிஞஞையாம். எப்படியிலும் ஐந்திரம் நிறைந்தவன் அநுமன் என்பது தெளிவு. ஐந்திரம்

நிறைந்த அநுமன்பாற் பத்தியடியாக அநுமன் பெயரைப் புனைந்தவர் தொல்காப்பியர் என்பது சாலவும் தகும்.

இலக்கியமாகிய நான்மறை ஆரியம். இலக்கண மாகிய ஐந்திரம் ஆரியம். அவற்றின் வழிநூல் தொல் காப்பியமாம் தொகைநூல் என்ற உண்மையைப் பாயிரம் தெளியக் காட்டிநின்றது. ஆரிய இலக்கிய இலக்கண நூல்களின் வழிவந்த தமிழிலக்கணத் தொகைநூல் தொல்காப்பியம் என்றவாறு. ஆரியமுதனூல்கள் கூறிய வற்றுள் செந்தமிழ் முப்பால் வழக்குக்கு வேண்டுவன கொண்டு வேண்டாதன விடுத்துத் தொகுக்கப்பட்ட வழிநூல் தொல்காப்பியம் என்பது இதனுல் தெளியக் காணலாம்.

இவ்வாறு தெளியக்காணும் உரிய பொருளுக்கு மாருகக் காப்பியன் என்பது குறுக்கையர் சேக்கிழான் என்பன,போன்ற தோர் பழந்தமிழ்க்குடிப் பெய்ரேயாம் அச்சொல் இயம் காப்பு என இருந்து நிலைமாறி வழங்கியிருக்குமென உய்த்துணரவும் கூடும் என்றும் மக்களின் பண்பாட்டு முறையினை இலக்கணவகையால் ஆராய்ந்து யாத்துப் பொருளதிகாரம் எனப் புகழ் பெற்று நிலவும் மொழியும் புலவரும் முறையே தமிழரும் தொல்காப்பியருமே ஆவர். வேறு வடமொழி யுள்ளிட்ட எம்மொழியிலும் இன்று காறும் தோன்ருத சிறப்புப் பொருளதிகாரம் என்னும் பெருமுறை தமிழ் ஒன்றுக்கே உரியதாகும். மற்றைய மொழிகளெல்லாம் ஒழுகலாற்றை இலக்கியவாயிலாக விளக்கிக் கொண்டி ருக்கின்றன. தமிழ் மொழி யொன்றுதான் இரண்டின் வாயிலாக விளக்கிக் கொண்டிருக்கிறது என்றும் தமிழர் வாழ்முறை நிலத்தை ஒட்டியது நிலச்சார்பாக அவர்கள் பெயரமைத்து அழைக்கப்பட்டனவன்றிப் பிறப்பால் சாதி வகுக்கப்பட்டு அழைத்தனவில்லை. சாதி பற்றிய வகுப்பு முறை கொண்ட நூற்பாக்கள் பிற்கால இளம் புலவர்களால் ஆக்கி இடைச்செருகலாக அமைக்கப்

பெற்றனவோ என ஐயுறற்கு ஏற்றனவாக இருக்கின் றன. இவைகளில் உள்ள குலவகுப்பு அதற்கேற்ற நீதி நெறிகளையும் முறைகளையும் நோக்கின் அவை பிற் காலத்தன என்பது தெற்றென விளங்கும் என்றும் வது வைச் சடங்கு முதலியவை பிற்காலத்து வந்தேறிய ஆரியக் கொள்கைகளின் கலப்பாம் என்றும் இன்றொரு சிலர் கூறுகின்றார்கள். சிறப்புப் பாயிரத்தோடும் தொல் காப்பியத் தோடும் முரணுதலான் இவர்கள் கூற்றுப் போலி என்க.

முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி...... ஐந்திரம் நிறைந்த தொல்காப்பிய னெனத் தன் பெயர் தோற்றி'' என்று பாயிரம் கூறுதலால் தொல்காப்பியம் கூறிய பொருளெல்லாம் முந்து நூல்களுள்ளும் ஐந்திரத் துள்ளும் கண்டன என்பது தெளிவு. முதனூல்களுள்ளும் ஐந்திரத்துள்ளும் காணாப் பொருள்களையும் தொல்காப் பியர் கூறினார் எனின் தொல்காப்பியம் முதநூலாம் முந்து நூல் கண்டு தொகுக்கப்பட்ட நூல் என்று கூறும் பாயிரத்துக்கு முரண். ஆதலின் அது வழிநூலே. வழிநூலேயாயினும் முதனூல்களில் காணாத பொருள்களைத் தொல்காப்பியர் கூறினார் என்பது முரணியதோர் கற்பனை என்பது நன்குதோன்றும். தொல்காப்பியம் இலக்கண நூல், ஆதலின் முந்து நூல்கள் என்றது இலக்கண நூல்களை உணர்த்தி நிற்றல் சிறக்கும். ஐந்திரம் இலக்கண நூல் அது ஆரியம். அது நிறைந்தவன் என்றதால் அதிற் கூறிய பொருள்களுள் வேண்டுவன கொண்டு தொல்காப் பியம் தொகுக்கப்பட்டது என்னும் பொருளே பெறப் படும். அதனுள் காணாத பொருள்களையும் அதனோடு முரணும் பொருள்களையும் தொல்காப்பியம் கூறிற்று என்பது அறவே பொருந்தாது.

எழுத்து சொல் பொருள் என்னும் மூன்று அதிகா ரங்களுக்கும் முந்து நூல்களும் ஐந்திரமும் முதனூல்

களாம் என்பது மறுத்தற்காகாது. மறுப்பார் பாயிரத் தையும் தொல்காப்பியத்தையும் மறுப்பாரேயாவார்.

அன்றியும் தொல்காப்பியம் முதலிய தமிழ் முன் னூல்களில் தங்களுக்குப் பொருள் விளங்காப் பாக்களை யும் தங்கள் கற்பனைகளுக்குக் கழுத்திற் கடுவாம் பாக்க ளையும் பிற்காலத்து இளம்புலவர்கள் செய்த செருகு பாக்கள் என்பவர்கள் செருகு தமிழரேயாவார் என்க.

ஒழுக்க இலக்கணம் கூறுதற்கு வேதவிருடி தோத் திரத்தால் உரிமையும் சொல்லிலக்கணம் கூறுதற்கு ஐந்திரம் முதலிய சாத்திரத்தால் தகைமையும் கூறப் பட்டது. காப்பியர் என்னும் சொல் பண்டை யிலக்கிய இலக்கணப் பிரசித்தியுடைய ஆரியப்பெயர் என்னும் உரிய பொருளைக் கொள்ளாமல் நிலைமாறியதோர் தமிழ்ப் பெயரைத் தேடிப்போவது எதற்காக? அதைப் பாயிரம் பொருது. அறவே தகாது. சிறப்புப் பாயிரம் கூறுவது சிறப்புப் பொருள். அச்சிறப்பு இலக்கிய இலக்கணங்கள் கண்டு நூற்றற்கு வேண்டிய உரிமை தகைமைகளைக் கூறும் சிறப்பாம். அவையிரண்டையும் கூறிய சிறப்பு பாயிரச்சிறப்பாம்.

---

## முப்பத்துமூன்றுமத்தியாயம்

அறம் பொருள் இன்பம் எழுத்து சொல் வாக்கியம் இடம் காலம் முதலியவைகளுக்கு ஆரிய இலக்கணப் பனுவல்கள் பல உள்ளன. அவை கூறும் பொருள் வேதத்துள் கண்டது. அதற்கு அவை இல்க்கணமாயும் விளக்கமாயும் உள்ளன. சிக்ஷை முதலிய எழுத்திலக்கண நூல்கள். வியாகரண நிருக்தங்கள் சொல்லிலக்கண நூல்கள். சந்தோவிசிதிகள் யாப்பிலக்கண நூல்கள், தருக்க மீமாஞ்சைகள் வாக்கிய இலக்கண நூல்கள் கற்பம் முதலிய ஒழுக்க இலக்கணநூல்கள் சோதிடம் காலஇலக்கணநூல். மாநவம் முதலிய அறஇலக்கண நூல்கள். வாற்சாயநீயம் முதலிய காமஇலக்கண நூல்கள். பரதநூல் முதலிய காட்சிக்காவிய(நாடக) இலக்கணநூல்கள். பாமஹாதி நூல் முதலிய கேள்விக்-காவிய இலக்கணநூல்கள். நிலம் குலம் முதலியவற்றின் இலக்கணநூல்களாம். விஷ்ணுபுராணம் முதலிய நூல்கள். இலக்கண நூல்கள் பிறவும் ஆரியத்தில் உள்ளன.

அவற்றுள் அறம் பொருள் இன்பம் என்னும் முப்பால் (த்ரிவர்க) இலக்கணநூல்கள் கூறியவற்றுள் தமது நூலுக்கு வேண்டிய பொருள்களை மேற்கொண்டு தொல்காப்பியத்தைத் தொகுத்தார் என்ற ஆன்றோர் கோட்பாடே மெய்க்கோட்பாடு. அஃதே தக்கதும் சிறந்ததும் என்பது சித்தம்.

தொல்காப்பியர் வைதிகமுதியோர். வேதம் வகுத்த சாதி கோத்திர சரணப் பாகுபாடுகளையும் குலதருமங்-களையும் ஆசாரங்களையும் மேற்கொண்டவர். அவைகளையே அடியாகக் கொண்டு தொல்காப்பியத்தை நூற்றவர். நிலப்பாகுபாடுதான் தமிழர் பண்பாடு குலப்பாகுபாடுகளும் குலதருமங்களும் ஆசாரங்களும் தமிழர் பண்பாடன்று. அவை பிற்காலத்தில் ஆரியக்-கலப்பால் வந்தேறியவை என்பார் அறமற்ற நிலப்

புட்களோடும் மாக்களோடும் மக்களை ஒத்தாராக்குவ-தோடு தொல்காப்பியத்தையும் மறுத்தாரேயாவார். அவர் கூறும்பண்பாடு புட்பண்பாடே மாப்பண்பாடே. அது ஐயறிவுப்பண்பாடேயன்றி மக்கட்பண்பாடாகா. முந்துநூல் கண்டுநூற்ற உண்மையை "என்மனார் புலவர்" "மொழிப" "என்ப" "செவ்விதென்ப சிறந்திசினோரே" "என்மனார் புலமையோர்" "கொள்ளுமென்ப குறி அறிந்தோரே" (குறி என்று இலக்கணம் கூறப்பட்டது)" புலன் நன்குணர்ந்த புலமையோரே" (புலன் என்று வேதம் சிறப்பாகக் கூறப்பட்டது) "மறையோராறே" முதலிய சூத்திரங்கள் காட்டித்தரும். தொல்காப்பியர் வேதத்தின் முற்பாகம் உணர்த்தும் பொதுவாம் முப்பாலையும் முடிப்பாகம் உணர்த்தும் சிறப்பாம் வீட்டுப்பாலையும் மேற்கொண்டவர். தமதுநூல் முப்பானூலாதலின் அதற்கு ஒத்த வேததரும இலக்-கணங்களையும் அத்தருமத்தான் வரும் இன்பத்தின் இலக்கணங்களையும் தகத்தொகுத்துள்ளார். சாதிப்-பாகுபாடு தருமப்பாகுபாடு அறந்தவாநெறிக் கூட்டம் முதலியவைகளை வேதம் முதலிய முந்துநூல்கண்டு அவற்றை முறைப்பட நூற்றுள்ளவாற்றை: "அந்தணர் மறைத்தே" "மாயோன் மேய" "ஓதலுந் தூதும் உயர்ந்தோர் மேன" "முல்லைமுதலாச் சொல்லிய முறையால்" "உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத்-தான" வேந்து வினையியற்கை" "மாயோன்மேய மன்பெருஞ் சிறப்பின் தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்" "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் ஐவகைமரபின் அரசர்பக்கமும் இருமூன்று மரபினேனோர்பக்கமும்" "பல்லாற்றானும் நில்லாவுலகு" "நல்லோள்கணவன்" மறையோர் தேஎத்து மன்றலெட்டனுள்" "ஒத்த கிழவனும் கிழத்தியும்" "கொடுப்போரின்றியுங் கரணமுண்டே" "மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம் கீழோர்க்காகிய காலமுமுண்டே" "பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்

அய்யர் யாத்தனர் கரணமென்ப'' அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும்'' ''அன்னவை பிறவும் பார்ப்பார்க் குரிய'' ''நூலே கரகம் முக்கோல் மணையே ஆயுங்காலை அந்தணர்க்குரிய'' ''படையுங் கொடியுங் குடையும் முரசும் தெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய'' ''வைசிகன் பெறுமே வாணிகை வாழ்க்கை'' ''வேளாண்மாந்தர்க் குழுதூணல்லது இல்லெனமொழிப பிறவகைநிகழ்ச்சி'' ''வெளிப்பட வரைதல் படாமை வரைதலெ ன்றுயிரண்டென்ப வரைதலாறே'' ''மறையென மொழிதல் மறையோராறே'' என்னும் சூத்திரங் களும் பிறவும் கண்களில் தெரியக்காட்டி நின்றன. இது மேலே தெளிய விளக்கப்பட்டுள்ளது.

மேற்கூறிய சூத்திரங்களும் ''மறையோர் தேஎத்து மன்றல் எட்டு (களவியல். 89) என்றதற்கு ''மறையோர் என்றது அந்தணரை. தேஎம் என்றது அவரதாகிய நூலை'' என்று இளம்பூரணர் உரைத்தார். அது மறை கூறும் அறத்தொகை நூலாகிய மநுநூல் முதலிய என்க.

மநு நூல் கூறும் எட்டு மணமாவன: பிரமம், தைவம், ஆரிடம், பிராசாபத்தியம் ஆசுரம், காந்தருவம் இராக்கதம், பைசாசம் என்பன. (மநு. 3. 27-34) கௌதமரும் (1-6-15) போதாயநரும் (1-11-20) அவ்வாறே வகுத்திருக்கின்றூர்கள். ஆபஸ்தம்பர் யாஞ்ஞிய வல்கியர் வஸிஷ்டர் விஷ்ணு நாரதர் முதலியோர் நூல்களும் அவ் வாறே வகுத்துள்ளன. ஆதலின் களவை மறையோ ராறே (தொல். பொருள் செய்யுள். 120) என்றூர். ''காந்தர்ப்ப மென்ப துண்டாற் காதலிற் கலந்த சிந்தை. மாந்தர்க்கு மடந்தை மார்க்கும் மறைகளே வகுத்த கூட்டம்'' (இராமாய. ஆரணிய. சூர்ப்ப 53) என்றூர் கல்வியிற்பெரிய கவிச்சக்ரவர்த்தி. கன்னியர் தமது காமத்தால் தமரால் கொடுக்கப்படாது தமரை மறைத்துக் கூடிப் பின்னும் அறநிலை வழாமல் நிற்றலால் காமக் கூட்டமும் அறக் கூட்டமே. கரணம் முதலிய அது

பின்னும் திடனுறற்பொருட்டு என்று அறிக. ''ஈண்டுக் களவென்றேதப் படுகின்ற ஒழுக்கம் அறம் பயவாத புற நெறியன்று. வேதவிதியாகிய தந்திரம் என விகற்ப மாகிய நெறி கூறியவாறு'' என்று இளம்பூரணர் உரைத் தார். ''அறத்தான் வருவதே இன்பம்'' என்ற திருக் குறள் மறை வகுத்த இலக்கணத்திடப்பாடாம். வில் லேற்றுதல் (இராமபிரான்) ஏறுதழுவுதல் (கண்ணபிரான் மாலே மாற்றுதல் (கோதைப்பிராட்டி) முதலியவும் களவொழுக்கத்தின் பொற் படும். கரணம் முதலியவும் நிகழ்ந்தன. இருவரும் மாறிப்புக்கு இதய மெய்துதல் அறக்கூட்டம் அனைத்துக்கும் உயிர்நிலையாம். ''இரு வரு மாறிப்புக் கிதய மெய்தினர்'' (இராமாவ. பால மிதிலைக். 27) என்றார் கம்பர். ''தேவியிவள் (சீதை) மனம். அவன்(இராமன்)இடத்தும் அவன்(இராமன்) மனம் இவள்(சீதை) இடத்தும் திடநிலை கொண்டன'' (இராமாய. சுந்தர. 15. 52. தமிழ் செய்தது) என்று தருமத்தின் தனிமை தீர்க்கும் அநுமன் தருமத்தின் தனிமூர்த்தியாகிய இராமபிரானுக்குத் தான் கண்ட தருமத் திருக்காட்சியை ''விற்பெருந் தடந்தோள் வீர விலங்கு நீரிலங்கை வெற்பில், நற் பெருந் தவத்த ளாய நங்கையைக் கண்டேனல்லேன், இற்பிறப் பென்ப தொன்று மிரும் பொறை மென்ப தொன்றும், கற்பெனும் பெயர தொன்றும் களி நடம் புரியக் கண்டேன்'' (இராமாவ சுந்தர, திருவடி. 62) என்று விண்ணப்பம் செய்து தொழுவானாயினன்.

அறத்தான் வருவதே இன்பம் என்னும் உண்மை இதனால் விளக்கப்பட்டது, அவ்வுண்மை கண்டார் நிலப் பாகுபாடால் தான் மக்கட்பாகுபாடு சாதி குலதருமப் பாகுபாடெல்லாம் பிற்காலத்தில் ஆரியக் கலப்பால் வந் தேறியவை என்னும் கூற்று போலிஎன்பதைத் தாமே காண்பார். விலங்குகளுக்குத் துறைகள் வகுக்கப்படாமை யாலும் மறைநூல் கூறியவாறு ஒழுகும் தகைமைக்கு உரிமை சான்ற மக்கள் கூட்டத்திற்கே அவை வகுக்கப்

பட்டுள்ளதாலும் அறத்துறைகளே அகத்துறைகளாக அமைக்கப்பட்டுள்ள உண்மை தெளியக் காணலாம், இதைப்பின்னும் விளக்கிக் கூறுவாம்.

"திணைநிலப் பெயரைக் கூறிய சூத்திரத்தில் திணை நிலப்பெயர் என்றதனுன் அப்பெயருடையார் பிறநிலத்து இலர் என்று கொள்ளப்படும். அதனுனே எல்லா நிலத்துக்கும் உரியராகிய மேன்மக்களை ஒழித்து நிலம் பற்றி வாழும் கீழ்மக்களையே குறித்து ஓதினுர் என்று கொள்க. பெயர் என்றதனுல் பெற்றதென்னை? மக்கள் என அமையாதோ எனின் மக்களாவார் புள்ளும் மாவும் போல வேறுபடுக்கப்பட்டார் ஒரு நீர்மையராதலின் அவரை வேறுபடுக்குங்கால் திணைநிலப்பெயரான் அல்லது வேறுபடுத்தல் அருமையின் பெயர் என்ருர்" என்ற இளம்பூரணர் உரை இங்கு நோக்கத்தக்கது (பொருள். அகத். 22)

"இத்தனையே விலங்குகளாம் இருகாலும் நாற் காலும்" (வேதம். தமிழ் செய்தது) என்று வேதம் ஓதிற்று. "விலங்கொடு மக்களனையர் இலங்கு நூல், கற்ருரோ டேனையவர்" (குறள் 410) "பிறப் பொக்கு மெல்லா உயிர்க்கும் சிறப் பொவ்வா, செய்தொழில் வேற்றுமையான்" (ஷை 972) என்று குறளாசிரியர் கூறினுர். இங்குக் கற்ருரோடு என்றதால் கற்றதற்குத்தக நிற்பாரை உணர்த்தியவாறு. "பாந்தளின் மகுட கோடி பரித்தபா ரதனில் வைகும் மாந்தரை விலங்கென் றுன் னும் மனத்தன் மாதவத்த னெண்ணில், பூந்தவி சுகந்து ளோனும் புராரியும் புகழ்தற் கொத்த, சாந்தனுல் வேள்வி முற்றில் தனயர்க ளுளரா மென்ருன்" (இராமாவ. பால திருவவதார. 24) என்று இவற்றின் அரும் பொருளைக் கம்பநாடுடைய வள்ளல் விளங்கவைத்தபடி. இதனுல் கலைக்கோட்டுமுனிவரின்ஒப்பற்றதோர் துறவின் சிறப்பு உணர்த்தப்பட்டது. இறைவன் திருவவதாரம் செய்தருள்வதற்குப் புரிந்த புத்திரவேள்வியில் ஆவுதி

இடும் உரிமை சான்ற ஓரொருவர் கலேக்கோட்டு முனி வர் என்றும் அவர் சாந்தர் என்றும் அரியதோர் வேத உண்மை இங்கு உணர்த்தப்பட்டது. சாந்தர் வயத்தன் இறைவன் என்பது அவ்வுண்மை. அனைத்தையுமே தன் வயத்தவாய் ஆண்டருளும் இறைவன்தானும் தன்னடிப் பால் துறந்தார் வயத்தனய் நிகழ்ந்து அருள் புரிகின்ருன் என்றவாறு. சாந்தர்க்கே நீப்பு. நீத்தார்க்கே சாந்தி, சாந்தி பயப்பது பேரின்பம். நீத்தாரே அது பெறுவார். பிறர் பெருர். ஆதலின் சாந்திச்சுவையே சுவைகட் கெல்லாம் தலே ஆயிற்று. அது பெற்ருரே வீடு என்னும் பேரின்பம் பெற்ருராவார் என்று உபநிடதங்களும் மறை நூல்களும் ஓதின. (தைத்தி. சிக்ஷா; ச்வேதாச்வ. 4; கடோப; 5-13). நீத்தார்க்கே சாந்தி உற்றது. பிறர்க்கு அற்றது என்றவாறு. முப்பாலறத்தைமட்டிலுமே மேற் கொண்டு ஒழுகுவார்க்கும் சாந்தி உருமையின் அவர்க்குச் சாந்திச் சுவை நுகர்தற்கொண்ணுதாயிற்று. அதுபற்றி முப்பானூற்கள் சுவை எட்டு என்று கூறின. பரத முனிவர் சாந்திச் சுவையின் தன்மையையும் தலேமையையும் கூறி யிருக்கிருர் என்றும் அது முப்பாலார்க்கு நுகர்தற் கரிதாதலின் முப்பானூல்கள் சுவை எட்டு என்று கருதின போலும் என்றும் சாந்திச்சுவையின் தன்மைநன்மைகளே வேதாந்த தேசிகர் கூறினுர். (சங்கற்பசூரி 1) சாந்தி சுவையாகாது என்றது அதன் சுவைத்தல் பெரும் பாலார்க்கு இயலாமை நோக்கிக் கூறியதேயன்றிச் சுவையன்மையாற் கூறியதன்று என்று அங்கு விளக்கி யிருக்கிருர். சாந்தி என்பது மனத்துயரை மாய்க்கும் சுவை (சமித சித்த கேதோ ரஸ :) என்று சாந்தி என்னும் சொல் கூறும் பொருளேக் காட்டி அதன் இயல்பை விளக்கியுள்ளார். அது நீத்தார் சுவைக்கும் சுவையா தலின் வீட்டு நூல்களுக்கே அதுபயத்தற்கியன்றதா யிற்று. ''அவய மெனநினைந்து வந்தசுரர் பாலே, நவையை நளிர்விப்பான் றன்னேக்கவையில், மனத் துயர வைத்திருந்து வாழ்த்தாதார்க் குண்டோ, மனத் துயரை மாய்க்கும் வகை'' (பெரிய திருவந். 43)

''மருங்கோத மோதும் மணிநாகணையார், மருங்கே வர வரிய ரேலும்—ஒருங்கே, எமக்கவரைக் காணலா மெப் பொழுது முள்ளால், மனக்கவலை தீர்ப்பார் வரவு'' (ஷை. 55). ''துயரறு சுடரடி''(திருவாய். 1.1.1) என்று சடகோபர் அருளிச்செய்தார். சடகோபர் திருவாய்மொழி சாந்தித் தூய்மைக்கு எல்லைநிலம் என்று வேதாந்த தேசிகர் போற்றினர். (தாத்பர்யரத்நா. 1) ''நீர்நும தென்றிவை, வேர்முதல் மாய்த்திறை, சேர்மி னுயிர்க்க தன், நேர்நிறை யில்லே,(திருவாய். 1.2.3) என்றபடி இறைவன் தாட்பற்றில் இறைவனுல் அருளப்பெறுமோர் பெரும்பேருதலின் அது நீத்தார் நுகரும் மறைமுடிச் சுவை என்றது இதனுல் உணர்த்தப்பட்டது. ''இப்பரம் துடைத்தவர் எய்து மின்பத்தை'' (இராமாவ. பால. கடி மண. 69. பரம் துடைத்தல் பரந்யாஸம் செய்தல் சரணம் அடைதல் அடைக்கலம் புகுதல் பரம்மாய்த்தல் என்பன தாள்பற்றலைக் கூறும் சொற்கள்) என்ருர் கம்பர். ''தனக்குவமை யில்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால், மனக்கவலை மாற்ற லரிது.'' (குறள்.7) என்ருர் திருவள்ளுவர். இறைவன் பாடியருளிய கீதை இம்மறை முடிப்பொருளின் பரப்பும் இம்மறைமுடிச் சுவையின் சிறப்புமாம். ''என்னையே தாள்பற்று. உன் பாவங்களை யெல்லாம் நான் நீக்குவேன். துயருறேல்'' (கீதை. 18. 66. தமிழ் செய்தது) என்றது ஆரருட்சாரமொழி. நீத்தார் பெருமையும் சாந்தியின் சிறப்பும் இதனுற் காணலாம்.



## முப்பத்துநான்காமத்தியாயம்

இறைவன் தாள் சேர்ந்தார் நீத்தார். அச்சேர்த்தியில் சாந்தி உறும். பாவங்கள் மாளும். மருள் அறும். துயரம் தீரும். பேரின்பம் பெருகும். அத் துணைப் பெருமையுடையார் நீத்தார். அத்துணைச் சீர்மையுடையது சாந்தி. ஐம்பொறிகளுமவிந்து இறைவன் பால் மெய்க்காதலடியராய் ஈறிலின்பத் திருவெள்ளத்தில் மூழ்கி ஆழும் புனிதராதலின் நீத்தாரைத் தனக்கு ஆத்துமா என்று பரமாத்துமா உகந்தருளிறுன். (கீதை 8. 18). ஆத்துமா என்னும் சொல்லுக்கு. உள்ளுயிராய் ஆண்டு காப்பவன் என்பது பொருள். உலகனைத்துக்குமே உள்ளுயிராய் உறைந்து அவைகளை ஆண்டு காக்கும் இயல்வினனுன இறைவன் தன்பால் துறந்தார்கண் தன்னைத் துறந்து விளங்கும் பெருமனவள்ளலாய் நிகழ்கின்ருன் என்றவாறு ''அருளென்னும் அன்பீன் குழவி'' (குறள் 757) என்ற அருங்குறளில் இப்பொருள் திகழுமாற்றை ஓர்ந்துணர்க. இறைவன் உகந்தருளும் நீத்தார் இறைவனை ஒக்கவே தொழத்தக்கார் என்ற உண்மை யிதனுல் உணர்த்தப்பட்டது. தன் செல்வமாகிய உலகத்தை வழிப்படுத்தி வாழ்விக்கும் பொறுப்பை இறைவன் நீத்தாரிடத்தில் ஒப்படைத்துள்ளான் என்று மறைநூல்கள் முழங்குகின்றன. இறைவன் நிதி. நீத்தார் பிரதிநிதி. ''திருவடிகளுக்குப் பிரதிநிதியான ஸ்ரீசடகோபனை'' (அபயப்ரதாந. 3) என்ருர். வேதாந்த தேசிகர். இராமபிரான் திருப்பாதுகவரலாற்ருல் வான்மீகி முனிவர் இவ்வுண்மையை விளக்கியருளினுர். ''இவைகளே (நாதன் பாதுகைகளே) எல்லா உலகுக்கும் யோக க்ஷேமத்தைப் பயப்பனவாம்'' (இராமாய. அயோத். 112.21 தமிழ் செய்தது) என்றது அவ்விளக்கம். தன் பாற் புரிந்த நீப்பு என்னும் நன்றிக்குக் கைம்மாறு காணகில்லாறுய் நீத்தாரைத் தோள்களாரத் தழுவி அவர்களோடு ஆருயிர்த் தோழமை கொள்ளவல்ல தண்ணளி வெள்ளப் பரம்பொருள் இராமபிரான் என்ற மெய்ம்

மையை இராமாயணம் பன்னிப் பணித்துள்ளது. அவ்வாறு தழுவிக்கொள்ளப்பட்ட அநுமனுக்குத் திருவடி என்பது பெயரும் நிரூபகமுமாயிற்று. அநுமன் பொறியவித்த புனிதன். நவைபடா ஞானத்தன். மதிநலமாண்பன். தருமத்தின் தனிமை தீர்ப்பான். இறைவன் மாணடிப்பால் ஆராத காதற்கடல். நீத்தார்க்கு உவமையாய்த் திகழும் நின்மலன். திருவடியென்றே தொழுதற்கொத்த பெருமை வாய்ந்தவன். இவ்வுண்மை இராமாயணத்திற் கண்கூடு.

கலைக்கோட்டுமுனிவரைச் சாந்தன் என்றும் அச்சாந்தனுல் வேள்விமுற்றில் தனயர்கள் உளராம் என்றும் மாந்தரை விலங்கென்றுன்னும் மனத்தன் மாதவத்தன் என்றும் கம்பர் பாடிய பாடலின் அரும் பொருள் இவ்வாற்ருல் நன்கு விளங்கும். மறையோரறவொழுக்கத்தால்தான் மக்கள் மக்களாவார். அஃதிலார் விலங்கென்றே எண்ணப்படுவார். ''ஆன்விடையே ழன்றடர்த்தாற் காளானு ரல்லாதார் மானிடவ ரல்லரென் றென் மனத்தே வைத்தேனே'' (பெரிய திருமொழி (11-7-9) என்ருர் மங்கையர்கோன். ''விலங்கொடு மக்க ளனையர்'' (குறள். 410) என்ருர் திருவள்ளுவர். வள்ளுவரின் வைதிகமான்மியம் எத்திறச் சிறப்பு உடையது என்பதை நீத்தார் பெருமை என்னும் அதிகாரம் காட்டித்தரும்.

———

## முப்பத்தைந்தாமத்தியாயம்

பொதுவாக மக்கள் முப்பாலுக்கு உரியராவார். ஆதலின் முப்பாலறத்தான்வரும் இன்பத்தைக் கூறி அவ்வின்பம்தானும் சிறிது என்றும் இறுதியுடையது என்றும் துன்பத்தை ஈருக உடையது என்றும் உய்வுபாய மாகிய இறைவன் திருவடிக்கண் சரணுகதியையே அரணுகக்கொண்டு நீத்தாராய் இறைவன் பூரண அருளைப் பெற்று ஈறிலின்பப் பெருவாழ்வு பெறவேண்டும் என்றும் சிறப்பாகிய வீட்டறத்தைத் திருவள்ளுவர் வலியுறுத்தியுள்ளார். அஃதே தொல்காப்பியருள்ளமு மாம் ''பல்லாற்ருனும் நில்லா உலகம் புல்லிய நெறித்தே'' (பொருள். புறத்திணை. 76)என்ருர் தொல் காப்பியர். நிலையாமையாவது. ஆக்கை நிலையாமை செல்வம் நிலையாமை இளமை நிலையாமை என மூவகை யாம். வீடுபெறுவாரே நிலைபெறுவார் என்று காட்டப் பட்டது. ''கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய், முற்படக் கிளந்த எழுதிணை என்ப'' (பொருள். அகத்.!) என்னும் சூத்திரத்தில் ''இவ்வதிகாரத்துள் இம்முதற் கண்ஓத்து அகப்பொருளிலக்கணம் நுதலிற்று'' என்றும் ''இந்நூலகத்து ஒருவனும் ஒருத்தியும் நுகருங் காமத் திற்குக் குலனும் செல்வமும் ஒழுக்கமும் இளமையும் அன்பும் ஒருங்கு உளவழி இன்பம் உளதாம் எனவும் கைக்கிளை ஒருதலைவேட்கை எனவும் பெருந்திணை ஒவ்வாக்கூட்டமாய் இன்பம் பயத்தல் அரிது எனவும் கூறுதலான் இந்நூலுடையார் காமத்துப் பயனின்மை உய்த்துணர வைத்தவாறு அறிந்து கொள்க'' என்னும் இவ்வருங்கருத்தை இளம்பூரணர் உரைத் துள்ளார். இதனுல் நிலத்தால் மட்டிலுமேதான் மக்கட் பாகுபாடு. குலதரும ஆசாரங்களாலன்று அப்பாகு பாட்டைத்தான் தொல்காப்பியம் இலக்கணமுறையால் கூறியது என்பது எத்துணைப் போலி என்பது தெளியத் தோன்றும்.

மூவகைநிலையாமையான் முப்பாலறத்தான் வரும் இன்பம் தானும் நிலையின்றி இன்பமற்று இறுதியில் துன்பம் பயப்பதாம் என்று வீட்டறச்சிறப்பு விளங்க வைக்கப்பட்ட நலம் காண்க. மறைகளே வகுத்த கூட்டமும் ஆறுமேயாயினும் அவ்வொழுக்கமுடையார் விலங்கினும் மேம்பட்டாராயினும் நிலையா ஆக்கை இளமை செல்வங்களடியாக வருமொன்ருதலால் அவையொழிய அவை தரும்இன்பமும் ஒழிந்தழியும்என்றவாறு. ஆதலால் முப்பாலறம்தானும் அறமேயாயினும் வீட்டறத்தை நோக்கப் பாவம்போன்றதேயாம். என்றும் அதை மேற்கொண்டவரும் விலங்கு போல்வாரேயாவார் என்றும் உபநிடதங்கள் ஓதின.) (சாந்தோ. 5-10-4; 8-4-1; ம்ருஹதாரண்ய. 3-4-10). இப்பொருள் வீயாசமுனிவர் பிரமசூத்திரத்திலும் (3.1.7) வேதாந்ததேசிகர் தத்த்வ முக்தாகலாபத்திலும் (2.55) அதிகரணஸாராவளியிலும் (63) விளக்கப்பட்டுள்ளது. இவ்வுண்மை ''விலங்கொடு மக்களனையர் இலங்குநூல் கற்ருரோ டேனையவர்'' (குறள். 410) ''யானெனதென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்குயர்ந்த உலகம் புகும்'' (ஷை.346) ''தலைப் பட்டார் தீரத் துறந்தார் மயங்கி வலைப்பட்டார் மற்றையவர்'' (ஷை.348) ''அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை விடல் வேண்டும், வேண்டிய வெல்லா மொருங்கு'' (ஷை. 343) ''நில்லாத வற்றை நிலையின என்றுணரும், புல்லறிவாண்மை கடை'' (ஷை.331) ''சுவையொளி யூருேசை நாற்றமென் றைந்தின் வகைதெரிவான் கட்டே உலகு'' (ஷை. 27) ''அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம் பூரியார் கண்ணுமுள'' (ஷை 241) ''அருளில்லார்க் கவ்வுலகமில்லை பொருளில்லார்க் கிவ்வுலக மில்லாகியாங்கு'' (ஷை. 247) முதலிய குறட்பாக்களில் தெரிய உணர்த்தப்பட்டது. ''வீடுமின் முற்றவும்'' திருவாய். 1-2-1) என்றது முதலாக ''எண்பெருக் கந்நலத் தொண்பொரு ளீறில வண்புகழ் நாரணன் திண்கிழல் சேரே'' (1-2-10) என்றது ஈருக இப்பொருளைத் திருவாய்மொழி விளங்கவைத்தது.

மேற்கூறியவை விளக்கும் பொருட்சுருக்குவருமாறு: முப்பாலறவொழுக்கத்தால் வருவது இன்பமாயினும் அது இறுதி உடையதும் இறுதியில் துன்பம் பயப்பது மாம். நிலையற்ற இளமை செல்வம் ஆக்கைகளடியாக வருதலான் அவை ஒழியுங்கால் அவற்றான் வரும் இன்பமும் ஒழிந்து முன்போல் துன்பத்தில் மூட்டிவிடும். அவ்வின்பம் தானும் தான் தனது என்னும் இருபற்றில் நிகழ்தலின் துன்பத்துக்கு வித்தாயிற்று. வீடாம் ஈறிலின்பம் துறவில் தான் பெறுதற்காகும். நீர் நும தென்றிவை வேர் முதல் மாய்த்தல் என்பது அத்துறவு. அது இறைவன் நல்லடிப் பால் சரணம் புகுந்து அவன் அருள் ஒன்றாலேயே பற்று முற்றும் அறுக்கப்பெற்றுப் பொறியாறி அவன்பால் ஆராத பெருங்காதலாம் பத்தியில் அலையாநிலை பெற்று உலகெல்லாம் இறைவன் செல்வம் என்று கண்டு ஒழுகு வார்க்கே துறவு உறும். அவரே பொறியவித்தாராவார். அவர்களிட்ட வழக்காய்ப்பொறிகள் தொழில் செய்யும். பொறியவித்தல் என்பது பொறிகளைத் தம்வயத்தவாக அடக்கிச் செலுத்தலாம். அவைகள் போகும் போக்கில் தாம் போகாது தாம் கருதிய நல்வழிகளில் அவைகளைச் செலுத்தல் என்றபடி-ஆதலின் பொறியவித்தல் என்பது கண்ணைக் கெடுத்துக் குருடர் ஆதலன்று. செவியைக் கெடுத்துச் செவிடர் ஆதலன்று. அவைகளைத் துறவின்கண் வழிப்படுத்தித் திவ்வியமாக்குதல் என்ற வாறு. திவ்வியமான கண் காண்பது திவ்வியகாட்சி. திவ் வியமான செவி கேட்பது திவ்விய கேள்வி. அவையெல் லாம் இறைவன் அருளும் திவ்விய நலங்கள். துறவி லார்க்கு உறுவது தீயதாம். இத்திற ஈறிலின்பம் வீட்டுப் பாற்கே உரியது. ஆதலின் திருக்குறள் போன்ற வைதிக நல்லற முப்பானூல்கள் வீட்டறத்தை நோக்கியும் வீட்டறத்துக்கு வழிகாட்டியும் வீட்டறத்தில் மூட்டியும் நிற்கும் பெற்றியவாய் நிகழுமாறு கண்டுணர்க.

இங்குத் துறவு என்றதால் சிறந்த ஆத்துமகுண மாகிய பத்திக்கு வித்தாகும் பற்றின்மையாம் விரத்தி

உணர்த்தப்பட்டது. சந்நியாசம் என்னும் ஆச்சிரமம் (நிலே) கூறப்படவில்லே. சந்நியாச ஆச்சிரமம் என்பது ஆக்கை நோக்கி வகுக்கப்பட்ட நான்காம் நிலேயைக் கூறும். சந்நியாச ஆச்சிரமிகளும் வீடு பெறுதற்கொத்த பற்றற்ற நிலேயரேயாயினும் ஆக்கை நோக்கி வகுக்கப் பட்ட நிலேத்தருமமாகிய சந்நியாச ஆச்சிரம தருமம் இங்குத் துறவு என்னப்படவில்லே ஆத்துமதருமமாம் பற்றின்மையாகிய விரத்தி கூறப்பட்டது. உபநிடதங்கள் உய்வுபாயமாக வகுத்துள்ள பக்தியோக பிரபத்தியோகங் கள் இரண்டுமே ஆத்துமகுணத்தை அடியாகக் கொண்டுள்ளன வேனும் பக்தியோகம் என்பது தூலத் துக்கு வகுக்கப்பட்ட வருண ஆச்சிரம தருமங்களே உதவி யாகக் கொண்டே ஆற்றற்காகுமாதலின் அவைதம்மை யும் வேண்டாது இறைவன்பால் துறவாகும் உயர்ந்த ஆத்துமகுணத்தையும் மற்றுப் பற்றின்மையையுமே அடி யாகக் கொண்டுள்ள பிரபத்தியோகம் (சரணுகதி) பின்னும் சிறந்ததோர் நேர்நிறையில்லாப் பரமமான உய்வுபாயம் என்று துணியப்பட்டது. ஆதலின் இறைவனேத் தாள்பற்றல் என்னும் சரணுகதி உயிர்களுக் கெல்லாம் வாசியற ஒத்ததும் உரியதுமாகியதோர் உய்வு பாயமாயிற்று. தூலத்துக்கு வகுக்கப்பட்ட தருமங்களின் உதவியை வேண்டிநிற்கும் பக்தியோகம் போலன்றி ஆத்துமகுணமாகிய இறைவன்பாற் காதலாம் பத்தி ஒன்றே ஆறும் பேறுமாய் இறைவன்பால் துறக்கும் பிரபத்தியோகம் (சரணுகதி) பல்லாற்ருனும் நல்லாறு என்று நூல்கள் துணிந்தன. பக்தியோகம் பிரபத்தி யோகம் என்னும் சொற்களில் யோகம் என்னும் சொல் உபாயம் (ஆறு) என்னும் பொருளே உணர்த்தி நின்றது. பக்தியையோ பிரபத்தியையோ உய்வுபாயமாக மேற் கொண்டு நிற்றல் பக்தியோகம் பிரபத்தியோகம் என்று சொல்லப்பட்டது யோகநூல்களுள் கூறிய பிறிதோர் யோகம் சொல்லப்பட்டவில்லே. ''நியாசம்'' (சரணம் அடைதல்) தவங்களுள் சிறந்தது'' (தைத்தி. அநு. 49. 50) ''வீடுபெற விரும்பி ஆத்தும மதிநலம் அருளும்

இறைவனை நான் சரணம் அடைகின்றேன்'' (ச்வேதாச்வ. 6. தமிழ்செய்தது) என்று உபநிடதங்கள் ஓதின. ''கருமஞ்ஞா னங்க ளூற்றுர் நல்லறத் துய்யர் தாமும், சரணமேற் கொண்டார் சீரின் கோடிமாத் திரையு மொவ்வார்'' (லக்ஷ்மீதந்த்ரம். 17, 62. தமிழ் செய்தது) ''இறை சேர்மின் உயிர்க்கு அதன் நேர் நிறையில்லே'' (திருவாய். 1. 2. 3), ''உறிக்கொண்ட வெண்ணெய் பால் ஒளித்துண்ணுமம்மான் பின்னெறிக் கொண்ட நெஞ்சனுய்ப்பிறவித் துயர் கடிந்தே'' (திருவாய் 2. 3. 8.) இத்திருவாய் மொழியில் இறைவன் கீதை இறுதியில் சரம உபாயமாக உபதேசம் செய்தருளிய சரணுகதி என்னும் அருணெறியைப் பின்னெறி அதாவது சரம நெறி என்று சடகோபர் அருளிச் செய்தவாறு) ''உய்வு பாயம் மற்றின்மை தேறிக் கண்ண ஞெண்கழல்கள் மேல் செய்ய தாமரைப் பழனத் தென்னன் குருகூர்ச் சடகோபன் பொய்யில் பாடலாயிரத்துள் இவையும் பத்தும் வல்லார்கள் வையம் மன்னி வீற்றிருந்து விண்ணும் ஆள்வர் மண்ணூடே'' (திருவாய். 4. 3. 11) ''வாழ்துணையா வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே, வீழ்துணையாப்போ மிதனின் யாதுமில்லே மிக்கதே.'' (திருவாய். 9. 1. 8.) என்று சடகோபர் அருளிச்செய் தார். ''வாழி அருளாளர் வாழியணி அத்திகிரி வாழி யெதிராசன் வாசகத்தோர் —வாழி, சரணு கதியென்னும் சார்வுடன் மற்ருென்றை, அரணுகக் கொள்ளாதார் அன்பு'' (தேசிக. அத்திகிரி. 1) ''எனதென் பதுமியா னென்பது மின்றித் தனதென்று தன்னேயுங் காணு — துனதென்று, மாதவத்தான் மாதவற்கே வன்பரமாய் மாய்ப்பதனிற், கைதவத்தான் கைவளரான் காண்'' (ஷை, அமிர்தரஞ்ச. 25) என்று வேதாந்ததேசிகர் அருளிச் செய்தார், சரணுகதி என்பது மெய்த்தவம், அது தவத்துளெல்லாம் தலே என்ற உண்மையும் சரணுகதர் களின் அன்பே மெய்யன்பு என்ற உண்மையும் இதனுல் விளக்கப்பட்டது. சரணுகதி ஒன்றே தலேமைசான்ற மெய்த்ததவமாதலின் அதில் சிறிதும் பொய்கலவாது.

அது சிறிதும் பொய்யைப் பொருது. துய்யமெய் ஒன்றில் தான் நின்று நிகழும். கைதவமெல்லாம் (பொய் வேடம் முதலிய சூதுகளெல்லாம்) அறவே மாய்ந்து மெய் ஒன்றையே அடியாகக் கொண்டு மெய்யன்பில் நிகழ்தலால் சரணுகதி ஒன்றே அனைவர்க்கும் ஒத்த செய்தவமும் செய்யதவமும் மெய்த்தவமுமாய்த் திகழ் கின்றது என்றவாறு. சிலர்க்கே உரிய ஆச்சிரம தருமமடி யாக நிகழ்தற்காகும் பத்தியோகம் போலன்றி அனைவர்க் கும் ஒக்கவே உரிய பொய்யாமை முதலிய ஆத்தும தரும மடியாக நிகழ்தலான் சரணுகதியாம் உய்வுபாயத்துக்கு நேர் நிறை இல்லே என்ற துணிபின் நலம் கண்டுணர்க. ''சத்தியம் பரம் பரம் சத்தியம் சத்தியத்தால் வீடு பெற்று என்றுமே பவத்துக்கு மீளார். நல்லார்க்கே சத்தியம்'' (தைத்திரீய. அநு. 49. தமிழ் செய்தது) என்று உபநிட தம் சரணுகதியைச் சத்தியத்தின் எல்லே என்றும் அதனுல் வீடுபெறுவார் என்றும் அவ்வீடே பேரின்பம் என்றும் அது சேர்ந்தார் பவத்துக்கு மீள்வதில்லே என்றும் துணிந்தது. ஆதலின் சரணுகதியாம் உய்வு பாயம் ஒன்றுக்கே பொய் யாமை என்பது உரிய பெயராயிற்று. ''உயிர்க்கு அதன் நேர் நிறைஇல்லே'' (திருவாய். 1-2-3) ''செய்த வேள்வியர்'' (ஷை. 5-7-8) ''வைகலும் வெண்ணெய் கைகலந் துண்டான், பொய் கலவாதென் மெய்கலந் தானே'' (ஷை. 1-8-5) என்ருர் சடகோபர். ''கைவளரான் காண்'' என்ருர் வேதாந்த தேசிகர்.

இவ்வாறு வே த ங் க ளு ம் வேதம் வல்லார்களும் அறைந்துள்ள மெய்ப் பொருள் ''பொய்யாமை பொய் யாமை யாற்றி னறம்பிற, செய்யாமை செய்யாமை நன்று'' (குறள். 297) ''சுவை யொளி யூருேசை நாற்ற மென்றைந்தின், வகை தெரிவான் கட்டே உலகு'' (ஷை 27) முதலிய அருங்குறள்களில் விளக்கப்பட்டுள்ள சீர்மை காண்க. முன்னது நீப்பின் பெருமையை விளக்கிற்று சரணுகதியாம் நீப்பு (நியாசம், தியாகம், துறவு, பரம் மாய்த்தல் பரம்துடைத்தல் மறைபுகல் அடைக்கலம்

தாள்பற்றல் முதலிய பெயர்களையுடைய இப்பெருந்தவம்) பிரமாத்திரம் போல் பிறிதொன்றின் கூட்டைப் பொருது என்ற உண்மை விளங்க வைக்கப்பட்டது. சரணுகதியின் மிக்க பொய்யாமை இல்லை. அது ஆற்றியவர்க்கு அறம் பிற செய்யாமையே நன்று செய்தல் அன்று என்றது அவ்வுண்மை. உய்வுபாயமாகப் பிறிதொன்று செய் யாமையே நன்று என்றபடி. வாழி அருளாளர் வாழியணி அத்திகிரி வாழி யெதிராசன் வாசகத்தோர்—வாழி சரணு கதியென்னும் சார்வுடன் மற்ருென்றை அரணுகக் கொள்ளாதார் அன்பு'' (தேசிக. அத்திகிரி.1) என்று இவ் வுண்மையை வலியுறுத்தியதாம். சரணுகதியாம் (பொய் யாமையாம்)பேரறத்தைநோக்க அறம்பிறசிற்றறங்களும் வெற்றறங்களுமேயாம். அவை சரணுகதிநிட்டருக்கு அவங்களாம். ''தொன்மையில் தொடர்ந்த வாய்மை யறம்'' (இரணியன்வதை. 136) என்ருர் கம்பர். இத்திற மறைமுடிச் சிறப்புப் பொருளை மக்கட்குப் பொதுவாம் முப்பாலறத்தோடு ஆந்தனையும் ஒன்ற இசைத்து வீட்டறத்தில் மூட்டித் திகழும் திருக்குறளை யாத்த வள்ளற்பெருந்தகையாளர் வள்ளுவர் என்று அறிக.

---

## முப்பத்தாருமத்தியாயம்

''சுவை யொளி யூருேசை'' (குறள்.27) என்ற குறள் நீத்தார்பெருமை என்னும் அதிகாரத்தில் உள்ளது. ஆதலின் இக்குறளில் நீப்பின் சிறப்புக் கூறப்பட்டுள்ளது என்பது தெளிவு. நீர்நும தென்றிவை வேர்முதல் மாய்த்த பற்றின்மையில் இறைவனடி சேர்ந்தார் அவ னருளில் பெறும் பெருநலம் பொறியவித்தல் என்ற உண்மையையும் உலகம் நல்வழிப்படுதற்கு உலகத்தை அவர்கண் ஒப்படைத்துள்ளான் என்ற உண்மையையும் இக்குறள் உணர்த்தி நின்றது. எத்துணை அறிவு உடைய ராயினும் புலன்களை அடக்க முடியாது. புலன்களுக்கே ஆளாவார். அவர்களையும் அவை இழுத்து அவத்தில் ஆழ்த்திவிடும். இறைவன் தாட்பற்றில் அவன் அருள அவை வெல்லப்படும். அவ்வெற்றி பெற்ருர்க்கே உலகை நல்வழிப்படுத்தும் உரிமையும் ஒழுக்கமும் அமையும் என்றது அவ்வுண்மை. இந்திரனுக்கும் அடக்க இயலாது ஆதலின் அது இ ந் தி ரி ய ம் (பொறி) எனப் பட்டது என்பது இந்திரியம் என்னும் ஆரியச் சொல் உணர்த்தும் பொருள். ''இந்திரனே சாலுங்கரி'' (குறள் 25) என்ற குறளில் இக்கருத்துக் குறிக்கப்பட்டுள்ளது காண்க. இந்திரயங்களுக்கு (இருடீகங்களுக்கு, பொறி களுக்கு) ஈசன் இறைவன் ஒருவனே. ஆதலின் அவன் இருடீகேசன் என்னப்பட்டான். இ ந் தி ரி ய ங் க ளை இறைவன் படைத்து நடத்தும் படிகளை உபநிடதங்கள் பரக்க ஓதியுள்ளன. வியாஸ முனிவர் நூற்றருளிய பிரம சூத்திரத்துப் பிராணபாதத்துள் இப்பொருள் விளக்கப்பட் டுள்ளது. (2-4 13-14)சூத்திரங்கள் இப்பொருளின்துணிபு. இறைவன் அருள்வலி ஒன்ருல் தான் இந்திரியங்களை அடக்குவதற்கு ஆகும். இந்திரிய வெற்றி எளிதில் வருவதொன்றன்று. பேரிருடிகளும் தேறிய மெய்ஞ் ஞானியரும் முயன்று முயன்று இறுதியில் இறைவ னுடைய அருள் என்னும் தண்டால் அவற்றை முற்றும் அடக்கி நல்வழிப்படுத்தி ''நெஞ்சமே நல்லை நல்லை

உன்னைப் பெற்ருல் என் செய்யோம் இனி என்ன குறை வினம் மைந்தனை மலராள் மணவாளனைத் துஞ்சும் போதும் விடாநு தொடர் கண்டாய்'' (திருவாய்1-10-4) ''நன்ருய் ஞானங் கடந்துபோய் நல்லிந் திரிய மெல்லா மீர்த்து, ஒன்ருய்க் கிடந்த அரும்பெரும் பாழ் உலப்பி லதனை உணர்ந்துணர்ந்து, சென்ருங்கின்ப துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்ருல், அன்றே யப்போ தேவீடு அதுவே வீடு வீடாமே'' (ஷ 8-8-6) ''அதுவே வீடு வீடு பேற்றின் பந்தானு மதுதேறி, எதுவே தானும் பற்றின்றி யாது மிலிக ளாகிற்கில், அதுவே வீடு வீடுபேற் றின்பந் தானு மதுதேருது, எதுவே வீடு ஏது இன்பம் என்று எய்த்தா ரெய்த்தா ரெய்த்தாரே.'' (ஷி. 8-8-7) ''யானும் என் நெஞ்சும் இசைந் தொழிந்தோம் வல் வினையைக், கானும் மலையும் புகக் கடிவான்—தானேர், இருளன்ன மா மே னி யெம்மிறையார் தந்த, அரு ளென்னும் தண்டால் அடித்து.'' (பெரிய திருவந். 26) ''நீபணித்த அருளென்னும் ஒள்வாளுருவி எறிந்தேன் ஐம்புலன்கள் இடர்தீர எறிந்து வந்து, செறிந்தேன் நின்னடிக்கே. திருவிண்ணகர் மேயவனே'' (பெரிய திருமொழி. 6-2-4) ''நல்லை நெஞ்சே நாம்தொழுதும் நம்முடை நம்பெருமான். அல்லிமாதர் புல்கநின்ற ஆயிரந் தோளனிடம்.... ''சிங்கவேள்குன்றமே'' (ஷி. 1-7-9) என்று அடைக்கலப் பெருந்தவச் சுடர்களாகிய சடகோபர் மங்கையர்கோன் போன்ற பகவர்கள் அருளிச்-செய்தவை காண்க. ''முயற்றி சுமந்தெழுந்து (பெரிய திருவந். 1) என்று தொடங்கி ''மொய் கழலே ஏத்த முயல்'' (ஷி.87) என்று முற்றிய நலம் ஓர்க. இறைவன் அருளால் பொறியை வென்ற பெரும் புனிதரே தீரர் ஆவார். அவர்களுக்கு இயலாத தொன்றில்லை. ''உன்னைச் சிந்தை செய்து செய்து உன் நெடுமாமொழி இசைபாடி, முன்னைத் தீவினைகள் முழுவே ரரிந்தனன் யான், உன்னைச் சிந்தையினுலிகழ்ந்த இரணிய னகல்-மார்வம் கீண்ட என் முன்னைக் கோளரியே முடியா ததென் எனக்கே'' (திருவாய். 2-6-6) என்ருர் சடகோபர்.

''தீரரே பரமாத்துமாவைக் காண்பார்'' (முண்டக 1.10; கட. 2—12,22; 5,12,13) என்றும் பரமாத்துமா பல-வீனங்களால் பெறமுடியாது (முண்டக. 4.4) என்றும் உபநிடதம் ஓதிற்று. ''முயற்சி திருவினை ஆக்கும்'' (குறள்-616) என்ற குறள் இச்சிறப்புப் பொருட்டென்க. ''தெய்வத்தா னாகா தெனினும் முயற்சிதன் மெய்வருத்-தக் கூலி தரும்'' (ஷை.619) என்றது முயற்சி வலியுறுத்-தலாம். தெய்வம் பயன் நல்கும் தகவை மறுத்தலில் கருத்து அன்று. ''குடிசெய்வ லென்னுமொருவற்குத் தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும்'' (ஷை 1023)என்று இக்கருத்தைக் குறள் தானே விளக்கியவாறு. அறனை வலியுறுத்தச் சைமிநி முனிவர் நூற்றதுபோல் வள்ளுவ-ரும் யாத்துள்ளார். தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும் என்ற குறளால் ஆடையணித்த வைதிக தெய்வச் சமயத்-தவர் வள்ளுவர் என்பது தெளியக் காட்டப்பட்டது. '' அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை '' குறள் 247) ''தாமரைக் கண்ணான் உலகு'' (ஷை 1103) என்ற குறட்பாக்களை நோக்குக. இவற்றின் பொருள் பின்னர் விளக்கப்படும்.

இவ்வாற்றான் துறவுமுயற்சியின் வலிமையும் பய-னும் விளக்கப்பட்டது. முயலார் சோம்பராய்த் தேம்பித் திரிவாரேயாவார். அவரை எய்த்தார் என்றார் சட-கோபர். அவ்வலிமைதானும் இறைவனது அருளின் வலிமையேயாம். அவ்வலிமையில் இயலுமதே பொறிய-விக்கும் வலிமை. இருவலிமையும் ஒன்றிநிகழுமாற்றை மேற்கூறிய மாமொழிகள் உணர்த்தி நின்றன. அனைவ-ரையும் தம்வயப்படுத்தி ஆட்டிவைக்கும் இந்திரியங் களைத் தம்வயமாய்க் கொண்டுசெலுத்தும் நீத்தார் வயத்து உலகை இருடீகேசனும் இறைவன் காவற்-பொருட்டு ஒப்படைத்துள்ளான் என்ற அரிய மறைமுடி உண்மை அவற்றால் உணர்த்தப்பட்டது. உலகை நல்-வழிப்படுத்தும் உரிமையும் ஒழுக்கமும் பொறியவித்த நீத்தார்க்கே அமையும் என்றது அவ்வுண்மை.

''இந்திரியத் திரளின் வலி மி க் க து. அறிஞனையும் இழுத்துவிடும்'' (மநு. 2.215 தமிழ் செய்தது) என்று மநு கூறினர். ''முயலும் அறிஞர் மனத்தையும் வலிமிக்க இந்திரியங்கள் இழுத்துவிடுகின்றன. அவைகளையெல்லாம் திவ்விய மங்கல மூர்த்தியாகிய என்கண் செலுத்தி என்னையே பற்றுவார் ஆறிய பொறியராய் நிலையுற்ற மதிநலம் பெறுவார். அவர்களே பாவங்கள் கழிந்தவரும் எல்லா உயிர்களின் இதத்திலேயே கருத்துடையாராயும் முயல்வார்'' (கீதை. 2, 60-61; 5.28. தமிழ் செய்தது) என்றும் ''உலகுக்கெல்லாம் நான் ஒருவனே அன்பன் என்று கண்டுணர்ந்த மெய்ஞ்ஞான நிலையரே சாந்தி பெறுவார்'' (ஷை5-29 தமிழ் செய்தது)'' என்றும் இறைவன் பாடியருளினன். இறைவன்பால் ஒரு மனப்பத்தியுடையாரே சாந்தி பெறுவார். சாந்தரே புலன்களை வென்றாராவார். சாந்தரே உலகுக்கு இதத்தைச்செய்யும் இயல்பும் தகவும் உடையோராவார் என்பது இக்கீதையின் சாரப் பொருள். இப்பொருளை இறைவன் பின்னர் கீதையில் விரித்து மொழிந்துள்ளான். அதை அங்குக் கண்டுகொள்க.

''விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை, மண்ணுளென்னைப் பெற்றால் என் செய்யா மற்று நீயும் விட்டால், பண்ணுளாய் கவிதன்னுளாய் நெஞ்சுளாய் பரமீசனே வந்தென் கண்ணுளாய் நெஞ்சுளாய் சொல்லுளாய் ஒன்று சொல்லாயே'' (திருவாய் 7-1-6) ''ஒன்று சொல்லி ஒருத்தினில் நிற்கிலாத ஓரைவர் வன்கயவரை என்று யான் வெல்கிற்பன் உன் திருவருளில்லையேல், அன்று தேவர் அசுரர் வாங்க அலை கடலரவமளாவி ஓர், குன்றம் வைத்த எந்தாய் கொடியேன் பருகு இன்னமுதே'' (ஷை 7-1-7) 'வேதியா நிற்கும் ஐவரால் வினையேனை மோதுவித்து உன் திருவடிச் சாதியர்வகை நீ தடுத்து என்பெறுதி அந்தோ ஆதியாகி அகலிடம் படைத்து உண்டுமிழ்ந்து கடந்திடந் திட்ட சோதி நீள் முடியாய்! தொண்டனேன் மதுசூதனனே''

(ஷை 7-1-3) ''சூது நான் அறியாவகை சுழற்றி ஓரை வரைக் காட்டி உன்னடிப்போது அணுகாவகை செய்து போதிகண்டாய், யாதும் யாவருமின்றி நின்னகம் பாலொடுக்கி ஓராலின் நீளிலைமீது சேர் குழவி வினையேன் வினைதீர் மருந்தே'' (ஷை 7-1-4) ''என்ன இயற்கை களால் எங்ஙனே நின்றிட்டாய் என் கண்ணா, துன்னு கர சரணம் முதலாக எல்லா உறுப்பும், உன்னு சுவையொளி ஊறொலி நாற்றம் முற்றும் நீயே உன்னை உணர உறில் உலப்பில்லை நுணுக்கங்களே'' (ஷை 7-8-9) ''இல்லை நுணுக்கங்களே இதனிற் பிறிதென்னும் வண்ணம் தொல்லை நன்னூலில் சொன்ன உருவும் அருவும் நீயே, அல்லித் துழாயலங்கல் அணிமார்ப என் அச்சுதனே, வல்லதோர் வண்ணம் சொன்னால் அதுவே உனக்கு ஆம் வண்ணமே'' (ஷை 7. 8. 10) ''ஆவிதிகைக்க ஐவர்குமைக்கும் சிற்றின் பம், பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ, தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே, கூவிக்கொள்ளுங் காலம் இன்னம் குறுகாதோ'' (ஷை6.9.9.) ''தூமனத்தன னாய்ப் பிறவித் துழதி நீங்க என்னைத் தீமனங்கெடுத்தாய் உனக்கு என் செய்கேன் என் சிரீதரனே'' (ஷை 2.7.8.) ''ஆழிவண்ணன் என்னம்மான் அந்தண் திருமாலிருஞ் சோலை வாழி மனமே கைவிடேல் உடலும் உயிரும் மங்கவொட்டே'' (ஷை 10. 7. 9.) ''மங்க வொட்டுன் மாமாயை திருமாலிருஞ்சோலை மேய, நங்கள் கோனே யானே நீஆகி என்னை அளித்தானே பொங்கைம் புலனும் பொறி ஐந்தும் கருமேந் திரியம் ஐம்பூதம், இங்கிவ் வுயிரேய் பிரகிருதி மானாங் கார மனங்களே'' (ஷை 10. 7. 10) ''மானாங் கார மனங்கெட ஐவர் வன்கை யர் மங்கத், தானாங் கார மாய்ப் புக்குத்தானே தானே யானானை (ஷை 10. 7. 11) ''பொன்னுல காளீரோ புவனிமுழு தாளீரோ'' (ஷை 6. 8. 1) ''உய்வுபாயம் மற்றின்மை தேறிக்கண்ணனொண் கழல்கள் மேல் செய்ய தாமரைப் பழனத்தென்னன் குருகூர்ச் சடகோபன் பொய்யில் பாடலாயிரத்துள் இவையும் பத்தும் வல்

லார்கள் வையம் மன்னி வீற்றிருந்து விண்ணும் ஆள்வர் மண்ணூடே'' (ஷ 4. 3. 11) ''ஆள்மின்கள் வானகம் ஆழியான்தமர்'' (ஷ. 10. 9. 6.) என்று தொல்லே நன்னூல்களாகிய உபநிடதம் கீதை பிரமசூத்திரம் முதலியவைகளின் துணி பொருளை த் திருமாலால் அருளப்பட்ட நாவீறுடையபிரான் (சடகோபர்) கண்டு சுவைத்துக் கரைபுரண்ட தமது இன்னருளில் சிற்றுயிர்கள் உய்வுற்றுப் பொன்னுலகும் புவனிமுழுதும் ஆளும் உரிமை சான்ற உத்தமராமாறு சுவை யொளி யூருேசை முதலியவைகளின் நுணுக்கங்களைக் கண் கொண்டு காணும் சான்ருக விளங்கப் பாடியருளிய திருப் பாடல்களெல்லாம் இங்கு நோக்கத்தக்கவை. இவற்றின் திரண்ட பொருளேயே ''சுவை யொளியூருேசை'' (குறள் 27) என்ற குறள் உணர்த்தி நிற்றல் கண்கூடாம். உலப்பில் நுணுக்கங்கள் என்ற திருவாய் மொழியே வகை என்ற திருக்குறள் என்பது காண்க-

''அவன் கண்டாய் நன்னெஞ்சே ஆரருளும் கேடும் அவன் கண்டாய் ஐம்புலனய் நின்ருன்—அவன் கண் டாய், காற்றுத் தீ நீர் வான் கருவரைமண் காரோதச் சீற்றத் தீயாவானுஞ் சென்று'' (இரண்டாந் திருவந். 24) என்ருர் பூதவேந்து. ''சொல்லுவன் சொற்பொருள் தான வையாய்ச் சுவை யூறெலி நாற்றமுந் தோற்றமு மாய்'' (பெரிய திருமொழி 2-9-1) ''அறிந்தேன் நீ பணித்த அருளென்னும் ஒள்வாளுருவி எறிந்தேன் ஐம் புலன்கள் இடர்தீர எறிந்து வந்து செறிந்தேன் நின் னடிக்கே திருவிண்ணகர் மேயவனே'' (ஷ 6-2-4) 'மாற் றமுள ஆகிலும் சொல்லுவன் மக்கள், தோற்றக்குழி தோற்றுவிப்பாய் கொல் என்று இன்னம் ஆற்றங்கரை வாழ்மரம் போலஞ்சுகின்றேன், நாற்றச்சுவை ஊறு ஒலியாகிய நம்பீ'' (ஷ 11-8-1) என்ருர் மங்கையர் கோன் ''இன்னருளே! யிரங்கிடுவாய் ஈனமனம் தீர்த் திடுவாய் உன்னரணே கொண்டவர்கண் உன் பரம் நீ வைத்திடுவாய், துன்னுபவக் கொடுங்கருமத்தூர் பறியுன்

திருநீத்தம் தொன்னெடியோன் துய்ய திருத் தேவி யெனைத் தோய்த் தருள்வாய்'' (தயாசதகம். 60 தமிழ் செய்தது) ''ஆட்சிதன தெனவொருகோ லோச்சு மன் ஞன் ஆவனுனதன்பருளம் தன் பாலோச்சத் தாழ்ச்சியற யாவுமொரு தானே காண்பான் தமியரவர் பிழை யொன்று காண கில்லான், மாட்சிதெரி யிறைமுடியோங் கொருவன் தானே காளமலை யாளரிநிற் காளே யாவான் காட்சியிது தந்திடுமுன் சூழ்ச்சி நின்றே கலைத்துவரை யறையருள் நீ களிக்கின்ருயே''. ஷை 63, தமிழ் செய்தது) என்ருர் வேதாந்த தேசிகர்.

''ஐந்திரு ளறநீக்கி ''(பரிபாடல். 4) என்று தொடங் கும் பரிபாடல் முற்றுமே இங்குக்கூறும் பொருளை விளக்கி நின்றது. ''ஐந்திருளற நீக்கி'' என்றதால் ஐம்பொறி பயக்கும் மயக்கத்தை அறவே நீக்குதல் கூறப்பட்டது. ''செயிர்தீர் செங்கட் செல்வ'' என்றதால் அம்மயக் கத்தை நீக்கியருள்பவன் செந்தாமரைக் கண்ணன் என்றது கூறப்பட்டது. ''நின் சுரத்தலும் வண்மையும் மாரியுள'' என்றதால் அவ்வருள் தருபவன் நீலமேக நெடுந்தகை யண்ணல் என்றது கூறப்பட்டது. ''நின் நாற்றமும் ஒண்மையும் பூவையுள் என்றதால் உலகளந் தருளிய பூவைப் பூவண்ணனின் திருவடி யொண்மை கூறப்பட்டது. ''இவ்வு முவ்வு மவ்வும் பிறவும்''என்ற தால் உலகஉயிர்களின் தோற்றமும் நிலைபேறும் ஒடுக் கமும பூவைப்பூவண்ணன் கண்ணதும் வயத்தும் ஆம் என்ற உண்மை கூறப்பட்டது. ''நின்னிற் சிறந்த நின் தாளிணை யவை, நின்னிற் சிறந்த நிறை கடவுளவை'' என்றதால் செயிர் தீர்க்குங்கால் வீடு அளிக்குங்கால் சரணியனும் அவன் தன்னிலும் அவன் சரணங்கள் இறை மையும் நிறைமையும் அருண்மையும் மிகுந்து நிற்கும் என்ற சரணுகதியாம் உய்வுபாயத்தின் தனிச்சிறப்புக் கூறப்பட்டது. ''நின்ஞர்வலர் தொழுதகை யமைதியி னமர்ந்தோயு நீயே அவரவ ரேவலாளனு நீயே. அவரவர் செய்பொருட் கரணமு நீயே என்றது இப்பரிபாடற்குச்

சிகரம். அஞ்சலிக் கைக்கு, (சரணுகதிக்கு)க் கட்டுப் பட்டவன். சரணுகதர் இட்ட வழக்காய் இயலும் பேரரு ளாளன் இறைவன் என்ற நுண்பொருள் இதனுல் தெற் றெனத் தெளிவிக்கப்பட்டது. ''மணிவரை யூர்ந்த'' (13) என்றுதொடங்கும் பரிபாடலுள்ளும் "நின் திருவரை யகலம் தொழுவோர்க் குரி தமர் துறக்கமும உரிமை நன்குடைத்து, சுவைமை இசைமை தோற்ற நாற்றமூ, றவையும் நீயே, யடுபோ ரண்ணுல் அவையவை கொள்ளுங் கருவியும் நீயே, முந்தி யாங்கூறிய ஐந்தனுள்ளும் ஒன்றினிற் போற்றிய விசும்பு நீயே இரண்டி னுணரும் வளியு நீயே மூன்றினுணரும் தீயு நீயே, நான்கி னுணரும் நீரு நீயே, ஐந்துடன் முற்றிய நிலனு நீயே அதனுல், நின் மருங்கின்று மூவே ழுலகமும் மூலமு மறனு முதன்மையி னிகந்த, காலமும் விசும்புங் காற்ருேடு கனலும் தன்னுரு வுறழும் பாற்கட ணுப்பண், மின்னவிர் சுடர்மணி யாயிரம் விரித்த கவைநா வருந் தலைக் காண்பின் சேக்கைத், துளவஞ்சூடிய அறி துயிலோன்'' "புரிமலர்த் துழாஅய் மேவல் மார்பினுேய், அன்னையென நினைஇ நின்னடி தொழுதனெம் பன்மா ணடுக்க இறைஞ்சினெம் வாழ்த்தினெம் முன்னு முன்னும் யாஞ்செய் தவப் பயத்தால், இன்னு மின்னுமெங்காம மிதுவே'' என்று இப்பொருள் தெளியக் கூறப் பட்டுள்ளது

மேற்கூறிய சீரிய தொன்னூற் றுணிபும் தகைமையும் நலனும் கண்டு ''சுவை யொளி யூருேசை'' என்ற குறளின் மெய்ப்பொருள் அறிக. அவற்றுக்கெல்லாம் மாருகப் பகுதி விகுதி புருடன் என்ற முறையால் சாங்கிய நூலுள் ஓதிய இருபத்தைந்து தத்துவத்தானல்லது உல கெனப் பிறிதொன்றில்லை யாதலின் உலகு அவன தறிவின் கண்ணதாயிற்று என்று இக்குறட்குப் பொருள் உரைத்தல் போலி என்க. சாங்கியர்க்கு இறைவன் இல்லை. இறைவன் முதற்றே உலகு மில்லை. இறைவ னற்ற மூலப்பகுதியும் அதன் விகுதிகிளும் புருடனுமே

(உயிர்ப்பொருளுமே) உள்ளன. அவையே சாங்கியர் கூறும் இருபத்தைந்து தத்துவங்களாம். இறைவனின் மையின் அவனைத் தாள்பற்றலு மில்லை. ஆதலின் இறை வனைத் தாள்பற்றலாம் உய்வுபாயமுமில்லை. அநுமான அளவை ஒன்று கொண்டே அவர்கள் வகுத்துக்கொண்ட இருபத்தைந்து தத்துவங்கள் அடங்கிய பகுதி விகுதி புருடப் பாகுபாட்டின் அறிவையே அவர்கள் மெய்யறிவு என்கிறார்கள். அவர்களுக்குக் கண்கூடும் சொல்லும் (வேதமும்) வலிமையற்றவை. அநுமானம் ஒன்றுதான் மெய்யறிவு பயக்கவல்லது என்கிறார்கள். பகுதிக்கே செய்கை உற்றது புருடன் செய்கை அற்றவன். பகுதி செய்யும் செய்கைகளை எல்லாம் தான் செய்வதாகப் புருடன் மருள்கின்றான். முடவனும் குருடனும் கூடியது போல் புருடனும் பகுதியும் அண்மை (சந்நிதி) அடியாக வந்ததோர் கூட்டில் படைப்பாம் உலகம் (சர்க்கம்) நிகழ் கின்றது. புருடன் முடவன் போன்றவன். செய்கை யற்றவன். பகுதி குருடன் போன்றது. அறிவு அற்றது. புருடமுடவன் பகுதிக்குருடன் தோளில் தொற்றிக் கொண்டு வழியைக் கூறுகின்றான். அதைக் கேட்டு அதற்குத் தகப் பகுதிக்குருடன் முடப்புருடனைத் தூக்கிக் கொண்டு நடந்துசெல்கின்றான் (றது). இவ்வுணர்வுதான் மெய்யுணர்வு. இவ்வுணர்வு பிறந்த புருடனுக்குப் பகுதித் தொற்று அற்றுப் பின்னர் என்றுமே ஒன்றை யொன்று கூடாது பகுதி பகுதியாயும் புருடன் புருடனாயும் தனிமை நிலை பெற்று விடுகின்றார்கள். அத் தனிமை நிலையைக் கைவலியம் என்கின்றார்கள் அந்நிலையில் துயர் அறும் என்றது சாங்கியர் சித்தாந்தம்.

''ஆதிபகவன் முதற்றே உலகு'' (குறள். 1) என்று திருக்குறள் தேறிய திண்ணத்தைச் சாங்கியர் மறுக்கின்றார்கள். ''வானோர்க்குயர்ந்த உலகம் புகும்'' (ஷை 346) ''தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி வலைப்பட்டார் மற்றையவர்'' (ஷை 348) ''அருளில் லார்க்கு அவ்வுலக மில்லை'' (ஷை 247) ''தாமரைக்

கண்ணுன் உலகு'' (ஷி 1109) ''கற்றதனு லாய பய னென்கொல் வாலறிவன் நற்ருள் தொழாஅரெனின்'' (ஷி 2) '-தனக்குவமை யில்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால் மனக்கவலே மாற்றலரிது (ஷி 7) அறவாழி யந்தணன் தாள் சேர்ந்தார்க் கல்லால், பிறவாழி நீந்தலரிது'' (ஷி. 8) ''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார்'' (ஷி. 10) என்ற குறட்பாக்களும் அவைபோல்வன பிறயாவும் காட்டித் தரும் தத்துவத்துக்கும் உய்வுபாயத்துக்கும் பேற் றுக்கும் சாங்கியநூல் கூறுமவை முற்றும் முரணு தலின் ''சுவை யொளி யூருேசை'' (குறள் 27) என்ற குறளுக்குச் சாங்கியநூலே மேற்கொண்டு உரைத்த பொருள் போலி என்பது தெளிவு. நீப்பின்மையின் சாங் கிய நூலுணர்ந்தார் நீத்தாராகார். நீத்தார் பெருமை யைக் கூறும் குறளில் சாங்கியர்க்கு இடமில்லே என்பது வெளிப்படை. ''வானேர்க்குயர்ந்த உலகம் புகும்'' (குறள். 346) "அருளில்லார்க்கு அவ்வுலகமில்லே'' (ஷி 247) ''தாமரைக் கண்ணுன் உலகு'' (ஷி 1109) என்ற உலகம் சாங்கியர் கூறும் உலகத்துள் அடங்காமை யாலும் அவ்வுலகம் புகுதல் சாங்கியர்க்கு அறவே இல்லாமையாலும் கூடாமையாலும் சுவையொளி என்ற குறளில் உலகு சாங்கிய நூலுணர்வான தறிவின் கண்ண தாயிற்று என்ற உரை அசம்பாவிதமென்க.

---

## முப்பத்தேழாமத்தியாயம்

மேற்கூறிய பொருளின் நலத்தைத் திடப்படுத்தும் மற்றுஞ் சிவகுறட்பாக்களின் உரிய பொருளை ஓரவாம். ''நுண்ணியநூல் பல கற்பினும் மற்றும் தன் உண்மை யறிவே மிகும்'' (குறள் .373) என்ற இவ்வருங்குறள் ஊழ் என்னும் அதிகாரத்தில் உள்ளது. ஒருவன் எத்தனை நுண்ணிய உணர்வைப் பயக்கும் நூல்களைக் கற்ருனுயினும் அவன் ஊழாம் வினைப்பயனுகிய மருளுணர்வே மிகுந்து நிற்கும் என்றது இக்குறட் பொருள். வினைப்பயனுய் மயக்கம் முற்றியவனுக்கு அரிய பல நூல்களின் கல்விதானும் அவனது மயக்க உணர்வையே மிகுக்குமன்றி மயக்கத்தை நீக்காது. அவனது இயற்கை மயக்க மிகுதிக்கே ஏது வாகும் என்ற வாறு. அநாதி பாபவாசனை மண்டியுள்ளதால் அவ்வாறு கூறினர். எந்துணை நுண்ணிய நூலறிவு மட்டுமே பாவத்தைப் போக்காது. இறைவனைத்தான் பற்றியே அது போக்கற்காகும். அவன் போக்க அது போகும் என்ற மறைமுடி உண்மை இதனுல் உணர்த்தப் பட்டது. இக்குறளில் தன்னுண்மையறிவு என்றதால் தன்னுள்ளே தன்வினைப்பயனும் அழுக்கேறி நிகழும் மயக்க அறிவு கூறப்பட்டது, தன் உண்மையறிவு என்றதற்குத் தன்னுள் நிலைகொண்ட மருண்மையறிவு என்பது பொருள். உள்மை உண்மையாம். ஆதலின் இக்குறளில் உண்மையறிவு என்றதற்கு மெய்யறிவு என்பது பொருளன்று. இங்குக் கூறிய தன்னுண்மையறிவு வேறு மெய்யறிவு என்பது வேறு. இங்குக் கூறியது தன்னுள் மண்டிய விபரீத அறிவு. அதைத்தன் உண்மை அறிவு என்ருர். மெய்யுணர்தல் என்றும் அதிகாரத்தில் மெய் யுணர்வின் மெய்ப்பொருள் விளக்கப் பட்டுள்ளது. மஞ்சட் காமாலைக் கண்ணன் எத்தனை தெள்ளிய சீரிய கண்ணுடி களைக்கொண்டு பார்த்தாலும் அவன் மஞ்சள் நிறவறிவே மிகுவது போல் வினையால் மயக்கமுடைய இவனுக்கு நூற்கல்வியால் பின்னும் மயக்க அறிவே மிகும் என்ற

வாறு. மஞ்சணிற அறிவு மிகுதல் காமாலே யாற்போல் தன்னுண்மை அறிவு (மருள்) மிகுதல் தன்வினைப் பயனுல் என்று அறிக. தன்னுண்மையறிவு என்றதால் இப்பொருள் தெளியக்காட்டப்பட்டது.

''கற்றதனுலாய பயனென் கொல் வாலறிவன் நற்ருள் தொழா அரெனின்'' (குறள். 2) ''ஊழையும் உப்பக்கங் காண்பர் உலேவின்றித், தாழாது ஞற்றுபவர்'' (ஷை. 620) ''தலேப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி வலேப்பட்டார் மற்றையவர்''(ஷை 348) என்ற பாக்களும் இங்கு நோக்கத் தக்கவை. ''அவரவர் நல்வினை தீவினை களுக்குத் தக இறைவன் மெய்யுணர்வையும் (தத்துவ போதத்தையும்) மருளேயும் (ப்ரமத்தையும்) தருகின்ருன்'' (அதிகரணஸாராவளி. 192. தமிழ் செய்தது) என்ருர் வேதாந்த தேசிகர். இறைவனைச் சரணம் அடைந்து அவனுல் மதிநலம் அருளப்படாதவரை எவ்வளவு நுண் ணிய நூல்கள் கற்ருர்க்கும் அவர் வினைப்பயனுய் வரும் மயக்க உணர்வே மிகுந்து நிற்கும் என்றது குறளாசிரியர் துணிபு.

இதற்கு மாருக இன்ருேரு சிலர் தான் எதை உண்மை என்று அறிகின்ருேே அவ்வறிவுதான் நுண் ணிய நூலறிவுக்கெல்லாம் மேம்பட்டதாகும். ஆதலின் நூலறிவைத் தள்ளித் தன்னறிவையே மேற்கொள்ள வேண்டும் என்பது இக்குறட்பொருள் என்றும் இப் பொருளேப் பரவச் செய்தற்குப் பண்டிகளிலும் மண்டிக ளிலும் இக்குறளே வரையவும் பறையவும் முற்பட்டுள் ளார்கள். இவ்வாறு முற்படுவார்கள் இக்குறளின் மெய்ப்பொருளுக்கு இலக்கியமாவார் என்பதை அறியா ராயினர். கற்பகத்தைச் சேர்ந்தார்க்கும் காஞ்சிரங்காய் கிட்டுவது, முற்பவத்திற் செய்த வினை'' என்ற மூதுரை மெய்ப்பிக்கத் பட்டதாயிற்று.

''பிறப் பொக்கு மெல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்'' (குறள். 972) என்ற

குறள் இங்கு நோக்கத்தக்கது. இக்குறள் பெருமை என்னும் அதிகாரத்தில் உள்ளது. "வேறுபாடு நல்லனவும் தீயனவும் இரண்டுமாயினவும் இரண்டுமல்லாவாயினவுமாய் அளவிறந்த பாகுபாடுகள் வினைவயத்தாற் பஞ்சபூத பரிணாமமாகிய யாக்கையைப் பொருந்தி நின்று அதன் பயனனுபவித்தல் எல்லா வருணத்தார்க்கு மொத்தலிற் பிறப் பொக்குமென்றும் பெருமை சிறுமைகட்குக் கட்டளைக்கல்லாகிய தொழிற் பாகுபாடுகள் வருணந்தோறும் யாக்கைதோறும் வேறுபடுதலிற் சிறப்பொவ்வாவென்றுங் கூறினர்'' என்று பரிமேலழகர் உரைத்தார். "ஒத்த கிழவனுங் கிழத்தியும்'' என்ற தொல் காப்பியச் சூத்திரத்தில் (பொருள் களவி. 90) ''ஒப்பு பத்து வகைப் படும். அவை ''பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு உருவு நிறுத்த காமவாயில், நிறையே அருளே உணர்வொடு திருவென முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே (ஷை மெய்ப் 25) என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்துள் கூறிய பத்துமாம். அவற்றுள் பிறப்பாவது அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் ஆயர் வேட்டுவர் குறவர் பாளையர் என்றாற்போல் வரும் குலம். குடிமையாவது அக்குலத்தினுள்ளார் எல்லாருஞ் சிறப்பாக ஒவ்வாமையின் அச்சிறப்பாகிய ஒழுக்கம் பற்றிய குடிவரவை குடிமை என்றார். 'பிறப்பொக்கு மெல்லா உயிர்க்கும் சிறப் பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்' (குறள் 970) எனப் பிறரும் குலத்தின்கண்ணே சிறப்பு என்பது ஒன்றுண்டென்று கூறினராதலின்'' என்று இளம்பூரணர் உரைத்தார். இதனால் நிலத்தால் மட்டிலும் தான் தமிழ் மக்கட் பாகுபாடு சாதி தருமம் குலதருமம் கால தருமம் முப்பால் தருமம் மோக்கதருமம் தூலதருமம் ஆத்தும தருமம் முதலிய சிறப்புப் பாகுபாடெல்லாம் பிற் காலத்து ஆரியக் கலப்பால் தமிழருட் புகுந்தவை என் பார் கூற்று அடியற்றது என்பது தெளியப் புலனாகும்.

---

## முப்பத்தெட்டாமத்தியாயம்

நிலம் குலம் குணம் காலம் தருமம் முதலியவற்றின் பாகுபாடு முதலியன வேதமும் வேதவிளக்கநூல்களும் கூறியுள்ளது வேறிடத்து விளக்கப்பட்டடுள்ளது. அகத் துறையின் தன்மை நன்மைகளை இங்குச் சிறிது விரித்துக் கூறுவாம். ''அறத்தான் வருவதே இன்பம்'' (குறள். 39) என்பதும் அதை அந்தணர்நூலாம் வேதம் ஒன்றே உணர்த்த வல்லது (குறள். 543) என்பதும் திருக் குறட்கு அச்சாணியாம். தருமம் என்னும் ஆரியச் சொல் உணர்த்தும் உரிய பொருள் திருக்குறள் தமிழில் திகழ்கின்ற நலம் காண்க. த்ருதி சாதநம் தருமம். த்ருதி என்னும் சொல்லுக்கு இன்பம் என்பது பொருள். அதற்குச் சாதநம் (அதைத்தருவது) தருமம். த்ருதி என்னும் சொல்லுக்கு இன்பம் என்பது பொருள் என்று யாதவ நிகண்டு படித்தது. ''த்ருதி: ஸௌக்யே பி தாரணே'' (இன்பம் தாங்குதல் என்னும் பொருள்களில் த்ருதி என்னும் சொல்) என்பது அதன் தமிழ். யாதவாப்யுதய காவியத்தில் வேதாந்த தேசிகர் த்ருதி என்னும் சொல்லை இன்பம் என்னும் பொருளில் வழங்கி யுள்ளார். அதன் உரைகாரர் அப்பய்ய தீக்ஷிதர் மேற் கூறிய யாதவ நிகண்டை எடுத்துக்காட்டி த்ருதி என்னும் சொல்லுக்கு இன்பம் என்பது பொருள் என்று உரைத்துள்ளார். (யாதவாப் யுதய. 6.14). மாகமாக்கவி ஞர் பாடிய சிசுபாலவதத்தில் த்ருதி என்னும் சொல்லை இன்பம் என்னும் பொருளில் வழங்கியுள்ளார். (சிசுபால. 7-14) இச்சுலோகத்துக்கு உரை கூறு மிடத்து மல்லி நாதர் ''த்ருதி : ஸந்தோஷ தைர்யயோ : என்ற அமர நிகண்டை எடுத்துக் காட்டி த்ருதி என்ற சொல்லுக்குச் சந்தோஷம் என்பது பொருள் என்று உரைத்தார். காளி தாஸமாக் கவிஞர் பாடிய ரகுவம்சத்தில் த்ருதி என்னும் சொல்லை இன்பம் என்னும் பொருளில் வழங்கியுள்ளார். (ரகுவம்சம். 3-10). இச் சுலோகத்துக்கு உரை கூறு மிடத்து மல்லிநாதர் 'த்ருதி: யோகாந்தரே தைர்யே

தாரணத்வர துஷ்டிஷு' என்ற விசுவ நிகண்டை எடுத்துக்காட்டி த்ருதி என்ற சொல்லுக்கு சந்தோஷம் என்பது பொருள் என்று உரைத்தார். 'த்ரு ப்ரீதௌ' (த்ரு இன்பம் என்னும் பொருளில் தமிழ் செய்தது என்னும் வினைப்பகுதி பெண்பாலில் க்திந் விகுதி ஏற்று இன்பம் என்னும் பொருளில் த்ருதி என்னும் வடிவம் பெறுகிறது. த்ரு என்னும் வினைப்பகுதி தாங்குதல் (தாரணே) என்னும் பொருளில் மந விகுதி ஏற்று ஆண்பாலில் தருமம் என்னும் வடிவம் பெருகிறது. நிலையுற்ற இன்பத்தைப் பயப்பது தருமம் என்பது தருமம் என்னும் சொல்லின் வியுற்பத்தி உணர்த்தும் உரிய பொருள் என்றது தெளியக் காட்டப்பட்டது. இலக்கணத் தூய்மையும் நிகண்டுப் பிரசித்தியும் சான்றோராட்சி வலிமையும் கண்டு தருமம் என்னும் சொல்லுக்கு ஈதே உரிய சிறப்புத்திடப் பொருள் என்ற உண்மை தெளிக. இவ்வுரிய பொருளைச் சைமிநி முனிவர் பணித்த புருவ மீமாம்ஸா சூத்திரத்துக்கு உரையாகிய ஸேச்வர மீமாம்ஸையில் வேதாந்த தேசிகர் விரித்து உரைத்துள்ளார். அதன் பரப்பை அங்குக் கண்டுகொள்க. இங்கு வேண்டிய சில பொருள்களை விளக்கிக் கூறுவாம்.

த்ருதியை (இன்பத்தை)த்தருவது தருமம். அது சோதனை (விதிவிலக்கு)களாலாகிய வேத ஏவல் உணர்த்தும் நலப்பொருள் என்னும் பொருளில் உரூடி (உற்ற தனிச் சிறப்புப்பெயர்). அதாவது சரோசம் (தாமரை) என்னும் சொல் வியுற்பத்தியால் உணர்த்தும் பொய்கையில் தோன்றியது என்னும் பொருள் தாமரையிற் சிறந்து அதற்கே உற்ற தனிச் சிறப்புப் பெயராய் நின்றதுபோல் தருமம் என்றும் சொல் வியுற்பத்தியால் உணர்த்தும் இன்பம் தருவது என்னும் பொருள் வேத சோதனையுடைய ஏவற் பொருளிற் சிறந்து அதற்கே உற்ற தனிச் சிறப்புப் பெயராய் நின்றது. ஆதலின் அது உரூடி என்னப்பட்டது. தருமத்துக்குச் சோதனையே இலக்கணம் என்றார் ஜைமிநி. (மீமாம்ஸா சூத்திரம்

(1·1-2) இங்கு இலக்கணம் என்றது பிரமாணத்தை. வேழம் ஒன்றேதான் தருமத்தை உணர்த்தும் பிரமாணம் கண்கூடு முதலிய பிரமாண மன்று என்று ஸேச்வர மீமாம்ஸை விளக்கியது. ஸேஸ்வர மீமாம்ஸையும் திருக்குறளும் ஒரே பொருளை விளக்கி நிற்றல் கண்கூடு. அறத்தான் வருவதே இன்பம் என்பது அவ்வொரு மெய்ப்பொருள். இதைச் சிறுது விளக்கிக் கூறுவாம்.

பசித்தவன் உண்கின்றான். உண்ணலால் இன்பம் (அநுகூலஉணர்ச்சி) வருகிறது. களைத்தவன் உறங்குகின்றான். உறக்கத்தால் இன்பம் (அநுகூல உணர்ச்சி) வருகிறது. ஆயினும் உண்ணல் தருமம் அன்று. அதனால் வரும் அநுகூல உணர்ச்சி இன்பமன்று என்பது பனுவற்றுணிபு. அவ்வாறே உறக்கம் தருமம் அன்று. அதனால் வரும் அநுகூல உணர்ச்சி இன்பமன்று என்பது பனுவற்றுணிபு. பசித்தவன் உண்ணலும் களைத்தவன் உறங்கலும் விருப்பத்தால் உறுமொன்றன்றி தருமத்தால் வருமொன்றன்று. அதை ராகப்ராப்தம் (விருப்பத்தால் உற்றது) என்றும் விதிப்ராப்தம் (வேதவிதியால் உற்றது) அன்று என்றும் வேதம் வல்லார் கூறுவர். விருப்பத்தால் வரும் உண்ணற்கு விதிவிலக்குகள் கூறப்பட்டுள்ளன. இதை உண் இதை உண்ணாதே இப்பொழுது உண் இப்பொழுது உண்ணாதே இவ்வாறு உண் இவ்வாறு உண்ணாதே என்ற விதிவிலக்கு வரையறை நியமவிதி என்னப்படும். தன்விருப்பத்தால் வருமதை நெறிப்படுத்தியதால் நியமவிதி என்னப்பட்டது. அது வேதம் விதித்ததால் தருமம். அந்நெறிநின்றுண்ணலால் வருவது இன்பம். அவ்வாறே உறங்கலுமாம். இப்பொழுது உறங்கு இப்பொழுது உறங்காதே இங்கு உறங்கு இங்கு உறங்காதே உறங்குமுன் இதுசெய் உறங்கியெழுந்த பின் இதுசெய் என்றெல்லாம் விதிவிலக்குகள் கூறப்பட்டுள்ளன. அவை தருமம். அவற்றால் வருவது இன்பம். ஆதலால் விருப்ப ஒழுக்கம் தருமமல்ல அதனால் வரும் அநுகூல உணர்ச்சி இன்பமல்ல. வேதம் விதி

விலக்குகளால் வரையறைசெய்துள்ளவைகளே தருமம் (அறம்) தருமத்தான் (அறத்தான்) வருவதே இன்பம் என்பது வேதமூதுவர் காட்டித்தந்த தருமமெய்ம்மை. இங்கு இன்பம் என்றது சிறப்புப் பொருட்டு. பசித்துண் பானுக்கும் களைத்துறங்குவானுக்கும் வரும் அநுகூல உணர்ச்சி இன்பம் என்பதை வேதம் கூறத் தேவை யில்லை. அதைத் தானே உணர்வான். அதை வேதம் கூறினும் அது அநுவாதமே (வழிமொழிதலே) யாம். வேதமுணர்த்து மொன்றன்று. ஆதலின் இங்கு இன்பம் என்று வேதம் உணர்த்தும் சிறப்புப் பொருள் கூறப் பட்டது என்று அறிக.

இம்மெய்ம்மையை ''அந்தணர் நூற்கும் அறத் திற்கும்'' (குறள். 543) ''அறத்தான் வருவதே இன்பம்'' (குறள். 39) என்று கையிற் கனிபோல் வெட் டொன்று துண்டிரண்டு என்று திருவள்ளுவர் விண்டு காட்டித் தந்தார். வள்ளுவர் வைதிக வீறு எத்துணை மாட்சித்து என்பதையும் வள்ளுவர் எத்துணை மீமாஞ்சை வல்லார் என்பதையும் இதனல் கண்டுணர்க. சோதநா லக்ஷண: அர்த்த: தர்ம:'' (1.1.2) என்ற ஜைமினி ஆரிய சூத்திரம் ''அறத்தான் வருவதே இன்பம்'' என்ற திருக்குறள் தமிழாய்த் திகழ்தல் காண்க. அறத்தான் வருவதே இன்பம் என்ற இக்குறள் முப்பால் அறம் வீட்டுப்பால் அறம் என்ற இரண்டையுமே உணர்த்தி நின்றது. ''சிறப்பீனும் செல்வமுமீனு மறத்தினூஉங், காக்க மெவனோ உயிர்க்கு'' (குறள்.31)என்ற குறளில் சிறப்பு என்றதால் வீடும் செல்வம் (ஐசுவரியம்) என்ற தால் முப்பாற் போகமும் கூறப்பட்டது. இம்மை மறுமை (முப்பால்) வீடு (மோக்கம்) என்ற இருவகையின்பத் தையும் கூறியது. இல்லறத்தோடு பொருந்தி வருவதே இன்பமாவது என்று வரையறை செய்து உரைத்த உரை பொருந்தாது என்க. இக்குறள் பாயிரவியலுள் உள்ளது. அது இல்லற வியற்கும் துறவற (வீட்டற) வியற்கும் பொது. துறவற வியற்குச் சிறப்பு என்னற்கு மாம்.

ஆதலின் அறத்தான் வருவதே இன்பம் என்று இம்மை மறுமை வீடுகளுக்கு ஒக்கவும் தக்கவுமாய் நூற்றருளிய தோர் தருமசாரமாகிய அருங்குறள் இது என்றறிக.

மேற்கூறிய வியுற்பத்தி இலக்கணம் நிகண்டுமாக் கவிஞர் காவியம் மீமாம்ஸா சூத்திரம் ஸேச்வரமீமாம்ஸை முதலிய நூல் துணிபொருள் நிற்க "தருமத்தால் வருவது இன்பம்" "உலகிது தரும ஸாரம்" (இராமாய. ஆரணிய. 9.30-31 தமிழ் செய்தது) என்ற இராமாயண சுலோகம் தருமப் பேரிலக்கியமாய்த் திகழ்தல் காண்க. தர்மாத் ப்ரபவதே ஸுகம். தர்மஸார மிதம் ஜகத் என்பது அங்குள்ள ஆரிய சுலோகம் தர்மாத் ப்ரபவதே ஸுகம் என்ற இராமாயண ஆரியம் அறத்தான் வருவதே இன்பம் என்ற குறள் தமிழாய்த் திகழ்தல் காண்க. இராமாயணம் கூறிய தத்துவமும் தருமமும் வரலாறுகளும் திருக்குறட்கு அடி என்ற உண்மை பின்னர் விளக்கிக் கூறப்படும். முன்னரும் இது கூறப் பட்டுள்ளது. இங்கு அறநூலாகிய திருக்குறட்கு உயிர் நாடியாகிய அறத்தான் வருவதே இன்பம் என்ற குறட்கு இராமாயணம் மூலம் என்ற உண்மையை நோக்கிக் காண்க. இவ்விராமாயண சுலோகம் சீதைப் பிராட்டி இராமபிரானுக்கு விண்ணப்பம் செய்து கொண்டது. தரும மங்கலப் பெருந்தெய்வத்தின் திருவாக் கென்று அதைத் தனிப் பெருஞ் சான்ருகத் திருவள்ளுவர் உச்சிமேற் கொண்டுள்ள ஆர்வத்தை ஓர்ந்துணர்க. உலகிது தருமஸாரம் என்ற இராமாயணத்தில் உலகு என்பது உயர்ந்தோர் மேற்று தருமஸாரம் என்றதால் மற்றெல்லாம் சக்கை ஆயிற்று. அவற்றைப் புகழுமில என்று குறள் உணர்த்திற்று. அறமிலார் ஒழுக்கம் விலங்கொழுக்கத்தை ஒத்ததொன்ருமேயன்றி மக்களெ ன்ற சிறப்புக்கு உரிய புகழ்யாதுமில. அது அறத்தானே வருவதொன்ருதலின் என்றவாறு. "தோன்றலில் தோன்ருமை நன்று" (குறள். 236) "விலங்கொடு மக்களனையர்" (குறள், 410) முதலிய குறட்பாக்களை நோக்குக.

தரும மாதாலன் தருமமு யற்சிதானும் அது பயக்கும் பேறேபோல் இன்பமாம் என்ற ஜைமிநிசூத்திர அருங் கருத்தை வேதாந்ததேசிகர் ஸேச்வரமீமாம்ஸையில் விளங்கவைத்தார். (1. 1. 2). அஃதே திருக்குறட் கருத்துமாம். ஆதலின் தருமம் என்பது இன்பமாம் பயனைப் பயக்கும் ஆருக இருத்தலோடு அதன் கண் முயற்சிதானும் பேறே போல் இன்பமாம் என்பது வேதம் வல்லார் துணிபு. ''கேசவநம்பியைக் கால்பிடிப்பாள் என்னுமிப்பேறு எனக்கு அருள்கண்டாய்'' (நாச்சியார் திருமொழி. 1. 8) என்று கோதைம்பிராட்டியார் இப் பொருளின் நலமும் நயமும் ஒன்றிப் பொலிய உணர்த்தி யருளினுள். கேசவநம்பியைக் கால்பிடித்தலாம் ஆற்றைப் பேறெனக்கண்டு நுகர்ந்து வேண்டினுள். அத்திறத் தருமத்தின் பண்புடைமை நோக்கித் தன்கண் முயன்றெழுகுவார்க்குத் தருமம் தானே பயனை அளிக்க வல்லது என்று தருமத்தின் நலத்திடனைச்சைமிநி முனிவர் வலியுறுத்தினர். இதை மறைநூலார்அறன் வலி யுறுத்தல் என்பர். இது பேறுதானும் இறைவனருளால் வருவதொன்று என்பதை மறுத்ததன்று. தருமத்தை வலியுறுத்தியதென்று அறிக. இதை வியாச முனிவர் பிரமசூத்திரத்தில் விளக்கியருளினர். (3. 2. 30). அஃதே திருக்குறள் முதலதிகார விளக்கம். திருவள்ளுவர் தருமத்தை வலியுறுத்தித் தருமத்தால் வருவதே இன்பம் என்றும் தருமத்திற் றிரிவனவெல்லாம் இழுக்கும் துன்பமுமாம் என்றும் யாப்புறுத்தினர்-

இவ்வாற்ருல் அகத்துறைகளெல்லாம் அறத் துறைகளே என்பது திருவள்ளுவர் துணிபு என்று தெளியப் புலனுகும். ''பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின் மாண்ட வறிவினர்'' (குறள். 915) ''வரைவிலா மாணிழையார் மென்ருேள் புரையிலாப், பூரியர்கள் ஆழும் அளறு'' (குறள். 919) ''பொருட் பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட் டறையில், ஏதில் பிணந் தழீஇயற்று'' (குறள். 913)

என்ற அறக்குறட்பாக்களை நோக்கி இப்பொருள் பின்னும் திடனுறுதல் காண்க. இங்கு மதிநலத்தில் மாண்ட அறிவினர் என்றது ''மதிநலம் அருளினன்'' (திருவாய் 1. 1. 1) என்று ஓதிய சடகோபரைக் குறிக்கும் நயம் காண்க. காலக்கிரமப் புத்தாராய்ச்சியாளர் கருத்து எவ்வாருயினும் முக்கால மெய்ஞ்ஞானியர் ஞானவொளி முன்னும் பின்னும் வீசிவிளங்கும் வீறுடையது என்ற உண்மையைக் கருத்திற் கொள்க. வள்ளுவர் அளறு என்றதைச் சடகோபர் கீழ்மை என்ருர். (திருவாய். 4.6.8.) நரகம் என்றவாறு, ''காயங்கழித்து அவன் தாளிணைக் கீழ்ப்புகுங் காதலனே'' (திருவாய். 3. 9. 8.) ''ஒன்றுண்டு செங்கண்மால்! யானுரைப்ப துன்னடி யார்க், கென்செய்வ னென்றே இருத்தி நீ — நின்புகழில், வைகுந்தம் சிந்தையினும் மற்றினிதோ நீயவர்க்கு வைகுந்தமென் றருளும் வான்'' (பெரியதிருவந். 53) என்று பாடியருளிய சடகோபர் திருவாக்கை நோக்குக. ''சிந்தைஎண் பதந்தொடா நின் திகழ்வடி வழகை யம்மா, சந்ததம் நுகரும் பேரா நந்தமுந் தடியனேற்குச், சிந்துரச் சிமய நாத! செய்குவன் சபத மெய்யீ. தந்த வைகுந்த வாசம் தன்னிலுந்தாழ்தலில்லை'' (வரதராஜ.49 தமிழ் செய்தது) என்று திருக்கச்சிப் பேரெழில் வரதப் பேரருளாளன் பாற் காதல் பயின்ற வேதாந்த தேசிகர் பாடியருளினூர். துறவில் நிகழ்வதும் துறவை நிகழ்த்து வதுமான காயங் கழித்த ஆரியருடைய ஆராத பெருங் காதலின் தூய்மையும் சிறப்பும் அறத்திற்றிரியும் காயம் கொழுத்த பூரியர் ஆழும் ஊனளற்றின் அவமும் இழிவும் இதனுல் நன்கு விளங்கும். அவ்வாறே இறைவனும் தாமரைக் கண்ணன் தாளிணைக்கீழ்ப் புகும் காதல்முயற்சி யாம் அவன் சிந்தனை பயக்கும் இனிமையினும் அத் தாமரைக்கண்ணன் தானே அருளும் நலமந்தமில்லதோர் பேரின்ப வீடாம் வைகுந்தம் தானும் இனிதாகாது என்ற நயம் சுவைபட விளக்கப்பட்டது. அறத்துறையே அகத் துறை என்பது வேதம் வல்லார் துணிபு.

———

## முப்பத்தொன்பதாமத்தியாயம்

அகம் என்னும் சொல் ஆரியம். அச்சொற்கு நான் என்பது பொருள். நான் என்னும் சொல் நாண் என்னும் சொற்போல் ஆரியவிகாரம். இது இந்நூல் தொடக்கத்தில் கூறப்பட்டுள்ளது. அறிகின்றவன் என்பது நான் (ஞன். ஞானமுடையவன்) என்னும் சொல்லின் பொருள். அது ஆத்துமாவை உணர்த்தும் இயல்புடையது. சடத்தினின்றும் வேறுபட்ட ஞான இயல்வினன் என்றவாறு. அறிவு என்பது பொதுவாக அறிவனைத்தையுமே உணர்த்துமாயினும் சிறப்பாக அறிவுக்கு மகுடமாய் விளங்கும் பத்தியறிவை உணர்த்தும் சக்தி உடையது. இது உபநிடதம் உணர்த்தும் உண்மை. (முண்டகம். 3.2.3). பக்தி என்பது துய்ய இனிய முழுநல ஞான மலர்ச்சிச் சிறப்பு. (ஞானவிகாஸ விசேஷ:). இறைவன் பாற் காதலில் நிகழ்தலாலும் அதை மேன்மேலும் ஈறிலதாய் மிகுத்து நிகழ்த்தலாலும் பத்தி என்பது ஞான மலர்ச்சியின் சிறப்பு என்னப்பட்டது. ''கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅரெனின்'' (குறள்.2) என்றார் வள்ளுவர் ''நிற்கின்றதெல்லாம் நெடுமாலென் றோராதார், கற்கின்ற தெல்லாம் கடை'' (நான்முகன். 54) என்றார் மழிசையர்கோன். ''காண்பனவும் கேட்பனவும் மற்றொன்றின்றிக், கண்ணனையே கண்டுரைத்த கடிய காதல்'' (தேசிகமாலை அமிர்தாஸ். 37.இது பாண்பெருமாளைக் காதல் என்றே வேதாந்த தேசிகர் கண்டுவிண்ட ஆர்வப்பாடல்) என்றார் வேதாந்த தேசிகர். பத்தியாம் ஆத்துமகுணம் மேன்மேலும் வளர்ந்து மலர்ந்து துளக்கற்றமுதமாய்த் தொடர்ந்து நிகழும் படித்துறைகள் பல உடையது. அவை பத்தியின் துறைகள் என்னப்படும். பத்தித்துறைகளே அகத்துறைகள். பூரியர் ஆழும் அழுக்குடம்பள்ளற்றுறைகள் அன்று. அழுக்குடம்பளற்றுக்குத் துறையுமில்லை முறையுமில்லை. அஃதின்மையே அளற்றுக்கு உற்றது. அதில் விழுவார் அதில் ஆழ்ந்து மாள்வாரே ஆவார். திருக்குறள் இத்

திடப்பொருளை அச்சாணியாகக் கொண்டுள்ளது. இதற்கு முரணாக இன்று சிலர் நிலப்பாகுபாடு ஒன்றையே அடியாகக் கொண்ட இயற்கையுணர்வு போக்கெடுத்தோடும் வெறியில் நிகழும் அழுக்குடம் புரோசலாம் இயற்கைக் கூட்டத்தைத்தான் திருக்குறளுள்ளிட்ட பண்டைத் தமிழிலக்கிய இலக்கணங்கள் காமத்துப்பாலிற் கூறின. வரையுமில்லை முறையுமில்லை தருமமுமில்லை கருமமுமில்லை நெறியுமில்லை கிறியுமில்லை விதியுமில்லை விலக்குமில்லை காணவேண்டும் கூட வேண்டும் ஆடவேண்டும் ஓடவேண்டும். ஈதே இயற்கைப் போக்குக்கும் நிலப்பாகுபாட்டுக்கும் தக்கதும் ஒத்ததுமாம். தருமம் கருமம் விரதம் சடங்கு விதி விலக்கு என்பன வெல்லாம் பிற்காலப் போலிப்புலவர்களின் கற்பனைகள் என்று சிலரும் இயற்கைச் சுவையோடு பிற்காலத்திற் சிலர் பத்திச் சுவையையும் சேர்த்துக்கொண்டார்கள் என்று சிலரும் வரைந்தும் பறைந்தும் வருதல் முத்தமிழகத்துறையிலக்கிய இலக்கணங்களுக்கு முரணாதலோடு திருவள்ளுவருக்கு இழிவையே பயப்பதாகும். இவர்கள் தாங்களே திருவள்ளுவரைப் போற்றுபவர்கள் போல் நடிக்கின்றார்கள். இது தாம்கெட்டதோடு சந்திர புஷ்கரிணியையும் கெடுத்தது போலேயாம்.

திருக்குறளின் அமைப்பும் கருத்தும் அதன் வைதிகத் தன்மையைக் காட்டித் தரும். திருக்குறள் முப்பானூல். இது மேலே கூறப்பட்டுள்ளது. அறம் பொருள் இன்பம் என்பது முப்பால். பால் என்பது பல்பொருளொருசொல். முப்பால் என்ற விடத்து பால் என்னும் சொல் பகுப்பு என்னும் பொருளை உணர்த்தி நின்றது. தருமம் (அறம்) அருத்தம் (பொருள்) காமம் (இன்பம்) என்பது த்ரிவர்க்கம் என்று மநு கூறினர் (2.224). த்ரிவர்க்கம் எனினும் முப்பால் எனினும் ஒக்கும். இதுதான் நியாயம் காட்டித்தரும் உரிய பொருள். அந்த நியாயத்தை மேற்கொண்டும் அங்குக் கூறிய காமம் என்னும் ஆரியச்சொல்லையே அநுவதித்தும் ஆரியநூல்களுள் கூறி

யுள்ள சம்போகம் விப்ரலம்பம் என்னும் பாகுபாட்டை மேற்கொண்டும் மறையும் மறையறநூல்களும் கூறும் அறத்தையே (தருமத்தையே) அடியாகக்கொண்டு இயற் கைக்கூட்டமாம் கணிகையர் கூட்டத்தையும் பிறன் பொருட் கூட்டத்தையும் அளறு எனக்கழித்து அறக்கூட்ட மாம் கன்னியர் கூட்டம் ஒன்றையே தமது தருமநூலுக்கு விஷயமாகக் கொண்டு அக்கூட்டம் தருமத்தில் அமைந்து சமைந்து நிகழுமாறே துய்யமணமும் சுவையும் நலமும் நயமும் தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஒத்துக் கலந்து ஒருபடிப்பட்ட நறுமணம் கமழத் தமது மறையற முப்பானூலே நலபாகமாய்ச்சமைத்து நல்லறமக்கட்கு நல்கிய வள்ளற்பெருஞ்சான்ருேர் வள்ளுவர் என்ற உண்மையைக் கண்டுணர்க. ஆதலின் அறக்கூட்டம் ஒன்றே மணமாம். அதற்கே மணம் என்றது உரிய பெயர். அறத்திற்றிரியும் கூட்டத்தை அளறு என்றது நோக்கி அது மணமன்று என்று அறிக. ஆதலின் அறக் கூட்டம் மன்றல் என்னப்பட்டது. மிக்க பரிமளம் என்றது மன்றல் என்னும் சொல்லின் பொருள். ''பாலேயாழிசை யும் கடிப்பரிமளமும் வதுவையும் என்றிவை மன்ற லாகும்'' என்று நிகண்டு படித்தது. (பிங்கல. 10.916). கடிமணப்படலம் என்ருர் கம்பர். வதுவரர் தருமக் கூட்டம் ஒன்றுதான் மணம் என்ற உண்மை காண்க.

அறக்கூட்ட நிகழ்ச்சிக்கும் நுகர்ச்சிக்கும் காட்சி யைத் தோற்றுவாயாக அமைத்துக்கொண்ட நலத்தை யும் சீர்மையையும் ஆழ்ந்து ஓர்ந்து தேர்க. இது ஆரிய நூலுள் சக்ஷுர்மநோராகதா (கண்மனமொன்றுங்காதல்) என்று கூறப்பட்டது. ஊன்கண் ஊனக்கண்ணே. புலான்மனம் புன்மனமே புண்மனமே. ஊன் கண்ணர்க் கும் புன்மனத்தர்க்கும் உற்றது வெறியே. உணர்ந்து துணர்ந் துணரினும் உணர்வரிதாய்த் தெய்வவய மாயும் தருமமயமாயும் தருமபயனுயும் வரும் வதுவரர் கூட்டத்துக்குக் காட்சி என்பது தோற்று

வாயாக அகத்தே நிகழ்ந்தெழுமோர் துய்ய மாமங்கல ஒருமன உணர்ச்சியின் மலர்ச்சிச்சிறப்பாய் அமைந் துள்ளது. இது தெய்வமாக்கவிமாண்பர் மேற்கொண்ட தோர் தருமகாமசமயம் என்ற நுட்பம் காண்க. ''தருமம் பிழையாக் காமம் நானே'' (கீதை. 7. 11. தமிழ் செய்தது) என்று காமனைப் பயந்த காளையாகிய இறைவன்தானே பாடியருளினன். தெய்வமாக்கவிஞரின் தருமகாமசமயம் எத்துணைச்சீர்மைத்து என்பது இதனுற் காணலாம். ஊன்புலன் கொண்டும் ஊன்மனம் கொண்டும் தருமசமயக் காட்சிநுட்பம் அறிதற்காகாது என்பது சான்ருேர் திடக்கோட்பாடு. காட்சி தருமத் தானே வருவதொன்ரும். தருமத்தான் வராதது புறத்ததாயும் புகழற்றதாயும் அளருயுமே ஒழியும் என்ற வள்ளுவர்துணிபைத் திடனுகக் கருத்திற்கொள்க. ''அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம் புறத்த புகழுமில'' (குறள். 39) என்ற திருக்குறள் பிறிதெப் பொருளையும் பொருது என்றதை வள்ளுவர் நெஞ்சினுல் நோக்கிக் காண்க. அத்திற வைதிக வலிமையில் அறனை வலியுறுத்தினராதலின் அதற்கு முரணுகக் கூறுமவை யெல்லாம் புறத்த புகழுமில என்னக்கடவதிறே. ''எண்ணரு நலத்தினு ளினைய நின்றுழி. கண்ணெடு கண்ணிணை கௌவி யொன்றையொன், றுண்ணவு நிலைபெரு துணர்வு மொன்றிட அண்ணலும் நோக் கினுன் அவளும் நோக்கினுள்'' (இராமாவ பால. மிதிலை. 35) ''பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணித் தொரு வரை யொருவர்தம் முள்ளமீர்த்தலால் வரிசிலை யண் ணலும் வாட்கணங்கையும். இருவரும் மாறிப்புக் கிதய மெய்தினர்'' (ஷை. ஷை. 37) ''நம்பியைக் காண நங்கைக் காயிரம் நயனம் வேண்டும், கொம்பினைக் காணுந் தோறுங் குரிசிற்கு மன்ன தேயாம்'' (ஷை. ஷை. கார்முக. 43) என்ற செந்தமிழ்ச்செங்கோலுடைய கவிச்சக்ரவர்த் தியின் அவியகத்துறைகள் தாங்கித் திகழும் திவ்விய தீங்கவிகளை நோக்கித் தெய்வகவிச் சமயம் எத்துணைத் தூய்மையும் வாய்மையும் ஆழ்மையும் உடையது

என்பதை ஆழ்ந்து ஓர்ந்து தேறுக. ''கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள், என்ன பயனுமில'' (குறள். 1100) என்ற குறள் கம்பர் தீங்கவியில் கட்டெழில் திகழ்தல் காண்க. காவிய விசுவரூபம் காட்டினான் கம்பநாடன். ''பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தம், கருமமே கட்டளைக்கல்'' (குறள். 505) என்ற குறளில் அறன் வலிவுறுத்தப் படுமாற்றை ''தருமம் பற்றிய தக்கவர்க் கெலாம் கருமங் கட்டளை என்றல் கட்டதோ'' (இராமாய. கிட்கிந்தா. அரசியல் 16) என்று கம்பர் காட்டித்தந்தார்.

அம்மையப்பராம் சீதைப் பிராட்டியும் இராமபிரானும் ஒரு நினைவால் ஈன்ற உலகெல்லாம் உய்யவும் தருமத்தை நிறுத்தவும் திருவவதாரம் செய்தருளி வதுவர நல்லற விறைத்திரு மூர்த்திகளாய் ஒருவரையொருவர் நோக்கி இருவரும் மாறிப்புக்கு இதயமெய்து மாற்ருன் மாலை மாற்றிக் கொண்டொ ன்றிப்பொலியும் அத்திருமங்கலம் கண்டமை காட்டும் தீங்கவிகள் மேற்கூறிய கம்பர் பாடல்கள். அங்கண் கற்பெனும் பெயரதொன்ரும் பெருந்தேவியின் தெய்வத் திருத்தோற்றத்தைக் கருத்துடைய உலகம் கைதொழுதுய்ந்த திருக் காட்சியை ''நைவள நவிற்று மொழி நண்ண வரலோடும், வையநுகர் கொற்றவனு மாதவருமல்லார், கைகள்தலை புக்கன கருத்துளது மெல்லாம் தெய்வமென வுற்றவுடல் சிந்தைவச மன்ரே'' (இராமாவ. கோலங். 34) என்ற கவிச்சக்ரவர்த்தி திருவிருத்தம் காட்டித் திகழும் நலம் காண்க. ஊனளற்றுள்ளத்தார்க்கு அகத்துறைகளின் தருமத் தூய்மை காணவொண்ணுது. தொல்லறத் தெய்வமாக் கவி மாண்பர்க்கே அது காணவும் காட்டவும் ஊட்டவும் இயலும்.

மாநவம் முதலிய ஆரிட அறநூல்களையும் வாற்சாயநீயம் முதலிய ஆரிடக் காமநூல்களையும் உள்ளவாறு கண்டு கண்டவாறு யாத்துத் திகழ்வதோர் தருமப்

பனுவல் திருக்குறள் ''அறம் பொருள் இன்பம் என வட நூல் வழியே கூறினுராதலின் இதற்கு இலக்கணம் வாத்ஸ்யாயநம் என்னும் காமசூத்திரத்துச் சுரதவிகல்பம் என்னும் அதிகரணத்துள் கண்டுகொள்க''. (காமத்துப்பால். களவியல் தொடக்கம்) என்ற பரிப்பெருமாள் உரை இங்கு நோக்கத்தக்கது. அதற்கிணங்கக் காமஇன்பத்தைப் புணர்ச்சி என்றும் பிரிவு என்றும் இருவகைப்படுத்தினுர். புணர்ச்சி ஸம்போகம் என்னப்படும். அது ஸம்ச்லேஷம் ஸம்ஸ்பர்சம் என்னவும்படும். பிரிவு விப்ரலம்பம் என்னப்படும். அது விச்லேஷம் விப்ரயோகம் என்னவும்படும், செலவுஆற்ருமை விதுப்பு, புலவி முதலியன அறநிகழ்ச்சிகளும் அறமுயற்சிகளுமாம். அறப் பிறழ்ச்சிகள் அன்று. புலவியிலும் அறவழுவும் தகாவொழுக்கமும் விலக்கப் படவேண்டும் என்பது தருமகாமஸமயம். இப்பொருளை ''இனிதெழில் பொழிய நம்பி யிழையநங் கையர்க ளில்லம், துனியினீ துனியி னீட லாடவன் தேவிமார்க்கு, முனிவதன் வெறி துரத்துன் னுளமணி வளமை யீனும், புனிதமும் மறையின் மூலப் புகழ்மனுப் பாதொ லிப்பாய்'' (பாதுகா. 429. தமிழ். செய்தது) என்றும் ''அடுத்தகுற் றேவ லாளர் பலரையும் நிமல னெம்மான் விடுத்துடன் புறத்தி லந்தப் புரமவன் புக மராடீ, நெடுமதன் மறையி னுண்மை நிகிழகக் காத னீதி, நடையினின் மணியொ லிக்கண் நாயகி தமக்கு மோதும் (ஷி. 42. தமிழ் செய்தது) என்று வேதாந்த தேசிகர் காட்டித்தந்தார்.

---

## நாற்பதாமத்தியாயம்

அகத்துறைகள் என்பன இறைவன்பால் பத்தியாம் ஆராத பெருங்காதல் துறைகளாம் என்று மேலே கூறப் பட்டது. துறைகளெல்லாம் வேதம் வகுத்தவே. வேதம் வகுத்தவாறே கவிகள் கண்டு பாடி இன்புறுவார். அவ்வாறு கண்டு பாடுவாரே கவிகளாவார். அல்லார் ஆகார். ''தேவர்க் கவிகொள் மறையகப் பொருள் புறப்பொருள் அறிவார் கவிகளாகுவார் காண்குவார் மெய்ப்பொருள் காலால் புவிகொள் நாயகர்க் கடியவர்க் கடிமையிற் புக்கார்'' (உயுத்த. இரணியன். 32) என்று கவிச்சக்ரவர்த்தி இவ்வுண்மையைத் தெளிய விளக்கினர். கவி என்பது அவி. அவி என்றதால் அதன் தூய்மை கூறப்பட்டது. அதன் துறை களெல்லாம் மறையகப்பொருள் புறப்பொருள்களேயாம். அவற்றை அறிபவர் கவிகளாவார். கவிகள் அவற்றைக் காண்பார் என்ருர். காணுர் கவியாகார் என்று கூறியதாயிற்று. இறைவனுக்கு அவியென அவன் பொன்னடிப்பால் ஆத்துமாவை (அகம் பதார்த்தத்தை) இட்டுத் துறந்து இன்புறும் தூய துறைகளே அவியகத் துறைகள் என்று காவியவிசுவ ரூபம் காட்டித்தரவல்ல கம்பநாடுடைய வள்ளல் காட்டித் தந்தார். ''புவியிறுக் கணியா யான்ற பொருள்தந்து புலத்திற் ருகி அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிய ளாவிச், சவியுறத் தெளிந்து தண்ணென் ருெழுக்கமும் தழுவிச் சான்ருேர், கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார்.'' ஆரணிய. சூர்ப்ப. 1.) என்று இப்பொருளைப் பின்னும் சவியுறத் தெளிவித்தார். இப்பாடலில் புலத்திற்ருகி என்ற இடத்திற் புலம் என்று வேதம் கூறப்பட்டது. புலம் என்னும் சொல் வேதத்தை உணர்தியது என்பது மேலே விளக்கப்பட்டது. ''நான் மறையகப்பொருள் புறப்பொருள் காண்குவார் கவி களாகுவார்'' என்று கம்பர்தாமே வேறிடத்தும் (இரணி யன். 32.) கூறியது கண்டு இங்கு புலத்திற்ருகி

என்றது அங்கு நான்மறை என்று கூறிய வேதம் என்று அறிக.

வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்திவ ணோயிது தீர்த்துக் கொள்ளாது போய், ஏதம் பறைந்து அல்ல செய்து கள்ளூடு களாய்த் தூய்க், கீதமுழ விட்டுநீரணங்காடுதல் கீழ்மையே'' (திருவாய். 4.6.8) என்று சடகோபர் பாடியருளினர். இப்பாடலிற் கூறிய நோயே ''காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலைமலரு மிந்நோய்'' (குறள். 1227) என்று குறள் கூறிய நோய். அந்நோய் தீர வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிதலேயாம் என்றார். வேத விதிவிலக்குகளுக்கு முரணாகப் புரியுமவையெல்லாம் கீழ்மையே என்றார். ''முழுவதும் இறையோன் அளி வரும் அருளினோடு அகத்தனன் புறத்தனன் அமைந்தே'' ''அமைவுடை அறநெறி முழுவதும் உயர்வற உயர்ந்து (திருவாய். 1.3.2—3) என்று பின்னும் தெளிவுற அருளிச்செய்தார். இறையோன் அறநெறி அனைத்திலும் உயர்வற உயர்ந்து திகழும் நிலையுடைய அகத்தனன் புறத்தனன் என்று விளங்கவைத்தவாறு, தம் தீராஸ: கவய : உந்நயந்தி (வேதம்)என்ற வேதம் சடகோபர் தமிழுபநிடதமாய் விளங்கும் எழில் காண்க.

''ஒப்பற்ற நான் மறை யுள்ளக் கருத்திலுரைத் துரைத்த முப்பத்திரண்டிவை முத்தமிழ் சேர்ந்த மொழித் திருவே.'' (தேசிக. அதிகார. 40) என்றார் வேதாந்த தேசிகர். நான்மறை யுள்ளக்கருத்தின் எழுச்சியும் நிகழ்ச்சியுமே முத்தமிழ் என்ற வாய்மை இதனாற் சவியு றத் தெளிவாக்கப்பட்டது. இப்பாடலில் நான் மறை யுள்ளக்கருத்து என்றதால் உபநிடதம் கூறப்பட்டது. அது வேதத்தின் முடிப்பாகம். துறவறப்பாகம். ''உப நிடதம் வேதத்தினுட்பொரு ளாகும்'' (பிங்கல. 7.306) என்று நிகண்டு படித்தது. கம்பர் நான்மறை என்றார்.

வேதாந்த தேசிகர் நான்மறை யுள்ளக்கருத்து (உப நிடதக் கருத்து) என்று சிறப்பித்தார். கம்பர் முத்தமிழ்த் துறையின் முறை போகிய உத்தமக் கவி என்ருர். வேதாந்ததேசிகர் முத்தமிழ் சேர்ந்த மொழித்திரு என்று அதன் மாமங்கலத் தூய்மையையும் இனிமையையும் காட்டித் தந்தார்.

ஆதலின் அறத்தான் வருவதே இன்பம் என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவர் அறநெறி வகுத்தார். அஃதே அறமொழி. முத்தமிழ் சேர்ந்த மொழித்திரு. அறம் சிறிதும் பிறழாவாறும் அவம் சிறிதும் அணுகா வாறும் விளம்பிய வலியதோர் தூமறை இலக்கணம் அது. கம்பர் திருவிருத்தங்கள் அதன் விரிவும் விளக்க மும் வலியுறுத்தலுமாம். அவி என்றும் தண்ணென் ருெழுக்கம் என்றும் பொய்யில்கேள்விப் புலமை என்றும் நாவருங் கிளவிச் செவ்வி என்றும் உத்தமக்கவி என்றும் நான்மறை யகப்பொருள் புறப்பொருள் அறிவார் கவி களாகுவார் காண்குவார் மெய்ப்பொருள் என்றும் தொல்லறத் தூமறை யகத்துறை மெய்ம்மையைக் கண் கொண்டு காணும் சான்ருகக் காட்டித் தந்த பண்பாளர் கல்வியிற்பெரிய கவிச்சக்ரவர்த்தி கம்பநாடுடையவள்ளல் என்ற உண்மை காண்க. செய்ய நான்மறை யுணர்ச்சி மணம்கமழ் மலர்ச்சியில் ஆத்தும(அக)ப் பொருளே இறைவன் திருவடிக்கண் அவியென வடித்திடும் காதற் பெருங்கடலாய் ஈறிலின்பத் திருவெள்ளத்தில் மூழ்கி மகிழும் நலம் பொலியும் துறைகளாம். ஆதலின் அத்திறத் தெய்வமாக்கவிகள் மகிழ்ந்து பாடும் பாடல்கள் வேதத்தை ஒத்தவை என்று ஓதப்பட்டது. கடலினும் பெரியதோர் ஒண்பொருளீறில வண்புகழுடைமை நோக்கி அவை வேதத்தினும் மிக்கவை என்று புகழ்தற் கொத்தனவாயின. "வானக்கோனைக் கவிசொல்ல வல் லேற்கு இனி மாறு உண்டே'' (திருவாய். 4.5.9.) என்று ஈறிலின்பத்திருவெள்ளத்தில் மூழ்கிய சடகோபர் பாடி யருளினுர். இத்திருவாய்மொழி உணர்த்தும் அரும்

பொருளை 'வேதங்கள் மீண்ட நிலமெல்லாம் மெய்யுணர்ந்துகவி பாடும் கருத்துடையேனுனேன்'' (பரமபத. ப்ராப்தி) என்று வேதாந்ததேசிகர் விளக்கியருளினர். அகத்துறைப் பாகுபாடெல்லாம் மறைவகுத்தபத்திநிலப் பாகுபாடு என்ற நலம் இதனுல் காட்டப்பட்டது. ''செய்ய தமிழ் மாலைகளுந் தெளிய ஓதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின் ருேமே'' (தேசிக. அதிகார. 1) என்று வேறிடத்தும் இப்பொருளைத் தெளிவித்தார்.

துய்யபெருங் காதல் துறைகளாம் பத்தித்துறைகளே அகத்துறைகள் என்ற பொருள் இவ்வாற்ருல் கண்டுணர்தற்காம். அத்திறத் துய்ய காதல் ஒன்றில் தான் துறவு உறும் ''தன்னையுந் துறக்குந் தன்மை காமத்தே தங்கிற் றன்றே'' (இராமாவ. பால. உண்டாட்டு. 57) என்று கம்பர் காட்டித்தந்தார். ப்ரத்யகாத்ம ஹவியாம் ஹவிஸ்என்பது அவி என நின்றது. ப்ரத்யகாத்மா எனினும் அகம் எனினும் ஒக்கும். ஆதலின் ப்ரத்யகாத்மஹவி என்பது அவியகம் என்னப்பட்டது. இவ்வவி இடப்பட வேண்டியதையும் இடும் முறையையும் உபநிடதம் ஓதி அஃதே உய்வுபாயத்துளெல்லாம் தலை என்றும் அது மகோப நிடதம் என்றும் தேவர்க்கும் உணர்வரிது என்றும் அதன் நுட்பத்தைக் கூறிற்று (தைத்தி. 51. 78. 79) ''வீடுமின் முற்றவும், வீடுசெய்தும்முயிர் வீடுடையானிடை, வீடுசெய்ம் மின்னே'' (திருவாய். 1. 2. 1.) ''நீர்நும தென்றிவை வேர்முதல் மாய்த்திறை சேர்மினுயிர்க்கதன், நேர்நிறை யில்லே'' (ஷை. 1-2-3) ''கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர், எண்ணும் திருநாமம், திண்ணம் நாரணமே'' (ஷை. 10-5-1) என்று சடகோபர் தமது உபநிடதத்தில் இவ்வுபாயத்தை விதித்தும் அதை ஒத்தது யாதுமில்லை என்றும் விளக்கியருளினர். கண்ணன் கழலிணை என்ற இத்திருவாய்மொழியில் நண்ணும் எண்ணும் என்ற விடத்து உம்மீறு ஏவல் கண்ணிய வியங்கோள் என்று அறிக. இங்கு

விளக்கிக் கூறிய மறைமுடிப் பொருளின் சுருக்கும் சாரமு மாம் திருக்குறள் முதலதிகாரம் என்ற உண்மை தெளிக.

அவியகத் துறைகள் என்பன பத்தித்துறைகளாம் என்றது மெய்யுணர்ந்த தெய்வமாக்கவி சமயம் என்பதும் அதுபல துறைகளை உடையன என்பதும் மேலே கூறப் பட்டது. அவற்றுக் கிணங்க ஒழுக்கமும் பலவாம். அவற்றைத் தண்ணென் றொழுக்கம் என்றார் கம்பர். அவையெல்லாம் துய்ய பேரறவொழுக்கம். அது ஆராத அருளமுதமயமான இறைவன் பால் ஆராத காதல் மயமான உயிர்ப்பொருள் தன்னை அவியென இட்டு ஒழுகும் பேரறம். அக்காதல் ப்ரஹ்மகாமம் ப்ரஹ்மஸம் ஸ்பர்சம் என்னப்படும். அதன் நிகழ்ச்சி துறவில்தான். அது பயப்பது பேரின்பம். முப்பாலறம் பயப்பது சிற்றின்பம். சிறுபயனிற் படிதலானும் சிறிது பொழுதே நிகழ்ந்தொழிதலானும் சிற்றின்பம் என்னப்பட்டது. ஆயினும் அறத்தான் வருதலின் அது இன்பமாயிற்று. அறமில்லையேல் இன்பமில்லை. அறம் பயத்தலால் அதற்குத் துறைகள் வகுக்கப்பட்டுள்ளன. அவையெல் லாம் அறத்துறைகளே. அறத்திற்றிரிவன வெல்லாம் வெறியே. அதன்கண் ஒழுக்கம் வெறியொழுக்கமேயா மன்றி அறவொழுக்கமாகாது. ஆதலின் வள்ளுவர் அறனை வலியுறுத்தினர். அதனால் வெறி விலக்கப்பட்ட தாயிற்று முப்பாலறம் பேரறமாம் வீட்டறத்தில் முற்றி அப்பேரறத்தைப் பயின்று முயன்று ஒழுகிப் பவம் மீளா வீடென்னும் பேரின்பம் பெற்று மக்கள் உய்யும் பொருட்டுத் திருக்குறளை நல்கிய வைதிகப் பெருவள்ளல் திருவள்ளுவர் ஆதலின் சிறப்பாகிய வீடுபயக்கும் பேரறத்தை முற்கூறிவலியுறுத்திப் பின்னர்ப் பொது வாகிய முப்பாலறத்தைக் கூறிய நலமும் நயமும் நன்கு புலனாகும். 'பொது நலத்தார் புன்னலந் தோயார்' (குறள். 915) ''பூரியர்கள் ஆழும் அளறு'' (குறள். 919) ''பிணந்தழீஇ யற்று'' (குறள். 913) என்பன வள்ளுவர் அறத்திடப்பாடு. அவ்வாறே ''வேதம் வல்லார்களைக்

கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்திவ ணேயிது தீர்த்துக் கொள்ளாதுபோய், ஏதம் பறைந்து அல்ல செய்து கள்ளூடு கலாய்த் தூய்க் கீத முழவிட்டு நீரணங்காடுதல் கீழ்மையே'' (திருவாய். 4. 6. 8.) முதலிய (இவை மேலே கூறப்பட்டுள்ளன) சடகோபர் அறத்திடப்பாடு. வள்ளுவர் அளறு என்றார். சடகோபர் கீழ்மை என்றார். அது பறைதலை ஏதம் பறைதல் என்றும் அது செய்தலை அல்ல செய்தல் என்றும் கூறினார். ஆதலின் பரத்தையிற் பிரிதலும் அதுபோல்வனவும் சடகோபருக்கும் வள்ளுவருக்கும் உடன்பாடில்லாமை யால் அவை விலக்கப்பட்டது தெளியப் புலனாகும். இது கண்டு திருவிருத்தம் திருவாய்மொழி பெரியதிருமொழி முதலிய திவ்யப்ரபந்தங்களின் அச்சுப்பதிப்பு சிலவற்றுள் கூறப்பட்ட துறைகளுள் அறத்திற்றிரிவனவும் அறத்தான் வராதனவும் கூறப்பட்டவை கொள்ளற்காகாவாம். வேதம் வல்லார்கள் வாய்க்கேட்டும் மேற்கூறிய பேரிலக் கியங்களும் அவைபோல்வனவும் கண்டும் அவ்வியகத் துறைகளின் மெய்யுணர்வு பெறுதற்காகும். இது விஷய மாய்க் கருத்துவேறுபாடு உள்ளது. பரத்தையிற்பிரிதல் திருவள்ளுவருக்கு உடன்பாடன்று என்றது மட்டிலுமே இங்குக் கூறப்பட்டது.

———

## நாற்பத்தொன்றுமத்தியாயம்

காமம் இருவகையாகும். முப்பாற்காமம் என்பதும் ப்ரஹ்ம(மோக்க)காமம் என்பதும் அவை என்று மேலே கூறப்பட்டது. முப்பாற்காமக் கடவுள் காமன் என்பான், ப்ரஹ்ம காமக் கடவுள் அக்காமனைப் பயந்த காளையாம் பரப்ரஹ்ம புருடோத்தமன். முப்பாற் காமக் கடவுள் காரிய காமன். ப்ரஹ்ம (மோக்க) காமக்கடவுள் காரண காமன். அனைத்துக்கும் காரணமாகிய இறைவன் காமனுக்கும் காரணமாகிய பரம்புருடன் என்றவாறு. ஆதலின் அவனைக் ''காமனைப் பயந்த காளை'' (திருவாய் 10-2-8) என்றார் சடகோபர். அவன் மனத்துக் கினி யானான ஆநந்தமயன். முதுமறைமுதல்வனாய் சருவ காரணனாய்ச் செங்கட்செல்வனாய் ஆராத அருளமுதாய் ஒப்பருந் துப்பனாய் மனத்துக்கினியனாய்க் காயம்கழித்துத் தன் தாளிணைக் கீழ்ப்புகும்காதல்பயின்றெழுகும் தூமனப் பத்தர்முன் தானே ஸாக்ஷாத் மன்மத மன்மதனாய்த் தோன்றி ஈறிலின்பத்திருவெள்ளத்து மூழ்குவித்து மீளாப் பேரின்பவாழ்ச்சியை அருளி ஆட்கொண்டு பூரிக்கும் ஆநந்தப் பெருவள்ளற் புனிதனாய ஓரொருவனும் அவன் என்று வேதம் உணர்த்தியது. தன்னைக்காண விடாய்த்துப் பாடிய தூமனக் கோவியர்முன் ஸாக்ஷாத் மன்மத மன்மதனாய்த் தோன்றியருளினான் (பாகவதம் 10.32.2. நேர்மன்மத மன்மதன் : காரணமன் மதன்) என்று சுகமுனிவர் பாடியருளினார். காமன் (மன்மதன்) தானும் காமனாயிருத்தல் காமனைப் பயந்த காளையாம் கண்ண பிரான் கருத்தால் என்றதும் காமனும் கண்ணன் வயத்தன் என்றதும் இதனால் கூறியதாம். ''பேரமர் காதல் கடல் புரைய விளைவித்த காரமர்மேனி நம் கண்ணன் தோழீ! கடியனே''. (திருவாய். 5. 3. 4) ''கடியன் கொடியன் நெடியமால் உலகம் கொண்ட அடியன் அறிவருமேனிமாயத்தன் ஆகிலும் கொடிய என் நெஞ்சம் அவனென்றே கிடக்கும்'' (ஷை 5.3.5) ''இன்னு யிர்க்கு ஏழையர்மேல் வளையு மிணைநீலவிற் கொல், மன்னிய சீர் மதனன் கருப்புச் சிலைகொல்

மதனன் தன்னுயிர்த் தாதை கண்ணபெருமான் புருவ மவையே, என்னுயிர்மேலன வாயடுகின்றன வென்று நின்றே'' (டி. 7. 7. 4.) என்று சடகோபர் ஓதினர். ஸாக்ஷாத் மன்மத மன்மத என்ற பாகவதம் காமனைப் பயந்த காளை மதனன் தன்னுயிர்த் தாதை கண்ண பெருமான் காதல் கடல்புரைய வருமேனிமாயத்தன் என் நெஞ்சம் அவனென்றே கிடக்கும் என்ற திருவாய் மொழியில் நலம்பொலிய எழில் பொழிய விளங்குதல் காண்க. காமன் மதனன் மன்மதன் மாரன் கந்தர்ப்பன் ஐங்கணையன் அநங்கன் முதலியவை காமன் பெயர்கள்.

தருமம் பிழையாக் காமம் நானே'' (கீதை. தமிழ் செய்தது) என்று பாடியருளியது போல் ''பிறவியேதுக் காமன் நானே'' (கீதை. 10. 28. தமிழ்செய்தது) என்று காமனைப் பயந்த காளையாகிய இறைவன் தானே பின்றும் பாடியருளினன். சடகோபர்நெஞ்சில் காதல் கடல் புரைய வருமேனிமாயத்தனுய்க் கோயில் கொண்டு பொலிந்து நின்றபிரான் முப்பாற் காமதேவன் அன்று. திருவடியால் உலகம் கொண்ட அறிவருமேனிமாயத் தனுகிய நெடியமாலாம் காமனைப் பயந்த காளைப் பெருமானே. முதுமறை முதல்தனி முழுநலக் காமதேவன் என்றவாறு. இக்கீதையில் மற்றவைகளையும் மற்றவர் களையுங் கூறுங்கால் வேதங்களுள் சாமவேதம் என்பது யாதோ அது நான். தேவருள் இந்திரன் என்பவன் யாவனே அவன் நான். புலன்களுள் மனம் என்பது யாதோ அது நான் பூதங்களுள் உணர்வு என்பது யாதோ அது நான். புரோகிதருள் பிருகற்பதி என்பவன் யாவனே அவன் நான். சேனுபதிகளுள் கந்தன் என்பவன் யாவனே அவன் நான். பேரிருடிகளுள் பிருகு என்பவன் யாவனே அவன் நான். தேவவிருடிகளுள் நாரதன் என்பவன் யாவனே அவன் நான். மரங்களுள் அரசமரம் என்பது யாதோ அது நான். யானைகளுள் ஐராவதம் என்பது யாதோ அது நான். மனிதருள் அரசன் என்பவன் யாவனே அவன் நான் என்றெல்லாம்

அவ்வவர்களையும் அவ்வவைகளையும் பன்மையிற் கூறி அவற்றுள் தலைமைப்பொருள்கள் யாவரோ யாவையோ அவரெல்லாம் அவையெல்லாம் தானே, தான் படைத்தவர் படைத்தவை, தன்வயத்தவர் தன் வயத்தவை, தன்னுடைமை (தன்விபூதி) என்று பாடிய இறைவன் காமனைக் கூறுங்கால் ''ப்ரஜநச்சாஸ்மி கந்தர்ப்ப:'' என்று காமன் என்பவன் ஒருவனே என்பது தோற்றக் கந்தர்ப்பன் என்று ஒருமையிற் கூறி அக்கந்தர்ப்பன் என்பவன் நானே என்றான். (கீதை. 10-22.28) இக் கீதைக்கு :— ''ப்ரஜந என்னும் சொல்லால் பிறப்புக்கு ஏதுவாயிருத்தல் கந்தர்ப்பன் (காமன்) ஒருவனுக்கே உற்ற தனிச்சிறப்புக் கூறப்பட்டது. அவன் (கண்ண பிரான்) வயத்தன'' (தாத்பர்யசந்த்ரிகை தமிழ்செய்தது) என்று வேதாந்ததேசிகர் உரைத்ருளினார். காமன் என்பது இனப்பெயர் அன்று. காமனுக்கே உற்றதோர் சிறப்புப் பெயர் என்று காட்டப்பட்டது. மக்களைப்பெறு வித்தல் முப்பாலறக் கடவுளாம் காமனுக்கே உரியதோர் தனிச்சிறப்பு என்ற உண்மை விளங்கவைக்கப் பட்டது. ''பிறப்பித்தலைச் செய்விப்பவனான கந்தர்ப்பனாய் இருக் கிறேன் காமன். தமிழ்செய்தது) என்று சங்கராசாரியர் பாடியம் அருளிச்செய்தார். அது ப்ரவ்ருத்தி லக்ஷண தர்மம் (முப்பாலறம்)என்று பாடியத் தொடக்கத்தில் கூறினார். இது மேலே எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. தருமக்கூட்டத்தால் மக்களைப் பெறுவிப்பவன் காமன் ஒருவனே. அவன் ஒருவனுக்கே உற்ற தனிச்சிறப்பு அது என்பது வேதாந்தபரமாசாரியர்களாகிய வேதாந்த தேசிகரும் சங்கரபகவத்பாதாசாரியரும் காட்டித் தந்த முப்பாற்காமக்கடவுளைப் பற்றிய மெய்யுணர்வு. ஆதலின் மக்கட்பேறு அறத்தால் வருவதோர் பெரும்பேறாயிற்று. ''பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த நன்மக்கட் பேறல்ல பிற'' (குறள் 61) என்று அப்பேற்றின் பெருமையைவள்ளுவர் துணிந்தார். அது நூற்றுணிபு. பனுவற்றுணிபு. மேற்கூறிய இருபரமாசாரியர்கள் துணிந்த கீதைத்துணிபு. கரணத்தில் (வதுவைச் சடங்கில்)

ஸத்ஸந்தாநப் பேற்றுக்கு வரிக்கின்றேன் என்று சங்கற்பம் செய்யப்படும். அந்த ஸத்ஸந்தானத்தை வள்ளுவர் நன்மக்கள் என்ருர். (ஸத்:நல்;ஸந்தாந: மக்கள்). அறிவறிந்த என்று அதன் அறத்தன்மையைப் பின்னும் சிறப்பித்தார். இங்கு அறிவு என்றதால் வேதம் கூறப்பட்டது. வேதம் என்னும் சொல்லுக்கு அறிவு என்பது பொருள், வேதவித், வேதம் வித்வாம்ஸ: என்று வேதம் ஓதியதை அறிவறிந்த என்ருர். (வேத: அறிவு; வித்: அறிந்த) அந்த வேத வித்தையே (அறிவறிந்தவனேயே) சான்ருேன்'' என்ருர். (குறள். 69) இக்குறட்குப் பாரதம் அடி என்பது கீழே காட்டப் படும். கீதையும் பாரதமும் கூறியவை இங்கு உரைத்த குறட்பாக்கட்கு அடியாதல் காண்க. அத்திற அறத் தான் வரும் பேற்றைப் பெறுவிப்பவன் முப்பாற் காமக் கடவுள் என்பது அக்காமனேப் பற்றிய மெய்யுணர்வு என்ற உண்மை காண்க. அறத்திற்றிரியும் கூட்டத்தைப் பூரியர் ஆழும் அளறு (நரகம்) (குறள் 919) என்று வெறுத்துக் கழித்த கூட்டத்துக்குக் காமன் கடவுள் ஆகான் என்பது தெளிவு.

இப்பொருளேக் காந்தர்ப்ப மென்ப துண்டாற் காத லிற்கலந்த சிந்தை, மாந்தர்க்கும் மடந்தை மார்க்கும் மறைகளே வகுத்த கூட்டம் (ஆரணிய. சூர்ப்ப. 57) என்று கம்பர் காட்டித்தந்தார். காந்தர்வம்(காந்தருவம்) என்று கூருது காந்தர்ப்பம் என்று கூறியதால் காமக் கடவுளாகிய காமன் (கந்தர்ப்பன்) நிகழ்விக்கும் அறக் கூட்டம் ஆதலின் அது மறைகளே வகுத்த கூட்டம் என்ற உண்மை விளக்கப்பட்டதாயிற்று. கந்தர்ப்பன் (காமன்) என்னும் சொல்லின் தத்திதவடிவம் காந்தர்ப்பம் என்பது. ஆதலின் காந்தர்ப்பம் என்பது காமக்கடவுள் நிகழ்விக்கும் தருமக் கூட்டம் என்றவாறு.

காமன் (ப்ரஜந:) மக்கட் பேற்றுக்கு ஏது என்று கீதை காட்டிற்று. ஆதலின் முப்பாலறத்தான் வரும்

இன்பத்துள் மக்கட்பேறு சிறந்ததொன்ருயிற்று. இப்பொருளைத் திருக்குறள் விளங்கவைத்தது. இது மேலேயும் கூறப்பட்டுள்ளது. ''மங்கலமென்ப மனைமாட்சி மற்றதன் நன்கலம் நன்மக்கட் பேறு'' (குறள் 60) என்று வாழ்க்கைத்துணை நலம் என்னும் முன்னதிகாரம் முற்றிப் புதல்வரைப் பெறுதல் என்னும் பின்னதிகாரம் ''பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த மக்கட் பேறல்ல பிற'' என்று தொடங்கிற்று. மேற்கூறிய கீதைப்பொருள் வேதாந்ததேசிகர் உரை சங்கராசரியர் பாடியம் கம்பர் பாடல் இவற்றின் சாரமாய் இக்குறள் விளங்குதல் காண்க.

இல்லறத்தால் பெறும் பேற்றுள் நன்மக்களைப் பெறுதல் சிறந்தது அதைப் பெறுவிப்பவன் காமன் என்பது காமனைப் பற்றிய மெய்யுணர்வு. இம்மெய்ம்மை யடியாகத்தொன்று தொட்டே நளசேது தொடக்கமாய் இமயமீருகப் பாரததேயத்தில் பங்குனித் திங்களில் காமன் வில்வெற்றிவிழாக் கொண்டாடப்பட்டு வருகிறது. காமன் பண்டிகை என்னவும் படும். இதன் பிரசித்தியை, ''வெங்கணெடு வேள்வில் விழாக் காணும், பங்குனி முயக்கத்துப் பனியரசு'' (சிலப். மதுரை. ஊர்காண். 111 — 112) என்று சிலப்பதிகாரம் காட்டித்தந்தது. சொற்கொண்டு கூறுதற்கரிதாய் அகத்தே தீயானது பொன்னைச் சுட்டுருக்குவதுபோல் சுட்டுருக்கும் தனித்த தோர் பெற்றியது காமம் என்றது அறிவுறுத்தப்பட்டது. ''கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச் சொற்கள் என்ன பயனு மில'' (குறள். 1100. சக்ஷுர் மநோராகதா என்னும் பொருள் உணர்த்தப்பட்டவாறு. (இக்குறட்குப் பரிதியர் உரை சுவைக்கத்தக்கது). அவ் வாறே பந்தம் ''யாப்பு'' (குறள்.1093) என்று கூறப் பட்டது. குறள் ''யாப்பை'' பாவபந்தம் என்று வேதாந்த தேசிகர் கூறினர் (தாத்பர்யரத்) அத்துணை இனியதோர் தரும்க் கூட்டத்தைச் செய்விப்பவன் காமன் என்பது இவற்ருல் அறியலாம். ஆதலின் காமவேள் வில்வெற்றி விழாக் கொண்டாடலாயிற்று.

இனிமையைப் பயத்தற்கு அவனுக்கு உள்ள உப கரணங்கள் பல. கரும்பு அவனுடைய வில். அரவிந்தம் அசோகம் மாநவமல்லிகை நீலோற்பலம் என்னும் ஐந்து மலர்கள் அவனுடைய ஐந்து கணைகள். மகளிர் அவனுடைய சேனை. தென்றல் அவனுடைய தேர். சோலை அவனுடைய பாசறை: கிளி அவனுடைய புரவி. குயில் அவனுடைய சின்னமூதி. அந்தி அவனுடைய யானை. மீன் அவனுடைய கொடி. அவன் இரதிகாந்தன். புணர்தல் காரணமாக வரும் துன்பமும் பிரிதலால் வரும் துன்பமும் காமன் ஒறுக்கும் துன்பம் என்னப்படும். அவற்றின் துறைகள் பலவாம் என்பதை இலக்கியங்கள் காட்டித்தரும். அவற்றுள் முப்பாலிலக்கியங்கள் முப்பாற் காமதேவனையும் வீட்டுப்பாலிலக்கியங்கள் அக்காமனைப் பயந்த காளையாம் ஸாக்ஷாத் மன்மத மன்மத இறைவனை யும் தெய்வமாக உடையனவாம். அறக்காமத்தைப் பற்றியதும் அறக்காமனைப் பற்றியதுமான நுட்பத்தைப் சிறிது விளக்கிக் கூறுவாம்.

---

## நாற்பத்திரண்டாமத்தியாயம்

''தருமம் பிழையாக் காமம் நானாக இருக்கிறேன்'' (கீதை. 7-11. தமிழ் செய்தது) ''பிறப்புக் கேதுவாம் காமன் நானாக இருக்கிறேன்'' (ஷை. 10. 28. தமிழ் செய்தது) என்று இறைவன் அருளிச்செய்த மெய்ம்மைப் பெருவார்த்தைகளைத் திடனாகக் கருத்திற் கொள்க. காமக்ருத் (296) காந்த: (297) காம: (298) காமப்ரத: (299) காமதேவ: (657) என்று திருமாலின் ஆயிரநாமம் (ஸஹஸ்ரநாமம்) ஓதிற்று. இத்திருநாமங்களுக்கு முப்பாற் போகத்தையும் பேரின்ப வீட்டையும் வேண்டுவார் வேண்டியவாறு தானே செய்பவன் என்றும் தானே எழில் கிளரிளமை முதலிய வடிவக் குணங்களால் இனியன் சீலம் வண்மை தயை முதலிய ஆத்தும குணங்களால் மிகவும் விரும்பத்தக்கவன் இவனுடைய குணத்தின் ஒரு துளியாலன்றோ மன்மதன் தானும் உலகத்தை மையல் செய்கின்றான். தன்பால் அவாவையோ சிறுபயன்கள்பால் அவாவையோ வேண்டு வார் வேண்டியவாறு வேண்டியவைகளை யெல்லாம் தருபவன் அனைவர்க்குமே வேண்டிற்றெல்லாம் தருபவன் பகவான் காமதேவன் (மேற்கோள்) என்றும் பட்டர் இவ்வாயிரநாமத்துக்குப் பாடியம் பணித்தருளினார். திருமாலின் வடிவக்குணங்கள் ஆத்துமகுணங்கள் இவை களின் ஒருதுளி யளவு உடைமையால் காமன் உலகத்தை மையல் செய்கின்றான் என்ற பொருள் பட்டர் பாடியத்தில் தெளியக் காட்டப்பட்டது. ''இராமபிரானை ஆண் களுடைய கண்களையும் மனங்களையும் வடிவக் குணங் களாலும் வண்மைக் குணங்களாலும் கவர்கின்றவன்'' (இராமாய. அயோத். 3. 29 தமிழ்செய்தது) என்று இராமாயணம் பாடிற்று. (ஆடவர்பெண்மையை அவாவும்தோளினாய்'' (இராமாவ. பால. தாடகை. 24) என்று கம்பர் பாடினார். முற்றத்துறந்த மறைமுனிவன் தன்னையும் மையல் செய்யவல்ல மெய்யிறையருள முகனாகிய காமனைப் பயந்த காளையாம் காரண காமதேவன் தனிச்சிறப்பைக் கூறிய நுட்பம் காண்க.

''நெருக்கியுட் புகுந்தரு நிறையும் பெண்மையும் உருக்கியென் னுயிரொடு முண்டு, போனவன் பொருப் புறழ் தோள்புரை புண்ணியத்தனு கருப்பு வில்லவன் காம னல்லனே'' (ஷி. பால. மிதிலைச். 54) என்று கம்பர் பாடிய புண்ணிய அவியகத்துறைப் பாடல். நவைபடாச் சுவையே அகத்துறைச் சுவை என்று கம்பர் காட்டித் தந்தார். இப்பாடல் சீதைப்பிராட்டி கூறியது. இப்பாடலும் இதைத் தொடர்ந்துள்ள ஆறு பாடல்களும் சீதைப்பிராட்டி கூறியவை. அது காமனைப் பயந்த காளையாம் ஸாக்ஷாத் மன்மத மன் மதனும் இராமபிரான் என்று துணியும் மதநோபநிடத ரகசியப் பொருள். காவியத்துக்கு வியங்கிய (குறிப்பு) ஒண்மை உயிர் (ஜீவிதம் வ்யங்க்ய வைபவம்) என்று காவியநூலார் கூறும் இலக்கணத்துக்குப் பேரிலக்கியமாய். இப் பாடல்கள் திகழ்வனவாம். முப்பாற் காமனைக் கழித்து அக்காமனைப் பயந்த காளையாம் இராமபிரான் என்னும் மெய்ம்மைக்கு உற்ற அடையாளங்களைக் கூறுமாற்றுல் காரணகாமனே இராமபிரான் காரியகாமன் அன்று என்று விளம்பிய துணிபு அதுவாம். ''புண்ணியத்தனு'' (54) ''கண்வழி நுழையுமோர் கள்வன் (55) ''என் னுயிரை அம்முறுவ லுண்டதே'' (56) ''விரைசெறி தாமரை யிமைக்கும் மெய்ம்மையன்'' (58.) இது ஒப்பற்றது) ''பிறந்துடை நலநிறை பிணித்த யெந்திரம், கறங்குபு திரியுமென் கன்னி மாமதில்'' (59:) காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும் நாணுத்தாழ் வீழ்ந்த கதவு (குறள். 1251) என்ற குறள் இப்பாடலில் சீர்மல்கும் நயம் காண்க.) என்பன அவை. ''காமன் தனக்கு முறையல்லேன் கடல்வண்ணனுர், மாமணா வாளர் எனக்குத் தானும்மகன் சொல்லில் யாமங்கள் தோறெரிவீசும் என்னிளங்கொங்கைகள் மாமணி வண்ணர் திறத்தவாய் வளர்கின்றவே'' (பெரிய திருமொழி. 11. 2. 7) ''காமன் கணைக்கோ ரிலக்கமாய் நலத்தின் மிகு, பூமரு கோலநம் பெண்மை சீந்தித் திராதுபோய்த் தூமலர் நீர்கொடு தோழி! நாம்

தொழுதேத்தினல் கார்முகில் வண்ணரைக் கண்களால் காணலாங்கொலோ'' (ஷ 11. 2. 9) ''வென்று விடையுட னேழடர்த்த வடிகளை, மன்றின் மலிபுகழ் கலிகன்றிசொல்'' (ஷ 11. 2. 10) ''செங்கணெடிய கரிய மேனித் தேவரொருவ ரிங்கே புகுந்தென், அங்க மெலிய வளைகழல ஆதுகொலோ வென்று சொன்ன பின்னை, ஐங்கணைவில்லி தன்னுண்மை என்னோ டாடு மதனை யறியமாட்டேன் கொங்கலர் தண்பணை சூழ் புறவின் குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின்''. (ஷ 9. 5. 7) ''கேவலமன்று கடலினோசை கேண்மின்கள் ஆயன்கை யாம்பல் (குழலோசை) வந்தென் ஆவி யளவு மணைந்து நிற்கு மன்றியும் ஐந்துகணை தெரிந் திட்டு, ஏவலங் காட்டி இவனொருவன் (அத்விதீயனுன இந்த மன்மதன்: மன்மதமன்மதன்) இப்படியே புகுந் தெய்திடாமுன், கோவலர் கூத்தன் குறிப்பறிந்து குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின்'' (ஷ 9. 5. 8.) என்ற மங்கையர்கோன் திருப்பாடல்களில் இம்மறையின் குருத்தின் பொருள் திகழ்தல் காண்க. ''பந்தோடு கழல் மருவாள் பைங்கிளியும் பாலூட்டாள் பாவை பேணுள், வந்தானோ திருவரங்கன் வாரானோ என்றென்றே வளையுஞ் சோரும், சந்தோகன் பௌழியன் ஐந்தழ லோம்பு தைத்திரியன் சாமவேதி, அந்தோ! என் பொன் மகளைச் செய்தனகள் அம்மனைமீர்! அறிகிலேனே'' (ஷ. 5-5-9 தாயிரங்கிக் கூறியபாடல்) என்றது மங்கையர் கோன் திடப்பாடு. அந்தமன்ம்தமன்மதன் சந்தோகன் பௌழியன் ஐந்தழலோம்பு தைத்திரியன் சாமவேதியாம் மறையாய நால்வேதத் துண்ணின்ற மலர்ச்சுடராகிய ஓரொருவன் என்பதும் ஐத்தழலோம்பு தைத்திரியனுகிய அவ்வொருவனே அத்விதீய ஐங்கணையன் என்பதும் அத்திடப்பாடு.

''உன்னித்து மற்றோர் தெய்வம் தொழாள், அவனையல்லால்'' (திருவாய். 4. 6. 10) என்ருர் சடகோபர், ''மற்றுமோர் தெய்வ முளதென் றிருப்பாரோ

டுற்றிலேன்'' (பெரியதிருமொழி. 8. 10. 3) என்ருர் மங்கையர்கோன். அத்திறத் தூமனப் பத்தர்பிராஞர்கள் ஆர்வத்தால் பாடிய திவ்விய அவியகத் துறைத் தீங்கவிகள் மேற்கூறிய பாடல்கள் என்ற உண்மையைக் கருத்திற் கொள்க. அத்திற மறைமுடி யவியகப் பொருள் நாச்சியர் திருமொழியில் நலம்திகழச் சிறந் தோங்கி நின்றது. இறைவன் பாடியருளிய கீதை வீட்டுப்பாற் காமமாம் பரமபக்திப் பேரிலக்கியம் என்ற நுண்பொருளைச் ''செம்மை யுடைய திருவரங்கர் தாம்பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டு சித்தர் கேட்டிருப்பர், தம்மை யுகப்பாரைத் தாமுகப்பா ரென்னும் சொல் தம்மிடையே பொய்யாஞல் சாதிப்பா ராரினியே'' (நாச்சியார் திருமொழி. 11. 10) என்ற திருப்பாடல் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தது. மெய்ம்மை வார்த்தை என்றதால் கீதையாம் உபநிடத மும் பெருவார்த்தை என்றதால் கீதோபநிடதத்தின் சாரமாயும் கீதோபநிடதத்துக்கு மகுடமாயும் விளங்கும் சரணுகதி உபதேச சுலோகமாம் சரம (உத்தம) சுலோகமும் கூறப்பட்டவாறு. சரம சுலோகத்தைப் பின்னெறி (திருவாய். 2. 3. 8. பின்னெறி எனினும் சரம சுலோகம் எனினும் ஒக்கும்) ''பண்டே பரமன் பணித்த பணிவகை'' (திருவாய். 10. 4. 9) என்று சடகோபர் பணித்தருளினுர். ''மறைமுடி மகிழும் சாரதி யருள்மொழி'' (ரஹஸ்யத்ரய. அதிகார. 2 தமிழ்செய்தது) என்று வேதாந்ததேசிகர் பாடி மகிழ்ந்தார். அத்திறப் பின்னெறியில் நிலே யூன்றிக் காமனேப் பயந்த காளேயாங் கண்ணனென்னும் கருந்தெய்வக் காட்சிப் பழகியும் (நாச்சியார். 13. 1) உள்ளே யுருகி நைவேனே உளளோ இலளோ வென்ஞத, கொள்ளே கொள்ளிக் குறும்பனேக் கோவர்த் தனனேக் கண்டக்கால் கொள்ளும் பயனென் றில்லாத கொங்கை தன்னேக் கிழங்கோடும், அள்ளிப் பறித்திட் டவன் மார்வி லெறிந்தென் னழலேத் தீர்வேனே (ஷெ. 13.9 இப்பாடல் ஒப்பற்றதொன்ருய் அகத்துறைக் கவிகட்கு மகுடமாய்த்

திகழ்தல் காண்க) என்றும் கோதைப்பிராட்டி மதநோப நிடத நுட்பத்தைக் கண்களில் தெரியக் காட்டித் தந்தாள். குழலூதி மகிழ்ந்தவனும் கழலோதிக் களித்தவனுமான அவ்வொருவனே ஸாக்ஷத் மன்மத மன்மதக் கண்ண பெருமான். அவன் செலுத்துவது செங்கோல். அது பின்னெறி. பரமன் பணித்த பணிவகை. அது அவியகப் பொருள் வகையும் அதன் துறைகளுமாம். ''பனிப்புயல் வண்ணன் செங்கோல் ஒருநான்று தடாவீயதே'' (திருவிருத்தம் 5.) ''அசுரர் மங்கக் கடாவிய வேகப் பறவையின் பாகன் மதன செங்கோல், கடாவிய கூற்றங் கண்டீர் உயிர் காமின்கள் ஞாலத்துள்ளே.'' (ஷை. 6) என்றார் சடகோபர். ''செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார், எங்கோல் வளையா லிடர் தீர்வராகாதே'' (நாச்சியார். 11.3) என்றாள் கோதைப்பிராட்டி. ''மத நோபநிஷத் ரஹஸ்யம்'' (பாதுகா 424. மதன உபநிடத நுட்பம்) என்றார் வேதாந்த தேசிகர்.

மேற்கூறியதின் திரண்டபொருள் :— காமர்கள் இருவராவார். ஒருவர் முப்பாற் காமர் மற்றொருவர் அக்காமரைப் பயந்த ஸாக்ஷாத் மன்மத மன்மதக் கண்ண பெருமானார். முன்னவர் முப்பாற் காமக்கடவுள். பின்னவர் வீட்டுப் பாற் காமக்கடவுள். அவர்கள் செங் கோல் உடையவர்கள். செங்கோலாதலின் அவை அறக் கோள்கள். ஒன்று முப்பாற்கோல், மற்றொன்று வீட்டுப் பாற்கோல். முப்பாலறத்தால் வருவது சிற்றின்பம். வீட் டறத்தால் வருவது பேரின்பம். அவற்றின் துறைகளே அகத்துறைகளாம். சிற்றின்பமாயினும் பேரின்ப மாயினும் அவை அறத்தான் வருவனவே. ஆதலின் அறத்தான் வருவதே இன்பம் என்றது தேறி நின்றது என்பது.

அறத்தான் வருவதே இன்பம் என்ற தேற்றத்தால் அறத்திற் றிரியுமவையெல்லாம் அளறு என்று கழிக்கப் பட்டதாயிற்று. ''பொது நலத்தார் புன்னலந் தோயார்

மதிநலத்தில் மாண்ட அறிவினவர்'' (குறள். 915) ''வரைவிலா மாணிழையார் மென்தோள் புரையிலாப் பூரியர்கள் ஆழும் அளறு'' (குறள். 919) ''பொருட் பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில், ஏதில் பிணந் தழீஇயற்று'' (குறள்.913) என்பன அக்கழிப்பு. இதனுல் பரத்தையிற் பிரிதல் என்பது கழிக்கப்பட்ட நலம் காண்க. திருவள்ளுவரின் வைதிக தருமத் திடப் பாட்டைத் தெரியக் காட்டித் தரும் தீபங்களாய் இக் குறட்பாக்கள் திகழ்கின்றன.

———

## நாற்பத்துமூன்றுமத்தியாயம்

புணர்தல் காரணமாக வரும் துன்பமும் பிரிதலால் வரும் துன்பமும் காமன் ஒறுக்கும் துன்பம். ஆதலின் அது காமநோய் என்னப்பட்டது. இது முப்பாற்கும் வீட்டுக்கும் ஒத்தது. வீட்டிற் சிறக்கும். காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலரு மிந்நோய்'' (குறள். 1227) என்றார் திருவள்ளுவர். இக்குறட்குக் காலிங்கர் உரை சாலச் சிறக்கும். இது பிரம (மோக்க) காமத்துக்குப் பெரிதும் தகப்பொருந்து மாறு அமைக்கப்பெற்றதோர் அருங்குறள். பிரம காமம் முப்பெருந் துறைகள் உடையது. துறைகள் பிற அவற்றின் உள்துறைகளும் விரிவுகளுமாம் என்னும் அருங்கருத்தை உணர்த்தி நிற்றல் ஓர்ந்தறியத் தக்கது. கிளர்ச்சி வளர்ச்சி மலர்ச்சி என்பன அப்பெருந்துறைகளாம். பரபக்தி பரஞானம் பரமபக்தி என்பன அவை என்க. ''மாலையும் வந்தது மாயன் வாரான்'' (திருவாய். 9-9-9) ''நீயலையே சிறு பூவாய்! நெடுமாலார்க் கென்தூதாய், நோயெனது நுவலென்ன நுவலாதே யிருந்தொழிந்தாய்'' (திருவாய். 1--4-8) "உகவையால் நெஞ்ச முள்ளுருகி உன் தாமரைத் தடங்கண் விழிகளின் அகவலைப் படுப்பான் அழித்தாய் உன் திருவடியால் தகவு செய்திலை எங்கள் சிற்றிலும் யாமடு சிறுசோறும் கண்டு நின், முகவொளி திகழ முறுவல் செய்து நின்றிலையே'' (திருவாய், 6-2-9 ஸரஸிஜோதர ஸ்ரீமுஷா த்ருசா, தாஸா மாவிரபூத் சௌரி: ஸ்மயமாந முகாம்புஜ: ஸாக்ஷாத் மன்மத மன்மத: என்று பாகவதம் பாடிய காமனைப் பயந்த காளையாம் கண்ணதேவன் திருமேனி திருவாய் மொழியில் காட்டும் பேரிறையெழில் காண்க) ''இசைக் கின்றதே இவள்நோய், இது மிக்கபெருந்தெய்வம், இசைப்பின்றி நீரணங்காடும் இளந்தெய்வமன்றிது (திருவாய். 4. 6. 2 முப்பாற்காமனாகிய இளந் தெய்வத்தைக் கழித்து வீட்டுக்காமனாகிய மிக்கபெருந் தெய்வ ஸாக்ஷாத் மன்மத மன்மதனும் கண்ணபெருமான்

ஒருவனே தொழுதற்கொத்தவனும் தொழுதற்கு உரிய வனும் என்று துணியப்பட்ட சீர்மை காண்க) ''தேவும் எப்பொருளும் படைக்கப் பூவில் நான்முகனைப் படைத்த தேவன் எம்பெருமானுக் கல்லால், பூவும் பூசனையும் தகுமே'' (திருவாய். 2-2-4) ''உகந்தே உன்னை உள்ளும் என் உள்ளத்து, அகம்பால் அகம் தான் அமர்ந்தே இடம் கொண்ட அமலா! மிகுந்தானவன் மார்வகலம் இரு கூரு, நகந்தாய் நரசிங்கமதாய உருவே'' (திருவாய். 9-4-7 அவியகத்துறைகன் தாங்கி நிற்கும் சான்ருேர் கவி என்ற கம்பர் பாடற்கு இப்பாடலும் இங்குக் கூறும் பாடல்களும் உற்ற இலக்கியமாய்த் திகழ்தல் சான்ருே ருள்ளத்தால் நோக்கிக் காண்பார்க்குக் கண்கூடாம்) ''உகக்கு நல்லவரொடும் உழிதந்து உன்தன் திருவுள்ளம் இடர்கெடுந் தோறும் நாங்கள் வியக்க இன்புறுதும் எம்பெண்மை யாற்ருேம் எம்பெருமான்!'' (திருவாய். 10-3-9) என்ற திருவாய்மொழி இங்கு நன்கு நோக்கத்தக்கவை. ''தெய்வச் சிலையாற்கென் சிந்தை நோய் செப்புமினே'' (பெரிய திருமொழி. 9-4-3) என்ருர் மங்கையர்கோன்.

இவ்வாற்ருல் முப்பாற் காமத்து ஈரரசு படாது ப்ரஜந் காமனும் காரியமன்மதன் ஒருவனே தொழுதற்கு உரியவனுயும் தக்கவனுயும் நிலைநின்ருன். வீட்டுக்காமத்து ஈரரசுபடாது ப்ரஜநகாமனைப் பயந்த காளையாம் ஸாக்ஷாத் காரணமன்மதக் கண்ணபெருமான் ஒருவனே தொழுதற்கு உரியவனுயும் தக்கவனுயும் நிலை நின்ருன் என்ற உண்மை துணியப்பட்டது. கீதை இராமாயணம் பாகவதம் அருளிச்செயல்கள் முதலியவை அவியகத் துறைகள் தாங்கிநிற்கும் பேரிலக்கியங்களுக்கு மகுடம் என்ற உண்மை விளக்கப்பட்டது. வீட்டுப்பாற் காமதேவன் ஸாக்ஷாத் மன்மதமன்மதனும் மிக்கபெருந் தெய்வக் கண்ணபெருமானே பிறிதோர் இளந்தெய்வ மன்று அதாவது முப்பாற்காமதேவன் அன்று என்பது தெளியக்காட்டப்பட்டது. ஆதலின் கோதைப்

பிராட்டியார் தையொருதிங்கள் திருப்பதிகத்தில் கூறிய காமதேவன் ஆயிரநாமத்துள் காமதேவ காமக்ருத் காம என்று ஓதப்பட்ட ஸாக்ஷாத்மன்மதமன்மதக் கண்ண பெருமான் என்பது ஐயமறப் புலனுகும்.) ''நாராயணனே நமக்கே பறைதருவான் பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்'' (திருப்பாவை. 1.) ''என்றென்றுன் சேவகமே யேத்திப் பறைகொள்வான் இன்று யாம் வந்தோ மிரங்கேலோ ரெம்பாவாய்'' (ஷை.24) ''இற்றைப் பறைகொள்வா னன்றுகாண் கோவிந்தா, எற்றைக்குமேழேழ் பிறவிக்கு முன்றன்னோ, டுற்றோமே யாவோம் உனக்கே நாமாட்செய்வோம், மற்றை நங் காமங்கள் ;மாற்றேலோ ரெம்பாவாய்'' (ஷை. 29) ''செங்கட் டிருமுகத்துச் செல்வத் திருமாலால், எங்கும் திருவருள் பெற் றின்புறுவ ரெம்பாவாய்'' (ஷை.30) என்று வேண்டிப் பெற்றபின் ''கேசவநம்பியைக் கால் பிடிப்பா ளென்னு மிப்பே றெனக்கருள் கண்டாய்'' (நாச்சியார் திரு. 1-8) ''வேங்கடவற் கென்னை விதிக் கிற்றியே (ஷை.1.1.) என்று வேண்டிய பேறு ஸாக்ஷாத் மன்மதமன்மதக் காமதேவனும் கண்ணபெருமானைத் தொழுது வேண்டியதேயாம். முப்பாற்காமனைத் தொழுது வேண்டியதன்று. கேசவநம்பியைக் கால் பிடித்தலைப் பெறுவித்தல் இளந்தெய்வமாகிய முப்பாற் காமனுக்கு இயலாமையால் அது அசம்பாவிதமாம். ''மிக்கபெருந்தெய்வம்'' (திருவாய். 4-6-2) என்றும் ''கழிபெருந்தெய்வம்'' (திருவிருத்தம். 20) என்றும் பூவுக்கும் பூசனைக்கும் தக்கவொரொருவன் (2-2-4) என்றும் ஓதப்பட்ட காமனைப் பயந்த காளையாம் கண்ண தேவனையே தொழுது வேண்டினுன் என்பதே உரிய சீரிய பொருள். கேசவநம்பியைக் கால்பிடிக்கும் பேற்றைக் கேசவநம்பி ஒருவன்தான் அருளவேண்டும். அதைப் பெறுவித்தல் அவன் ஒருவனுக்கேதான் இயலும். பிறரெவர்க்கும் இயலாது. முப்பாற் காமனுக்கு அறவே இயலாது. அப்பேற்றுக்குக் கேசவநம்பி ஒருவனே தான் ஆறு (உபாயம்) என்ற சரமசுலோக

மெய்ம்மைப் பொருளைப் பாடியருளியவாறு என்று அறிக. ''ஆறெனக்கு நின்பாதமே சரணகத் தந்தொழிந் தாய் (திருவாய். 5.7.10) என்றதே அது. கோவியர்க்குத் தான் ஒருவனே ஸாக்ஷாத் மன்மதமன்மதன் என்று தன்னைத் தொழுதெழக் காட்டித்தந்த சிருங்கார ஸமாதித் திருமேனிக் காமதேவக் கண்ணபெருமான் தானே கோதைப் பிராட்டிக்கும் அவ்வாறே அதனிலும் மிக்கதென்னுமாறு இறையெழில் நலம்திகழத் தன்னைக் காட்டித்தந்த வண்மை இதனல் உணர்த்தப் பட்டது. உன்னையு மும் பியையுந் தொழுதேன்'' (நாச்சியர் 1.1.) என்றதன் உரிய ஆழ்பொருளை ''செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா, உம்பியும் நீயு முறங்கேலோ ரெம்பாவாய்'' (திருப்பாவை. 17) என்ற திருப்பாவை காட்டித்தந்தது. ஸாக்ஷாத் மன்மத மன்மதனும் அவன் புல்கும் அணையாம் அரவரசப் பெருஞ்சோதியாகிய திருவநந்தாழ்வானும் உணர்த்தப்பட்ட அகப்பொருள் நயம் காண்க. ''மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் கண்டாய் மன்மதனே'' (நாச்சி 1. 5) என்றும் ''கோளரி மாதவன் கோவிந்த னென்பானோர், காளை புகுதக் கனக்கண்டேன்'' (ஷை 6.2 காமனைப் பயந்த காளை என்பது தெளிவு) ''கண்ண னென்னுங் கருந்தெய்வம் காட்சிப் பழகிக் கிடப்பேன்'' (ஷை 13. 1) என்றும் பணித்தருளிய பண்பு நோக்கிக் காமனைப் பயந்த காளையாகிய ஸாக்ஷாத் மன்மதமன்மதக் கண்ண தேவனையே காமதேவா என்று கோதைப் பிராட்டியார் தொழுதுகந்தருளிய பாடல்களின் அவியகத்துறைத் தூய்மையையும் இனிமையையும் ஓர்ந்துணர்க. இப் பொருளை: ''நாச்சியார் (கோதைப்பிராட்டியார்) க்ருஷ்ணனைப் பெறுவதற்குப் பண்ணின காமதேவார்ச் சனம் ச்ருங்காரஸமாத்யநுகுணக்ருஷ்ணரூபாந்தர விஷயம்'' (பரமதபங்கம்) என்று வேதாந்ததேசிகர் விளக்கியருளினர். இப்பொருளை.

''மொழிவார் மொழிவன மும்மறை யாகும யிந்தையில் வந்து
இழிவார் இழிகவென் றின்னமு தக்கட லாகிநின்ற
விழிவா ரருள்மெய்யர் மெல்லடி வேண்டிய மெல்லியல் மேல்
பொழிவா ரநங்கர்தம் பூங்கரும் புந்திய பூமழையே

(தேசிக. மும்மணிக்கோவை. 3.) என்ற அவியகத் துறைகள் தாங்கித்திகழும் சான்ருேர்கவிக்கு உவமாநம் என்று போற்றற்கொத்த இத்தீங்கவியில் வேதாந்த தேசிகர் பாடியருளினர்.

பிரமசூத்திர இந்த்ரப்ராணுதி கரணத்தில் வியாஸ முனிவர் காட்டித்தந்த ப்ரதர்தன வித்யா நியாயத்தால் காமதேவன் என்ற சொல்லால் காரணகாமதேவனை கண்ணபெருமான் கூறப்பட்டுள்ளான் என்பது தெளி வாம். இந்த அதிகரணத்தில் வேதம் உபாசநம் செய்தற்குக் கூறிய இந்திரன் என்பவன் யாவன் என்பது விஷயம். இந்திரபதவி பெற்ற தேவேந்திரன் என்பது பூர்வபட்சம். வியாஸமுனிவர் அதை மறுத்து அந்த இந்திரனுக்கும் அந்தராத்துமாவான பரமாத்துமாவே கூறப்பட்டான் என்று சித்தாந்தம் செய்தார். இந்திரன் என்றசொல் பிரசித்த காரிய தேவேந்திரனை மட்டிலுமே கூறி அம்மட்டோடு முற்றுப்பெற்று நின்றுவிடாது. அவன் தனக்கும் காரணனும் உள்ளுயிராயும் உள்ள பரமாத்துமாவளவும் விரிந்து அவனிடத்தே முற்றி நிலை கொண்டு நிற்கும். அவ்வாறு நிலைகோடல் இந்திரன் என்னும் சொல்லின் பொருளுணர்த்தும் சக்தி. பரமாத்தும உள்ளின்மை இந்திரன் பொருளன்மையே யாம். இந்திரன் தானும் பொருளாதல் பரமாத்துமா அவனுக்கு உள்ளுயிராயிருத்தலால் தான். இந்திரச் சிற்றுயிர்ப்பொருளை இந்திரன் என்னும் சொல்கூறுதல் தானும் பரமாத்துமப்பொருள் இந்திரப்பொருளுக்கு உள்ளுயிராய் (அந்தராத்துமாவாய்) இருத்தலால்தான். ஆதலின் இந்திரன் என்றசொல் பரமாத்துமாவையே

உணர்த்திநின்றது என்று சித்தாந்தம் செய்தார். இவ்வாறு சித்தாந்தம் செய்த நியாயம் இந்த்ரப்ராணுதி கரண நியாயம் என்றும் ப்ரதர்தநவித்யா நியாயம் என்றும் கூறப்படும். அந்த நியாயத்தால் காமன் என்னும் சொல் அந்தக் காரியகாமனும் மன்மதனை மட்டிலுமே கூறி நின்று விடாது காரணமன்மதனுயும் காரியமன்மதன்தனக்கும் அந்தராத்துமாவாயும் உள்ள பரமாத்துமாவான "காமனைப் பயந்த காளை" யளவும் விரிந்து அவன் கண்ணே முற்றி நிலைகொள்ளும் சக்தி உடையது. ஆதலின் காமன் என்னும் சொல் ஸாக்ஷாத் மன்மதமன்மத கண்ணபெருமானையே கூறி நின்றது என்றவாறு.



## நாற்பத்துநான்காமத்தியாயம்

ஆரியமீமாஞ்சை நியாயங்களும் வியாகரண நுட்பங்களும் நன்கு அறியப்பட்டாலல்லாது திருக்குறள் மெய்ப்பொருள் அறிதற்கியலாது, என்று முன்னர்க் கூறப்பட்டுள்ளது. ''சமன்செய்து சீர்தூக்குங் கோல்'' (குறள் 118) என்ற குறளில் வியாசமுனிவர் நூற்ற பிரமசூத்திர ஸ்ம்ருதிபாதத்தைக் குறித்துள்ள நுட்பம் வேதாந்த தேகிகர் பணித்த அதிகரணசாராவளி (158) கொண்டு மேலே காட்டப்பட்டது. "நுண்மாண் நுழைபுல மில்லான் எழினலம், மண்மாண் புனைபாவை யற்று'' (குறள். 407) என்ற குறள் இவ்வுண்னமயைத் திடப்படுத்தும். உரிய மீமாஞ்சை நியாயங்களைத் தகச் சஞ்சாரம் செய்தே மறையறநூல்கள் கூறும் மெய்ப்பொருள் அறிதற்காகும் பொருள்பிற போலியே என்று இக்குறள் கூறிற்று. இங்கும் அதிகரணஸாராவளி இதற்குச் சான்ரும். ''சித ப்ருது மதிபி: சிந்தநீயா யதார்ஹம்'' (அதிகரண சாரா. 502) என்று அதிகரணஸாராவளி கூறிற்று. நுண் என்னும் குறள்தமிழ் சித என்னும் சாராவளி ஆரியமாயும் மாண் என்னும் குறள்தமிழ் ப்ருது என்னும் சாராவளி ஆரியமாயும் புலம் என்னும் குறள் தமிழ் மதி (மனனம், மீமாஞ்சித்தல்) என்னும் சாராவளி ஆரியமாயும் நுழை என்னும் குறள் தமிழ் சிந்தநீயா யதார்ஹம் (உரிய நியாயசஞ்சாரம்) என்னும் சாராவளி ஆரியமாயும் நிற்றல் காண்க. இக்குறளில் நுழை என்றதால் சீரியநியாய சஞ்சாரம் என்னும் பொருள் கூறப்பட்டது. பிற நுழையாமையே என்றவாறு. இறைவனைப் பற்றிய இந்த நியாய சர்ச்சை மநநம் (மதி புலம்) என்று கூறப்படும்'' (நியாய குஸுமாஞ்சலி. தமிழ்செய்தது) என்று தருக்கம்வல்லாராகிய உதயனுசாரியர் கூறினர். இதுவும் இது போன்றனவும் மீமாஞ்சகர் வழக்கு. ஆதலின் இந்நூலுள் அந்த நியாயங்கள் உற்றவிடத்துக் கூறியும் குறிக்கப்பட்டும் உள்ளன.

இங்கு 'நுண்மாண் நுழைபுலம்' என்ற குறள் கல்லாமை என்னும் அதிகாரத்தில் உள்ளது. ''அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய, நூலின்றிக் கோட்டி கொளல்'' (குறள்.401) என்று இவ்வதிகாரம் தொடங்கிற்று. இங்கு நிரம்பிய நூல் என்றதால் வியாசமுனிவர் நூற்ற பிரமசூத்திரம் குறிக்கப்பட்டுள்ளது என்றது மேலே பரக்க விளக்கப்பட்டது. அரங்கு என்றதால் பிரமசூத்திர அதிகரணங்களும் கோட்டி என்றதால் வாகோட்டியும் உணர்த்தப்பட்டுள்ளன என்று அங்குக் கூறப்பட்டுள்ளது. நிரம்பியநூல் என்ற குறட்பொருள் இக்குறளில் திடப்படுத்தப்பட்டது. முன்னதிகாரம் கல்வியையும் பின்னதிகாரம் கேள்வியையும் கூறுகின்றன. ''கேடில் விழுச்செல்வம் கல்வி யொருவற்கு மாடல்ல மற்றை யவை'' (குறள். 400) என்று கல்வி என்னும் முன்னதிகாரம் முற்றிற்று. அவ்வதிகாரம் உடம்பாடு (அன்வய) முகத்தால் கேடில் விழுச் செல்வம் கல்வி என்று துணிந்தது. கல்லாமை என்னும் இவ்வதிகாரம் எதிர்மறை (வ்யதிரேக) முகத்தால் கல்லாமையால் வரும் கேடு விளக்கப்பட்டது. இது தருக்கநூல் கூறும் மெய்ப் பொருள் தேறும் முறை. ''அந்வய (உடம்பாடு) வ்யதிரேக (எதிர்மறை)ங்களால் தத்துவம் தேறும் முயற்சியுடையராதல் வேண்டும்'' (நியாய குஸுமாஞ்சலி. 1 தமிழ்செய்தது) என்று உதயநாசாரியர் கூறினர். இவ்வதிகாரம் இடைகழித்தீப (தேஹளீதீப) நியாயத்தால் முன்னதிகாரத்திலும் பின்னதிகாரத்திலும் ஒளிவீசி அவற்றைப் பின்னும் விளங்க வைத்தது. கல்வியாம் கேடில் விழுச்செல்வம் என்று முன்னதிகாரத்திற் கூறியதை ''செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம் செல்வத்து ளெல்லாம் தலை'' (குறள் 411) ''கேள்வியால் தோட்கப்படாத செவி (குறள் 418) ''செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள் அவியினும் வாழினு மென்'' (குறள். 420) என்று அந்வய வ்யதிரேகமுகத்தாற் சிறப்பித்தார். அச்செவிச் செல்வம் ஒன்றேதான் கேடில் விழுச்செல்வம் பிற

செல்வம் அல்ல. அவை கெட்டொழிந்தே போம் என்று துணிந்தார். அச்செல்வம் ஒன்றையேதான் மாடு என்ருர். அது வேதமாம் மாடு அதன் கல்வியே கல்வி என்றது துணிபு. வேதமும் அதன் விளக்கநூல்களாகிய இலங்கு நூல்களும் நிரம்பிய நூல்களுமே கற்கப்பட வேண்டியவை. அவற்றின் கல்வியே கேடில் விழுச் செல்வம். அஃதிலார் வாயுணர்வின் மாக்களேயாவார். ஆதலின் அவர்களை அவியினும் வாழினுமென் என்று இகழ்ந்தார். அக்கல்விதானும் நூல் கூறும் சொற் பொருளறிவோடுமட்டிலும் நின்று விடக்கூடாது. இறைவன் நற்ருள் தொழும் பத்தியாய் முதிர்ந்து கனிந்து அத்தாளோடு ஒன்றிய சாயுச்சியம் பெறுவிக்கும் பெற்றியதாதல் வேண்டும். இல்லையேல் அக்கல்வி தானும் பயனற்றதேயாம். ''கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக'' (குறள். 391) என்றது காண்க. இக்குறளில் தக நிற்றல் என்றதால் அநுட்டானம் அதாவது கற்றதற்குத்தக்க ஒழுக்கம் கூறப்பட்டது. அநு என்பது தக என்றும் ஸ்தானம் என்பது நிற்றல் என்றும் ஆதலில் அநுட்(ஷ்)டானம் என்பது தகநிற்றல் என்ற சொற்பொருள் என்று அறிக. ''கற்றதனாலாய பயனென் கொல் வாலறிவன் நற்ருள் தொழாஅ ரெனின்'' (குறள். 2) என்று திருவள்ளுவர் தேறிய வேதமுடித் திண்ணம் காண்க. பிறிதெப்பொருளும் ஏற்றற் கொண்ணுவாறு வேதப் பொருளை சீரிய நியாய சஞ்சாரம் செய்து தேறிக் கூறிய வைதிகத் திட்பத்தை ஓர்ந்தறிக. இங்குச் குறளில் செவிச்செல்வம் (411) என்றது வேதத்தை என்று மேலே விரித்து உரைக்கப்பட்டுள்ளது. ''இருக்கு சாமங்கள் எசுக்கள். (வேதம்) அஃதே நல்லார்க்கு அமிர்தச் செல்வம்'' (வேதம். தமிழ் செய்தது) என்று வேதம் ஓதிற்று. அஃதிலாரைக் குறள் களரனையர் (406) என்று இகழ்ந்தது. அம்ருதா ஸ்ரீ : என்ற வேதஆரியம் கேடில் விழுச்செல்வம் என்ற குறள் தமிழாய் நிற்றல் காண்க. வேதம் பரமம் தநம் என்று பாரதம்

கூறிற்று. இது மேலே எடுத்துக் காட்டி உரைக்கப் பட்டுள்ளது. வள்ளவர் மாடு என்ருர் (குறள்.400.) அதை "அந்தணர் மாடு'' (திருநெடுந்தாண். 4) என்று மங்கையர் கோனும் (பரமபதஸோபா).1 வேதாந்த தேசிகரும் கூறினுர்கள். ''கள்வர்கைக் கொள்ள வொண்ணு அரசின்கை வயத்த தாகா தாயத்தார் பாகம் செய்து கொள்வதற் குரிய தாகாத், திடநிலையுற்றவந்தச் செல்வத்தை யீட்டிக் கொள்வாய்'' (தமிழ் செய்தது. அதஸ்கர கர க்ராஹ்யம் அராஜக வசம் வதம் அதாயாத விபாகார்ஹம் தநமார்ஜய ஸுஸ்திரம்.) என்று மறை நூல் கூறிற்று. குறள் கூறிய அச்செல்வத்தின் கேடின்மையை விரித்துக் கூறியதாம்.

''கேடில் விழுப்புகழ்க் கேசவன்'' (திருவாய். 3,10-11) ''கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றுங் கேட்பரோ'' (ஷை.7-5-3) என்ருர் சடகோபர். "கேடில் விழுச்செல்வம்'' என்ருர் வள்ளுவர். ''மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின், தாவாவிழுப்புகழ்ப் பூவை நிலையும் (தொல்.பொருள். புறத்திணை.5) என்ருர் தொல் காப்பியர். சடகோபரும் வள்ளுவரும் தொல்காப்பியரும் ஒத்த கருத்தினர் என்பதற்கு ஈதுமோர் அடையாளம்.

———

## நாற்பத்தைந்தாமத்தியாயம்

திருவள்ளுவர் சீரிய வைதீகர். அவர் வேதத்தையும் அதன் விளக்கப் பனுவல்களாகிய கீதை. இராமாயணம் பாரதம் மநுநூல் முதலிய திவ்விய நூல்களேயும் மேற் கொண்டவர் என்று மேலே கூறப்பட்டது. அவ்வுண் மையைப் பின்னும் தெளிய விளக்கிப் பின்னர்த் திருக் குறள் முதலதிகாரத்து மிகுந்துள்ள குறட்பாக்களின் பொருளே விரித்துக் கூறுவாம். மேற்கூறிய மறைநூல் கள் கூறும் தத்துவமும் தருமமும் வரலாறுகளும் குறளில் மேற்கொள்ளப்பட்டுப் பொலிந்து நிற்கின்றன. எங்ஙனமே எனில் கூறுவாம்.

''எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம் உய் வில்லே செய்ந்நன்றி கொன்ற மகற்கு'' (குறள் 110 இது இராமாயணம் கூறிய பொருள். ப்ரஹ்ம க்நேச சுராபே ச சோரே ப்க்நவ்ரதே ததாநிஷ்க்ருதி: விஹிதா ஸத்பி: க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி- (இராமய. கிஷ் கிந்தா, 34-12) என்பது இராமாயண சுலோகம். இச் சுலோகப் பொருளும் இச்சுலோகப் பொருளேக் குறள் அடியாகக் கொண்டு அநுவதித்தது என்பதும் மேலே பரக்க விளக்கபட்டுள்ளது. ''ஈன்ற பொழுதின் பெரி துவக்கும் தன் மகனேச் சான்ருேன் எனக்கேட்ட தாய்''. குறள். 69) இது பாரதம் கூறிய வரலாறு. வில்தேர்ச்சிக் காட்சிச் சபை ஒன்று கூட்டப்பட்டது. அச்சபையில் வியாஸர் வீடுமர் விதுரர் முதலிய வேதம் வல்லார்கள் ஆசனத்தில் வீற்றிருந்தார்கள், நகரப் பெருமக்கள் அமர்ந்திருந்தார்கள். காந்தாரி குந்தி முதலிய ராஜ ஸ்திரிகள் மஞ்சத்தில் அமர்ந்திருந்தார்கள். அப்பொழுது துரோணர் அருச்சுனனே அங்குவரச் சொன்னுர். குரு சொற்படி அருச்சுனன் வில்லேந்தியவனுய் அங்கு வந்து அரங்கத்தின் மீதேறிச் சபையோரை வணங்கி நின்ருன். அப்பொழுது அங்கிருந்தோர்கள் குந்திமகன் இவன்

திருவாளன். இவன் சீலம் ஞானம் உடையவர்களுக்கு முன் நிற்பவன். இவன் வில்வித்தை தேர்ந்தார்க்கு முதல்வன். இவன் தருமம் தாங்கி நிற்பார்க்குத் தலைவன். இவன் பாண்டவர்க்கு மத்திமன். இவன் செய்த பிரதிக்கினையை நிறைவேற்றி நிற்பவன் என்று முழங்கினார்கள். அது கேட்ட குந்தி ஆநந்தக் கண்ணீரைப் பெருக்கிப் பெருமகிழ்ச்சி அடைந்தாள் என்பது அவ்வரலாறு. ஏஷகுந்தீஸுத: ஸ்ரீமாந் ஏஷ பாண்டவ மத்யம: ஏஷ புத்ரோ மஹேந்தரஸ்ய குருணுமேஷ ரக்ஷிதா ஏஷோஸ்த்ர விதுஷாம் ச்ரேஷ்ட: ஏஷ தர்மப்ருதாம் வர: ஏஷ சீலவதாம் சாபி சீல ஞான நிதி: பர: ஏஷ கம்ஸவிமர்தஸ்ய ஸாக்ஷாத் ப்ராணஸமஸ் ஸகா ஏஷயத் ப்ரதிஜாநாதி தஸ்ய பாரம் கமிஷ்யதி இத்யேவம் துமுலா வாச: சுச்ருவு: ப்ரேக்ஷகேரிதா: குந்த்யா: ப்ரஸ்நவ ஸம்யுக்தை: அஸ்ரை: க்லிந்ந முரோபவத் (பாரதம். ஆதி. ஸம்பவ. 141. 11—19) என்பன பாரத ஆரிய சுலோகங்கள். இவன் குந்தியின் மகன் என்றது பாரதம். தன்மகன் என்றது குறள். ப்ரஸ்நவ ஸம்யுக்தை: அஸ்ரை: க்லிந்நம்; உர: அபவத் என்றது பாரதம். ஈன்றபொழுதின் பெரிதுவக்கும் என்றது குறள். ப்ரஸ்நவஸம்யுக்தை: என்றதற்குப் பெருக்குடன் சேர்ந்து என்றும் அஸ்ரை: என்றதற்குக் கண்ணீர் என்றும் பொருள். ப்ரஸ்நவ என்னும் சொல்லுக்குத் தாயின் அன்பு மிகுதியால் பால்சுரத்தல் என்பதும் பொருள். அந்த ப்ரஸ்நவத்தோடு சேர்ந்த தண்ணீர்ப் பெருக்கால் குந்தியின் மார்பு நனைந்ததாயிற்று என்றது பாரதம். இச்சுலோக அருங்குறிப்பை ஈன்றபொழுதினும் என்று தமிழாக்கிச் சுவை பெருக்கிய கவிநயம் ஒப்பற்ற தோன்றும். பாரதத்தின்பால் வள்ளுவர் எத்துணை ஈடுபாடுடையவர் என்பதை இக்குறள் கண்களில் தெரியக் காட்டி நின்றது. ஆரியக்கருத்துக்களைப் பரிமேலழகர் குறளில் ஏற்றி விட்டார் என்று பரிமேலழகர் மேல் பழி சுமத்துவார் கூற்றை இக்குறள் நிர்மூலமாக்கி நிற்றல் காண்க. பின்வரும் குறட்பாக்களும் அத்தகையவே.

தீயினுற் சுட்டபுண் உள்ளாறும் ஆருதே
நாவினுற் சுட்ட வடு. குறள். 129.

இது பாரதம் கூறிய பொருள். பொறுமையின் நலத்தை எடுத்துக் கூறிய சுக்கிரருக்கும் அவர் மகள் தேவயாநி தனக்கு அரசன் மகளாகிய சர்மிஷ்டை என்பவள் சுடு சரங்கள் போன்ற சொற்களால் சுட்ட வரலாற்றைக் கூறிய பாரத சுலோகப் பொருள் குறளில் தமிழாய் அமைந்துள்ளது.

''நிரோஹேத் ஆயுதை: சிந்நம் நிரோஹேத் தக்தம்
அக்நிநா । வாக்க்ஷதம் து நஸம்ரோஹேத்
ஆசரீரம் சரீரிணும் ॥ ஸம்ரோஹதி சரை:
வித்தம் வநம் பரசுநா ஹதம் । வாசா துருக்தம்
பீபத்ஸம் நஸம்ரோஹேத வாக்க்ஷதம் ॥

(பாரதம். ஆதி.ஸம்பவ. 61.25-26; சறை: துக்கம் சஸ்த்ர விஷாக்நி ஜாதம் ரோஹேத் நசாரோஹதி வாக் வ்ரணம் து. பாட) என்பன பாரத சுலோகங்கள். ஆயுதங்களால் வெட்டியதும் தீயினல் சுட்டதும் ஆறும். வாக்கினல் சுட்ட புண் மக்கள் சரீரம் உள்ளவரையும் ஆருது. சரத்தாலும் விடத்தாலும் தீயாலும் உண்டான துயரம் ஆறும். வாக்கினல் உண்டான வ்ரணம் ஆருது என்பது இச்சுலோகப் பொருள். இங்குச் சுலோகத்தில் ரோஹேத் என்னும் சொல்லுக்கு சாம்யேத் (ஆறும்) என்று பொருள் உரைக்கப்பட்டுள்ளது. அவ்வுரிய பொருளை மேற்கொண்டு ''ஆறும்'' என்றும் வாக்வ்ரணம் என்று சிறப்பித்ததை வடு என்றும் கூறிச்சுலோகப் பொருளை அமைத்துள்ள நலம் காண்க. பாரதம் குறட்கு மூலம் என்பது கண்கூடு.

ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். குறள். 899.

இவ்வரலாறு பாரதம் கூறியது. நகுடனை அகத்தியர் சபித்த வரலாறு. நகுடன் சந்திரகுலத்தரசன். யயாதியின்

தந்தை. ஒரு காலத்தில் இந்திரன் பிரமஹத்நிபாபத்தால் மறைந்து கொண்டிருந்த பொழுது நகுடன் இந்திரனாக நியமிக்கப்பட்டான். அகத்தியருள்ளிட்ட சத்தவிருடிகள் அவனமர்ந்திருந்த சிவிகையைத்தாங்கிக் கொண்டு இந்திரலோகத்துக்குச் சென்று கொண்டிருந்தார்கள். இந்திராணியை நினைந்து காதல் மிகுந்தவனாய்த் தன் சிவிகையைத் தாங்கிச்சென்ற அவ் விருடிகளைஸர்ப்ப ஸர்ப்ப (செல்செல் அதாவது விரைந்து செல்) என்று நகுடன் ஏவினான். அதனால் சீற்றம் கொண்ட அகத்தியர் நீ ஸர்ப்பம் ஆவாய் என்று நகுடனைச் சபித்தார். நகுடன் மலைப்பாம்பாய்க் கீழே விழுந்தான். அந்நிலையில் நகுடன் நெடுங்காலம் கிடந்தான். பின்னர்த் தருமபுத்திரரால் அவன் சாபம் நீங்கினான் என்பது அவ்வரலாறு (பாரதம்.சாந்தி. 177. அஜகரோபாக்யாநம்) ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்புளார் கோமான் இந்திரனே சாலுங் கரி. குறள்.25 இவ்வரலாறு இராமாயணம் கூறியது (பால.48) ஐந்தவியாது சாபம்பெற்றுக் கெட்ட இந்திரனே ஐந்தவித்தார் பெருமைக்குச் சாலுங்கரி என்று கௌதமர் சாபத்துக்கு ஆளான இந்திரன் வரலாறு அது.

சிறைகாக்கும் காப் பெவன்செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை. குறள். 57

இது இராமாயணம் கூறிய பொருள். ந க்ருஹாணி ந. வஸ்த்ராணி ந ப்ராகாரா: திரஸ்க்ரியா: நேத்ருசா: ராஜஸத்காரா: வ்ருத்தம் ஆவரணம் ஸ்த்ரியா: (இராமா. யுத்த. 117.26) என்பது இராமாயண சுலோகம். இதன் தமிழ்: மகளிர்க்கு வீடுகள் காவல் அல்ல ஆடைகள் காவல் அல்ல மதில்கள் காவல் அல்ல. திரைகள் காவல் அல்ல. இவை போன்ற ராஜ சற்கிரியைகள் காவல் அல்ல. நல்லொழுக்கமே காவல் என்பது ஆவரணம் என்ற இராமாயண ஆரியம் காப்பு என்ற குறள் தமிழாயும் வ்ருத்தம் என்ற இராமாயண ஆரியம் நிறை

என்ற குறள் தமிழாயும் நிற்றல் காண்க. இராமாயண நெடுமை குறள் குறுமை என்க.

குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகை நாடி மிக்க கொளல் குறள். 504

இது இராமாயணம் கூறிய பொருள். அர்த்தா நர்த்தௌ விநிச்சித்ய வ்யவஸாயம் பஜேத ஹ। குணத: ஸங்க்ரஹம் குர்யாத் தோஷதச்ச விஸர்ஜயேத்। யதி தோஷோ மஹாந் தஸ்மிந் த்யஜ்யதாம் அவிசங்கிதம்। குணாந்வாபி வஹந் ஞாத்வா ஸங்க்ரஹ: க்ரியதாம் ந்ருப (இராமாய. யுத்த. 17.41-42) என்பது இராமாயணம். ஒருவன் குணங்களையும் குற்றங்களையும் ஆராய்ந்தறிந்து ஒரு முடிவை அடையவேண்டும். குணம் இருப்பின் சேர்த்துக் கொள்ள வேண்டும். குற்றம் இருப்பின் விட்டுவிட வேண்டும். எவனிடத்தில் குற்றம் மிகுந்துள்ளதோ அவனை ஐயமின்றி விட்டுவிடவேண்டும். எவனிடத்தில் குணம் மிகுந்துள்ளதோ அம்மிகுதி நோக்கி அவனைக் கொள்ளவேண்டும் என்பது அதன் தமிழ்.

ஊக்க முடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து. குறள். 486

இது இராமாயணம் குறிப்பால் உணர்த்தியதைக் குறள் உவமைமுகத்தால் சிறப்பக் கூறியது (இராமாயண. ஆரணிய. 30.23). கரப்போரில் தொடுத்தகணையுடன் கரனை மாயத் தாக்கற்கு இராமபிரான் சற்றுப் பின்கால் வாங்கியதை இக்குறள் உவமைகாட்டிப் போற்றிய நலம் காண்க. அபாசர்ப்பத், கிஞ்சித் த்வரித விக்ரமம் என்ற இராமாயண நயம் இக்குறளில் எழில்மிகத் திகழ்தல் காண்க. இராமபிரான் கரப்போரில் பின்கால் வாங்கியது ஒருகுறை என்பாரை இக்குறள் மாயத் தாக்கும் வீறு தேறுக.

நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு. குறள். 784

இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர் குறள். 447

இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும். குறள் 448

பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர் கைவிடல். குறள். 450

இவை இராமாயணப் பொருளைக் கூறியவாம். விபீடணன் செய்த நல்லுபதேசத்தைக் கேளாது இராவணன் கெட்டதைக் கூறிய பாக்கள். இதம் கருதித் தம்மேற் சென்றிடித்த மெய்த் துணைத் தம்பியான செவிச்செல்வ விபீடணன் சொற்கேளாது இராவணன் தானே இறைவன் மன்னவன் என்ற செருக்கால் கேடு விளைந்து அழிவானாயினன் என்ற பொருள் கூறப்பட்டது. விபீடணன் (நல்லான்) தொடர் கைவிட்டவாறே இராவணன் கெட்டழிந்தான் என்றவாறு, வாக்யம் ஹிதம் அர்த்தயுக்தம் (யுத்த: 14-1) ''விபீஷணோ ராஜ ஹிதாநு காங்க்ஷீ மஹாத்மா பபாஷே'' (ஷி. 10) விபீ ஷணோ மஹாப்ராஞ்ஞ: (ஷி, 19-1) தர்மாத்மா விபீஷண: (ஷி. 2) ஸுநிவிஷ்டம் ஹிதம் வாக்யம் உக்தவந்தம் விபிஷணம் (ஷி, 1.16) இஹ ஸந்தோ நவா ஸந்தி ஸதோவா நாநுவர்த்தஸே (சுந்தர. 21:10) முதலிய காண்க. ஸத: ந அநுவர்த்தஸே என்பது இராமாயண ஆரியம். நல்லார் தொடர் கைவிடல் என்பது குறள் தமிழ். அரணிலா னென்கட்டங்கிய வன் பினால் இரணியன் பட்டதெம் மிறை யெய்தினன் (1813) என்ற சிந்தாமணி குறட்பொருளை விண்டு காட்டிற்று, இரணியனுக்கு அவன் புதல்வன் மேற்சென்றிடிக்கும் மெய்த்துணையனாயது போல் இராவணனுக்கு அவன் தம்பி மேற்சென்றிடிக்கும் மெய்த்துணையனாயினன் என்ற படி ''இரணிய னென்பவனெம்மனோரினும், முரணியன வன்றனை முருக்கிமுற்றினன். அரணிய னென்றவற்கன்பு பூண்டனை, மரணமென்றொருபொருள் மாற்றும் வன்மை

யோய்'' (விபீடணன் அடைக்கல 2) என்ற இராமாவதாரத்தை நோக்குக.

> நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
> வாயின ராத லரிது, குறள். 419

இக்குறள் அநுமனை உணர்த்தியதாம். வாக்யஞ்ஞன் ருக்வேதவிநீதன் யஜுர்வேததாரி வேதவித், க்ருத்ஸ்நம் வ்யாகரணம் அநேந பகுதா ச்ருதம் உச்சாரயதி கல்யாணீம் வாசம் (இராமாய. கிஷ்கிந்தா. 3.27-32) ஸம்ஸ்காரஸம்பந்ந: வததாம் வரம் (இராமாய. யுத்த. 17-48-50) முதலிய இராமாயணப் பொருள் இக்குறளில் செறிந்து திகழ்தல் காண்க. பகுதா ச்ருதம் வேதவிநீதன் என்றது நுணங்கிய கேள்வியர் வணங்கிய வாயினர் என நிற்றல் காண்க. இக்குறள் அநுமனைக் குறித்துள்ள நுட்பத்தை ''வணங்கிய சென்னியன் மறைத்த வாயினன் நுணங்கிய கேள்வியான் நுவல்வ தாயினான்'' (இராமாவ.உயுத்த. விபீடணனடைக் 87) என்ற பாடலால் கம்பர் தெளியக் காட்டித் தந்தார். ''செறிபெருங் கேள்வியாய்! கருத்தென் செப்பென நெறிதரு மாருதியென்று நேரிலா அறிவனை நோக்கினான் அறிவின் மேலுளான்'' (ஷை. 86)என்பது இதற்கு முன்னுள்ள பாடல். அறிவின் மேலுளானாகிய இராமபிரான் தன்னைச் சரணம் அடைந்த வீடணனைப் பற்றுதலைப் பற்றி உன் கருத்து என்ன என்று அநுமனை வினாவினான். அது வினாவுங்கால் அநுமனைச் செறிபெருங் கேள்வியாய் என்று விளித்து அவனுடைய நுணங்கிய கேள்வித் திறனை உவந்தருளினான். அவ்வநுமனை நெறிதரு மாருதி என்றும் வணங்கிய சென்னியன் என்றும் மறைத்த வாயினன் என்றும் நுணங்கிய கேள்வியான் என்றும் கம்பர் போற்றிப் பாடினார். வணங்கிய வாயினன் என்ற குறட்கு மறைந்த வாயினன் என்பது பொருள் என்று காட்டப் பட்டது. வாய்பொத்தி நிற்றல் வாயால் வணங்கி நிற்றலாம். இராமபிரான் திருமுன்பே அநுமன் வாய்பொத்தி (வாய்மறைத்து, வாய்வணங்கி) நிற்கும் வணக்க வண்

ணத்தில் சேவை சாதித்து விளங்குதலைத் திருக்கோயில்க ளில் காணலாம். இப்பாடல் கள் வீடணன் அடைக்கலப் படலத்தில் உள்ளன என்பது இங்கு கருதத்தக்கது. பாம்பே அறியும் பாம்பின் காலே என்ற உண்மையை இங்கும் காண்க. மூத்தோனேஆபத்தில் கைவிட்ட துரோகி விபீடணன் என்பார் கூற்றை இக்குறட்பாக்கள் பாறு பாருக்குமாறு கண்டுணர்க.

அன்பிலா ரெல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு குறள். 72

இது இராமாயணம் கூறிய வ ர ல ா று. துலைபுக்க பெரியோனுகிய சிபிச் சக்ரவர்த்தி தன்னைச் சரணம் அடைந்த புறவின்பொருட்டு அதை இரையாக்கிக் கொள்ளத் துரத்தி வந்த சேனத்துக்குத் தன்னையே என்பளவும் இரையாகக் கொடுத்து அப்புறவைத் தலை காத்த வரலாறு அது. (இராமா. அயோத்தி. 14. 4). சரணுகதனைக் காத்தல் எத்துணைப் பரம தருமம் என்பது இதனுல் உணர்த்தப் பட்டது.

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்

எழுமையு மேமாப் புடைத்து. குறள். 126

இது கீதை கூறிய பொருள்.

யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோ ங்காநீவ ஸர்வச: இந்த்ரியாணி இந்த்ரியாந்த்தேப்ய: தஸ்ய ப்ரஞ்ஞா ப்ரதிஷ்டிதா என்பது கீதை சுலோகம் (கீதை. 2.58) அதன் தமிழ் இக்குறள்.

தெய்வந் தொழாஅள் கொழுநற் றெழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை, குறள். 55

இவ்வரலாறு இராமாயணம் கூறியது. அரக்கர்கள் அநுமன் வாலில் இட்ட தீயை அநுமனுக்குக் குளிர்ந்திரு என்று சீதைப்பிராட்டி ஏவித் தீயைக் குளிர்ச்சி பெய் யச் செய்த திவ்விய வரலாறு அது. (இராமாயண

சுந்தர. 29. 35) அநுமன் வாலில் அரக்கர்கள் வைத்த தீ கொழுந்துவிட்டெரிதலை அரக்கியர்கள் சீதைப்பிராட்டிக்குக் கூறினார்கள். அது கேட்ட பிராட்டி கொழுநற் றொழுதல் என்பது இருக்குமாயின் கற்பு என்பது இருக்குமாயின் நீ அநுமனுக்குக் குளிர்ந்து இரு என்று தீயை ஏவினாள். ஏகஸ்த ஹ்ருதயா நூனம்ராமமேவ அநுபச்யதி (இராமன் ஒருவனையே உபாஸநம் செய்த வண்ணமாய் நிருவிகல்பக சமாதியில் அலையாநிலையுற்ற மாமங்கல நங்கையாய் (சுந்தர. 15-25) சீதா பக்தி த்ருடவ்ரதா (ஷை, 16-15) சிந்தயந்தீ வராரோஹா பதிமேவ பதிவ்ரதா (ஷை 21-8) ராமம் பதிம் அநுவ்ரதா (ஷை 24-12) பதி சுச்ரூஷா (ஷை 53-28) சரிதம் தப: (செய்தவம்) ஏக பத்நீத்வம் (ஷை) முதலிய சொற்கள் கூறும் திவ்விய தூய சொற்களின் சாரமாய்க் குறள் அமைந்துள்ள சீர்மையை ஓர்க. கொழுநனிற் பிறிதோர் தெய்வமில்லை கற்பினிற் பிறிதோர் தவமில்லை என்னும் பேருண்மையைப் பிராட்டி விளங்கவைத்தும் விளங்கக்காட்டியும் பொலிந்து நிற்கும் நற்பெருந்தவத்திறனைத் திருக்குறள் காட்டித் தரும் திருக் காண்க, அந்நிலையில் பிராட்டி தீயை ஏவினாள் என்று பொருள். ஏவிய தீ வலஞ்செய் சுவாலையனாய் (வணங்கிய சென்னியனாய்) அநுமன் சேமத்தை விண்ணப்பம் செய்வான் போல் தோன்றி நின்றான். (சுந்தர. 53-32) த்ருச்யதேச மஹாஜ்வால: கரோதி நச மே ருஜம் சிசிரஸ்யேவ சம்பாத; லாங்கூலாக்ரேப்ரிதிஷ்டித: (53-55) வளர்ந்தெரியும் தீச்சுவாலை காணப்படுகிறது. எனக்குப் பிணியை (சூட்டை) செய்யவில்லை என்வாலின் நுனியில் நிலைகொண்ட தீ என் மேல் பனி பெய்தது போல் நிலைகொண்டது, (தமிழ் செய்தது). சிசிரஸ்யேவ ஸம்பாத: என்ற இராமயண ஆரியம் பெய்யும் மழை என்ற குறள் தமிழாய் நிற்றல் காண்க. சிசிரம் பெய்தது என்பது அநுமன் மொழி. சிசிரம் என்னும் சொல்லுக்குப் பனி குளிர் சீதம் என்பது பொருள்- சீதம் குணே தத்வதர்த்தா : ஸுஷீம: சிசிரோ

ஜட: (அமரம். 182) என்று அமரம் படித்தது. பனி என்னும் சொல் சீதம் குளிர்ச்சி என்னும் பொருளையும் உணர்த்தும் ''துன்பமும் நோயும் துகினமும் சீதமும் அச்சமும் நடுக்கமும் பனியென்றுரைப்பர்'' (பிங்கல, 10.773) என்று நிகண்டு படித்தது. அவ்வாறே மழை என்ற சொல் குளிர்ச்சி என்னும் பொருளையும் உணர்த்தும். ''மழையே குளிர்ச்சியும் வருடமும் மேகமும்'' (பிங்கல. 10.907) என்று நிகண்டு படித்தது. ஆதலின் இராமாயணத்தில் சீத சிசிர என்றுள்ள ஆரியம் குறளில் மழை என்று தமிழாய் நிற்றல் தெளிவு. சிசிர என்பது மழை ஸம்பாத என்பது பெய்தல் என்ற சொற் பொருள் தெளியக் காண நின்றது. பனி பெய்கிறது பனி விழுகிறது என்ற உலக வழக்கும் இங்கு நோக்கத்தக்கது.

கொழுநற் றொழுதெழுவாளாய் நற்பெருந்தவத்தளாய் இற்பிறப்பாய்க் கற்பெனும் பெயராய்த் திகழ்ந்து நின்ற பிராட்டி தீயை அநுமனுக்குக் குளிர்ச்சி பெய் என்று ஏவியவாறே தீ குளிர்ச்சி பெய்து பிராட்டி திருமுன்பே வணங்கி நின்ற வரலாறு இக்குறட்கு உரிய சீரிய பொருள் என்பது காண்க. பெய்யென என்றதால் பிராட்டி தீயை ஏவிய இறைமாட்சி உணர்த்தப்பட்டது. வருண ஜபம் செய்தால் மழை பெய்யும். அது வருணனை வழிபட்டு இறைஞ்சி வருணனருளால் பெய்யுமொன்ருகும். வருணனைப் பெய் என்று ஏவிப்பெய்யச்செய்யுமொன்றன்று. ஏவியவாறே பெய்யும் மழை என்ற சிறப்பை இக்குறள் கூறிற்று. ஆதலால் வருணஜபம் போன்றது விலக்கப்பட்டது. மேலும் வருணனைப் பெய் என்று ஏவியபின் மழை பெய்த தெனினும் காக்கை ஏறவும் பனம்பழம் விழவும் என்னும் காகதாளீய நியாயத்தால் வியாத்தி ஒழித்தற்குமாம். அன்றியும் வருணன் மழை பெய்வான். எரி பெய்யான். மழை பெய்தலே வருணனுக்கு இயலும். எரிபெய்தல் இயலாது. அவ்வாறே தீ எரி பெய்வான். மழை (குளிர்ச்சி) பெய்யான். எரிபெய்தலே தீக்கு இயலும். மழை பெய்தல் இயலாது. இக்குறளில் தீயை மழைபெய் என்று ஏவிப்பெய்வித்த தனித்ததோர் திவ்விய சிறந்த பொருள் உணர்த்தப்

பட்டது. தீக்கு இயலாத மழை பெய்தலை இயலச் செய்து அநுமன்பால் பெய்வித்த புனிதமான தெய்வப் பேரரு ளிறைச் செயல் கூறப்பட்ட நுட்பம் காண்க. கர்த்தும் (ஆக்கற்கும்) அகர்த்தும் (நீக்கற்கும்) அந்யதாகர்த்தும் (மாறுகொள ஆக்கற்கும்) சக்தி உடைய பிராட்டி தீயை அநுமனுக்கு மழை பெய் என்று மாறுகொள ஆக்கி மழை பெய்யச் செய்த இறைச்செயற் சிறப்பு இங்கு உணர்த்தப் பட்டது. மழையையும் தெய்வம் தொழாள் கொழுநற் றொழுதெழுவாள் (கற்பு) என்று சீதையையும் கூறியும் அநுமனைக் குறித்தும் நின்று இக்குறள் திவ்வியமான தோர் புண்ணியத் திருச்சரிதத்தைத் (ஸீதாயா: சரிதம் மஹத். (இராமா. பால. 4. 7) திண்ணிதாய்க் காட்டித் திகழும் கட்டெழில் ஒப்பற்றது என்பது உற்றது கூறலே யாம்.

இங்குக் கூறியதே இக்குறளின் உரியமெய்ப் பொருள் என்பதைத் ''தங்கணு யகரிற் தெய்வம் தவம்பிறி திலதென் றெண்ணும், மங்கைமார் சிந்தை போலத் தூயது'' (இராமாவ. பால. வேள்வி. 16) ''விற்பெருந் தடந்தோள் வீர விலங்குநீ ரிலங்கை வெற்பில், நற்பெருந் தவத்த ளாய நங்கையைக் கண்டே னல்லேன், இற்பிறப் பென்ப தொன்றும் இரும்பொறை யென்ப தொன்றும், கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண்டேன்'' ''கண்ணினு முளைநீ தையல் கருத்தினு முளைநீ வாயின், எண்ணினு முளைநீ கொங்கை யிணைக்குவை தன்னி னெவ்வா, தண்ணல் வெங் காம னெய்த வலரம்பு தொளைத்த வாருப், புண்ணினு முனைநீ நின்னைப் பிரிந்தமை பொருந்திற் றுமே'' (ஷை. சுந்தர. திருவடி. 62, 63) ''எரியே யவனைச் சுடலென்றாள்'' (ஷை. சுந்தர. பிணி 127) ''குளிர்த்ததக் குரிசில்வா லென்பு கூரவே'' (ஷை. சுந்தர. பிணி, 128) ''மற்றினிப் பலவென் வேலை வடவனல் புவியளாய கற்றையங் கனலி மற்றைக் காயத்தீ முனிவர் காக்கும் முற்றுறு மும்மைச் செந்தீ முப்புர முருங்கச் சுட்ட, கொற்றவ னெற்றிக் கண்ணின் வன்னியுங்குளிர்ந்த

மாதோ'' (ஷி. ஷி. 130) ''வெற்பினு லியன்ற தன்ன மேனியை விழுங்கி வெந்தீ நிற்பினுஞ் சுடாது நின்ற நீர்மையை நினைவி னேக்கி, அற்பின ரருத சிந்தை யநுமனுஞ் சனகன் பாவை, கற்பினு லியன்ற தென்பான் பெரியதோர் களிப்ப ஞனன்'' (ஷி. ஷி. 131) என்ற கம்பர் திருவிருத்தங்களில் இக்குறட்பாவின் மெய்ப் பொருள் பொலிந்து விளங்கல் காண்க.

மேலும் ''குழியிலிந் தனமடுக்கினர் குன்றெனக் குடந்தொறுங் கொணர்ந் தெண்ணெய், இழுது நெய் சொரிந்திட்டனர் நெருப்பெழுந் தெரிந்தது விசும்பெட்ட, அழுது நின்றவ ரயர்வுற வையனைப் பெய்தனர் அரி யென்று தொழுது நின்றனன் நாயகன் தாளிணை குளிர்ந்தது சுடுதீயே.'' ''கால வெங்கனல் கதுவிய காலையில் கற்புடையவள் சொற்ற, சீல நல்லுரை சீதமிக் கடுத்தலிற் கிழியொடு நெய் தீற்றி, ஆல மன்னவர் கரங்களால் வயங்கெரி மடுத்தலின் அநுமன் தன் கூலமா மென என்புறக் குளிர்ந்ததக் குருமணித் திருமேனி'' (இரணியன். 85-86) என்ற கம்பர் பாடல்களை நன்கு ஓர்ந்து இக்குறட் பா சீதைப்பிராட்டியைக் கூறிநிற்றல் தெளிய விளங்கும். இங்குக் கம்பர் சீதை என்று கூருது கற்பெனும் பெயரதொன்று கற்புடையவள் என்று கூறியதால் முன்தொடர்ச்சி அடை முதலிய இன்றியே கற்பு என்னும் சொல் சீதையைக் கூறும் சக்தி உடையது என்ற உண்மையைக் காட்டித்தந்தார். அவ்வாறே தெய்வம் தொழாள் கொழுநற்றொழுதெழுவாள் (கற்பு) என்று வள்ளுவர் காட்டித் தந்தார். ஏகபத்நீ ஸமாக்யா (ஹம்ஸ. 1-14) என்று வேதாந்த தேசிகர் இவ் வுண்மையை நன்கு விளங்க உரைத்தார். ஏகபத்நீ என்பது அன்மொழித்தொகை. கற்பு என்பது அதன் பொருள். அது சீதையின் ஸமாக்யா என்ருர். அதாவது சீதை ஒருவளையே தான் முக்கிய விருத்தியால் கூறும் சக்தி உடையது. சீதைக்கே உற்ற உரியபெயர் என்ற வாறு. கொழுநற் றொழுதெழுவாள் என்றது வள்ளுவர்

தமிழ். ஏகபத்நீ ஸமாக்யா என்பது வேதாந்த தேசிகர் ஆரியம். அது அன்வய முகத்தாற் கூறியது. தெய்வந் தொழாள் கொழுநற் றெழுதெழுவாள் என்று அன்வய முகத்தாலும் வ்யதிரேக முகத்தாலும் திடனுற வள்ளுவர் கூறினர்.

குளிர்ந்தது சுடுதீயே என்று சீதைப்பிராட்டி ஏவலின் வலிமையால் சுடும் இயல்பிற்றாய தீதானும் அஃதொழிந்து அநுமன்பால் என்புறக் குளிர்ந்து நிகழும் இயலபிற்றாயது என்று பெய்யெனப் பெய்யும் மழை என் பதன் மெய்ப்பொருளைத் தெளியக் காட்டித் தந்தார். தெய்வந் தொழாள் கொழுநற் றெழுதெழுவாள் என்ற தைக் கற்புடையவள் கற்பெனும் பெயர தொன்று என்ற தாலும் பெய்யென என்றதைச் சொற்ற சீல நல்லுரை எரியே அவனைச் சுடல் என்றதாலும் விளக்கியிருத்தல் தெளிவு. இத்திற அருங்குறளின் மெய்ப்பொருளைக் கம்பர் ஆர்வத்தால் காட்டித்தந்த வள்ளன்மை இங்குச் சிறிதே உரைக்கப்பட்டது. பன்னி உரைப்பிற் பாரத மாம். காவிய விசுவரூபம் காட்டினன் கம்ப நாடன் என்ற உண்மை இங்குப் பின்னும் மெய்ப்பித்ததாயிற்று. பாம்பே அறியும் பாம்பின் காலை என்பதை இங்கும் காண்க.

இத்திறப் பிரசித்தியும் புண்ணியமும் புகழும் பயனும் உடைய தெய்வத்திருச் சரிதையையே குறள் கூறிற்று. அருந்ததி லோபாமுத்திரை முதலிய பதிவிரதைகள் எவருமே பெய்யென ஏவி மழைபெய்யச் செய்யவில்லை. ஸாவித்திரி தனது கற்பின் திறலால் தன்கொழுநனை எமனிடத்தினின்று விடுவித்துக் கொண்டாள். அவளும் மழையைப் பெய்விக்கவில்லை. சீதைப்பிராட்டியின் தெய்வத் திருச்சரிதை ஒன்றுக்கே தான் அப்பிரசித்தியும் அப்பெருமையும் உற்றது. அச்சரிதையையே திருக்குறள் போற்றிப் புகழ்ந்து மங்கலம் பொங்க முழங்கி நின்றது என்ற திட்பம் தேறுக.

இக்குறளில் தொழுதெழுவாள் என்றதற்குப் பதியைத் தொழுவதின் எழுச்சி முதிர்ச்சி அதாவது ஏகாக்ர மனத்தளாய் இடையருது தொழுதலே தொழிலாய் நிலேநிற்பவள் என்பது பொருள். இப்பொருளே மேற்கூறிய கம்பர் பாடல்கள் தெளியக் காட்டி நின்றன. "இவள் அரக்கியரைக் காண்கின்ருளில்லே. மலர்களேயும் கனிகளேயும் உடைய மரங்களேயும் காண்கின்ருளில்லே. ஒருமனநிலேத் திடப் பாட்டில் இராமனேயே அநுதரிசனம் (தியானம்) செய் கின்ருள் என்று சீதைப்பிராட்டி அசோகவனிகையில் இராமபிரானேத் தியானம் செய்தவண்ணமாய் நின்றபதி விரதத்திடனிலேயை இராமாயணம் கூறியது (சுந்தர. 16. 25) "அலமுழச் சனக வேந்தன் மகநிலத் துதித்த சீதை, உலர்தன துடலே யுந்தர னெனக்கென வோம்பிப் பூவில், தலேமைகொள் கற்பெனும் பேர் தாங்கிறை வண்ணத் தன்னுள், பொலிவள் நின் தோழி போயென் தோழ நீ தெரியக் காண்பாய்" (ஹம்ஸஸந்தே. 1-14. தமிழ் செய்தது) "முற்படப் புறத்த சித்த விருத்தியை யடக்கி முற்றும், இற்படுத் தொருவ னென்கண் ணிடுமனக் காமவேத நற்பினெண் முதிர்ச்சி தேறும் நவைபடா முயற்சி யொன்றில், நிற்பளுள் ளொடுங்கு முள்ள நிரு விகற் பகச மாதி" (ஷை. 2-22. தமிழ் செய்தது) என்று சீதைப்பிராட்டி பக்கநோக்கறியாது இடையருது நிருவிகற்க சமாதியில் நிலேயுற்றுத் தன்னேயே எண்ணித் தொழுத வண்ணமாய் நிற்கும் நலத்தைத் தூது அனுப்பிய அன்னத்துக்கு இராமபிரான் கூறினுன் என்று வேதாந்த தேசிகர் பாடினுர். கொழுநற்ருெழுதெழுவாள் என்ற திருக்குறட் பாடற்கு நலமும் நயமும் பொலிந்து திகழும் உரிய சீரிய பொருள் இவ்வாற்ருல் விளக்கப் பட்டது.

உரிய பொருள் இவ்வாறிருக்கப் பிறதெய்வம் தொழாது தன் தெய்வமாகிய கொழுநனேத் தொழா நின்று துயிலெழுவாள் பெய்யென்று சொல்ல மழை

பெய்யும். தெய்வம் தொழுதற்கு மனம் தெளிவது துயிலெழுங் காலத்தாகலின் 'தொழுதெழுவாள்' என்ருர். தொழநின்று என்பது தொழுது எனத் திரிந்து நின்றது என்று பரிமேலழகர் உரைத்தார். அவ்வாறே மணி வாசகர் பணித்த திருக்கோவையாரில் ''தினைவளங் காத்துச் சிலம்பெதிர்க் கூஉய்சிற்றில் முற்றிழைத்துச் சுனைவளம் பாய்ந்து துணைமலர் கொய்து தொழுதெழு வார், வினைவளநீறெழ நீறணி யம்பலவன்றன் வெற்பில், புனைவளர் கொம்பரன்னுயன்ன காண்டும் புனமயிலே'' (118)என்ற பாடலில் தொழுதெழுவார் என்றது துயிலெழுங் காலத்தல்லது முன்னுணர்வின்மையான் உணர்வுள்ள காலத்து மறவாது நினைவார் எ-று என்று பேராசிரியர் உரைத்தார்.

இவ்விரண்டுரையையும் பிரயோக விவேக நூலார் மறுத்தார். கொழுநற் றொழுதெழுவாள்' 'தொழுதெழு வார் நீறெழ' என்னும் திருவள்ளுவரினும் திருக்கோவை யாரினும் பரிமேலழகரும் பேராசிரியரும் தொழாநின் றெழுவாள் தொழாநின்றெழுவார் என்று துணைவினை யாய் உரைப்பர். எழுதல் துயிலொழுதலாதலின் எழுந்து தொழுவாள் எழுந்து தொழுவார் என முன்பின்னுகப் பொருள்படுதலன்றி நகுபுவந்தான் ஓடிவந்தான் என்பன போலத் தொழாநின்று துயிலெழுதல் கூடாதென்க. வைகறையாமந் துயிலொழிந்து தான் செய்யும் நல்லறமும் ஒண்பொருளுந் சிந்தித்து வாய்வதின் தந்தையுந் தாயும் தொழுதெழுக' என்பது துயிலொழிந்து பின் தந்தையும் தாயும் தொழுது பின் காரியத்திற் செல்க எனப் பொருள்பட்டுவருதலானும் அவருரை அசம்பாவிதமென்க என்பது அம்மறுப்பு. உரையும் மறுப்பும் ஒக்கவே அசம்பாவிதம் என்க. தொழுதெழுவாள் என்றவிடத்து எழுவாள் என்பதற்குத் துயிலெழுவாள் என்று பொருள் உரைத்தது மருள் என்க. இங்குத் துயிலெழுதற்கு எவ்விதப் பிரஸக்தியுமில்லை. அது அறவே முரணும். துயிலெழுங்காலம் மனம் தெளி

வுறும் காலமாதலான் அது தொழுதெழுங்காலம் என்று கொழுநற்றெழுதற்குக் காலவரையறை செய்தலால் அஃதொழித்த காலமெல்லாம் தொழாக் காலமாயும் தொழத்தகாக் காலமாயும் ஒழியும். இது பெரிதும் அசம்பாவிதம். தொழுதெழுதல் என்பதற்குத் தொழுதலே தொழிலாயிருத்தல் என்பதே உரியபொருள் என்பதைப் பேரிலக்கியங்கள் காட்டி நின்றன.

''அயர்வறு மமரர்க ளதிபதி யவனவன், துயரறு சுடரடி தொழுதெழு என்மனனே'' (திருவாய். 1-1-1) என்று சடகோபர் ஓதினர். தமது மனத்தை விளித்து நீ திருமாலின் துயரறுக்கும் திருவடியைத் தொழுது எழு என்று அநுசாஸநம் செய்தார். மனனத்தின் (தியானத்தின் தொழுதலின்) எழுச்சி கூறப்பட்டது. இங்குத் துயிலெழுதற்கு எவ்விதப் பிரஸக்தியுமில்லை என்பது கண்கூடு. "நெஞ்சமே! நல்லை நல்லை உன்னைப் பெற்றால், என்செய்யோம் இனி என்ன குறைவினம் மைந்தனை மலராள் மணவாளனைத் துஞ்சும்போதும் விடாது தொடர் கண்டாய்'' (திருவாய் 1-10-4) என்று தான் துஞ்சினும் தன் நெஞ்சம் துஞ்சாது திருமாலை விடாது தொடர்கொண்டு நிலைநிற்கும் என்று கூறித் தொழுதெழுதல் என்று தாம் ஓதியதைத் தாமே விளக்கியருளினர். ''ஸ்வாந்தஸ்ய ஐகாக்ர்யம்'' (தன் மனதின் ஒரு பற்றின் எல்லை)என்று இத்திருவாய் மொழிப் பொருளை வேதாந்த தேசிகர் உரைத்தருளினர். (தாத்பர்யரத்நா, 11) ''கங்குலும் பகலும் கண்துயி லறியாள்'' (திருவாய் 7-2-1) என்று சடகோபர் பின்னும் ஓதினர். ''நஹிமேஸ்தி நித்ரா'' (எனக்குக் கண்துயி லில்லை. இராமாய. சுந்தர 32.13—22. தமிழ் செய்தது) என்று சீதைப்பிராட்டி தானே கூறினள், எழுதல் என்பதற்குத் துயிலெழுதல் பொருளன்று விடாது தொடர்கொண்டு நிற்றலே பொருள் என்பதைக் கையிற்கனிபோல் மேற்கூறியவை காட்டி நின்றன. ''அமரர்கள் தொழுதெழ அலைகடல் கடைந்தவன்.'' (திருவாய். 1-3-11) ·'தொல்வினை

தீர எல்லாரும் தொழுதெழ வீற்றிருப்பாரே'' (திருவாய் 4-4-10) ''உள்ளி நாளும் தொழுதெழுமினோ தொண் டரே'' (திருவாய் 9.10.2)என்று சடகோபரும் ''துணி வினி யுனக்குச் சொல்லுவன் மனமே தொழுதெழு'' (பெரிய. திருமொழி. 1. 4.4) ''நம்பன் நறையூர் நாம் தொழுதும் எழுநெஞ்சே'' (ஷை.6.4.4) ''உய்வான் உன் கழலே தொழுதெழுவேன்'' (ஷை 7.9.8)என்று மங்கையர் கோனும் "இன்னதே கடிதி யற்று வெனெனத் தொழுதெ ழுந்தான் பொன்னின் மோலியன் வீடணன்'' (இராமாவ.பிரமாத்திர. 89) என்று கம்பரும், ''மூளுந் தவநெறி மூட்டிய நாத முனிகழலே, நாளுந் தொழு தெழுவோம்'' (தேசிக. அதிகார. 6) ''அடிக்கடியுந் தொழு தெழுவதாய்க் கொண்டு திருமாமணி மண்டபத்தின் முகப்பிலே சென்றேறி'' (பரமபத. திவ்யதேச) என்று வேதாந்ததேசிகரும் பணித்தவை காண்க. துயிலெழ எவ்விதப் பிரஸக்தியும் அற்றவை இப்பாடல்கள் என்பதை ஓர்க.

''தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத் தெய்வந்தொழுந் தகைமை திண்ணிதால்—தெய்வமாய, மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி, விண்ணக மாதர்க்கு விருந்து'' (சிலப். மதுரை. கட்டுரை. வெண்பா) என்ற சிலப்பதிகாரப் பாடலால் இங்குக் கூறிய பொருள் பின்னும் திடனுறும். இவ்வெண்பாவில் தொழுதெழுவாள் என்றவிடத்துள்ள எழுவாள் என்பதை விடுத்துத் தொழுவாள் என்றே கூறியவாற்ால் கொழு நனைத் தொழுதலையே தொழிலாகக் கொண்டவள் என்ற உரிய பொருள் உணர்த்தப் பட்டது. அத்தொழி லுற்றாளைத் தெய்வந் தானும் தொழும் என்று சிறப்பித் தார். சீதைப்பிராட்டி ஏவியவாறே வன்னித்தெய்வம் அவள் முன்பே வலம்வரும் சுவாலையனுய்த் தொழுது நின்றமை இதனல் உணர்த்தப்பட்டது. இச்சிலப்பதி காரத்தில் தெய்வம் தொழும் தகைமை திண்ணிது என்ற தால் பிராட்டியைத் தீத்தெய்வம் தொழுத வரலாறு

உணர்த்தப்பட்டுள்ள நுட்பம் காண்க. துயிலெழுந்து தொழுவாள் என்றுரைத்தல் அசம்பாவிதம் என்பது தெளியத் தோன்றும்.

மேலே விளக்கிக் கூறியவாற்ருல் இராமாயணமும் பாரதமும் திருக்குறட்கு மூலம் திருவள்ளுவர்க்கு இரு விழி என்ற உண்மை தேறுக.

———

## நாற்பத்தாறுமத்தியாயம்

"தாம் வீழ்வார் மென்றேள் துயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணன் உலகு (குறள். 1103)

இக்குறள் புணர்ச்சி மகிழ்தல் என்னும் அதிகாரத்தில் உள்ளது. இது துயில் மகிழ்ச்சியைக் கூறிற்று. புணர்ச்சியில் துயில் இல்லை. புணர்ச்சி துயில் அன்று. துயிலை மென்றேள் துயிலென்று கூறிற்று. மென்றேள் துயிலிடமன்று. ஆதலின் இக்குறளில் அரியதோர் சிறப்புப் பொருள் கூறப்பட்டுள்ளது என்பது நன்கு காணலாம். அது இக்குறட்சிறப்பு. பொதுவாகிய முப்பாலறத்தான் வரும் சிற்றின்பத்தைக் கூறுமுகத்தான் அதைப் பேரின்பம்பயக்கும் வீட்டறத்துக்குத் தோற்றுவாயாமாறு முற்றுவித்து அவ்வாயிலாய் முதலதிகாரத்திற் கூறிய வீட்டறச்சிறப்பையும் அதனுல் வரும் ஈறிலின்பச் சிறப்பையும் உணர்த்தும் தூமறைச் சுவை பொதியச் சமைத்ததோர் நலபாக அகப்பொருட்பாஈதென்றறிக. "சிறம்பீனும் செல்வமு மீனும்" (குறள். 31) என்று தாம் கூறியதைத் தாமே விளக்கிக் காட்டியவாரும்.

புணர்ச்சி மகிழ்தல் என்பது தாம் வீழ்வார் மென்தோள் தழுவல் என்பதும் பேரின்ப உலகாம் தாமரைக் கண்ணன் உலகு இத்தழுவலினும் இனிதாமோ? ஆகாது என்பதும் இக்குறட்பொருள். இங்குத் தோள் என்றது தோள்தழுவலை என்க, தாம் வீழ்வார் மென்தோள் தழுவலின் மிக்கதோர் இன்பம் இல்லை என்பது முப்பாற் காம நூல் கூறும் பொருள். இப்பொருளைக் காந்தா ச்லேஷாத் அதிக ஸ்வபக: காமிநாம் தூதலாப:" (ஹம்ஸஸந்தேச 1-4 காதலற்குக் காதலிதோள்தழுவலினும் காதலிபால் தூதுவப் பேறு இனிதாம். தமிழ் செய்தது) என்று வேதாந்ததேசிகர் பாடினுர். அக் காந்தாச் லேஷம் இக் குறளில் தாம்வீழ்வார் மென்றேன் துயில் என்னப்பட்

டது. காந்தா என்பது தாம் வீழ்வார் என்றும் ஆச்லேஷ என்பது மென்தோள் துயில் என்றும் அதிக ஸுபக: என்பது இனிது கொல் என்றும் குறளில் நின்றன. இதனுல் புணர்ச்சி என்பது தோள் தழுவல் என்று காட்டப்பட்டதாயிற்று. அத்தழுவலினும் மிக்கது ஒன்று உள்ளது. அது பிரிவில் தாம்வீழ்வார்பால் அனுப்பற்குத் தக்க தூதனைப் பெறுதல் ஆம். தழுவற் பேற்றிலும் தூதுவப் பேறு இனிது என்றவாறு. இந்த ஹம்ஸசந்தேச சுலோகம் இராமபிரான் வாக்கு. தூதுசென்ற அநுமனைத் தோள்களாலாரத் தழுவித் தன்வாக்கைத் தான் மெய்ப்பித்ததாயிற்று. இத்தழுவல் என் உடைமை யனைத்துமாம் (இராமாய. யுத்த: 1-13. தமிழ் செய்தது) என்று அநுமனை ஆரத்தழுவித் தன்னையே நல்கிய வள்ளற் பெருங் கற்பகமாய் விளங்கினுன். அத்தகைய தோர் தழுவலின்பம் நுகர்ந்த அநுமன் நீப்பே வடிவுகொண்டது என்னற் கொத்தானுய் வைகுந்தம் தானும் இத்தழுவலினும் :இனிதன்று என்று அதை வேண்டாது இத்தழுவலே நல்கப்பெற்ற இம்மண்ணுலகத்தே இவ்வாக்கையிலே (வாநர ஆக்கையிலே) தேவரீர் பூசனையைப் புரிந்துகொண்டும் தேவரீர் திருப்புகழ்ப் பாடலாம் இராமாயணத்தைப் பாராயணம் செய்து கொண்டும் நீடூழி அடிமைப் பணிபுரியும் நல்வாழ்ச்சியை அருளவேண்டும் என்று வேண்டி அவ்வாறே சிரஞ்சீவியாய்த் திருவடி என்னும் திருநாமம் தனக்கு நிரூபகமாம்படி இராமபிரான் தொண்டுகள் பலவும் செய்து கொண்டும் திருப்புகழ்கள் பலவும் பாடிக் கொண்டும் நிலமிசைக் காதலடிமைப் பேரின்ப வாழ்ச்சி அருளப் பெற்ருன் (இராமாய. உத்தர. 40. 15—21; இராமாவ. உத்தர. சந்திரகேது. 140). இப்பொருள் ''மலர்மிசையேகினுன்''. (குறள். 3) என்னும் குறட்பொருள் கீழே விளக்குமிடத்து விரித்து உரைக்கப்படும்.

''தம்மை உகப்பாரைத் தாம் உகப்பார்'' (நாச்சி. 11.10) என்று கோதைப்பிராட்டி பாடினுள். தம்மை

உகப்பார் (வீழ்வார்)உகப்பு முன்னுகப்பு. தாம் உகப்பார் (வீழ்வார்) உகப்பு பின்னுகப்பு. ஆதலின் தாம் உகப்பார் (வீழ்வார்) என்றதால் தம்மை உகப்பார் (வீழ்வார்) முன்னுகப்புக் கூறப்பட்டதாயிற்று. இரண்டும் ஒத்த உகப்பு. இருவரும் ஆரத்தழுவி மாறிப்புக்கு இதயம் எய்தும் உகப்பு அது. ''தாள்களை எனக்கே தலைத்தலைச் சிறப்பத் தந்த பேருதவிக் கைம்மாறுத் தோள்களை ஆரத் தழுவி யறவிலை செய்தனன் சோதீ! (திருவாய். 8-1-10) ''ஒன்றுண்டு செங்கண்மால்! யானுரைப்பது உன்னடி யார்க், கென்செய்வ னென்றே யிருத்திநீ, நின்புகழில்-வைகுந்தம் சிந்தையினும் மற்றினிதோ நீயவர்க்கு வைகுந்தம் என்றருளும் வான்' (பெரிய திருவந். 53) என்று சடகோபர் இப்பொருளை விளங்கக் கூறினுர். கரவதம் செய்தருளிய (கொழுநனை) இராமபிரானைச் சீதைப்பிராட்டி ஆரத்தழுவி இன்புற்ருள். (பர்த்தாரம் பரிஷஸ்வஜே. இராமாய. ஆரணிய. 30.39) ''அல்லி மாதர் புல்கநின்ற ஆயிரந்தோளன்'' (பெரிய திருமொழி. 1-7-9) என்ருர் மங்கையர்கோன். அவ்வாறே விராத வதம் செய்த இராமபிரான் சீதைப்பிராட்டியை ஆரத்தழுவி இன்புற்ருன். (இராமாய. ஆரணிய. 5.1) ''ஞானிக்கு நான் பெரிதும் பிரியன், அவனும் எனக்குப் பிரியன்'' (கீதை. 7. 17. தமிழ் செய்தது) ''பல்பிறவி யிறுதியில் வாசுதேவனே அனைத்தும் என்று என்னை ஞானி அடைகின்ருன். அவன் மகாத்துமா. பெறுதற்குப் பெரிதும் அரியன் (கீதை 7. 19. தமிழ் செய்தது.) என்று உலகுக்கொல்லாம் பதியாகிய கண்ணபிரான் பாடியருளி னுன். தன்பால் அன்பில் துறக்கும் மகாத்துமாவை ஆரத் தழுவிப் போரஉகந்து அனைவருக்கும் அந்தராத்துமா வான தனக்கும் அவன் அந்தராத்துமா என்று தன் பெரும் பேருய்க்கொண்டு உள் கலந்து இன்புறும் பதிநல வள்ளன்மை இதனுல் உணர்த்தப்பட்டது. கண்ணனை ''அரும்பெறலடிகள்'' (திருவாய். 1. 3. 1) என்ருர் சடகோபர். சடகோபர் போல்வாரை மகாத்துமா என்றும் அரும் பெறலன்பன் என்றும் கண்ணபிரான் கூறினுன்.

தம்மை யுகப்பாரைத் தாமுகப்பார் என்னும் உண்மை இதனுல் நன்கு புலனுகும்.

தோள்துயில் என்னும் குறள் ஆலமர்வித்தின் அருங் குறள். ஸுஷுப்தி (நன்குதுயிறல், அயர்ந்து துயிறல்) நிலையில் சீவாத்துமா •தன் இதயத்தில் உறைந்து விளங்கும் பரமாத்துமாவினுல் ஆரத்தழுவப்பட்டுப் பேருரு நீங்கி ஒடுங்கி அயர்ந்து துயில்கின்ருன். ஆதலின் சீவாத்துமாவுக்குப் பரமாத்துமா துயிலிடம் (ஸுஷுப்தி ஸ்தாநம்) என்று உபநிடதம் ஓதிற்று. (ப்ருஹதாரண்ய. 4-1-19) அத்துயில் தருவது இன்பம். துயிலில் களைப் பெல்லாம் அற்றுச் சுகம் பெறுகின்ருன். துயிலெழுந்த பின் இனிது துயின்றேன் என்று துயிலின் இனிமையை நினைவுறுகின்ருன். இவ்வாறு சீவாத்துமா பெற்ற இன்பம் வாலறிவனுகிய பரமாத்துமா ஆரத்தழுவிக் கொண்டதால் வந்தது என்று உபநிடங்கள் ஓதின. (சாந்தோக். 6. 8. 1) ப்ருஹதாரண்ய. 6. 3. 21) 'ப்ராஞ்ஞே நாத்மநா வாலறிவனும் பரமாத்துமாவால்) ஸம்பரிஷ்வக்த: (ஆரத்தழுவப்பட்டவனுய்) என்றது ப்ருஹதாரண்யகம் (6. 2. 21) பரமாத்துமாவின் ஆரத் தழுவும் தோள் சீவாத்துமாவின் துயிலிடம் (ஸுஷுப்தி ஸ்தாநம்) என்பதும் அத்தழுவல் தருவது இன்பம் என்பதும் உபநிடதம் உணர்த்தும் உண்மை. தோள் என்றதால் தோள்தழுவலும், துயில் என்றதால் துயில் தரும் இன்பமும் தோள்துயில் என்றதால் தோள் நழுவலின்பமும் இக்குறளால் இனிது உணர்த்தப்படும் நயம் காண்க. இத்தழுவல் ஆரியத்தில் காடபரிஷ்வங்கம் என்னப்படும். ஸம்ச்லேஷம் பரிரம்பம் என்னவும்படும். ''ஏதேனும் ஒரு கிஞ்சித்காரம் பண்ணினுர்க்கு ஸர்வஸ்வ பூதமான காட பரிஷ்வங்கத்தைக் கொடுக்கக் கடவ திருத்தோள்கள்'' (பரமபத. பராப்தி: இது இராம பிரான் அநுமனுக்குக் கொடுத்து மகிழ்ந்த தழுவலைக் கூறியபடி) என்று வேதாந்ததேசிகர் இப்பொருளை இனிது உணர்த்திஞர்.

பரமாத்துமா சீவாத்துமாவை ஆரத்தழுவி மகிழ்வித்தற்குக் காதலி காதலனைத் தழுவிக் மகிழ்வித்தலை உபநிடதம் உவமானமாகக் கூறிற்று. ''ப்ரியயா ஸ்த்ரியா ஸம்பரிஷ்வக்த: (ப்ருஹதாரண்ய. 6. 3. 21). காதற்புணர்ச்சி என்றவாறு. ஆதலின் புணர்ச்சி மகிழ்தல் என்றார். ப்ரியயா ஸ்த்ரியா ஸம்பரிஷ்வக்த: என்ற உபநிடத உவமானம் இக்குறட்கு அடி என்று அறிக. ஆரத்தழுவல் புணர்ச்சிக்கு மகுடம் என்ற காமநூல் நுட்பம் இதனால் உணர்த்தப்பட்டது. மென்றோள் துயில் என்றதன் நலமும் நயமும் எத்தகைச் சீர்மைத்து என்பதை உபநிடதம் கூறும் உவமான உவமேயங்களைக் கொண்டு கண்டுணர்க. தாம் வீழ்வார் என்றதால் உற்ற சதிகளே உணர்த்தப் பட்டார்கள். அறத்தான் வருவதே இன்பம் என்றது திருக்குறட்கு அச்சாணி என்பதைக் கருத்திற் கொள்க.

ஆயினும் துயிலில் பரமாத்துமாவின் தோள் தழுவலால் பெறும் இன்பம் பிராகிருதம். அது சிறிது பொழுதே பெறுமொன்றாகும். அச்சிறுபொழுதளவே பேருருநீங்கலும் பரமாத்துவாவோடு ஒன்றலும் இன்பம் துய்த்தலுமாய் நிகழ்ந்து விழித்துக் கொண்டவுடன் மீண்டும் பேருருப்பூட்டும் புறப்பற்றும் துன்பத் தொடர்பும் முன்போல் கூடிக்கொள்கின்றன. அவை யெல்லாம் அறவே ஒழிந்து மீண்டும் பவத்துக்கு வாராது பேரின்பமாவீடாம் வைகுந்தம் பெறுதற்குச் சீவாத்துமாக்கள் தாமரைக்கட் பரமாத்துமாவைத் தாள்பற்றி அவனருளால் பிறவிப்பவத்தை வேரறுத்து அவனுடைய அப்பிராகிருத திவ்விய உலகமாம் வைகுந்தம் அடைந்து அங்கண் மீளாப் பேரின்ப வாழ்ச்சி பெறுவர். இது வேதம் கூறிய பொருள். அவ்வின்பம் தானும் ''தாம் வீழ்வார் மென்றோள் துயிலினினிது கொல்'' என்று உபநிடதம் கூறிய முப்பாலறத்தான் வரும் தோள் துயிலின்பத்தை உபமானமாக்கி அப்பரமாத்துமாதானே இம்மண்ணுலகில் ''அருளாளர் தாமெனினும் தமக்

கொவ்வாரே'' (தேசிக மாலே. அத்திகிரி. 22) என்னும் படி தன்னே உகப்பாரைத் தான்உகந்து தோள்களால் ஆரத்தழுவி நல்கும் இன்பத்துக்கு நேரொவ்வாது என்று பொய்யில் கேள்விப் புலமைப் பெருமறையாம் இராமாயணம் திருவடியாகிய அநுமன் திருவாக்கால் காட்டித்தரும் அரும் பொருளே இனியதோர் புணர்ப்பில் அவியகத்துறையின் நலனும் சுவையும் பெருகிப் பொதியச் சிறப்பித்துச் சமைக்கப்பட்டதோர் தீங்குறள் ஈதாம்.

மேற்கூறியதின் சாரம்:—பரமாத்துவான தனக்குமே அநுமன் உள்ளுயிராவான் (அந்தராத்துமா ஆவான்) என்று கருதி மகிழ்ந்த பெருமனவள்ளலாய்த் திருவடி என்பதே அநுமனுக்குத் திருநாமமாமாறு அநுமனேத் தோள்களாரத் தழுவியருளிய பேரின்ப வரலாற்றுச் சிறப்பின் குறிப்பாய் இக்குறள் விளங்காநின்றது. நேர்நிறை யில்லா இத்திறத் தோள்துயில் (தழுவ லின்பம்) தந்தருளிய தேவரீர்பால் ஈறிலின்பப்பத்திமைத் திருவெள்ளத்தில் மூழ்கிய அடியேன் வைகுந்தம் தன்னேயும் வேண்டானுயினேன். இவ்வின்பம் பெறப் பெற்ற இம்மண்ணுலகத்தே இவ்வடிவத்தே தூராத மனக்காதல் தொண்டனுய் நின்று தேவரீர் திருப்புகழ் மறையாம் இராமாயணத்தை நாளும் பாடிப்பணியும் பேறு ஒன்றேதான் அடியேன் வேண்டுவது (அம்மா அடியேன் வேண்டுவது ஈதே. (திருவாய். 2. 9.1 என்றது போல்) என்று இயம்பிய அநுமன் விண்ணப்பத்தின் ஒண்மையும் அஃதருளிய சருவலோக சரணியன் வண்மையும் இக்குறள் உணர்விக்கும் பேருண்மை. இராமபிரானுடைய இறையருள்வாய்மையும் அநும னுடைய நீப்புத்தூய்மையும் இக்குறளின் ஆழ்ந்த உட்பொருள்.

———

## நாற்பத்தேழாமத்தியாயம்

மேலத்தியாயத்தில் தாம்வீழ்வார் மென்தோள் துயிலினிமை என்பதன் உரிய சீரிய பொருள் விளக்கப் பட்டது. இவ்வத்தியாயத்தில் தாமரைக்கண்ணனுல கினிமை என்பதன் உரிய சீரிய பொருள் விளக்கப் படுகின்றது. அப்பொருள் தாமரைக்கண்ணன் என்பான் எண் பெருக் கந்நலத் தொண்பொரு ளீறில வண்புகழ் நாரணன் என்றும் வைகுந்தம் என்பது எண்பெருக் கந்நலத் தொண்பொரு ளீறில வண்புகழ் நாரணன் நித்திய விபூதியாகிய நலமந்த மில்லதோர் வைகுந்த உலகு என்றும் சடகோபர் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தார். அது உபநிடதம் பாஞ்சராத்திரம் கீதை இராமாயணம் பாரதம் பாகவதம் திவ்வியப்பிரபந்தம் முதலியவை விளக்கி உணர்த்தும் பொருள். அஃதே திருக்குறட்பொருள். அப்பொருளை விரித்துக் கூறுவாம்.

தைத்திரீய உபநிடதம் இன்ப அளவை (ஆநந்த மீமாஞ்சை) செய்யத் தொடங்கிற்று. மனிதனிடத்தில் தொடங்கிற்று. அறத்தான் வருவதே இன்பமாதலானும் நூல்கொண்டு அறத்தை] அறிந்து அதற்குத்தக ஒழுக மனிதனே உரியனுதலானும் மனிதனில் அவ்வளவு பாட்டைத் தொடங்கிற்று. முற்கண் மனிதன் இன்பம் அளக்கப்பட்டது அது ஒன்று என்று அளக்கப்பட்டது. பின்னர்க் கந்தருவர் இன்பம் அளக்கப்பட்டது. மனிதரின்பத்தை நூறுமடங்கு பெருக்கி அது மானுடகந் தருவரானந்தமாம் (இன்பமாம்) ஒன்று என்றும் அதை நூறுமடங்கு பெருக்கி அது தேவகந்தருவரானந்தமாம் ஒன்று என்றும் அதை நூறுமடங்கு பெருக்கி அதுபிதிரரா நந்தமாம் ஒன்று என்றும் அதை நூறுமடங்கு பெருக்கி அது ஆசாநதேவரானந்தமாம் ஒன்று என்றும் அதை நூறுமடங்கு பெருக்கி அது கருமதேவரானந்தமாம் ஒன்று என்றும் அதை நூறுமடங்கு பெருக்கி அது தேவரானந்தமாம் ஒன்று என்றும் அதை நூறுமடங்கு

பெருக்கி அது இந்திரன் ஆநந்தமாம் ஒன்று என்றும் அதை நூறுமடங்கு பெருக்கி அது பிருகற்பதி ஆநந்தமாம் ஒன்று என்றும் அதை நூறுமடங்கு பெருக்கி அது பிரசாபதி (நான்முகன்) ஆநந்தமாம் ஒன்று என்றும் அதை நூறுமடங்கு பெருக்கி அது பரப் பிரமத்தின் ஆநந்தமாம். ஒன்று என்றும் அவன் மனிதனிடத்திலும் (மனிதன் இதயத்திலும்) சூரிய மண்டலத்திலும் விளங்கும் பரமாத்துமா அவன் ஒருவனே. அவனே உபாஸநம் செய்பவர்கள் உடல் நீங்கியதும் இவ்வுலகினின்றும் சென்று ...... ஆநந்த மயனுன அந்த பரமாத்துமாவை அடைகின்றூர்கள். பரமாத்துமாவின் ஆநந்தம் மனமொழிகள் கிட்ட இயலாது அவற்றுக்கு அப்பாலதென்று அதனின்றும் (அதனளப்பினின்றும்) மீள்கின்றன. பரமாத்துமாவின் ஆநந்தத்தை அறிபவன் எதனின்றும் அஞ்சான் (ஆநந்தவல்லி. தமிழ்செய்தது) என்று தைத்திரிய உபநிடதம் ஒதிற்று. நாராயணன் பரப்ரஹமம். பரமாத்துமா என்று தைத்திரீய உபநிடதம் பின்னும் ஒதிற்று. (தைத்திரீய. 11. அநு). பரமாத்துமா தாமரைக் கண்ணுன் (தஸ்யயதாகப்யாஸம்புண்டரீக மேவமக்ஷிணீ 1-6-7) என்றும் பரமாத்துமாவை உபாஸநம் செய்பவர் அவனுலகு (ப்ரஹ்மலோகம்) சென்று சாயுச்சியம் பெற்று பவஉலகுக்கு மீளார் (8.15.1) என்றும் சாந்தோக்கிய உபநிடதம் ஓதிற்று.

இவ்வாறு உபநிடதங்கள் எண்ணி எண்ணி மேல் மேலும் பெருக்கிப் பெருக்கிக் கொண்டுபோய் இந்திரன் நான்முகன் முதலியோர் இன்பத்தை அளவிட்டு அவை அளவுபாடும் இறுதியும் உடையன என்றும் பரமாத்துமா ஒருவனுடைய இன்பம்தான் அளவு கடந்ததும் இறுதி யற்றதுமான பரமாநந்தம் என்றும் அவன் தாமரைக் கண்ணுன் என்றும் அவன் உலகம் வைகுந்தம் ஒன்றே தான் நலமந்தமில்லதோர் உலகு என்றும் அவ்வுலகு சென்றூர்க்கே பிறவிப்பவத்துக்கு மீளாப் பேரின்ப

வாழ்ச்சி என்றும் உபநிடதங்கள் பரக்கப் பன்னி ஓதியதின் சாரமாய் ''எண்பெருக் கந்நலத், தொண் பொரு ளீறில, வண்புகழ் நாரணன் திண்கழல் சேரே.'' (திருவாய். 1-2-10)என்று சடகோபர் பாடியருளினர். ஈறிலின்பம் நல்கும் பரமாத்துமா தாமரைக்கண்ணன் என்னும் பிரசித்தியைப் பனுவல்களும் ஆன்றபேரிலக்கியங்களும் முழங்காநின்றன. அவையாவன:—

''வெற்றி யுனக்கே தாமரைக்கண்ண! என்னடி வீழ்ச்சி விண்ணப்பமீது'' (ஜிதம்தே, 1.தமிழ் செய்தது) என்று பாஞ்சராத்திரம் ஓதியது. இது ஜிதந்தே மந்திரம் என்னப்படும். இம்மந்திரத்தின் பொருளை ''ஈசுவ ரோஹம் (ஈசுவரன் நானே) என்றிருப்பாரைத் தோற் பித்து நமஸ்தே (அடிவீழ்ச்சிவிண்ணப்பம்)என்று திருவடி களிலே விழப்பண்ணும் க்ரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடு நீண்ட அப்பெரியவாய கண்கள்'' (அமலனுதி.8)'' என்று வேதாந்ததேசிகர் விளக்கியருளினர். இப்பொருளை ''விழிவா ரருள்மெய்யர் மெல்லடி வேண்டிய மெல்லியல் மேல், பொழிவா ரநங்கர்தம் பூங்கரும் புந்திய பூமழையே'' (தேசிக. மும்மணிக்கோவை. 3) என்று அகப்பொருள் சுவை யொழுகப் பாடியருளினர். ஆதலின் இம்மந்திரத்திற்கு ஜிதம்தே (வெற்றியுனதே) மந்திரம் என்று பெயரா யிற்று.

இராமதூதனாய் வந்த அநுமனை இராமனுடைய அடையாளங்களைக் கூறு என்று சீதைப்பிராட்டி கேட்டாள். அவைகளைக் கூறத் தொடங்கிய அநுமன் ''இராமன் தாமரைக் கண்ணன்'' (சுந்தர. 15.8 தமிழ் செய்தது)என்று கூறத் தொடங்கிப் பின்னர் அடையாளங் கள்பிறவற்றைக் கூறினன். உபக்கிரம பராக்ரம நியாயத் தால் (ஜைமினி. உபகரமாதிகரண) தாமரைக்கண் இராம்பிரானுக்கே உற்ற உரிய அடையாளத்துளெல் லாம் தலை என்ற உண்மை காட்டப்பட்டது.

கண்ணபிரானைச் சரணம் அடைந்து மதிநலம் அருள வேண்டி இறைஞ்சிய அருச்சுனன் அஃதருளப்பெறுங் கால் ''தாமரைக் கண்ணு!'' என்று கண்ணபிரானை விளித்துத் தத்துவத்தை உபதேசம் செய்ததை விண்ணப்பம் செய்து கண்ணபிரான் விசுவரூபத்தையும் காட்டியருளுமாறு வேண்டினுன் (கீதை. 11-2). அவன் வேண்டிக்கொண்டபடி கண்ணபிரான். காட்டியருளினுன். காதலடியார்களைக் காத்தருள வேண்டும் என்று அருச்சுனன் கண்ணபிரானைத் "தாமரைக் கண்ணெடி யோனே! பத்துடைய டியரைப் பரனே! நீ காத்தருள வேண்டும்'' என்று வணங்கி விண்ணப்பம் செய்து கொண்டான் (பாரதம். ஆநுசா. ஆயிரநாம. தமிழ் செய்தது)

திருவவதாரம் செய்தருளாநின்ற கண்ணபிரானை வசுதேவர் ''அற்புதப் பாலகனைத் தாமரைக் கண்ணனை ...வசுதேவர் கண்டார்'' (பாகவதம். 10-3-9) தமிழ் செய்தது) என்று வசுதேவர் கண்டு மகிழ்ந்தார். வசுதேவர்க்குக் கண்ணபிரான் முதற்கண் காட்டி யருளியது தனகு தாமரைக் கண்ணிறையெழிற் காட்சி.

''சரநளிர்ப் பொய்கை நாப்பண் சதிர்நலத் தலர்ந்த செந்தா மரையெழில் கவருங்கண்கள்'' (பாகவத. 10-31-2. கோபிகாகீதம். தமிழ் செய்தது) என்று கோவியர் கண்டு காமுற்ற தாமரைக்கண்ணெழிற் காட்சி.

நாலாயிர திவ்வியப்ரபந்தம் தாமரைக்கண்ணன் மறை என்றே கூறுதற்கொத்ததாய்த் திருமாலின் தாமரைக் கண்ணிறைமையையும் தாமரைக்கண்ண ருண்மையையும்முழங்காநின்றது."தான்கடந்த ஏழுலகே தாமரைக்கண் மாலொருநாள், வான் கடந்தான் செய்த வழக்கு'' (இரண்டாந்திருவந்தாதி. 18) செங்கணெடி யான் (ஷை.90) என்றுர் பூதத்தாழ்வார். •நூல் குறளாதலின் அவ்வழக்கே திருக்குறள்நூல் வழக்கு

என்றறிக. ''செங்கணெடியான்'' (மூன்ருந்திருவந்தாதி. 20) என்ருர் பேயாழ்வார். ''செந்தாமரைக்கண் திருக்குறளன்'' (திருவாய். 8-10-3) ''திரிவிக்கிரமன் செந்தாமரைக்கண் எம்மான்'' (ஷ. 2-7-7) தாமரைக் கண்ணனை, விண்ணேர் பரவும் தலைமகனை (ஷ. 2. 6. 3) ''கரியமேனியன் செய்ய தாமரைக் கண்ணன் கண்ணன் விண்ணேரிறை'' (ஷ. 3.6.5) ''காணவந்தென் கண் முகப்பே தாமரைக்கண் பிறழ (ஷ. 4. 7. 4) ''அனைத் துலகு முடைய அரவிந்தலோசனனை'' (ஷ. 6. 7. 10) ''மிக்க ஞானவெள்ளசுடர் விளக்காய்த் துளக்கற்றமுத மாய் எங்கும் பக்கநோக்கறியான் என் பைந்தாமரைக் கண்ணனே'' (ஷ. 2. 6.2) ''செந்தாமரைக் கண்செங் கனிவாய்'' (ஷ. 6. 10. 9) ''தாமரைக்கண்ணன் என் நெஞ்சினூடே புள்ளைக் கடாகின்ற வாற்றைக் காணீர்'' (ஷ 7. 3. 1) என்ருர் சடகோபர், ''பங்கயக்கண்ணன்' (திருப்பாவை. 14) ''செங்கட்டிருமுகத்துச் செல்வத் திருமால்'' (ஷ 30) என்ருள் கோதைப்பிராட்டி, ''அமரர்க்கரிய ஆதிப்பிரான் அரங்கத்தமலன் முகத்துக் கரியவாகிப் புடைபரந்துமிளிர்ந்து செவ்வரியோடிநீண்ட அப்பெரியவாய கண்கள்'' (அமலனுதி. 8) என்ருர் பாண் பெருமாள். ''பங்கய மாமலர்க் கண் பரனை எம்பரஞ் சுடரை'' (பெரிய. திருமொழி 9. 9.4) என்ருர் திருமங்கை யாழ்வார். ''பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய செங்கணெடியேனே'' (சிலப்பதி. மதுரை. காடுகாண். 50-5) என்ருர் இளங்கோ. ''செங்கட்காரி கருங்கண் வெள்ளை'' (பரிபாடல். 3. 81) ''செயிர்தீர் செங்கட் செல்வ.'' (பரிபாடல். 4. 10) என்றது பரிபாடல். செய்ய தாமரைக்கண் செங்கண் என்றது. செங்கணெடியான் என்ற பூதத்தாழ்வார் பிரயோகமும் பேயாழ்வார் பிர யோகமும் செய்ய தாமரைக்கண்ணன் செங்கண்மால் என்ற சடகோபர் பிரயோகமும் செங்கட் செல்வத் திருமால் என்ற கோதைப்பிராட்டி பிரயோகமும் காண்க. கருமுகில் தாமரைக் காடு பூத்துநீ, டிருசுடரிருபுறத் தேந்தி யேடவிழ், திருவொடும் பொலிய, வோர்

செம்பொற் குன்றின்மேல், வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினன்'' (இராமாவ. பால. திருவவதாரம் 53) ''தாமரைக்க ணெம்பெருமான்'' (ஷை. விராதன் 510) ''புண்டரீகக் கணம்மான்'' (ஷை. இரணியன் 121) என்றார் கம்பர்.

•

இத்துணை உலக வேதப் பிரசித்தி நோக்கித் திருமாலின் பரமபதமாகிய வைகுந்தம் என்னும் பேரின்ப உலகு என்பதே தாமரைக்கண்ணன் உலகு என்பதின் உரிய மெய்ப்பொருள் என்று அறிக. வள்ளுவர் எத்திற வைதிக மூதுவர் என்ற உண்மையை இவ்வருங்குறள் ஐயமறக் காட்டி நின்றது. ''வானோர்க்கு உயர்ந்த உலகம்'' (குறள். 346) என்று கூறிய பேரின்ப உலகை (உபநிடதம் கூறிய ப்ரஹ்ம உலகை, மோக்க உலகைத்) தாமரைக் கண்ணன் உலகு என்று எவ்வகை ஐயத்துக்கும் இடம் கொடாது சிறப்பித்த வாய்மையும் நலமும் நயமும் கண்டு வள்ளுவர் வைதிக மெய்யர் என்று தெளிக. வானோர்க் குயர்ந்த உலகம்'' என்றார் வள்ளுவர். ''சேணுயர் வானம்'' (திருவாய். 5. 3.9) ''கொழுஞ் சோதி உயரம்'' (ஷை 4 9-8) ''வானுயரின்பம் மன்னி வீற்றிருந்தாய்'' (ஷை 8.1.9) ''வானுளார் பெருமான்'' (ஷை 2. 3-1) என்றார் சடகோபர். ''வானோர்க் குயர்ந்த உலகம் புகுவார்'' (குறள்.346) என்றார் வள்ளுவர். ''வடிவுடை மாதவன் வைகுந்தம் புகவே'' (திருவாய். 10. 9.8) ''வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே'' (ஷை. 10. 9.9) என்றார் சடகோபர். ''மென்றோேன் துயிலினினிதுகொல் தாமரைக் கண்ணனுலகு'' என்றார் வள்ளுவர். ''ஒன்றுண்டு செங்கண்மால்! யானுரைப்பது உன்னடியார்க்கு என்செய்வ னென்றே இருத்தி நீ—நின்புகழில், வைகுந்தம் சிந்தையினும் மற்றினிதோ நீயவர்க்கு வைகுந்த மென்று அருளும் வான்'' (பெரிய திருவந்.53) என்றார் சடகோபர் வீட்டறக் காதலிற் கலந்த சிந்தையின் இனிமைச் சிறப்பை உணர்த்தும் நயம் காண்க.

தாமரைக்கண்ணெடியனுய் ஆரருள் சுரக்கும் கார் முகில் வண்ணனுய் அபயம் வழங்கும் சரணிய வள்ளலாய்த் திருவடி என்ற பேரும் பேறும் பெற்றுத் தனக்குவமையில்லாத பேரறிவாழியாய் நிலமிசை நீடு வாழுமாறு அநுமனைத் தோள்கனாரத்தழுவித் தோழமை கொண்டு பூரித்த முதுமறைமுதல்வனும் இராமபிரான் பாற் பத்திமுதிர்ச்சிப் பேரின்பத் திருவெள்ளத்தில் திருவள்ளுவர் மூழ்கி மகிழ்ந்து பாடியது இக்குறள் என்பது கறுத்த மனமில்லாதாரக்குக் கண்கூடாம். ''நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய வாயின ராதலரிது'' (குறள். 419) என்ற குறள் அநுமனைப் போற்றியுகந்ததோர் அருங்குறள் என்று அறிக. இது மேலே கூறப்பட்டது. அநுமன் அடையாளமும் காட்சியும் புகழும் இக்குறளில் திகழ்ந்து பொலியும் எழில் காண்க. ''வணங்கிய சென்னியன் மறைத்த வாயினன், நுணங்கிய கேள்வியான் நுவல்வ ஞயினுன்'' (இராமாவ. விபீடணனடைக் 87) ''தனக்குவமை யற்றவன்'' (ஷி. உத்தர. அநுமப்.49) ''ஆறு மைம்பொறி நின்னையும்'' (ஷி. சுந்தர. சூளாமணி. 19) என்ற கம்பர் திருவிருத் தங்கள் திருக்குறளின் மெய்ப்பொருளைக் கண்களில் தெரியக் காட்டித்தரும் நலம் காண்க. காவிய விசுவ ரூபம் காட்டினுன்கம்பநாடன். மலர்மிசை ஏகினுன் (குறள். 3) என்னும் குறளில் இங்குக் கூறிய பொருள் பின்னும் கீழே விளங்கவைக்கப்படும். ''கற்பா ரிராம பிரானை யல்லால் மற்றுங் கற்பரோ'' (திருவாய், 7.5.1) என்பதே திருக்குறட் சாரம். திருக்குறட் சரதம்.

அநுமன் சிறப்பை உணர்த்தும் இக்குறள் நீத்தார்க் கெல்லாம் உபலக்ஷணமாம். நீத்தார் பெருமை என்னும் குறளதிகாரம் அச்சிறப்பின் பரப்பாம். நீத்தார் கண்ணதே உலகம் என்பதே அவ்வதிகாரப் பொருட்குச் சிகரமாம். அதன் பொருள் மேலே விளக்கப் பட்டுள்ளது. அயோத்தி முதலாகத் தண்டகம் இடையாகத் தண்கடல் ஈருகத் தாளால் நடந்து சென்று குகப்பெருமாள்

தொடக்கமாகத் தவசிகள் இடையாக விபீடணுழ்வான் ஈருகத் தன்பாலன்பில் நீத்தாரைத் தனக்கு ஆருயிர் என்று உகந்து அவர்திறத்து நல்லானுய் அவருள்ளும் ''செல்வ விபீடணற்கு வேருக நல்லான்'' (பெரிய திருமொழி. 6.8.5)என்னும்படி அவர்களோடு தோழமை கொண்டு மகிழ்ந்து பூரித்த தெய்வத் திருவருட் சரிதைகளே இராமாயணம் பன்னிப் பணித்துள்ளது. நல்லான் நற்ருள் என்பன ஈரரசுபடாது சக்ரவர்த்தித் திருமகனுய் அவதாரம் செய்து தன்பால் துறந்தார்க்கு வைகுந்தத்திற்போல் ஒருபடி அதனிலும் மிக்கதாமாறு இந்நிலத்தே பேரின்பப் பெருஞ் செல்வத்தைப் போர நல்கிய பெருமனவள்ளற் பெருமான்தான் ஒருவனே நல்லான் தன்தாள் ஒன்றே நற்ருள் என்ற உண்மையை உலகம் கண்களில் தெரியக் காணுமாறு பொலிந்து விளங்கி நின்ருன். தன்பாற் பத்தி தன்னடியாரளவும் பெருகி முற்றி நிற்றல் வேண்டும். அவ்வாறு முற்ருக்கால் தன்பாற்பத்தி பூர்த்தி பெருது என்பது இறைவன் காட்டியருளிய பேருண்மை. ஆதலின் நல்லடியார்கள் இறைவனடியாரளவும் பத்தியை வேண்டி நின்ருர்கள். ''பொன்னுல காளீரோ புவனிமுழு தாளீரோ'' (திருவாய். 6.8.11) ''திருக்குறளன், நறுமாவிரை நாள் மலரடிக் கீழ்ப் புகுதலன்றி அவனடியார், சிறுமா மனிசராய் என்னை ஆண்டார் இங்கே திரியவே.'' (ஷை. 8.10.3) ''இங்கே திரிந்தேற்கு இழுக்குற்றென்'' (ஷை. 8.10.4) என்ருர் சடகோபர். ''போற்றுமுன் னடியார் பொற்ருள் பொடி முடியாட்டுவாயே.'' (பாகவதம். 7.5. 32. தமிழ்செய்தது. இது பிரகலாதாழ்வான் வாக்கு) என்ருர் சுகர். ''உற்றது முன்னடியார்க் கடிமை, மற்றெல்லாம் பேசினும் நின் திருவெட்டெழுத்தும் கற்று'' (பெரிய திருமொழி. 8.10.3) என்ருர் மங்கையர் கோன். ''செம்பொற் கழலிணைச் செய்யா ளமருந் திருவரங்கர், அன்பர்க் கடியவரா யடி சூடிய நாமுரைத் தோம்'' (தேசிக. அமிர்தரஞ்சனி.13) என்ருர் வேதாந்த தேசிகர். ''அடியாரடியே னெனு மார்வ மலால், ஒடியா

வலியா னுடையே னுளெனோ'' (இராமாவ. இரணியன் 104. இது பிரகலாதாழ்வான் வாக்கு) என்றார் கம்பர். ''இவ்விரு திருவடி நிலைகள் இராமபிரானுடைய இரு திருவடிகள் என்று அறியப்படுவன'' ''இவைகளே உலகனைத்துக்கும் சேமம் பயப்பனவாம்'' (இராமாயணம். அயோத். 115-15; 112.21. தமிழ்செய்தது) என்றது இராமாயணம் ''திருமாலைத் தொழுவார்க்கும் தொழுவாரவரைத் தொழுவார்க்கும் எனது வணக்கம் ஆகுக'' (விஷ்ணு தர்மம். 90-55; பாரதம். சாந்தி. 46. 130. தமிழ் செய்தது) என்றன விஷ்ணு தர்மமும் பாரதமும்.

இவை யெல்லாம் நீத்தார் பெருமையை வலியுறுத் தியவாம். துறவாய் முதிர்ந்து கனிந்த மெய்ஞ்ஞானச் சுடர்களாதலால் உற்றதும் உன்னடியார்க் கடிமை என்று ஓதப்பட்டது. அஃதே இறைவனுக்குப் பெரிதும் உகப்பு என்று அவன் திருவுள்ளம் கண்டு மகிழ்ந்து பாடிய பொய்யில் பாடல்கள் மேற்கூறியவை. அவர்களே வானோர்க்கு உயர்ந்த தாமரைக் கண்ணன் உலகு புகுதற்கு உரியர். அவர்க்கே அவ்வுலகு உரியதுமாம். ஈதே நீத்தார் பெருமை அதிகாரச் சாரப் பொருள். இப்பொருள் ''தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி வலைப்பட்டார் மற்றையவர்'' (குறள். 348) ''யானென தென்னுஞ் செருக் கறுப்பான் வானோர்க் குயர்ந்த உலகம் புகும்'' (குறள். 346) என்னும் பாக்களில் விளங்க வைக்கப்பட்டது. ''பகட்டவா வெகுளி மோக பாதக நினைவுட் பட்டைம், புலன்வயத் தோடு மூட ராங்கவர் புகுதற்காகா'' (பாரத. வன. 262. 39. தமிழ் செய்தது) என்று பாரதம் கூறிற்று. பாரதப்பொருளும் குறட்பொருளும் ஒன்றே என்று அறிக. ஒன்று சொல்லி ஒருத்தினில் நிற்கிலாத ஓரைவர் வன் கயவரை என்று யான் வெல்லகிற்பன் உன் திருவருளில்லையேல்'' (திருவாய் 7. 1.7) ''நீர் நுமதென்றிவை வேர்முதல் மாய்த்திறை, சேர்மின் உயிர்க்கதன் நேர் நிறை யில்லே''

(திருவாய். 1. 2.3) ''எண்பெருக் கந்நலத் தொண்பொரு ளீறில வண்புகழ் நாரணன் திண்கழல் சேரே (திருவாய். 1, 2.10) என்ற திருவாய்மொழி உணர்த்தும் பொருளே குறள் உணர்த்தும் மெய்ப்பொருள் என்பது கண்டுணர்க.

•

தாமரைக்கண் வெற்றிப் பரம்பொருளாய்த் தோழன் மார் புடைசூழப் புட்பக(மலர்)மிசை அயோத்திக்கு மீண்டருளிய இராமபிரான் தாமரைக்கண்ணன் என்பது மலர்மிசை யேகினன் என்றும் குறள் விளக்கத்தில் கீழே கண்டுகொள்க.

இவ்வாற்ருல் தாமரைக் கண்ணன் உலகு என்றது நான்முகன் உலகு அன்று இந்திரன் உலகு அன்று என்பது வெள்ளிடை மலைபோல் தெளியக் காட்டப் பட்டது. மேற்கூறிய தைத்திரீய உபநிடதமும் (ஆநந்தவல்லி) சாந்தோக்கிய உபநிடதமும் நான் முகனையும் இந்திரனையும் எடுத்துக் கழித்து பரமாத்துமா வாகிய நாராயணன் ஒருவனே தாமரைக்கண்ணன் அவன் ஒருவனே ஆநந்தமயன். அவனுடைய பரமபத உலகம் ஒன்றே பேரின்ப உலகு அவனை வழிபட்டு அவனருளால் அவன் பரமபதமாகிய வைகுந்தம் புகுவாரே பேரின்பம் பெறுவார் என்றுமே பவத்துக்கு மீளார். அவ்வுலகு அப்பிராகிருத திவ்விய உலகு. பிராகிருத பவ உலகுகளாகிய நான்முகன் இந்திரன் முதலாயினோர் உலகுகள் அன்று. அவைகட்கெல்லாம் அப்பாலதாகிய அத்திவ்விய உலகு ஒன்றே தான் எப்பாலைக்கும் சேமத்தது நலமந்த மில்லதோர் நித்திய உலகு என்று பன்னிப்பணித்துள்ளது கண்டு தாமரைக் கண்ணன் என்பதற்கு நான்முகன் உலகு இந்திரன் உலகு என்று பொருள் உரைத்தல் முரணும் அசம்பா விதமும் என்க. நான்முகன் இன்பமும் இந்திரன் இன்பமும் அளவு உடையன துன்பம் கலந்தன

ஈறுடையன. அவர்களும் துன்ப முற்றவர்களே ஈறு உடையவர்களே, அவருலகும் அவ்வாறே. இந்த உண்மையை அவர்கள் வரலாறுகளே காட்டித்தந்தன. ''யவன்மு னுன் முகனை யாக்கி மறையவற் கருள்கின் ருனே அவனைமா வீடு வேண்டிச்சரணம் நான் அடை கின்றேனே'' (ச்வேதாச்வதா. 6. தமிழ்செய்தது) என்று உபநிடதம் ஓதியது. நான்முகன் திருமாலால் படைக்கப் பட்டவன், கருமவயத்தன். திருமாலால் அருளப்பட்ட வேதத்தை நான்முகனிடத்திலிருந்து மதுகைடவர் பறித்துக் கொண்டு மறைந்தனர். கண்களை இழந்தேனே என்று நான்முகன் வருந்தித் திருமாலைச் சரணம் அடைந்தான். திருமால் மதுகைடவரை வதம் செய்து நான்முகனுக்கு வேதத்தைத் தந்தருளினுன். அளவும் துயரும் ஈறும் உடையவன் நான்முகன். அவன் உலகும் இன்பமும் அவ்வாறே. நான்முகன் கருமத்தில் ஆப்புண்டவன். அவன் தாமரைக்கண்(தாமறையிடத் தில்) பிறந்தவன் ஆதலின் அவன் தாமரைக்கண்ணுன் என்று இக்குறட்குப் பொருள் உரைத்தல் முற்றும் போலியும் முரணும் அசம்பாவிதமுமாம். நான்முகன் பிறந்த தாமரை திருமாலின் உந்தித்தாமரை. அதன் கண் நான்முகன் பிறந்தான். அவனை அங்கண் பிறப் பித்தவன் திருமால். கருமபயனுகப் பிறந்தவன் நான் முகன். கருமத்தை நுகரப் பிறந்தவன் நான்முகன். அவன் பிறப்பு கரும பயனுக வந்ததாதலால் அது துயரின் பிறப்பேயாம்.

தாமரைக் கண்ணுன் உலகு என்பது இந்திரன் உலகு என்று உரைத்தல் பின்னும் மிக்கதோர் போலியும் முரணும் அசம்பாவிதமுமாம். இந்திரனுடைய ஆயிரங் கண்ணும் பாவக்கண்ணும் சாவக்கண்ணுமாம். அது துன்பக்கண். பிறிதொன்று கண்ணெனத் தோன்றுமாறு மறைக்கப் பட்டுள்ளது. ''இந்திரனே சாலுங்கரி'' (குறள். 25) என்றகுறள் இப்பொருட்குறிப்பு. 'வேந் தனும் வேந்து கெடும் (குறள். 899) என்றதால்

இப்பொருள் பின்னும் திடனுறும். இந்திரன்பால் இத்திற வெறுப்புடைய திருவள்ளுவர் அவனைத் தாமரைக்கண்ணன் என்றும் அவன் உலகைப் பேரின்ப உலகு என்றும் கூறினர் என்று உரைத்தலின் மிக்கதோர் முரணும் அசம்பாவிதமும் இல்லை என்பது கண்கூடு. அவ்வெறுப்பே அவ்வுரைக்கு மறுப்பாம்.

———

## நாற்பத்தெட்டாமத்தியாயம்

''அனைத்துலகு முடைய அரவிந்த லோசனன்'' (திருவாய். 6. 7.10) என்ற திருவாய்மொழித் திட்பமே (திருக்குறட் திட்பமுமாம். அரவிந்தலேசனன் (தாமரைக் கண்ணன்) ஒருவனே சருவலோக (அனைத்துலக) நாயகன் சருவலோக (அனைத்துலக) சரணியன் அவனைச் சரணம் அடைதல் ஒன்றே தான் உயிர்களுக்கு உய்வு பாயம் (உய்யுமாறு) அவனைக் சரணம் அடைவாரே பிறவிப் பவக்கடலை நீந்திக் கடப்பார். பவத்துக்கு என்றுமே மீளாது வைகுந்தமாவீடு சென்று பேரின்ப வாழ்ச்சி பெறுவார் என்னும் பொருளை மிகுந்துள்ள முதலதிகாரக் குறட்பாக்கள் விளக்கி நின்றன. முதற் குறளில் ஆதி பகவனும் தாமரைக்கண்ணனுடைய காரண நிலைப்பேரிறைமையும் மிகுந்துள்ளவைகளில் அவனு டைய அவதார நிலைப் பேருண்மையும் உணர்த்தப்பட் டுள்ளது. அவை தாமரைக் கண்ணன் திருவவதார நிலை களின் ஈடுபாட்டிற் பெருகிச் சுவைபட்டோடும் அமுதப் பாக்களாய் நிகழ்கின்றன. அவையெல்லாம் காரணக் கமலக்கண்ணன் திருவவதாரங்களில் செய்தருளிய பல் லரிய துய்ய பெருநல்லுதவிகளின் சிறப்பாம். பரனுகிய தானே தன்னருளில் தானே பின்னும் சிறந்து மொழி மனங்களுக்கு நிலமாகாது. ''அவன் தானுமே அறி வானோ அறியானோ'' (வேதம். தமிழ்செய்தது) ''தனக் கும் தன் தன்மையறிவரியான்'' (திருவாய். 8-4-6) ''தனக்கும் தன்னிலை யறிவரு மொருதனித் தலைவன்'' (இராமாவ. இரணியன் 33) என்னும் படி ஆரருள் சுரக் கும் பேரறப் பரஞ்சோதியாய் விளங்கித் தன்னை அடைந் தார்க் கெல்லாம் வாசியற அபயம் முழங்கித் தன்னையே வழங்கிச் சிறந்த வண்மைப் பொலிவுகளை இப்பாக்கள் காட்டித் தந்தன. இறைவன் திருவவதாரங்களில் திரு வள்ளுவருக்கு உற்றுள்ள ஈடுபாடு எத்துணைச் சீர்மைத்து எத்துணை மாட்சித்து எத்துணைப் பத்திமைப்பான்மைத்து என்பதை இக்குறட்பாக்கள் கண்களில் தெரியக்காட்டித்

திகழ்கின்றன. அவற்றுள்ளும் உலகளந்தபிரான் இராம பிரான் திருவவதாரங்களில் திருவள்ளுவருடைய ஈடுபாடு ஒப்பற்றதொன்ரும் என்னலாம்படி நிகழும் பேரார்வத்தைத் திருவள்ளுவர் நெஞ்சினுல் நோக்கிக் காணீர். அது காணூர் வள்ளுவருள்ளம் காணூரே யாவார். நூற்பெயர் திருக்குறள். நூற்பரன் திருக்குறளப்பன். நூல் கூறும் உய்வுபாயம் திருக்குறளப்பன் மாணடி சேர்தல். ஈதே இங்குக் கூறியதற்குப் போதிய சான்ரும்.

வருங்குறட்பாக்கள் ஆதி திவ்விய மாக்கவி கண்டதும் வண்டமிழ் மாமுனி வாய்க்கேட்டதுமான சரணுகதி வேதமாம் இராமாயணத்தை அடியாகக் கொண்டு பணிக்கப்பட்டுள்ளன. மாண்மை அருண்மை எளிமை நீர்மை வாய்மை வண்மை ஆண்மை கேண்மை முதலிய சுரணிய குணங்களுக்கெல்லாம் இருப்பிடமாய் விளங்கா நின்ற இராமபிரானை அத்திறத் திருக்குணக்கடல் என்று அக்குணங்களைக் கொண்டே காட்டித் தந்து அவனைச் சரணம் அடைந்து பேரின்ப நல்வாழ்ச்சிபெற்று உய்ம்மின் பேரின்ப வீடு பெறுதற்குப் பிறிதோர் உபாயம் இல்லை என்று செய்துள்ள நல்லற உபதேசமாம். அந்நலமெல்லாம் இராமாயணம் கொண்டே உணர்தற்காகும். அந்நலங்களை அவற்றின் சாரவிளக்கங்களாகிய வேதாந்த தேசிகர் அபயப்ரதாநசாரத்துள்ளும் கம்பர் விபீடணனடைக்கலப் படலத்துள்ளும் பரக்கக் கண்டு கொள்க.

இங்குக் கூறும் சரணுகதி வீடுபெறுதற்கு உயிர்ப் பொருள்கள் இறைவன்பாற் புரியும் உய்வுபாயமான (மோக்ஷ உபாயமான) சரணுகதியாம். சிறுபயன் பெறுதற்கு ஒரு சிற்றுயிர் மற்ரெரு சிற்றுயிர்பாற் புரியும் சரணுகதி போன்றதன்று. ஆகையால் இராமாயணமாம் தீர்க்க சரணுகதி வேதத்துக்கு விபீடணன் சரணுகதி பாகம் ஒன்றே உபநிடத (மோக்ஷ உபாய) பாகமாய் நின்றது. அவ்வாறே ஐந்தாம் வேதமாகிய பாரதத்

துக்கு இறைவன் அருளிச்செய்த கீதை ஒன்றே உபநிடத (மோக்ஷஉபாய) பாகமாய் நின்றது.

இனி மிகுந்துள்ள முதலதிகாரக் குறட்பாக்களின் பொருள் கூறப்படும். அவற்றுட் சில பாக்கள் வேறிடத்து ஆங்காங்கு வேண்டிய பொருள்களைக் கூறி விளக்கப் பட்டுள்ளன. அவைகளை எவ்வளவு விரித்து உரைத் தாலும் அவை குன்றக் கூறியவேயாம். கூறியவை கூறிய ஆகா என்று அறிக. அவையெல்லாம் வேண்டிய உரிய பொருள்களே.

———

## நாற்பத்தொன்பதாமத்தியாயம்

### இரண்டாங்குறள் விளக்கம்

கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன் நற்ருள்
தொழாஅ ரெனின். • குறள். 2

இக்குறளின் வான்மையும் வாய்மையும் எத்திற நலமுடைத்து என்பதை ஓர்ந்துணர்க. கற்றதனுல் என்றதன் பொருளைக், "கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத்தக" (குறள். 391) என்ற குறள் விளக்கிற்று. கற்கத்தக்கவையே கற்கப்பட வேண்டும், தகாதன விலக்கப் படவேண்டும் என்றவாறு. பொய்ந்நூல்கள் மயக்கநூல்கள் அவைபோல்வன வெல்லாம் விலக்கப் பட்டன. மெய்ந்நூற் கல்வியே விதிக்கப்பட்டது. பொய்யா மொழியாம் செவிச்செல்வ மாம் செவியிற் சுவையாம் வேதநூலும் அதன் விளக்கங் களான பனுவல்களுமே மெய்ந்நூலாம். "பூண்டவத்தம் பிறர்க்கடைந்து தொண்டுபட்டுப் பொய்ந்நூலை மெய்ந் நூலென் றென்று மோதி மாண்டவத்தம் போகாதே வம்மின்" (பெரிய திருமொழி. 2. 5. 2.) என்ற பெரிய திருமொழி யுபதேசமே திருக்குறளுபதேச மாம். கற்பவை மெய்ந்நூல்களேயாயினும் அவைகள் கசடறக் கற்கப்பட வேண்டுமே யாயினும் அவைகளை அவ்வாறு கற்ற அளவோடு நின்றுவிடல் கூடாது. அவைகள் கூறியதற்குத் தகநிற்றல் வேண்டும் என்று விதிக்கப்பட்டது. தகநிற்றற் பொருட்டே மெய்ந்நூல் கற்றல் என்றவாறு. ஒழுக்கமாய் முற்ருத நூற்கல்வி மட்டிலுமே வெற்றறிவாய்ப் பயனற்று ஒழியும் என்ற உண்மை கூறியதாயிற்று. இங்குத் தகநிற்றல் என்றது அநுட்டாநமாம். தக எனினும் அநு எனினும் ஒக்கும். நிற்றல் எனினும் ஸ்தா(ட்டா)நம் எனினும் ஒக்கும். தகநிற்றல் அநுட்(ஷ்)டாநம்(ஒழுக்கம்) ஆம். •

கற்க கசடற என்ற குறளில் நிற்றல் என்று பொதுப் படக் கூறியது இக்குறளில் நற்ருள் தொழுதல் என்று சிறப்பிக்கப்பட்டது. வீடு பெறுதற்கு (பிறவாழி நீந் தற்கு) உபாயமாகக் கூறப்பட்டுள்ளதால் அவ்வுபாய மாம் சரணுகதி (தாள்சேர்தல்) அது என்று சிறப்பித்தபடி. வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணேர் பெருமான் திருப்பாதம் பணிந்திவ ணேயிது தீர்த்துக் கொள்ளாது போய் ஏதம் பறைந்து அல்ல செய்து கள்ளூடு கதுாய்த் தூய்க், கீதமுழவிட்டு நீர் அணங்காடுதல் கீழ்மையே'' (திருவாய். 4. 6. 8) என்றதால் இங்குத் தான்தொழுதல் என்றது பிறவிநோய் தீர்க்கும் சரணுகதி என்னும் சிறப்புப் பொருட்டு. "பிறவாழி நீந்தல் அரிது'' (குறள். 8) என்று கூறியிருத்தலால் இங்குத் தாள் தொழுதல் என்ற தற்குச் சரணம் அடைதல் என்பதே உரிய பொருளாம். சரணுகதியும் வேதம் வல்லார்பாற் கேட்டு வேதம் வல்லார்களைக் கொண்டு அவர்கள் கூறும் முறையில் விதிவகை பிழையாது செய்யப்பட வேண்டும் என்ற தருமமும் இதனுல் கூறியதாயிற்று. தாந்தோன்றி களாய்த் தோன்றியவாறு வேதம் வல்லார்பாற் கேளாதும் வேதம் வல்லார்களைத் துணைக்கொள்ளாதும் நெறிமுறையில்லாதும் தொழுதல் என்று பேரிட்டுக் கொண்டு ஆடுமது வெறி என்றும் அதன் பயன் கீழ் மையே என்றும் சடகோபர் வலியுறுத்தியது கண்டு அப் பொருளே இக்குறளிலும் கூறப்பட்டுள்ளது என்று அறிக. பெரியாரைத் துணைக் கோடல் என்னும் அதிகாரத்திற் கூறிய பொருள் இங்குப் பின்னும் சிறக்க உறும்.

நற்ருள் என்ற இடத்துள்ள நன்மையும் வாலறிவன் என்ற இடத்துள்ள வான்மையும் ஒ றையொன்று திடப் படுத்தி நிற்கும் நயம் நன்கு உணரப்பட வேண்டும். நற்ருள் என்றதால் நலம் மல்கும் தாள் நலம் நல்கும் தாள் என்னும் பொருள் கூறப்பட்டது. ''துயரறு சுட ரடி'' (திருவாய் 1-1-1) என்றது சடகோபர் தொடக்கத் திருவாய்மொழி. திருவாய்மொழியின் தொடக்க

வலிமை கண்டு சுடரடியின் துயரறுக்கும் வலிமை எத்துணை நலமும் வீறும் உடையது என்ற மெய்ம்மை தெளியக் காணலாம். ''இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம் இனியிந்த உலகுக் கெல்லாம் உய்வண்ண மன்றி மற்ரோர் துயர்வண்ணம் உறுவ துண்டோ'' (இராமாவ. பால. அகலிகை. 82) என்று அத்திற நலப் பிரசித்தியையும் சிறப்பையும் கவிச்சக்ரவர்த்தி கம்பர் மங்கல முழக்கம் செய்தார். ''தீதிலா உதவி செய்த சேவடி'' (ஷ. 83) என்று பின்னும் பெருமுழக்கம் செய்தார். தீயதைத் தூயதாக்கும் வண்ணலம் திகழ் தாள் தீதிலாத் தொன்னலம் நிகழ்தாள் என்று உலகறிந்த பிரசித்தியின் முழக்கம். இறைவன் நற்ருளின் திருப்புகழ்கள் பாடத் தொடங்கிய கவிதார்க்கிக சிங்கமாம் வேதாந்த தேசிகர் ' கல்ல தில் லெழில் தைய லுய்யலும்'' (பாதுகா. 39. தமிழ் செய்தது) என்று முற்கண் கண்ட இத்திருக் காட்சியை முழங்கினர். பதித பாவநத் தாள் என்ற திருப்புகழ் முழக்கம் ''மறுபிறப் பறுக்கும் மாசில் சேவடி மணிதிக ழுருபின் மாஅடியோயே'' (பரிபாடல் 3-1-3) ''வீடளிக்குங்கால் நின்னிற் சிறந்த நிறை கடவுளவை''(4-62-63) ''நின் சேவடி தொழாரு முளரோ'' (ஷ. 3.19-20) என்று பரிபாடல் செய்த முழக்கம். அம்முழக்கமே இங்குக் குறளாசிரியர் செய்தபிரசித்தி முழக்கம். நின் சேவடி தொழாரு முளரோ (ஷ 3-19-20) என்று பரிபாடல் திண்ணம் தேறியபடி. ''கற்றதனுலாய பய னென்கொல் வாலறிவன் நற்ருள் தொழா அரெனின்'' (குறள். 2) என்று சேவடி தொழாரை வீணர் என்று குறள் இகழ்ந்தபடி. கரியாய் விழுந்த பரீக்ஷித்தை உயிர்ப்பித்து எழுப்பிய நற்ருள். ''விழுகரியோர் குமரனென மேவிச் சிறந்தன ... ..... விடலரிய பெரியபெரு மாண்மெய்ப் பதங்களே'' (தேசிக. அதிகார.51) என்ருர் வேதாந்த தேசிகர். கூட்டொரு வரையும் வேண்டாக் கொற்றவன் தாளாதலின் அக்கொற்றவனைப் போல் தானும் கூட்டெதையும் வேண்டாது தானே யாவுமாய்த் தனிநின்று தீதிலா உதவிசெய்து துயர்தீர்க்கும் நலம் உடையது அத்தாள்,

ஆதலின் நற்ருள். ''வேண்டாது சரணநெறி வேருேர் கூட்டு, வேண்டி லயனத்திரம் போல் வெள்கி நிற்கும்'' (ஷ. 47) என்ருர் வேதாந்ததேசிகர். தூதோடித் துயர் தீர்க்கும் நற்ருள். ''கோதவமொன் றில்லாத தகவே கொண்ட கொண்டலென வந்துலகில் ஐவர்க் கன்ருேர், தூதுவஞ யொருகோடி மறைகளெல்லாம் தொடர்ந் தோடத் தனியோடித் துயரம் தீர்த்த மாதவனர்'' (தேசிக. பரமத. 53) என்ருர் வேதாந்த தேசிகர். ''தொடர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது நடந் தான்'' (சிலப். ஆய்ச். 37) என்று இளங்கோ முழங் கிஞர். ''நம் திருவுடையடிகள் நலங்கழல்'' (திருவாய். 1-3-8) ''பெருநிலங் கடந்த நல்லடி'' (ஷ 1-3-10) ''நலந்திகழ் நாரண னடி'' (பெருமாள் திருமொழி. 10-11) ''நலத்திலொரு நிகரில்லா நாதன் பாதம்'' (தேசிக. பரமபத 4) என்பன தொன்னூல்கள் பின்னும் செய்யும் முழக்கம். அத்தாளை வாலறிவன் நற்ருள் என்ருர். வாலறிவன் என்றதற்குத் துய்ய அறிவுடையவன் பெரிய அறிவுடையவன் என்பது பொருள். இதுமேலே விளக் கப்பட்டுள்ளது. இச்சொல் வராகப் பெருமானை உணர்த்தி நிற்கும் உருடிப்பெயர் என்க. ''வானத்தவர்க்கும் அல் லாதவர்க்கும் மற்றெல்லா யவர்க்கும் ஞானப்பிரானை யல்லால் இல்லை நான் கண்ட நல்லதுவே'' (திருவிருத் தம் 99) என்றது சடகோபர் கண்ட நல்லதிருக்காட்சி. ஞானப்பிரான் என்பதை வாலறிவன் என்பதோடும் நல் லது என்பதை நற்ருள் என்பதோடும் ஒப்பு நோக்கி இரண்டினுடைய ஒரு பொருண்மை தெளிக. சரணுகதி என்னும் வீடுதரும் பேரறத்தை ஞானப் பிரான் உவந்த உள்ளத்தனுய்ப் பூமிப் பிராட்டிக்கு உபதேசித்தருளிய தால் அது வராக சரமம் என்னும் பிரசித்தி பெற்ற தாயிற்று. தனக்குவமை யில்லாதான் என்றது எல்லாத் திருஅவதார மூர்த்திகளுக்கும் ஒக்கவே பொருந்தி உரி யதா யிருப்பினும் இத்திரு அவதாரமூர்த்திக்குப் பின் னும் பொருந்தி உரியதாம் என்னலாம்படி இவ்விறைத் திருமூர்த்தி பொலிந்து விளங்கா நின்ருன். ''மானமிலாப்

பன்றியாம் தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனுர், பேசி யிருப்பனகள் பேர்க்கினும் பேராவே'' (நாச்சியார் 11.8) என்று இதன் திடனைக் கோதைப் பிராட்டி காட்டி யருளினுள். இத்திருமொழியில் மானம் என்று அளவு பாடு கூறப்பட்டது. மஹாவராக என்று ஆயிரநாமம் ஓதிற்று. இவ்விடத்தில் மானமில்லாப் பன்றி (அளவு பாடு இல்லாதவராகம்) என்றதற்கு இவ்வவதாரத்துக்கு மானம் (அளவுபாடு) இல்லாததுபோல் உபமானமும் (உவமையும்) இல்லையாம் (ரஹஸ்யசிகாமணி) என்று வேதாந்த தேசிகர் உரைத்தருளினுர். சரணுகதியாம் வீடளிக்கும் உய்வுபாயத்தை முதல் முதலில் விதந்து உவந்து உபதேசம் செய்தருளிய பரமகுருவாகிய ஆதித் தனிக்கோலவராகப் பிரானுக்கு ஞானப்பிரான் என்ற திருநாமம் உருடியாய் நிற்றலாலும் தனக்குவமை யில்லாதானுய்த் திகழ்தலானும் அப்பிரானை நல்லதுவே என்று ஓதியுள்ளதாலும் அருளாலும் அறிவாலும் பரி வாலும் பொலிவாலும் தனக்குவமை யில்லாதான் ஞானப்பிரானே என்றும் அவனே வாலறிவன் என்றும் அவன் தாளே நற்றுள் என்றும் வள்ளுவர் கூறிய திடப் பொருள் என்பது ஐயமறப் புலனுகும். ''பெருங்கேழலார் தம் பெருங்கண்மலர்ப் புண்டரீகம்'' (திருவிருத்தம் 45) என்றுர் சடகோபர்.

மஹாவராக என்று ஞானப்பிரானை ஆயிரநாமம் ஓதியது போல் மஹாவிஷ்ணு என்று சிங்கப்பிரானை மந்த்ரராஜபதமும் மூவடியால் நீணிலம் கடந்து வளர்ந்த விஷ்ணு என்று திரிவிக்கிரமப்பிரானை வேதமும் ஓதின. இம்முத் திருவவதாரங்களும் ''கண்ணும் வடிவும் நெடிய ராய்'' (பெரிய திருமொழி 2-8-8) ''செயிர்தீர் செங்கட் செல்வராய்'' (பரிபாடல் 4-10) ''அளந்ததப் புறத்துச் செய்கை யாரறிந் தறைய கிற்பார் கிளர்ந்தது ககன முட்டை கிழிந்தது கீழு மேலும்'' (இரணியன் வதைப். 130) ''மாண்குறள் கோலப்பிரான் மலர்த்தாமரைப் பாதங்கள்'' (திருவாய் 5-9-6) ''பெரியவாய் மண்ணும்

விண்ணும் என்காற்கு அளவின்மை காண்மின் என்பான் ஒத்து வரன் நிமிர்ந்த'' (திருவிருத்தம் 42) பரம்பொரு ளாய் இருளற மருளறப் பொய்யறத் தோன்றிப் பொலிந்த நலங்கழலடிகள் என்ற உண்மை இக்குறளில் வாலறிவன் நற்றுள் என்று கல்வெட்டாய்ப் பொறிக்கப் பட்டுள்ளது. திரிவிக்கிரமனுய் .உலகெல்லாம் அளந்து வான் கடந்து நிமிர்ந்து பொலிந்த அத்தாளில் அளக்கப் படா நின்ற உலகமெல்லாம் சிற்றணுவென நுண் பொடி யாய் ஒடுங்கிப் போந்தன. ''அடிமலர் நெடிய வாங்கால் அணுவென உலக மூன்றும், பொடியதன் கண்ண தொன்றுய் ஒடுங்கிய வாய வாறே'' (ஸ்ரீரங்கராஜ உத்தர 67 தமிழ் செய்தது) என்று பட்டர் பாடியருளினுர். ஞாலமளந்து வளர்ந்ததினும் மிக்கதும் அரியதுமாகிய ஞானமளந்து வளர்ந்த சிறப்பு இவற்றுல் உணர்த்தப் படும் சீர்மையை ஓர்ந்துணர்க. இங்கு வேண்டும் பொருள் அச்சிறப்புப் பொருளே. ''பின்னுல் அருநரகம் சேராமல் பேதுறுவீர், முன்னுல் வணங்க முயன்மினே —பன்னூல், அளந்தானிக் கார்கடல் சூழ் ஞாலத்தை யெல்லாம், அளந்தா னவன் சேவடி'' (இரண்டாந் திருவந். 91) என்று பூதத்தாழ்வார் இப்பொருளை அருளிச்செய்தார். பன்னூல் (ஞானம்) அளந்தானே ஞாலம் அளந்தான். நரகம் புகாமைக்கு அவன் சேவடியை முன்னுல் வணங்க முயன்மின் என்ற இத் திருவந்தாதிப் பொருளே வாலறிவன் நற்றுள் தொழு மின் என்ற திருக்குறட் பொருள் என்பது தெளியக் காணலாம். ''மாலுங் குறளாய் ...வாலறிவின்...'' என்னும் வள்ளுவமாலைப் பாடலும் (6) இச்சிறப்புப் பொருட் குறிப்பே. ''வாலறிவின்'' என்றதை முன்னும் பின்னும் கூட்டுக. பின்வரும் குறட்பாக்கள் இப் பொருளைப் பின்னும் தெளியக் காட்டித் தரும். இறைவன் சேவடியால் அளக்கப்பட்ட உலகமெல்லாம் நெடிய அச் சேவடியில் அணுவென ஒரு பொடியாய் எப்படி ஒடுங்கிப் போந்தனவோ அப்படியே அளக்கப்பட்ட மற்றுளோர் ஞானமெல்லாம் அணுவினும் நுண்ணியதோர் பொடி யாய் நெடிய அவன் ஞானத்தில் ஒடுங்கிப் போந்தன.

எப்பொருளையும் விலக்கி அளக்கவில்லை. அனைவரும் ஒக்கவே அளக்கப்பட்டு அளந்த அத்தாட் குறியிடப் பட்டவரே. வாசியறத் தன்தாளால் குறியிட்டுக் கொண் டருளிய திருக்குறளப்பன் நற்ருளின் பால் செய்ந்நன்றி குன்றேன்மின் அத்தாளைத் தொழுது பேரின்ப வாழ்ச்சி பெற்று உய்வீராக. தொழாது வீணராகாதீர் என்று திருக்குறளாசிரியர் ஆர்வத்தால் செய்தருளிய நல்லற உபதேசம். வாசியற அளந்து குறியிட்டுக் கொண் டருளிய தாள் செய்த நன்றி நற்ருள் என்றதால் உணர்த்தப்பட்ட நலம் காண்க. அத்திருக்குறளப்பன் வாலறிவன் என்னப் பட்டான். அவன் ''கணக்கறு நலத் தனன்'' (திருவாய். 1·3.5.) அவன் அறிவு வாலறிவு. ''மதியினுற் குறள்மாண்'' (திருவாய். 1.4.3) அவன் தாள் ''பெருநிலங்கடந்த நல்லடிப் போது'' (திருவாய். 1 3-10). திருவாய்மொழி நல்லடிப் போது திருக்குறள் நற்ருள். கணக்கறு நலங்களெல்லாம் ஒன்றிப் பெருகிப் பொலிவனவே யாயினும் அவற்றுளெல்லாம் கருணை தலை என்பது உணர்த்தப்பட்டது. ''உயர்வற வுயர் நலம்'' (திருவாய் 1-1-1)' ''எண் பெருக்கந்நலம் '' திரு வாய் 1-2-10) என்று ஓதப்பட்டிருப்பினும் உயர்வற வுயர் நலக் கருணை சிறக்க உணர்த்தப்பட்டது. இச் சிறப்பை ''ஸீமாதிலங்கிஸ்திரதர கருண:'' (அவதியற்ற திடநிலையுற்ற கருணையுடையவன். தமிழ் செய்தது. தாத்பர்ய ரந்நாவளி. 127) என்று வேதாந்த தேசிகர் விளக்கி உரைத்தருளினர். திருமாலின் கணக்கறு நலக் குணங்களெல்லாம் கருணையாம் திருக்குணத்தால் நலம் பெறுவனவாயும் நலம் உடையனவாயும் திகழ்கின்றன என்று கருணையின் இறைமைத் திடனை வேதாந்ததேசிகர் தயாசதகத்தில் விளங்க வைத்தார் (தயாசதகம் 15). ''சேம மதாம் திருமால்தன் கருணையாலே'' தேசிக ப்ரபந்த 18) என்று ப்ரபந்த ஸாரத்தில் இவ்வுண்மை யைப் பின்னும் திடப்படுத்தினர். திருமால் கருணை என் னும் பொருளே சருவ திவ்யப்ரபந்த ஸாரப்பொருள் என் றவாறு. கருணை காகுத்தன் (தசாவதார. 12) என்பது

இராமபிரானுக்கு உரிய பெயர் என்று காட்டித்தந்தார். தெய்வச்சிலை யண்ணலாய்த் திருப்புல்லாணியில் கோயில் கொண்டு விளங்கும் இராமபிரானைக் கருணாகர நம்பி என்று சாஸநம் கூறிற்று (திருவள்ளுவர் தென்பாண்டி நாட்டார் என்பதைக் கருத்தில் கொள்க.) அத்திறக் கணக்கறு நலத்தனன் (குணாகரன் ஸர்வகுணோபேதன்) கருணை வள்ளல் (ஸர்வபூதஹித. நயாவான்) திடசங்கற்பன் (ஸத்யப்ரதிச்வர) நன்றியறிபவன் (க்ருதஞ்ஞ) பெருமனவள்ளல் (மகாத்மா) பொய்யா மொழியன் (சத்ய வாக்ய, த்விர் நாபி பாஷதே) திடவிரதன் (த்ருட வ்ரத) என்றெல்லாம் இராமாயணம் பன்னிப் பணித்த உயர்வற வுயர் நலக் கடலாய் அனைத்துலோக சரணியனாய் அடைந்தவர்க்கு அபயம் அருளும் வள்ளலாய் விளங்கும் இராமபிரானை வாலறிவன் என்றும் அவன் தாளை நற்றாள் என்றும் இக்குறள் காட்டும் உண்மை பின்னும் தெளியக் காணலாம்.

''விழிவா ரருள்மெய்யர்'' (தேசிக. மும்மணி. 3) என்ற திருநாமம் இராமபிரானாய்த்திருவவதாரம் செய்த பேரருட் பரம்பொருட்குச் சாலவும் உரியதும் சிறந்ததுமாம் என்ற மெய்ம்மையைக் காட்டித்தருவானாய்த் திகழ்ந்த நிலைகள் பலபலவாம் அவற்றுட் சிலவற்றை இங்கு எடுத்துக் காட்டுவாம்.

அயோத்திக்கு மீண்டு எழுந்தருள வேண்டும் என்று பரதாழ்வான் இராமபிரானைத் தொழுது இறைஞ்சினான். அந்நிலையில் ஒருவரையொருவர் நோக்கி நிற்பாராயினர். அந்நிலையின் நலத்தை (வான்மையை).

வீற்றிருந் துடச மொன்றில் வீறுடைச் சடை
பொறுத்த
போற்றுதற் பரஇராம குருவினை யொரு முகூர்த்தம்
நோற்றசொற் பரத நம்பி நோக்கமொன் றென்ற
நன்றே
சாற்றிய தவத்தின் மூர்த்தி சாலவே நோக்கிக்
கண்டான்
(இராமாய. அயோத்தி. 99-25

தமிழ் செய்தது). இது பரதன் இராமனை நோக்கிக் கண்ட காட்சி. பரதன் அறிவு.

> மாண்சடை மிளிர்ந்த சென்னி மரவுரி தரித்த மேனி
> வாணெடு முடியெ டுத்த வணத்திரு கரத்தின் கூப்பு
> சேணடி வீழ்ச்சி தன்னில் செறிநலத் தனை இராமன்
> காணருமூழி யந்தக் கதிரவ னெனத்தான் கண்டான்
> (இராமாய.அயோத்தி. 100.1. தமிழ்செய்தது)

இது இராமன் பரதனை நோக்கிக் கண்ட காட்சி. இராமன் அறிவு "நம்பியைக் காண நங்கைக் காயிரம் நயனம் வேண்டும் கொம்பினைக் காணுந் தோறும் குரிசிற்கு மன்ன தேயாம்" (இராமாவ.பால.கார்முக.43) என்றதினும் சீரியதாம் என்னலாம்படி நிகழ்ந்து நின்ற அருள் வார்விழி மெய்யன் பெருநலத் திருநோக்கு (வாலறிவு) அது. சரணியன் நோக்கும் சரணாகதன் நோக்கும் பக்க நோக்கறியாது ஒன்றி நின்ற சீர்மைத் தாம் அந்நிலை என்றவாறு. அஃது அத்திறப் பான்மைத்தும் வான்மைத்துமாம். "பரதனுக்குப் பாதுகமும் அரசும் ஈந்து" (பெருமாள் திரு.10-4) என்றபடி அத்திறப்பாதுக மகுடம் சூடப்பெறும் பேரரசுக்கு உரிமை பயப்பிக்க வல்லதாயும் உள்ள அஞ்சலிக் கையனாய் (ப்ராஞ்சலி)ச் சரணம் அடைந்த பரதனுடைய அஞ்சலியின் பெருமையும் அவ்வஞ்சலியின் நலமாட்சியை அருள்புரியும் சரணியன் கண்டு போர உள்ளமுவந்த வள்ளன்மையும் இதனால் உணர்த்தப்பட்டது. "மின்மினி ஒளியில் மாயும் பிறவியை வேரில் வாங்கச் செம்மணி மகுடம் நீக்கித் திருவடி புனைந்த செல்வன்" (விபீடணனடைக். 138) என்றார் கம்பர். இங்குத் திருவடி என்றது திருப்பாதுகத்தை. மின்மினி ஒளியில் மாயும் பிறவி என்றது மின் மின்னும் ஒளியின் நிலையுமில்லாத ஆக்கையை (பிறவியை) என்க. மின்மினிப்பூச்சியின் ஒளியன்று. "மின்னின் நிலையில் மன்னுயி ராக்கைகள்" (திருவாய் 1-2-2) என்ற திருவாய்மொழியை நோக்குக. ஆக்கை நிலையா

மையை வலியுறுத்தியவாறு இராமபிரானைச் சரணம் அடைந்து அவன் திருப்பாதுகம் சூட்டப் பெருதார் பவ அழி நீந்தார் என்ற உண்மை இதனுல் காட்டப்பட்ட தாயிற்று.

தாயால் வாங்கித் தரப்பட்ட மண்ணரசும் மணிமகுடமும் கைக்கிட்டியிருக்கச் செய்தும் அவற்றை ஒழித்துக் கழுவிய கையனுய் ஆதலின் சரணம் அடைதற்கு உரிமை தரும் அஞ்சலிக் கையனுய் (ப்ராஞ்சலி:) துறவின் திருவாய்ச் சரணியனைச் சரணம் அடைந்து விளங்கிய சரணுகதனுன பரதனைக் காணரு மூழியந்தக் கதிரவன் எனக் கண்டுகந்த இராமபிரான் பெருமன நலப்பொலிவு(வாலறிவு) விளக்கப்பட்டது. இவ்வுண்மையை நன்கறிந்த விபீடணன் ''பொழிந்த தோர் கருணைதன்னுல் புல்லினனென்று தோன்ற எழுந்தினி திருத்தி யென்னு மலர்க் கையா லிருக்கை யீந்தான்'' (விபீடணனடைக். 141) என்று அருளப்பட்ட விபீடணன் ''இளையவற் கவித்த மோவி என்னையும் கவித்தி யென்ருன்'' (ஷை 145) என்று வெண்டிச் ''செல்வ விபீடணற்கு வேருக நல்லான்'' (பெரிய திருமொழி 6-8-5) என்னும்படி பெருஞ்செல்வம் பெறப் பெற்ருனுயினன்.

சரணியன் தன்கண் அருள்பெறும் சரணுகதரை வள்ளல் என்று கருதி அவர்பால் நன்றியறிவு உடையனுய்த் தான் அவருடைய ஆளும் உடைமையுமாம் என்று களிகூர்ந்து பூரிக்கும் பெருமனச் செல்வனுய் நிகழ்கின்ருன். கொடுப்பவன் வள்ளல் என்பது உலகத்தார் அறிவு. தன்கண் பெறுபவன் வள்ளல் என்பது சரணியன் அறிவு. அத்திற அறிவுடைய சரணியனை வாலறிவன் என்னும் சொல் உணர்த்தி நின்றது. தன்னைத் தொழுவார் நால்வகைப் படுவார் என்றும் அவர்கள் அனைவருமே வள்ளல்கள் (உதாரா :) என்றும் அவர்களுள்ளும் தன்னைச் சரணம் அடைபவன் ஒருவனே ஒருமனப் பத்திமையனுன ஞானி என்னப் படுவான் அவன்

பெறுதற்கு அரியன் (ஸுதுர்லப:) அவன் எனக்கு ஆத்துமா அது என்மதம் என்று கண்ணபிரான் இயம்பி யருளினன் (கீதை. 7-16-19). துறவு கண்டால் உறவு கொள்ளும் தூமனப் பரமன் மாமனச் செல்வன். அவன் வாலறிவன். ''தாள்களை எனக்கே தலைத்தலைச் சிறப்பத் தந்த பேருதவிக் கைம்மாறாத், தோள்களை ப்பாரத் தழுவி யென்னுயிரை அறவிலை செய்தனன் சோதீ'' (திருவாய். 8-1-10) என்று துறக்கும் சரணுகதர்பால் தானும் அறவிலை செய்தனன் அரும் பெறலடிகள் என்னலாம்படி பக்த பராதீனனுய் விளங்குகின்றான். ''முதலஞ்சலிக்கு ஆளாவான்'' (சததூஷணி. தமிழ் செய்தது. ப்ரதமாஞ் சலி கிங்கர: என்பது அங்குள்ள ஆரிய சுலோகம்) என்றார் வேதாந்ததேசிகர் ''நின்னார்வலர் தெழுதகை யமைதி யின மர்ந்தோயு நீயே அவரவர் ஏவலாளனு நீயே அவரவர் செய்பொருட் கரணமு நீயே'' (பரிபாடல் 4-71-73) என்று பரிபாடல் பாடிற்று. ''ஆளாயும் வாழ்தி அரசாள்தி யாரிவ் வதிரேக மாயை யறிவார்'' (இராமாவ. உயுத்த. நாகபாசப். 256) என்று கம்பர் பாடினர். அத்தகையதோர் அறிவு வாலறிவாம். அஃதுடைய அவன் ஒருவனே வாலறிவன். அவனால் மதிநலம் அருளப்பட்டாரே அவனை அறிவார். அருளப் படாதார் அறியார். அவனைச் சரணம் அடைவாரே மதி நலம் அருளப் படுவார். ''யார் என்னையே சரணம் அடை கின்றார்களோ அவர்களே இந்த மாயையை (அவிச் சையை, பவத்தை)க்கடப்பார்'' (கீதை் 7-14 தமிழ் செய்தது). இந்த உன் கண்ணால் என்னைக் காண இய லாது. திவ்வியக் கண்ணை உனக்குத் தருகின்றேன். அது கொண்டு எனது அனந்தமான ஞானநிறைமையையும் அனந்தமான செல்வநிறைமையையும் காண்'' (கீதை 11-8. தமிழ் செய்தது), ''என்னால் நினைவும் அறிவும், வேதங்கள் அனைத்தாலும் அறியப்படுபவன் நானே'' வேதங்களை அறிபவனும் நானே'' (கீதை 15-10 தமிழ் செய்தது.) என்று அந்த வாலறிவன் தானே அருளிச் செய்தான். இவ்வுண்மையே முத்தமிழ்த் துறையின்

முறை போகிய உத்தமக் கவிகள் செய்துள்ள முழக்கம். ''கொள்ளக் குறைவிலன் வேண்டிற்றெல்லாம் தரும் கோதில் என் வள்ளல் மணிவண்ணன் தன்னைக் கவி சொல்ல வம்மினே'' (திருவாய் 3-9-5) என்று உத்தமக் கவிகள் எல்லோரும் கவிபாடி மகிழ்ந்தது அத்தகைய மணிவண்ணனது அருளின் வண்மையையும் அறிவின் வான்மையையும் என்று சடகோபர் காட்டித் தந்தபடி. பிறர் செல்வம் கொள்ளக் குறையும் செல்வம். கொள் வார்க்குக் கொடுத்த செல்வத்தின் அளவுக்குக் கொடுப் பவர் செல்வம் குறையும். மணிவண்ணன் செல்வம் ஒன்று தான் குறையாது நிற்கும். வரையாது கொடுக்கக் குறையாது மல்கும் செல்வம் மணிவண்ணன் ஒருவனதே யாம். கொள்ளாமையே குறைவாம் கொண்டது நிறை வாம் என்றவாறு. தான் பரிபூரணனு யிருக்கத் தன்னை அடைந்தாரைத் தன்னை யொத்த பரிபூரணராக்கும் தனிப் பெருவள்ளல் என்றபடி. ''பூர்ண: பூரயிதா'' (ஸஹஸ்ர நாமம். பூரணன் பூரணம் செய்பவன் (தமிழ் செய்தது) என்று ஆயிரநாமம் ஓதிற்று.

வாலறிவனும் மணிவண்ணன் அறிவின் வான் வான்மையை மேலும் காண்பாம். நல்லார் தருமத்தின் நுட்பம் அறிதற்கு மிகவும் அரிது. (இராமாய. கிஷ் கிந்தா. 15-15 தமிழ் செய்தது.) என்று வாலறிவன் வாலிக்குக் கூறினன். வாலறிவனுல் ப்ராஞ்ஞனுல், உயர்வற உயர்நல முடையனுல்) வாலறிவனும்படி தூய பேரறிவுடையனும்படி)வாலி அருளப்பட்டு நற்கதி பெற்ருனயினன். வாலிமோக்ஷம் என்பது சம்பிரதாயம் (சான்ருேர்மரபு) வாலிவதம் என்பதன் அரிதுணர்பான்மையவாய திட்ப நுட்பங்களை வான்மீகி இராமாயணத்துள்ளும் கம்பர் இராமாவதாரத்துள்ளும் தூமனத்தராய் ஆழ்ந்து ஓர்ந்து நோக்கிக் காண்க. மல மனத்தராலும் பகைமனத்தராலும் காண இயலாது.

வாலறிவனருளால் (டியால்)முக்கால மெய்ஞ்ஞானி யனுய் வாலி கூறினன் என்பதை வாலி கூற்று காட்டித்

தரும். இவ்வுண்மையை இங்குச் சிறிதே கூறுவாம். "கோவியற் றரும முங்கள் குலத்துதித் தோர்கட் கெல் லாம் ஓவியத் தெழுத வொண்ணு வுருவத்தாய் உடைமை யன்றே. ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை அமிழ் தில் வந்த, தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலும் செய்கை" (வாலிவதை. 78) என்பது வாலி கூற்று. இது வாலியின் இறந்தகால நிகழ்ச்சி ஞானத் தைக் காட்டி நின்றது. ஸுதீக்ஷ்ணர் ஆச்ரமத்தில் சீதைப் பிராட்டி இராமபிரானுக்குத் தாழ்மையுடன் வணங்கிச் செய்து கொண்ட விண்ணப்பத்தை வாலி கூறியதாம். சரணம் அடைந்த தண்டகவன முனிவர்களைக் காத்தற் பொருட்டுத் தனக்கு யாதும் தீங்கு இழைக்காத யாதும் பிழை செய்யாத அரக்கரைக் கொல்வதாகச் செய்த பிரதிக்கினை தருமம் அன்று என்பது பிராட்டி செய்த விண்ணப்பம். "தேவரீருக்கு அடியேன் நினைவூட்டு கிறேனே யன்றி உபதேசம் செய்யவில்லை" (இராமாய. ஆரணிய. 9-24 தமிழ்செய்தது) என்பது அந்த விண்ணப்பம். அதற்கு இராமபிரான் கூறிய விடை: இது க்ஷத்திரிய தருமத்தால் செய்த பிரதிக்கினை அன்று. சரணிய தருமத்தால் செய்தது. என்னுயிரையேனும் விடுவேன். உன்னையுமேனும் விடுவேன். சரணுகதர்க்குச் செய்த பிரதிக்கினையை விடேன் என்பது. இங்கு வாலி சீதைப் பிராட்டி தருமம் அன்று என்று கூறியதை அறிவுறுத்தி "என்பால் எப்பிழை கண்டாய்" "மறுநெறி கூறிற் றுண்டோ" (க்ஷத்ரிய தருமம். வாலிவதை. 79) என்று பிராட்டியைப் பிரிந்தமையால் நன்று உரைக்கும் தேவியின்மையின் செய்கைதிகைத்தனை போலும் என்றுன். "புத்தி: வைரம் விநா ஹந்தும் ராக்ஷஸாந் தண்டகாச்ரிதாந் அபராதம் விநா ஹந்தும் லோகாந் வீர ந காமயே" (ஆரண்ய. 9 25) என்பது பிராட்டி கூறிய இராமாயணசுலோகம். ஈதே வாலியின் கேள்வி. ஸுதீக்ஷ்ணர். ஆச்ரமத்தில் சீதைப்பிராட்டியும் இராமபிரானும் தனிமையில் செய்த இந்த ஸம்வாதத்தை வாலி அறிந்ததுஅவன் முக்கால ஞானியாயதால் என்று அறிக.

''அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணும் ந து ப்ரதிஞ்ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராஹ்ம ணேப்யோ விசேஷத:'' (ஆரண்ய. 10-19) என்பது இராமபிரான் கூறிய இராமாயண சுலோகம். இராமாயண ஆரணிய காண்டம் ஒன்பது பத்தாம் சருக்கங்கள் விரித்துக் கூறிய சீதாராம ஸம்வாதக் கருத்துக்கள் வாலி கூற்றில் அமைந்துள்ளதை நன்கு நோக்குக. இது வாலியின் இறந்தகால நிகழ்ச்சிகளின் அறிவு.

அவ்வாறே ''கூட்டொரு வரையும் வேண்டக் கொற்றவ பெற்ற தாதை பூட்டிய செல்வ மாங்கே தம்பிக்குக் கொடுத்துப் போந்து, நாட்டொரு கருமம் செய்தாய் எம்பிக்கிவ் வரசை நல்கிக் காட்டொரு கருமம் செய்தாய் கருமம்தா னிதன்மே லுண்டோ'' (வாலிவதை. 81) என்பது வாலியின் வருங்கால நிகழ்ச்சி ஞானத்தைக் காட்டி நின்றது. நாட்டில்(அயோத்தியில்) மூத்தோனுகிய உனக்குத் தந்தையால் கொடுக்கப்பட்ட அரசை இளையவனுன தம்பிக்கு (பரதனுக்கு) க்கொடுத்தாய். அது நீ நாட்டில் செய்த கருமம். அதன்மேல் காட்டில் (கிட்கிந்தையில்) மூத்தோனுகிய எனது அரசை என் தம்பிக்கு (சுக்கிரீவனுக்கு)க்கொடுத்தாய். இது நீ காட்டில் செய்த கருமம். இதன் மேலும் இத்திறக் கருமம் உண்டோ என்ருன் வாலி. மூத்தோனுகிய இராவணனைக் கொன்று இளையோனுகிய அவன் தம்பிக்கு (விபீடணனுக்கு) இலங்கையரசைக் கொடுக்கப்போகும் செய்கையை விஞமுகத்தால் வாலி கூறியவாறு. இது இலங்கையில் செய்யப் போகும் கருமம். அது போல் வனவும் நோக்கிக் கண்டுகொள்க. இவ்வாறு வாலி கூற்றின் ஆழ்ந்த உரிய அரிய மெய்ப்பொருளைச் சம்பிர தாயம் அறிந்த சான்ருேர் வாய்க்கேட்டு அறிந்து கொள்க. அவ்வாறு அறிந்து கொள்ளாது தாந்தோன்றி களாய் இராமபிரானை இகழ்ந்து கூறும் பொருள் கூறு வார்க்கு இழிவு பயப்பதாம் என்பதை அறியாராயினர்,

''வெற்றர செய்தி யெம்பி வீட்டர செனக்கு விட்டான்'' (வாலிவத. 126) என்று வாலிதானே தன் வாயால் தான் வீட்டரசு பெற்றுய்ந்ததை உலகறிய இயம்பினுன். அது பெருத தம்பியின் இழவுக்கு வருந்தினுன். கற்பகத்தைச் சார்ந்தார்க்கும் காஞ்சிரங்காய் கிட்டுவது, முற்பவத்திற் செய்த வினை என்று வாலி கருதினுன் போலும். வாலிமோக்ஷம் என்ற சம்பிரதாய உண்மை வீட்டர செனக்கு விட்டான் என்று வாலி தானே தன் வாயால் விளம்பிய உண்மை என்று கண்டக்கால் வாலிவதத்தைப் பற்றி ஒரு சிலர் கூறும் பொருள் மருள் என்பது வெள்ளிடை மலையாம்.

வாலி ஏசல் என்பது இராமபிரான் திருப்புகழை வாலி பேசியதாம் என்ற வாய்மையை ஓர்ந்துணர்க. ''புகழையார் பரிக்கற் பாலார்'' (வாலிவத. 79) என்றதை ஓர்க. ''தூற்றியது புகழ்ச் சாற்றியதாம்'' (வேதம் தமிழ் செய்தது. நிந்திதம் பவதி ஸ்துதம் என்பது வேதம்). ''ஏசியே யாயினும் ஈன்துழாய் மாயனையே பேசியே போக்காய் பிழை'' (பெரிய திருவந். 38) என்ருர் சடகோபர். இராமபிரான் வாலிக்கு இராமடமூட்டிய பண்பன். மந்திரம் காட்டிய மாண்பன் என்று அறிக. நல்லார் தருமம் அறிதற்கரிது என்று நேரே கூறுவான் தொடங்கி வாலிக்கு மதிநலம் அருள்வானுயினன். ஈதறிதற்கியலாது இறைவனை இகழ்வார் கூற்று இறைவன் புரியும் கண்புதையல் விளையாட்டு என்க.

நல்லார் அறிவு வாலறிவு (பரமதுர்ஜ்ஞேய:) என்று இராமபிரான் உணர்த்தினுன். இங்கு நல்லார்(ன்) என்னும் சொல் அனைத்துலோக சரணியனை (ஸர்வலோக சரண்யனை) உணர்த்தி நிற்கும் சக்தி உடையது. ஆதலின் சருவலோக சரணியனை (இராமபிரானை) வாலறிவன் என்ருர் வள்ளுவர். வாலிக்கு இராமபிரான் கூறியது வாலறம் (சரணுகதி தருமம், சரணியதருமம்). சரணுகதி

சரணிய தருமத்தின் (வாலறத்தின்) குருத்தின் பொருளை சருவலோகசரணியனுன வாலறிவன் (இராமபிரான்) உணர்த்தினன் என்றவாறு. அவன் நல்லான். ஸதாம் தர்ம: (நல்லார்கள் தருமம்) என்ற விடத்தில் ஸத் (நல்லான்) என்னும் சொல்லுக்கு இராமபிரான் ஒருவனே உற்ற உரிய பொருள். பிறர்பால் நல்லான் என்னும் சொல் இராமபிரானுடைய அநந்த திருக்குணங்களின் சிறிதளவு உடைமையால் உபசார வழக்கு என்ற உண்மை காட்டித் தரப்பெற்றது. "முதலாய், நல்லான ருளல்லால் நாமநீர் வையகத்துப் பல்லா ரருளும் பழுது" (முதல் திருவந்தாதி. 15) என்று பொய்கைப் பிரான் பாடியருளினர். ஸதாம் (நல்லார்) தருமம் என்றது இராமாயணம். நல்லான் என்ருர் பொய்கைப் பிரான். விபீடணற்கு வேருக நல்லான் (பெரிய திருமொழி. 6-8-5) என்ருர் மங்கையர்கோன். ஆதலின் அவ்வாலறத்தை உணர்த்திய வாலறிவனுகிய இராமபிரான் தாளை நற்ருள் என்ருர் வள்ளுவர். நல்லான் தாள் என்றவாறு. நல்லாணுகிய வாலறிவன் தன்னிலும் அவன் தாள் பின்னும் நல்லது என்னும் உண்மை இதனல் உணர்த்தப் பட்டது. "பொதுநின்ற பொன்னங்கழல்" (மூன்ருந் திருவந்தாதி. 88) என்றது அவ்வுண்மை. இராமாயணம் இவ்வுண்மையின் விளக்கமும் விரிவும் ஆம். அதனுள் ளும் வீடணன் அடைக்கலப் பிரகரணம் (படலம்) அதன் மகுடமாய் விளங்குகின்றது. அதன் ஒண்மை நன்மை செம்மை மெய்ம்மைகளெல்லாம் வேதாந்ததேசிகர் அபயப்ரதாந ஸாரத்திலும் கம்பர் விபீடணன் அடைக் கலப் படலத்திலும் அமுதம் பெருக ஒன்றிப் பொலியா நின்றன. தமிழராய்ப் பிறந்தும் பரம பாஸ்கரருன சக்ர வர்த்தித் திருமகனும் இராமபிரானையும் செந்தமிழ்க் கவியுலகுக்குப் பகலவனும் கவிச்சக்ர்வர்த்தி கம்பரையும் இகழ்ந்தொழிவார் தமியரே என்னும் உண்மை கண்களில் தெரியக் காண்ப தொன்ரும். இனி இறைவன் வாலறி வின் வான்மையைக் காண்பாம்.

விபீடணன் சரணம் அடைகின்ருன். இராகவனைச் சரணம் அடைகின்றேன் என்று விண்ணின்று அடைக்கலம் பகர்கின்ருன். இராமபிரான் முதலிகள் புடைசூழ இருக்கின்ருன். சரணம் அடைந்து வந்த விபீடணனைத் தள்ளுவதா கொள்ளுவதா என்று முதலிகளுள் சர்ச்சை எழுகிறது. அது இராமபிரானன்பால் அவர்கள் பரிவினடியாக எழுந்தது. அவர் இருதிறப் பட்டார். விபீடணன் நம்பத்தக்கவனல்லன். குற்றமுடையவன் பொல்லான் ஆதலின் அவன் கொள்ளத்தகாதவன் என்று ஒருசாரார் முடிவுகட்டினர், அவராவார் அங்கதன் சரபன் சாம்பவான் முதலாயினேர். விபீடணன் வந்த காலம் இடம் நிலைமை முதலியவைகளைக் கொண்டு அவன் நம்பத்தகாதவன் என்று அனுமானம் செய்து அந்த அனுமான அறிவு கொண்டு அவன் கொள்ளத் தகாதவன் தள்ளத்தக்கவனே என்று முடிவு தேறினர்கள். அத்திரளில் அறிவின் மிக்க அநுமன் ஒருவனே விபீடணன் நல்லான் நம்பத்தக்கவன் குற்றம் அற்றவன் ஆதலின் கொள்ளத் தக்கவன் என்று முடிவு தேறினன். விபீடணனுடைய நற்குணங்களையும் நல்லொழுக்கத்தையும் நேரில் கண்டு அறிந்தவன் அநுமன். ஆதலின் தான் கண்டறிந்த கண்கூட்டறிவு கொண்டு விபீடணன் கொள்ளத்தக்கவன் என்று துணிந்தான். அநுமன் துணிவுக்குக் கண்கூடு அடி. அங்கதாதியர் துணிவுக்கு அநுமானம் அடி. கண்கூடு அநுமானத்தினும் வலிமிக்கது: அவை முரணுங்கால் கண்கூடு அநுமானத்தைப் பாதித்து நிற்கும் என்பது சீரிய தருக்க நியாயம். இந்நிலையில் வாலறிவன் பகர்ந்து பொலிந்து நின்ற வண்ணத்தைக் காண்பாம்.

சரணுகதன் கொள்ளவே தக்கவன் என்று தான் கூறப்போகும் முடிவு அத்திரளோர் கட்டிய முடிவுக்கு முற்றிலும் முரணுதலின் அதை அவர் உடன்படார் என்னும் திருவுள்ளத்தால் சரணுகதனைக் கைக்கொள்ளும் விரதம் உடைய சரணியனுதலின் அதற்குத் தக அத்

திரளில் தன்னைத் தாழவிட்டுக் கொண்டு இவ்விஷயத்தில் நானும் சிறிது கூற விரும்புகிறேன். எனக்குப் பரிவாரான நீங்கள் நான் சொல்லப் போவதைச் சடக்கெனத் தள்ளி விடாமல் கேட்டுத்தரவேண்டும் என்று இரந்தருளித் தன் முடிவைக் கூறப் புகுவானுயினன். இங்கு முதலிகள் கூறியது தன்பால் பரிவினுல் என்றதால் ஒருபொருளைத் துணியப் புகுவார் எதன் கண்ணும் எவ்வகையான பரிவும் பற்றும் அற்றவராய் உரிய ஏதுக்களைக் கொண்டு முறை யால் கசடற ஆய்ந்து துணிதல் வேண்டும். பரிவு பற்று முதலியவை தருக்கம் செய்வார்க்கு இழுக்காம். தன்பாற் பரிவே விபீடணன்பால் நலிவுக்கு ஏது வாயிற்று என்பது குறிப்பு. தன்னை அடைந்தவனைத் தன் சீர்மை யாலும் வண்மையாலும் ஒக்கப் பார்த்தருளும் சரணி யன் சரணுகதன் என்று புல்லிதாகச் சொல்ல மாட்டாமல் மித்ர பாவேந (தோழமையில்) வந்தவன் என்று சரணுக தனைய் வந்த விபீடணனைக் கூறினன். இதனின் மிக்க வாலறிவு யாதாம்? அவ்வாறு தோழமையில் (சரணுகத னுய்) வந்தவனைக் கைவிடமாட்டேன். ''மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந'' (இராமா. யுத்த, 18-3) என்பது இராமாயண சுலோகம். மித்ரபாவேந என்றதால் தோழமை உள்ளில்லதேயாயினும் மித்ர பாவனையெ அமையும். தோழமைப் பான்மை யற்றிருப் பினும் தோழமைப் போன்மையே (மித்ரபாவனையே) அமையும் என்றதின் மிக்க வாலறிவு யாதாம்? தோழன் என்று பேரிட்டுக்கொண்டு வந்தாலும் அவனை நான் ஒருபடியாலும் ஒருக்காலும் கைவிடேன். சரணம் அடை தல் ஒன்றே பற்றுதற்கு ஏது. அடைக்கலம் பகர்ந்தானைக் கைவிடமாட்டேன். விபீடணன் கடலுக்கு அக்கரையே நின்று என்னைச் சரணம் அடைகின்றேன் என்ருனுகில் நான் அக்கரைக்கே விரைந்து சென்று அவனைக் கொள்ளக் கடவனுயிருக்க நானிருக்கும் இடத்தில் வந்து சரணம் அடைகின்றேன் என்ற அவனை நான் விடும்படி என்? சரணுகதன் என்ற சொல்மாத்திரமேபற்ருசாக வரும் இவன் விடத்தக்கவனு பற்றத்தக்கவனு என்ற மீமாஞ்சை

எதற்குறுப்பாவது? சரணுகதன் என்ற சொல்லைச் செவிப் படுத்தினவனை நான் விடவல்லேனல்லேன். சரணுகத னுக்குக் குணங்கள் இல்லையேயாயினும் குற்றங்கள் மலிந் துள்ளவேயாயினும் இவனைக் கைக்கொள்கை பரிவார்க்கு உடன்பாடன்றேயாயினும் ஒருபடிக்கும் நான் இவனை விடமாட்டேன். முதலிகள் கூறிய விடுகைக்கு ஏதுக் களான குற்றங்களுக்கு சாத்தியத்தோடு வியாத்தி இல்லாமையால் அவை உண்டேயாயினும் உதவாப் பழுதேயாம். ஆதலின் முதலிகள் கூறிய குற்றங்கள் ஆகவுமாம் கூருத இராவணுதியர்க்கு அடைத்த குற்றங் களாகவுமாம். இவையெல்லாம் சரணுகதனை விடுதற்கு ஏதுக்களாகா "வீடணுயினும் இராவணன்தானே யாயினும் தோழமையில் அடைந்தவனை ஒருக்காலும் விடமாட்டேன். (இராமாய. யுத்த. 18-35 தமிழ் செய்தது) "சரணம் அடைந்தார்க்கு அபயம் கொடுத்தல் என் விரதம்" (இராமா. யுத்த 18-33 தமிழ் செய்தது) விடுதல் எனக்கு விரதமுரிவாம். அடைக்கலம் பகர்தல் என்னும் ஒன்றுக்கே பற்றுதல் என்னும் சாத்தியத்தோடு பிறிதெக் கூட்டையும் வேண்டாது திடநிலை வியாத்தி உற்றது என்று தூயதோர் சீரிய தருக்க வியாத்தி நியமத்தையும் தனது திட நியமத்தையும் ஒருங்கக்கூறி அது தன் மதம் என்று விளம்பினுன்.

இது வாலறிவன் தருக்கம். அறிவின் மிக்க அநு மன் துணிபு உடன் பாடாயினும் அவன் கூறிய விபீட ணன் குணமுடைமை என்னும் ஏதுவை உடன்படவில்லை. பற்றுதலாம் சாத்தியத்தோடு குணமுடைமையாம் ஏது வுக்கு வியாத்தியின்மையின் அது ஏது ஆகாது என்பது சரணியன் மதம். சரணியன் நியாயம். இந்நியாயத்தை "நீலக்கருநிறமேக நியாயம்" (திருவாய் 6-6-1) என் ருர் சடகோபர். "ஆரருள் சுரக்கும் நீதி அறம்" (விபீடணனடைக் 127) என்ருர் கம்பர். இதன் வியாப்தி நியமத்தைப் "பற்றுதலன்றி யுண்டோ அடைக்கலம் பகர்கின்ருனை" (ஷி 108) என்று கம்பர் சுருங்கச்

சொல்லி விளங்க வைத்தார். ''உடைந்தவர்க் குதவா ஞயின் உள்ளதொன் றீயா ஞயின் அடைந்தவிர்க் கரு ளாஞயின் அறமென்னு மாண்மை யென்னும்'' (ஷ 111) என்று வெதிரேகமுகத்தால் கம்பர் திடப்படுத்தினர்.

விபீடணனுயினும் இராவணன் தானேயாயினும் தோழனுய் வந்து அடைந்தவனே நான் ஒருக்காலும் விடமாட்டேன் என்று விளம்பிய சரணியன் ஒருவனே வாலறிவன். அவன் ஒருவன் தாளே நற்றுள் என்ற உண்மை, இதனுல் காட்டித்தரப் பட்டது. சரணுகதனுக வந்த விபீடணனேப் பற்றுதற்கும் குணமுடைமையை ஏதுவாகக் கூறிய அறிவின்மிக்க அனுமன் அறிவுதானும் அறிவல்ல என்னலாம்படியாயது கண்டு சரணியன் அறிவு ஒன்றேதான் வாலறிவு. சரணியன் ஒருவனேதான் வாலறிவன் என்ற உண்மை தெளியக்காட்டப்பட்டதா யிற்று. குற்றம் மலிந்தவரும் சரணுகத ராக வந்தால் சரணுகதர் என்றது கண்டு குணமுடையாரைஒக்கவே கொள்ளற்காவார், தள்ளற்காகார் என்றது சரணியன் அறிவின்வான்மை என்றவாறு.. ஆதலின் அவன் தாளே நற்றுள் என்றுர் வள்ளுவர். குணம் மலிந்த வீடணன் போல்வானுயினும் குற்றம் மலிந்த இராவணன் போல் வானுயினும் சரணுகதன் என்று பேரிட்டுக் கொண்டு வந்தவனே விட வல்லேன் அல்லேன் என்றுசரணுகதராய் வந்தவரைக் குணம் மலிந்தாராயினும் குற்றம் மலிந்த வராயினும் அவரனேவர்க்குமே வாசியற அடைதற்குச் சமனுய்ப் பொது நின்ற சரணியன் பொற்றுள் ஆதலின் அத்தாளே நற்றுள் என்றுர். "பொது நின்ற பொன் னங் கழல்'' (மூன்றுந்திருவந். 88) என்றுர் பேயாழ் வார். ''ஸர்வ ஆத்மாக்களுக்கும் ஸாமாந்ய தைவதமான பொதுநின்ற பொன்னங்கழல்'' (பரமபத. பராப்தி)என்று பேயாழ்வார் பாடற்பொருளே வேதாந்த தேசிகர் காட்டித் தந்தார். ''நல்லடிப் போது'' (திரு வாய். 1-3-10) ''நலங்கழல்'' (திருவாய். 1-3-8) ''புக ழுநல் லொருவன்'' (திருவாய். 3-4-1) என்றுர் சடகோ

பர். ''நல்லானருளல்லால் நாமநீர்வையகத்துப் பல்லாரருளும் பழுது'' (முதல் திருவந்தாதி. 15) என்று பொய்கையாழ்வாரும் ''செல்வ விபீடணற்கு வேருக நல்லான்'' (பெரியதிருமொழி 6-8-5) என்று திருமங்கைவாழ்வாரும் பாடினர். விண்ணின்று அடைக்கலம் பகர்ந்த செல்வன் (ஸ்ரீமாந்) 'அந்தரிக்ஷகத : ஸ்ரீமாந்' (இராமாய. யுத்த.16-17) ஆதலின் விபீடணனைச் செல்வன் என்றும் முதலிகள் திரண்டு விபீடணனைத் தள்ளவேவேண்டும் என்று வற்புறுத்துவாராயின் அவர்களைத் தள்ளிவிபீடணனை பற்றியேகொள்வேன் என்று சரணியன் இயம்பியதால் முன்னீன்ற கன்றைத்தள்ளி அன்றீன்ற கன்றுக்கு இரங்கி அதைப் பரிந்து பற்றிக் கொள்ளும் சரணியனுடைய ஆவினதியல்பு நோக்கி விபீடணற்கு வேருக நல்லான் என்று திருமங்கையாழ்வார் பாடியருளினர். ''இளையவற் கவித்த மோலியென்னையும் கவித்தி யென்ருன்'' (இராமாவ. விபீடணனடைக் 145) என்றபடி திருவடி புனைந்த செல்வ விபீடணற்கு வேருக நல்லானய் விளங்கிய சருவலோக சரணியன் தானேயே இக்குறளில் நற்ருள் என்று திருவள்ளுவர் கூறியுள்ள உண்மை திருவள்ளுவர் கண்ணுல் நோக்கிக் காண்பார்க்குக் கண்கூடாம்.

''சரணுகதன் குற்றமுடையவனே யாயினும் அவனைப் பற்றுதல் நல்லார்க்கு நன்று'' (இராமாய. யுத்த. 18-3. தமிழ் செய்தது) ''நல்லார் தருமத்தின் நுட்பம் அறிதற்கு மிகவும் அரிது'' (இராமாய. கிட்கிந்தா. 15 15. தமிழ் செய்தது) முதலிய வாலறிவன் நன்மொழியே முதல் திருவந்தாதி மூன்ருந்திருவந்தாதி திருவாய்மொழி பெரிய திருமொழி திருக்குறள் முதலியவைகளுக்கு மூலம் என்ற உண்மையைக் கண்டுணர்க. பற்றுத லன்றி யுண்டோ அடைக்கலம் பகர்கின்ருனை'' (விபீடணனடைக். 108) ''ஆதலின் அபயமென்ற பொழுதத்தே யபய தானம் ஈதலே கடப்பாடென்ப தியம்பினீ ரென்பால் வைத்த காதலா னினி

வேறெண்ணக் கடவதென் கதிரோன் மைந்த! கோதிலா தவனை நீயே யென்வயிற் கொணர்தி யென்ருன்'' (ஷ. 120) என்று இங்குச் கூறிய பொருளைக் கம்பர் சவியுறப் பாடினர்,

முதலதிகாரக் குறட்பாக்களின் பொருள் இந்நூலுள் ளும்வேறிடத்தும் விளக்கிக் கூறப்பட்டுள்ளது. திருக்குறள் சூத்திரம் போன்றது. எவ்வளவு கூறினும் அது குன்றக் கூறியதேயாம் ''கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறள்'' (திருவள்ளுவமாலை, 54'') என்ற இடைக்காடர் பாடலைக் கருத்திற் கொள்க. ஆதலின் இங்குக் கூறியதே போதியதாம்.

———

## ஐம்பதாமத்தியாயம்

### மூன்ருங்குறள் விளக்கம்

மலர்மிசை யேகினுன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார். குறள். 3

•

முற்குறளில் ''மாருதிவினய வார்த்தை செவிமடுத் தமிழ்தின் மாந்தி'' (விபீடண்னடைக். 106) என்றபடி விபீடணன் பற்றிக்கொள்ளத் தக்கவன் என்று கூறிய அறிவின்மிக்க அநுமனேயும் பற்றிக் கொள்ளப்பட்ட செல்வவிபீடணனேயும் நிலமிசை நீடு வாழ்வாராயினர் என்று உணர்த்தி அவ்வாருயது அவர்கள் சரணியன் பொதுநின்ற மாணடி சேர்ந்ததால் என்றும் அம் மாணடியைச் சேர்ந்து அவர்கள் போல் நல்வாழ்ச்சி பெற்று உய்வீராக என்றும் இப்பாடலில் குறளாசிரியர் உபதேசம் செய்கிருர்.

இக்குறள் இராமபிரானுக்குச் சிறப்புற உரிய தொன்றும் என்னலாம்படி சிறப்புற்றதோர் அருங்குறள். மலர்மிசை யேகினுன் என்பது அச்சிறப்பு. மலர்மிசை. நிலமிசை என்ற இரு சொற்ருெடர்களும் அச்சாணியாய் ஒன்றையொன்று திடப்படுத்திக் கொண்டு இச்சிறப்புப் பொருளேக் கையிற் கனிபோல் காட்டிநின்றன. மலர் மிசை என்றவிடத்து மலர் என்னும் சொல் நறுமலர் போன்றும் நறுமலர் மிளிர்ந்தும் திகழும் புட்பகம் என்னும் விமாநத்தை (ஊர்தியை) உணர்த்திநின்றது. புஷ்(ட்) பகம் என்னும் சொல்லில் கவ்விகுதி சிறப்புப் பொருட்டு. சிறந்த மலர் என்பது புஷ்பகம் என்னும் சொல்லின் உரிய பொருள். அதன் (மலர்)மிசை ஏகினுன் என்றதால் இராமபிரான் புட்பகமேறி அயோத்திக்கு விரைந்து மீண்டருளிய திருச்சரிதை உணர்த்தப் பட்டது. ''இளவேனிற் பருவ மலரெழில் மன்னியதும் இளவேனில் மாதத்தினும் (சித்திரை மாதத்தினும்) மிக்க கண்ணுக் கினியதுமான புஷ்(ட்)பகம் என்னும் அந்த உத்தம

விமானத்தை வானர வீரநல்லான் (அநுமன்) கண்டான்'' (இராமாயணம். சுந்தர. 8-8 தமிழ் செய்தது. வஸந்த புஷ்போத்கர சாரு தர்சநம் வஸந்த மாஸாதபி காந்த தர்சநம் ஸ புஷ்பகம் தத்ர விமாந முத்தமம் ததர்ச தத் வாநர வீர ஸத்தம: என்பது அங்குள்ள ஆரிய சுலோகம்) என்று இராமாயணம் கூறிற்று. சிறப்பை உணர்த்தும் கவ்விகுதிப்பொருள். இதனுல் விளக்கப்பட்டதாயிற்று. நன்று எழில் பொழியும் மலர் என்பது புஷ்பகம் என்னும் சொல்லின் வியுற்பத்தி உணர்த்தும் உரிய பொருள் என்றது அவ்விளக்கம். இது ஐந்திரப் பரவை (அநுமன்) கண்டகாட்சி. உவமானத்திலும் (புஷ்பத்தினும்) உவமேயம் (புஷ்பகம்) சிறந்தது என்றது அக்காட்சி. ஆதலின் இக்குறளில் போற்றப்பட்டவனும் புட்பகத்தை நேரில் கண்டறிந்தவனும் மாணடி (திருவடி) என்னும் திருநாமம் தாங்கித் திகழ்பவனும் ஐந்திர வியாகரண பண்டிதனுமான அநுமன் காட்சியைத் தன்காட்சியாகத் கொண்டு கவ்விகுதிச்சிறப்புடைய புஷ்பகம் என்னும் சொல்லையே மலர் என்று அநுவதித்து மலர்மிசை (புட்பகமிசை) ஏகினுன் என்று குறளாசிரியர் பணித்தார். புஷ்பகம் என்னும் இராமாயண ஆரியம். மலர் என்னும் குறள் தமிழ் என்ற உண்மை காண்க. அது வியுற்பத்தி சித்தமான பொருளாதலின் அதன் தூய்மையும் வாய்மையும் சித்தமாம்.

வேதாந்த தேசிகர் பாடிய ரகுவீர கத்தியத்தால் இவ்வுண்மை நன்கு திடனுறும் "கபுஷ்பித ரிபு பக்ஷ, புஷ்பக ரபஸகதி கோஷ்பதீ கருத ககநார்ணவ'' என்பது அங்குள்ள ஆரியம். ''மாற்ருர் பக்கத்தை வானமலராக்கியவனே! மலரின் (புட்பகத்தின்) விரைந்த கதியால் வானக் கடலைக் குளப்படியாக்கியவனே!'' என்பது அதன் தமிழ். இங்கு இரண்டு வானமலர்கள் கூறப்பட்டன. இன்மையாக்கப்பட்ட மாற்ருர் (இராவணுதியர்) பக்கமாம் வானமலர் ஒன்று வானத்தில் விரைந்தேகிய வானமலர் மற்ருென்று. கம் என்றும் ககந என்றும் வானம் கூறப்பட்

டது. இல்லாமையை வானமலர் (கபுஷ்பம் ககநபுஷ்பம் ககநகுஸுமம்) என்று கூறுதல் மரபு. வானத்தில் மலர். தோன்றற்காகாமையின் அவ்வாறு கூறுதல் மரபாயிற்று. ஆதலின் அது அஸம்பவம், அஸம்பாவிதம் என்னப் பட்டது. கபுஷ்பித என்று கூறி உடனடுத்துப் புஷ்பக ரபஸ கதி என்று கூறியதால் இரண்டும் மலர்களாம். வியுற்புத்தி சித்தப் பொருள் அது என்ற நுட்பம் காட்டப் பட்டதாயிற்று. ஒன்று வானமலர் (அஸம்பவம்) மற் றொன்று வானத்தில் ஏகிய மலர் (புட்பகம்) என்றது அந்நுட்பம். மலர்மிசை ஏகினுன் என்றதால் மலர்மிசை விரைந்து ஏகினுன் என்பது உணர்த்தப்பட்டதாயிற்று. மனோஜவம் (மனவேகமுடையது) என்பது இராமா யணம் (யுத்த. 124-29) ஆதலின் புஷ்பக ரபஸகதி என்ருர் வேதாந்த தேசிகர்.

அபிஷிச்ய சலங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் க்ருதக்ருத்யஸ் ததா ராம: விஜ்வர: ப்ரமுமோத ஹ|| (பால. 1-85) "அயோத்யாம் ப்ரஸ்திதோ ராம: புஷ்ப கேணஸுஹ்ருத் வ்ருத: (ஷை 1-86) என்று இராமாயணம் கூறியது. "விபீடணற்கு முடியபிடேகம் செய்து அதனுல் வெம்மைதீர்ந்து மனக்களிப்புடையனுய்த் தோழர்கள் புடைசூழப் புட்பகத்தால் அயோத்திக்கு ஏகுவானுயினன் என்பது அதன் தமிழ்.

• இதன் விளக்கமாய்த் "துன்னின நெடும் புட்பக மிசையொரு சூழல்" (இராமாவ. உயுத்த மீட்சி. 15-8 கம்பர்புட்பக மிசையே வள்ளுவர் மலர்மிசை என்று அறிக) "எழுபது வெள்ளத் தோடு மிரவிகான் முளையு மெண்ணின் வழுவிலா விலங்கை வேந்தும் வான்பெரும் படையுஞ் சூழத் தழுவுசீ ரிளைய கோவும் சனகன்மா மயிலும் போற்ற விழுமிய குணத்து வீரன் விளங்கினன் விமானத் தும்பர் (ஷை. 160) "அண்டமே போன்ற தய்யன் புட்பக மண்டத் தும்பர் எண்டருங் குணங்க ளின்றி முதலிடை யீறின் ருகிப் பண்டைநான் மறைக்கு மெட்டாப் பரஞ்சுடர் பொலிவ தேபோல் புண்டரீ கக்கண்

வெற்றிப் புரவலன் பொலிந்தான் மன்னோ'' (ஷை. 161) என்றார் கம்பர். இதனால் புண்டரீகக்கண் (தாமரைக்கண்) அத்திற ஒப்பற்ற வெற்றிப் பரம்பொருளாய்த் தோழர் கள் புடைசூழப் புட்பக மலர் மிசை அயோத்தி ஏகினான் என்பதும் அவ்வெற்றிதானும் புண்டரீகக்கண்வெற்றி என்பதும் மலர்மிசை ஏகினான் என்ற திருக்குறள் உணர்த்தும் சீரிய பொருள் என்பதைக் கம்பர் அரும் பாடல்களை நோக்கிக் காண்க.

''இலங்கையை வலஞ்செய்தேக வெனா நினைந்திடு முன் மானம், வலங்கினர் கீழை வாயில் வர'' (ஷை. 161) என்றார் கம்பர். இதனால் புட்பகத்தின் மனவேககதி காட்டப்பட்டது. அத்துணை வேகத்தேகியது பரதன் விரதத்தைக் கருதி என்க. அக்கருத்தால் அத்திற வேகத் தில் ஏகினான் என்ற பொருளை ''மலர்மிசை ஏகினான்'' என்றார் வள்ளுவர். மலர் (புட்பகம்) என்றதால் அவ் விரைவு கூறப்பட்டதாயிற்று.

''எரிநெடு வேல ரக்க ரொடு மிலங்கை வேந்த னின்னுயிர் கொண்டவன் தம்பிக் கரசு மீந்து திருமகளோ டினிதமர்ந்த செல்வன்'' (பெருமாள் திருமொழி. 10-7) ''அம்பொனெடு மணிமகுட அயோத்தி எய்தி அரசெய்தி ......எம்பெருமான் தன் சரிதை செவியால் கண்ணால் பருகுவோ மின்னமுதம் மதியோம்'' (ஷை. 10.8) என்று குலசேகரப் பெருமாள் இராமாயண ஸாரமாய் இப் பொருளை அருளிச்செய்தார். இப்பொருளை ஸ்வஸமய விகடித ஸுகடித ஸருதய ஸஹதர்ம சாரிணீக'' ''விபிஷீண வசம்வதீக்ருத லங்கைச்வர்ய நிஷ்பந்ந க்ருத்ய, கபுஷ்பித ரிபு பக்ஷ, புஷ்பக ரபஸ கதி கோஷ் பதீக்ருத் ககநார்ணவ, ப்ரதிஞ்ஞார்ணவ தரண க்ருத க்ஷண பரத மநோரத ஸம்ஹித ஸிம்ஹாஸநாதிருட (ரகுவீரகத்யம்) என்று ஒருசேரச்சவியுற வேதாந்த தேசிகர் கூறினர். அதன் தமிழ்:

உன்மனத்துக் கினியஅறத் துணைவி யோடே
ஒன்றியவோ ரொருவ! நல விலங்கை யாட்சி
நின்மனத்த விபீடணன்தன் வயத்த தாக்கிச்
செயக்கடவ ததுசெய்து முடித்தாய் மாற்ருர்
வன்பக்கந் தனைவான மலரே யாக்கி
வானளக்கர் குளப்படியாய் மலரில் வேக
மன்கதியி லதுகடந்தாய் விரதம் காத்த
பரதனுளங் களியுரியா சனத்த மர்ந்தாய்

என்பது. பெருமாள்திருமொழி இக்கத்தியத்தில் எழில் காட்டும் நயம் காண்க. பெருமாள் திருமொழியில் மலரூர்தியில் ஏகியது விதந்து கூருதிருப்பினும் அவன் தம்பிக் கரசுமீந்து திருமகளோ டினிதமர்ந்த செல்வன் என்று கூறியிருத்தலான் மலரூர்தியில் ஏகியது ஸந்தம்ச (இடுக்கி) நியாயத்தால் கூறியதாம். திருமகளோடு இனிதமர்ந்த செல்வன் என்று பெருமாள் திருமொழி கூறிற்று ; ஸஹஸீத என்று இராமாயணம் கூறிற்று. (யுத்த. 131.59) ஸஹதர்ம சாரிணீ என்று ரகுவீரகத்தியம் கூறிற்று. திருவொடும் பொலிந்தான் (திருமுடிசூட்டுப்ப 22) என்று இராமாவதாரம் கூறிற்று. இராமாயணம் ஸஹஸீத என்றதை அறத்துணைவி என்ருர் வேதாந்த தேசிகர். ஸீதை என்று இராமாயணம் கூறிற்று. திருமகளோ டினிதமர்ந்த செல்வன் என்று குலசேகரப் பெருமாள் கூறினுர். திருவொடும் என்றும் சனகன்மா மயில் என்றும் கம்பர் கூறினுர். ஸீதைப் பிராட்டி திருமகளின் அவதாரம் என்னும் அவதார ரகசியம் இதனுல் உணர்த்தப்பட்டது. ''சனகியாம் கடிகமழ் கமலத் தவ்வை'' (இராமாவ. அயோத். மந்தரைசூழ்ச்சி 88) என்று கம்பர் வேறிடத்து இந்த ரகசியத்தை விளங்கப் பாடினுர். சானகி என்னும் தத்திதப் பெயர் சனகி என நின்றது. சனகன் மகள் என்பது அதன் பொருள். அவ்வை என்பது தாமரைக் கோயிலாளாகிய திருமாமகளின் திருநாமம் என்பது காண்க. அவ்வை (யார்)என்னும் ஞானமுதியோள் திருமகளின் திருநாமம் இடப்பட்ட புண்ணியவதி என்று அறிக.

மலர்மிசை ஏகினன் என்னும் குறள் விபீடணனுக்கு இலங்கையரசை நல்கிப்புட்பகத்தால் (மலர்மிசை) அயோத்தி எய்தி சீதையோடு திருமுடி சூடி இனிதமர்ந்த செல்வனும் இராமபிரானைக் கூறியது என்னும் மெய்ப் பொருள் இவ்வாற்ருல் விளக்கப்பட்டது. இராமாயணப் புட்பகம் திருக்குறள் மலர் என்பது அம்மெய்ம்மை.

நிலமிசை நீடு வாழ்வார் என்றதால் மேற்கூறிய பொருள் அசைக்கவொண்ணுவாறு திடனுறும். நிலமிசை என்று மண்ணுலகம் கூறப்பட்டது. நீடு வாழ்வார் என்று சிரஞ்சீவிகள் கூறப்பட்டார்கள். நீடு என்பது சிரம் என்றும் ஆரியத்தின் தமிழ். வாழ்வார் என்பது ஜீவி(கள்) என்னும் ஆரியத்தின் தமிழ். நீடுவாழ்வார் என்றதற்கு சிரஞ்சீவிகள் ஆவார் என்பது சொல் நேரே கூறும் உரிய பொருள். அநுமனும் விபீடணனும் சிரஞ்சீவிகள் (நிலமிசை நீடுவாழ்வார்கள்) மாவீடு வேண்டாது இம்மண்ணுலகின்கண் (நிலமிசை) இராம பிரானைத் தொழுது வாழும் பேரின்பவாழ்ச்சி அருளப் பட்ட சிரஞ்சீவிகள் என்றது மேலே விரித்துக் கூறப் பட்டுள்ளது. மண்ணுலகில் விண்ணுளாரிலும் சீரிய ராக்கப்பெற்ற சிரஞ்சீவிப் பெருஞ்செல்வர்களாகிய அநுமனையும் வீடணனையும் நீடுவாழ்வார். (சிரஞ்சீவிகள்) என்னும் சொல்லைக் கொண்டே கூறியுள்ளது கண்டு மலர்மிசை ஏகினன் என்றதால் இராமபிரானே கூறப் பட்டுள்ளதும் மாணடி என்றதால் அவர்களை அத்திறப் பெருஞ்செல்வர்களாக்கிய அவன் திருவடியே கூறப் பட்டுள்ளதும் ஐயமறப் புலனுகும். நிலம் என்னும் சொல் விண்ணுலகமாகிய மாவீட்டைக் கூருதாதலானும் மாவீடு சென்று வாழ்வார் என்றுமே வாழ்வாராதலானும் ஆதலின் நிலமிசை நீடு வாழ்வார் என்னும் தொடர் மாவீடு சென்று வாழ்வாரைக் கூருதாதலானும்மண்ணின் கண்ணே விண்ணினும் மிக்கதென்னலாம்படி ஈறிலாப் பேரின்ப வாழ்வு நெடுங்காலம் அருளப்பெற்ற சிரஞ்சீவிக ளாய்விளங்கா நின்றஅநுமனையும் வீடணனையுமேஉணர்த்

தற்காகுமாதலானும் அத்திறச் சிரஞ்சீவிப் பெருந்தகை யாளர் தொழுதெழும் மாணடி யண்ணலாகிய இராம பிரானையே இக்குறள் காட்டித் திகழும் வாய்மையும் சீர்மையும் ஆர்வமும் சால்பும் இவ்வாற்ருல் தெரியக் கண்டுணர்க.

அன்பிஞல் நினைவார் இதயகமலத்தின் கண் விரைந்து சேறல் மலர்மிசை ஏகினுன் என்பதன் பொருள் என்று உரைத்தல் ஒருபடி தக்கதேயாயினும் நிலமிசை நீடு வாழ்வார் என்பவையோடு இயைபின்மையாலும் அவை உணர்த்தும் சிறப்பின்மையாலும் இக்குறள் கூறும் பொருள் இங்குக் கூறிய இயைபும் சிறப்பும் ஒன்றிச் சிறக்கும் பொருள் என்பது தெளியப் புலனுகும். ஏகினுன் என்ற இறந்த காலத்தை விரைவுக் குறிப் பாக்கிக் கொள்வதிலும் உரிய இறந்தகாலப் பொருளும் விரைந்து ஏகலும் ஒக்கவே ஒன்றக் கூறும் நேரிய பொருள் சாலச்சிறத்தலின் அஃதே இக்குறட்பொருள் என்பது மேலும் திடனுறும். ஆதலின் நேர்மையும் இயைபும் சிறப்பும் சேரக்கூறும இப்பொருளே இக்குறட் பொருள் என்று அறிக,

இதய கமலத்தின்கண் விரைந்து சேறல் என்னும் பொருளும் கொள்ளற்காம். தன்னைத் தியானம் செய்து நின்ற வீடுமன் (பீஷ்மன்) பால் கண்ணபிரான் திருமனம் விரைந்தேகிய வரலாற்றைக் கூறியதாம். ''நல்லான் வீடுமன் என்னைத் தியானம் செய்கின்ருன். ஆதலின் என் மனம் அவன் கண் சென்றது'' (பாரதம் சாந்தி.45-11 தமிழ் செய்தது) என்பது கண்ணபிரான் அருளிச் செய்த ஆர்வத் திருமொழி. கஜேந்திரன்பால் எண்ணுதற்கரிய வேகத்தில் சென்று துயர்தீர்த் தருளிய வரலாறு உணர்த்தப்பட்டது என்னவுமாம். இப்பொருள் வேறி டத்து உறைக்கப் பட்டுள்ளது.

———

## ஐம்பத்தொன்றுமத்தியாயம்

### நான்காங் குறள் விளக்கம்

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு
யாண்டு மிடும்மை யில. குறள்-4

அனைவர்க்கும் அடைதற்கு ஒத்தவனாய் அடைந்த அனைவரையும் ஒக்கப் பற்றி அவர் துயர் தீர்த்தருளும் சரணியன் வண்மைச் சிறப்பும் அவனடியின் அருட் சிறப்பும் இக்குறளில் கூறப்பட்டது.

''வீடணனாயிறும் இராவணன்தானே யாயினும் தோழமையில் வந்தவனை ஒருக்காலும் நான் விடமாட்டேன்'' (இராமாய. யுத்த 18-34 தமிழ் செய்தது) என்றான் இராமபிரான். ''அனைவர்க்குல் நான் சமன் எனக்கு வெறுக்கப்படுபவனும் இல்லை விரும்பப்படு பவனும் இல்லை'' (கீதை 9-29 தமிழ் செய்தது) என்றான் கண்ணபிரான். ''தேவர்க்கும் தானவர்க்கும் பொது நின்ற நிறை கடவுளாம் உன் இரு திருவடிகளையும் என்றும் சரணமாக அடைகின்றேன்'' (பாஞ்ச ஜிதம்தே. 2 தமிழ் செய்தது) என்று ஜிதம்தே மந்திரம் கூறியது. ''அது நன்று இது தீது என்று ஐயப்படாதே. மதுநின்ற தண் துழாய் மார்பன்—பொது நின்ற, பொன்னங் கழலே தொழுமின் முழு வினைகள், முன்னங் கழலும் முடிந்து'' (மூன்றாந்திருவந்தாதி 88) என்றார் பேயாழ்வார். ''தேவா சுரர்கள் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத் தானே! பூவார் கழல்கள் அருவினையேன் பொருந்துமாறு புணராயே'' (திருவாய் 6-10-4) என்றார் சடகோபர். ''இராமன் வனம்புகுதல் தேவர்க்கும் தானவர்க்கும் பேரிருடிகட்கும் இதம் தருவதேயாம்'' (இராமாய. அயோத். 92-30 தமிழ் செய்தது) என்றது இராமாயணம். ''உலக நாயகனும் உலகமயனாய்ப் பரமாத்துமா வான கோவிந்தன் கண் (கோவிந்தன் நிலா நிற்க) நண்பர் பகைவர் என்ற கதை எங்ஙனேயோ?'' (விஷ்ணு

புராணம் 1-19-37 தமிழ் செய்தது) என்றுன் பிரகலாதாழ் வான். அனைவர்க்கும் சமனுய் நிற்கும் கரி கிரி வரத! நிற்கு, மனிதமா தங்க வாசி சிறப்பிறுக் கேது வாகா'' (வரதராஜ 40 தமிழ் செய்தது) என்றுர் வேதாந்த தேசிகர். அசுரர்களாகிய பிரகலாத வீடணர்கள் கூற்றை யும் பேற்றையும் நோக்கி இவற்றின் மெய்ம்மை காண்க. ''யாவர்க்கும் சாயல் நினது வானிறை யென்றும் நாவலந்தணர் அருமறைப் பொருளே'' (பரிபாடல், 2 55-57) சாயல் என்பது அருள். உன் அருள் நீருண்ட மேகத்தை ஒக்கும் என்பது பொருள்.) ''பிறைவளர் நிறை மதியுண்டி அணிமணிப் பைம்பூணமரர்க்கு முதல்வ நீ 'திணிநிலங் கடந்தக் காற்றிரிந் தயர்ந் தகன் ருேடி, நின்னஞ்சிக் கடற்பாய்ந்த பிணி நெகிழ் பவிழ் தண்டா, அன்னவர் படவல்லா அவுணர்க்கு முதல்வ நீ அதனுல், பகைவரிவர் இவர் நட்டோர் என்னும் வகையு முண்டோ நின்மரபறிவோர்க்கே'' (பரிபாடல் 3.52-57) கருநவை யணங்குங் கடுப்பு நல்கலும் கொடுமையுஞ் செம்மையும் வெம்மையும் தன்மையும் உன்வழி யுடையையில் வழியி லேயே போற்ரு ருயிரினும் போற்றுந ருயிரினும் மாற்றே மாற்ற லிலேயே நினக்கு. மாற்ருேரும் மிலர கேளிரு மில ரெனும் வேற்றுமை யின்றது போற்றுநர்ப் பெறினே'' (பரிபாடல் 4. 49-55) ''நின்னிற் சிறந்த நின்தாளிணை யவை நின்னிற் சிறந்த நிறை கடவுளவை'' (பரிபாடல் 4. 62-63) என்று மேற்கூறியவை கூறும் பொருளே இக்குறட்பொருள். தாமரைக் கண்ணனுகிய அனைத் துலகுக்கும் வேற்றுமையின்றி ஒக்கவே சரணியனுன தன்னைத் தாள்பற்றுவாரைத் தான் உவந்த உள்ளத்த னுய்ப் பற்றித் தன்தாளை வணங்கி நின்ற அவர் தலைமேல் அத்தாட்பொறியிட்டு இடும்பையாதுமிலாராக்கி என் றுமே நல்லின்ப வாழ்வை அருள்கின்றுன் என்றது அப் பொருள்.

இரண்டு மூன்றுங் குறட்பாக்களில் வாலறிவனும் சர ணியன் தாள் நன்மைச் சிறப்பும் அதற்குத் திட்டாந்த

மாக அநும விபீடணர்கள் சிறப்பும் உணர்த்தப்பட்டுள்ளது போல் நான்காம் குறளில் சரணியன் பொதுநின்ற பொன்னங்கழல் வண்மைச் சிறப்பும் அதற்குத் திட்டாந்தமாகப் பிரகலாதன் சிறப்பும் உணர்த்தப்பட்டுள்ளது. முதலதிகாரக் குறட்பாக்கள் (2-10) ஒவ்வொன்றும் சரணியனுடைய சிறப்புக் குணங்களுள் ஒவ்வொன்று சிறப்ப உணர்த்தப்பட்டுள்ள நுட்பம் ஆழ்ந்து ஓர்ந்து அறியப்படவேண்டும். இல்லையேல் கூறியது கூறலாகும்.

வேண்டுதல் வேண்டாமை யிலாதான் தாள் சேர்ந்தார்க்கு என்னும் இக்குறள் சிறப்பாகப் பிரகலாதனைக் குறித்து நின்றது. சரணியன் பொதுநின்ற பொன்னங்கழல் சேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பையில என்ற மெய்ம்மைக்குப் பிரகலாதன் தனிச் சிறப்புற்ற திட்டாந்தமாவான் என்னும் இக் குறள் நுண்பொருளைச் சிறிது விளக்கிக் கூறுவாம்.

யாண்டும் இடும்பையில என்று இக்குறள் கூறியது தைத்திரீய உபநிடதத்தின் அநுவாதம். (ஆநந்த. 9). ந பிபேதி குதச்சந என்பது தைத்திரீய உபநிடதம். இக்குறள் அதன் தமிழ். குதச்சந என்பது யாண்டும் என்றும் நபிபேதி என்பது இடும்பை இல என்றும் நேரிய தமிழாய் நிற்றல் காண்க. இவ்வுபநிடதம் இக்குறட்கு அடி என்ற உண்மையை இக்குறளீற்றடி காட்டி நின்றது. இடும்பை (குறள்) எனினும் பயம் (உபநிடதம்) எனினும் ஒக்கும் (பேர்கராதி. பக்க 104) யாண்டும் என்றதால் எதனிடத்தினின்றும் என்பது கூறப்பட்டது. யாண்டும் இடும்பை இல (நபிபேதி குதச்சந) என்பது எவற்கு எனின் ஆநந்தமயனுன பரமாத்துமன் தியாந இன்பத்தை அநுபவிப்பவனுக்கு என்று அவ்வுபநிடதமே ஓதிற்று. ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் ந பிபேதி குதச்சந என்பது அவ்வுபநிடத வாக்கியம். பரமாத்தும தியாந ஆநந்தம் உற்ற நல்லார் அனைவர்க்கும் பிரகலாதன் என்றுமே உவமானம் ஆயினன்'' (விஷ்ணுபுரா. 1-15-16-7 தமிழ்

செய்தது) என்று பராசர முனிவர் கூறினர். ஆதலின் ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் என்று ஓதப்பட்ட உப நிடதத்துக்கு பிரகலாதன் சிறந்த இலக்கியம் என்ற உண்மை காட்டப்பட்டதாயிற்று. இக்குறளிலும் ஆறுங் குறளிலும் அத்திறச் சிறப்புற்ற பிரகலாதனைக் குறித்துள் ளது அவற்றின் சிறப்பு. ''உலகநாதனுயும் உலக மய னுயும் பரமாத்துமனுயும் திகழும் கோவித்தன் கண் (கோவிந்தன் நிலாநிற்ப) மித்திரர் பகைவர் என்னும் கதை எங்ஙனேயோ'' (விஷ்ணு1-19-37 தமிழ் செய் தது) என்ற உண்மையைக் கண்டு எல்லா உயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் உத்தமர்க்கு உவமான மாய் நின்று அனைவர்க்கும் பொது நின்ற பரமாத்துமன் பொன்னங்கழல் தியாந ஆநந்தத்தில் மூழ்கியவனுதலின் அவனுக்கு யாண்டும் இடும்பை இல ஆயின (ந பிபேதி குதச்சந) என்று குறள் உணர்த்தியவாறு காண்க.

இரணியனுல் ஏவப்பட்ட சர்ப்பங்கள் முதலியவை களால் பிரகலாதனுக்கு இழைக்கப்பட்ட எண்ணிறந்த இடும்பைகளெல்லாம் அவனுக்கு இல ஆயின. இடும்பை இழைக்க முற்பட்ட அந்த சர்ப்பங்கள் முதலியவைகட்கே இடும்பை உள ஆயின என்றபடி. இவ்வரலாறுகள் விஷ்ணுபுராணம் முதலம்சம் பதினைந்து முதல் இருபது வரை அத்தியாயங்களுள் பரக்கக் கூறப்பட்டுள்ளன. அங்குக் கண்டுகொள்க. இங்கு வேண்டிய சிலவற்றை மட்டிலுமே கூறுவாம்.

பிரகலாதனை உடனே கடித்துக் கொன்று விடுங்கள் என்று இரணியன் தக்ஷகன் முதலிய கொடிய சர்ப்பங்களை ஏவினுன். அவை பிரகலாதனை உடம்பெல்லாம் கூடிக் கடித்தன. கடித்த சர்ப்பங்களின் பற்கள் பொடிபட்டன. மணிகள் வெடித்தன தலைகள் கொதித்தன. மனத்தில் நடுக்கம் எடுத்தது. பிரகலாதன் உடம்பில் புண் யாதும் படவில்லை இடும்பையுற்ற அச்சர்ப்பங்கள் அவற்றைப் பொறுக்க முடியாமல் எங்களை வேறோர் காரியத்தில் நிய

மிக்க வேண்டும் என்று இரணியனை வேண்டிக் கொண்டன. பிரகலாதனுக்கு இடும்பை யாது மிலாமைக்கு அவன் "க்ருஷ்ண பரமாத்துமாவின் தியாந ஆநந்தத்தில் நிலைத்தவன்'' (விஷ்ணு. 1. 17. 39. தமிழ் செய்தது. தத்ஸ்ம்ருத் யாஹ்லாத ஸம்ஸ்தித: என்பது அங்குள்ள ஆரிய. சுலோகம்) என்று பராசர முனிவர் ஏது கூறினர். ஆநந்தம் ப்ரஹ்மணே வித்வாந் என்று உபநிடதம் ஒதியதைத் "தத்ஸ்ம்ருத் யாஹ்லாத ஸ்ம்ஸத்தித: என்று பராசர முனிவர் விளக்கி அநுவதித்தார். தத்ஸ்ம்ருதி என்றவிடத்து 'தத்' (அவன்) என்றது அச்சுலோக முன்னடியிற் கூறிய க்ருஷ்ண பரமாத்துமாவை. ஸது ஆஸக்தநம: க்ருஷ்ணே என்றது சுலோக முன்னடி. ''அனைவர்க்கும் நான் சமன் எனக்கு வெறுக்கப்படுபவனு மில்லை விரும்பப்படுபவனுமில்லை (கீதை. 9-29. தமிழ் செய்தது) என்று அக்கண்ணபிரான் தானே தான் பொது நின்ற பொன்னங்கழலருளாளன் என்று பாடியருளினன் ''வேண்டுதல் வேண்டாமை யிலாதான்'' (ஸமோஹம் ஸர்வ பூதேஷு நமே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:) ''தாள் சேர்ந்தார்க்கு'' (தத்ஸ்ம்ருத்யாஹ்லாதஸம்ஸ் தித:) ''யாண்டு மிடும்மை பில'' (ந பிபேதி குதச்சந) என்று உபநிடதம் ஒதிய பொருளே இக்குறட்பொருள் என்றது இவ்வாற்றுல் நன்கு காணலாம். இதைப் பின்னும் காண்பாம்.

பிரகலாதன் மார்வில் பாய்ந்து அவனைக் கொல்ல உய்த்தெறிந்த சூலம் நூருக முரிந்து தரையில் வீழ்ந்தது. ''எவன் இதயத்தில் இறைவனுகிய பகவான் அரி வீற்றிருக்கின்ருனே அவன்கண் இடிதானும் பொடியாகி விடும். சூலத்தின் கதி கூறவும் வேண்டுமோ'' (ஷை 1.18.36 தமிழ் செய்தது) என்று பிரகலாதன் தானே தான் அனுபவித்தவாறே கூறினன். கொழுந்து வீட்டெரியும் தன் வாலில் இட்டதீ தனக்குச் சிறிதும் சுடவில்லை. இது அம்மையப்பர்களாம் சீதாராமர்களின் அருள் என்று அநுமன் கூறியதை இங்கு நோக்குக. தெய்வந் தொழாஅள்என்னும் குறள் விளக்கத்தில் மேலே

இங்குக் கூறும் பொருள் விளக்கி உரைக்கப்படுள்ளது. அதை அங்குக் கண்டு கொள்க. முற்குறளில் அநுமனை உணர்த்திய வள்ளுவர் அநுமன் தனக்கும் உவமானமாம் பிரகலாதனை அடுத்த இக்குறளில் உணர்த்தியுள்ளது தெளிவு. அது கைமுதியம்.

பிரகலாதனைத் தந்தங்களால் குத்திக் கொல்ல அனுப்பிய மலைபோன்ற எண்டிசையானைகள் வச்சிராயுதங்கள் போன்ற தங்கள் தந்தங்களால் அவனைக்குத்திய அளவிலே தந்தங்களெல்லாம் பொடிபட்டொழிந்தன. இது ''ஜநார்த்தனனுன பரமாத்துமன் தியாந அனுபவத்தின் மாண்மியம்'' (ஷை 1-17-44. தமிழ் செய்தது) என்று பிரகலாதன் கூறினான். மேற்கூறியவை யாண்டு மிடும்பை யில ந மபேதி குதச்சந என்றதன் விளக்கமாம்.

''வேதத் துச்சியின் மெய்ப்பொருளை'' (இரணியன் வதை. 22) ''உபநிடதங்கள்'' (ஷை 29.) ''உபநிடதங் களோதுகிளவி'' (ஷை 61) என்று வேதத்துச்சியாம் உபநிடதங்கள் கூறும் மெய்ப்பொருளையே பிரகலாதன் கூறினான் என்றும் அது கூறிய பிரகலாதனை ''வேதபாரகன்'' (ஷை 27) என்றும் அவன் கூறியதின் சாரம் ''தோன்றலு மிடையு மீறும் தொடங்கிய பொருள்கட் கெல்லாம் சான்றவன் இதுவே வேதமுடிவு அது சரத மென்றுன்'' (ஷை 122) என்றும் அவன் புண்டரீகக்கணம்மான்'' (ஷை 121) என்றும் கம்பர் இரணியன் வதைப்படலத்துட் கூறியவை இக்குறளும் ஆரும் குறளும் உட்கொண்டு விளங்கும் ஆலமலர்வித்தினருங்குறள் (திருக்குறளப்பன்) என்றும் கம்பர் தீங்கவிகள் அக்குறுமையின் நெடுமை (செங்கணெடியோன்) என்றும் கண்டுணர்க. அந்த இரணியன் வதை (ப்ரஹ்லாத ஸம்ரக்ஷண) வரலாற்றை இராவணனுக்கு விபீடணன் கூறினான். இரணியன் வதைப்படலத்துக்கு அடுத்த படலம் விபீடண னடைக் கலப்படலம். வீபீடணனுக்கும் உவமானமாய் விளங்கும் பிரகலாதனை இக்குறள் உணர்த்தி நிற்கும் உண்மை இதனுல் தெளியக் காணலாம். இதுவும் கைமுதியம்.

“மாற்றேருரும்மிலர் கேளிரும்மிலர்” (4-54) முதலிய பரிபாடல் பிரகலாதன் கூறியதின் அநுவாதம். செயிர்தீர் செங்கட் செல்வ (புண்டரீகக்கண் அம்மானே தாமரைக் கண் அம்மானே!) ‘‘நின்னிற் சிறந்த நின்ருளிணையவை நின்னிற் சிறந்த நிறைகடவுளவை’’ (ஷ 62-63) ‘‘நிற்புகழ்ப் புகைந்த சாந்திற், பிருங்கலாதன் பலபல பிணிபட வலந்துழி நீ நன்ரு நட்டவவன் மார்பு முயங்கி ...’’ (ஷ 4. 10-16) என்று பிரகலாதனைப் பேராற் கூறி அவன் சிறிதும் துன்புருவாறு நன்ருக நட்ட அப்பிர கலாதன் இதயகமலத்துப் பொருந்தி நின்று அருளினுய் என்று கூறிய இப்பரிபாடற் பொருளே வேண்டுதல் வேண்டாமை யிலாதான் மாணடி (பொது நின்ற பொன்னங்கழல், நின்னிற் சிறந்த நின்தாளினை சேர்ந் தார்க்கு (பிரகலாதனுக்கு) யாண்டும் சர்ப்பம் சூலம் யானை முதலிய எவற்றினின்றும்) இடும்பை இல என்ற குறட்பொருள் என்று அறிக. தவநிட்டர்க் கெல்லாம் உவமானமாய்த் திகழ்பவன் பிரகலாதாழ்வான் என்ற பிரசித்தியைப் பரிபாடல் பேராற்கூறியது. குறள் மாட்சியால் குறித்தது. பரிபாடற் கூற்றுச் சிறப்பே குறட்குறிப்புச் சிறப்பு என்று தகத் துணிதற்காம். பேராற் கூறுவதினும் நலத்தால் குறித்தல் நயமிகும் சிறப்புடையதாம். இச்சிறப்பும் நயமும் ஆருங்குறளில் மேலும் சிறத்தல் காணலாம்.

———

## ஐம்பத்திரண்டாமத்தியாயம்

### ஐந்தாங்குறள் விளக்கம்

இருள்சே ரிருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு குறள் 5

“தஸ்ய நாம மஹத்யச: (தைத்திரீ. நாராயண. 9) என்று தைத்திரீய உபநிடதம் ஓதிற்று.'' (அவனதே (பரமாத்து மாவினதே) 'பெரும்புகழ் என்பது அதன் தமிழ். இப்பொருளை இக்குறள் அநுவதித்தது. தைத்திரீய உபநிடதக் கருத்துக்கள் வள்ளுவருள்ளத்தில் குடிகொண்டுள்ளது இதனாலும் மேற் கூறியவைகளாலும் தெளியக் காணலாம். உபநிடதம் நாம என்றதால் புகழ் என்பது பரமாத்துமா ஒருவனுக்கே உற்றது பிறர் அனைவர்க்கும் அற்றது என்று கூறிற்று. இதனால் புகழ் பரமாத்துமா ஒருவனுக்கே விதிக்கப்பட்டதும் பிறர் அனைவர்க்கும் விலக்கப்பட்டதும் ஆயிற்று. ஆதலின் புகழ் என்பது பரமாத்துமா ஒருவன் கண்ணே பொருளுற்றதும் பிறர்கண் பொருளற்றதும் வெறிதுமாயது. தஸ்யநாம மஹத் யச: என்பது ஆரியம். பொருள் சேர் புகழ் என்ற குறள் அதன் தமிழாய் அநுவதிக்கப் பட்டுள்ளது தெளிவு.

இவ்வுப நிடதப்பொருளைப் ''புகழ்தற்கு உரிய பர மாத்துமாவான கேசவன்'' (பாரத ஆநுசாஸ. 149-108) ஸ்ஹஸ்ரநாமபலக்ருதி. தமிழ் செய்தது) என்று பாரதம் கூறிற்று. ஸதகீர்த்தி என்று பாரதம் ஸஹஸ்ரநாமத் துள் ஓதியது. (பாரதம். ஷை ஷை 628ம் நாமம்). மெய்ப் புகழுற்றவன் தன்னிடத்தே புகழ் பொருளுற உள்ளவன் என்பது அதன் பொருள். 'ப்ரகீர்த்தி:' (ஸ்தாநே ஹ்ருஷீ கேச தவ ப்ரகீர்த்யா'' என்று கீதை பாடிற்று (11-16) உன்னுடையது ப்ரகீர்த்தி என்பது அதன் பொருள். உன் னிடத்தில் தான் புகழ் பொருளுற்று ச்சிறந்தது என்ற வாறு. கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றும் கேட்பரோ'' (திருவாய் 7-5-3) என்று பாரதத்தையும்

கீதையையும் ''வண்புகழ் நாரணன்திண்கழல் சேரே'' (திருவாய் 1-2-10) ''வாழ்புகழ் நாரணன்'' (திருவாய் 10-9-1) என்று உபநிடதத்தையும் வேதம் தமிழ் செய்த சடகோபர் அனுவதித்தருளினர். நாரணன் ஒருவன் கண்ணேதான் புகழ் வாழ்கின்றது. ஆதலின் அவன் வாழ்புகழ் நாரணன் என்னும் பொருள் உணர்த்தப்பட்டது. அவனைப் ''புகழும் நல்லொருவன்'' (திருவாய் 3-4-1) என்று பின்னும் பாடினர். இத்திருவாய்மொழிப் பொருளே இக்குறட் பொருள் என்று அறிக.

இக்குறளில் ''புகழ் புரிந்தார்'' என்றதால் நிர்மல மனத்தராய் தீர்க்கசமாதியில் தம்மையுங்காணுதே சருவ காரணனும் சருவசரணியனுமான பரமாத்தும வண்புகழ் (வாழ்புகழ்) நாரணன் பொதுநின்ற) திண்கழற்கண்ணே நிலைப்படுத்திய பிரகலாதன் போன்ற பக்தர் புரியும் தியானம் கூறப்பட்டது. அது அவர்கள் மெய்ம்மைப் பெருநிலை. அவர்கள் கூறுவது மெய்ம்மைப் பெருவார்த்தை, அவர்கள் பெறுவது மெய்ம்மைப் பெரும்பேறு. அவர்கள் சரணியன் திருப்புகழ் புரிந்தார் ஆவர் என்பது இவ்வருங் குறட்கருத்து. இப்பொருள் அடுத்த குறளில் மேலும் விளக்கமுறும்.

ஐம்பொறிகளையும் அடக்கி மயக்கத்தை நீக்கி மனத்தை நிர்மலமாக்கி ஆழ்ந்த சமாதியில் சருவலோக சரணியனுகிய மெய்ப்புகழ் மன்னிய செயிர்தீர் செங்கட் செல்வச் சிங்கப்பிரானுடைய திருக்குணத்தியாநத்தில் திடநிலையுற்ற பிரகலாதன் புகழ் புரிந்த உண்மையை விளக்கும் பரிபாடலைக் காணபாம். இதன் பொருள் மேலே விளக்கப்பட்டுள்ளது. அதனுள் இங்கு வேண்டிய 'சில தொடர்'கள் மட்டுமே எடுத்துக் காட்டுவாம்: அவை:-

'' ஐந்திருளற நீக்கி நானகிறுட்டுடைத்துத் தம்
ஒன்ருற்றுப் படுத்தநின்ருர் வலர் தொழுதேத்தி
நின்புகழ் விரித்தனர்'' (4-1-3)

"செயிர்தீர் செங்கட் செல்வ நிற்புகழ்ப்
புகைந்த நெஞ்சிற் புலர்ந்த சாந்திற், பிருங்
கலாதன் பல பல பிணிபட" (4-10-12)

"நன்று நட்டவவனன்மார்பு முயங்கி" (4-16)

"நின்றுர்வலர் தொழுத கையமைதியின
மர்ந்தோயு நீயே அவரவ ரேவலாளனு நீயே
அவரவர் செய்பொருட் கரணமு நீயே"
(4-70-74)

இக்குறளும் பிரகலாதனைக் குறித்துள்ள நயம் இதனுற் காணலாகும்.

---

## ஐம்பத்துமூன்ருமத்தியாயம்

### ஆருங்குறள்விளக்கம்

பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்ருர் நீடு வாழ்வார்

குறள். 6.

மூன்ருங்குறளில் நிலமிசை நீடு வாழ்வார் என்று கூறப்பட்டது. இக்குறளில் நிலமிசை என்பது விடப்பட்டு நீடு வாழ்வார் என்று கூறப்பட்டது. மாவீட்டையும் வேண்டாது நிலமிசையே இராமபிராஞய்த் தன்னேயே தான் தொழுத திருவரங்கப் பெருமாஞர்க்குத் தொண்டு புரிந்து வாழ்தலையே அநும வீடணர்கள் வேண்டிப் பெற்று நீடுவாழ்வார் (சிரஞ்சீவிகள்) என்று பேர் படைத்த சிறப்பு நோக்கி அங்கு நிலமிசை என்று கூறினர். அச்சிறப்பின்மையின் இங்கு விடுத்தார். அச் சிறப்புப்பற்றி நீடு வாழ்வார் (சிரஞ்சீவிகள்) என்று ரூடிசக்தியால் அங்குக் கூறினர். அச்சிறப்பின்மையின் நெடுங்காலம் (நீடு) வாழ்வார் என்று யோகசக்தியால் இங்குக் கூறினர். சான்ருேராட்சியின் நயநுட்பங்கள் நன்கு ஓர்ந்து அறியப்படவேண்டியவாம். அநும வீடணர்கள் மாவீடு தன்னையும் வேண்டாராய் நில மிசையே இராமபிரான் (அரங்கநாதன்) தொண்டராய் வீட்டினும் மிக்கதென்னலாம்படி பேரின்பம் அருளப்பட்டு வாழ்வாராயினராதலால் அது தனித்ததோர் சிறப்பாயது (இராமாய உத்தரா 40, 15 முதலியன). இவ்வரலாறு மேலே விரித்துக் கூறப்பட்டுள்ளது. இச்சிறப்பை ''இனிய ங்கடைவீ டதுவேண் டிலராய் இனிதிங் கணரங் கதநம் விழைவார், அநுபூ டணவீ டணர்க்கா ளுரியேன் நனியாவன்.'' (ஸ்ரீரங்கராஜ. பூர்வ. 57. தமிழ் செய்தது) என்று பட்டர் பாடியருளினர். இது அநுமவீடணர் சிறப்பு. அங்குப்போய்ப் பெறவிருக்கும் பேரின்பவாழ்வை ஒத்ததாயும் அஃதே இது என்னற்கொத்ததாயும் உள்ள அவ்வின்பத்தை இங்கு எய்தி நீடுவாழ்வார் என்பது இக் குறள் கூறும் சிறப்புப்பொருள். அது பிரகலாதன் சிறப்பு

இங்கும் அங்கும் ஒக்கவே இடையருத் தொடர்ச்சியாய்ப் பேரின்பவாழ்ச்சி அருளப்பெற்ற பத்திப்பெருந்தகை யாளஞன பிரகலாதாழ்வானே இக்குறள் குறித்து நின்றது என்று அறிக. அவன் பொய்தீ ரொழுக்க நெறி நின்ற பெரும் புனிதன். வேதமென்பன மெய்ந்நெறி யொழுக்கத்து நீத்தார்க்கு உவமானமாய் விளங்காநின்ற நல்லான் என்று பராசரர் முதலிய பரமவிருடிகளால் போற்றப்பட்ட பெரும் புகழோன். (விஷ்ணு 1-20-27). ''முத்தி யவர்கைக் கிட்டியதே'' (விஷ்ணு 1-20-27 தமிழ் செய்தது. முக்தி: தஸ்யகரேஸ்திதா. என்பது அங்குள்ள ஆரியம்) என்று பிரகலாதன் தானே இவ் வுண்மையைக் காட்டித்தந்தான். அத்திறத்ததோர் பொய்தீ ரொழுக்கத்து நிலையூன்றிய பெரும்புனிதன் பிரகலாதன். ''தோன்றலு மிடையு மீறும் தொடங்கிய பொருள்கட் கெல்லாம் சான்றவ னிதுவே வேத முடிவது சரத மென்ருன்'' (இரணியன்: 122) என்ற சரதவிரதம் காத்த மெய்த்நாவஞய் மெய்ஞானியாய் மெய்ந்நெறி யொழுக்கத்து நீத்தார்க்கு முதல்வஞய்ப் பிரகலாதன் விளங்கிஞன். அவன் கூறிய மொழிகளின் மெய்மை யைக் காட்டி நாட்டற்கே இறைவன் சோதித்திருத் தூணில் தெள்ளியசிங்கப்பிராஞய்த் திருவவதாரம் செய் தருளிஞன் என்று பாகவதம் கூறிற்று. (7-8-18)

பிரகலாதாழ்வான் நீடும் வாழ்ந்தான் வீடும் பெற் ருன் (விஷ்ணு. 1, 2. 32—34). இங்கு வாழ்வு அங்கு வாழ்வின் தொடக்கம், அங்கு வாழ்வு இங்கு வாழ்வின் தொடர்ச்சி. எங்கும் வாழ்வு ஒன்றே. அது இங்குத் தொடங்கிவிட்டபடியால் அதன் தொடர்ச்சி கூறப்பட்ட தாயிற்று. சிங்கப்பிரான் பிரகலாதனே நீ வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள் என்ருன். பிரகலாதன் சிங்கப் பிரான்பால் பத்தியை வேண்டிஞன் ''என்பாற்பத்தி உனக்கு உற்றுள்ளதே. மேலும் இதுபோல் ஆகும்'' (விஷ்ணு, 1-20-20 தமிழ் செய்தது) என்று இறைவன் அருளிஞன். பூயோப் யேபவம் பவிஷ்யதி என்பது

அங்குள்ள ஆரியம், பூயோபி (மேலும்) ஏவம் (இதுபோல்) பவிஷ்யதி (ஆகும்) என்ற இறைவன் வாக்கால் பிரகலா தன் வாழ்வு ஒரே தன்மையதாம். அதன் தொடக்கம் மண்ணுலகில் அதன் தொடர்ச்சி மாவீடாம் பரமபதத்தில் என்ற உண்மை காட்டித் தரப்பட்டதாயிற்று பிரகலாதன் வாழ்வு முத்தர் வாழ்வு என்றவாறு. இவ்வாற்ருல் இக் குறளில் பொய்தீரொழுக்க நெறி நின்ருர் என்றது பிரக லாதனைக்குறித்து நின்றது கண்கூடு என்னத் தட்டில்லை.

பொறிவாயிலைந்தவித்தான் என்றதால் இப்பொருள் மேலும் திடப்படுத்தப்பட்டதாயிற்று. பொறிவாயிலைந்த வித்தான் என்று யோகநரசிங்கப் பெருமான் கூறப்பட் டான்; திருவல்லிக்கேணியிலும் மற்றும் சில திருப்பதிக ளிலும் யோக நரசிங்கப்பெருமான் கோயில் கொண்டு விளங்குகின்ருன் ''தெள்ளிய சிங்க மாகிய தேவைத் திரு வல்லிக் கேணிக்கண்டேனே'' (பெரிய திருமொழி 2-3-8) என்பது திருமங்கையாழ்வார். மங்கலாசாஸநம். யோகம் தெள்ளிய சிங்கம் தெள்ளிய சிங்கம் என்னப்பட்டான் உலகுக்கெல்லாம் வரம்தருதற்கு ஆளரியப்பன் யோகம் செய்தருள்கின்ருன். பிறர் செய்யும் யோகமெல்லாம் வரம் பெறுதற்கு. ஆளரியப்பன் செய்யும் யோகம் ஒன்றே தான் வரம் தருதற்கு என்று இறைவன் யோகத்தின் இறைச்சிறப்பும் வண்மைச் சிறப்பும் கூறியது, தன்பால் யோகத்தை அன்பர்க்குக் கற்பித்துத்தரத்தான் யோகம் செய்தருள்கின்ருன் என்றது இறைவன் செய்யும் யோகத் தைப் பற்றிய உண்மையும் நுட்பமுமாம். தான் யோகம் செய்து கற்பித்தவாறு தன்பால் யோகம் செய்வார்க்குக் கோரிய வரந்தரத் தான் யோகம் செய்வாருய் விளங்கு கின்ருன். அந்நிலையில் அவன் பொறிவாயிலைந்தவித்த நிர்மலாநந்தப் பரஞ்சோதியாய்த் திகழ்கின்ருன் என்றது யோகம் தெள்ளிய ஆளரியப்பனைப் பற்றிய மெய்யுணர்வு. இப்பொருளை விளக்கிக் கூறுவாம்.

பிரகலாதன் கூறியதைக் கேட்டு ''இவ்வாறு நீ கூறுவதை உனக்குக் கற்பித்தவர் யார்? தான் இவ்வாறு கற்பிக்கவில்லை என்று உன் குரு கூறுகிருரே என்று இரணியன் பிரகலாதனைக் கேட்டான். அதற்கு "அனைவர்க்கும் கற்பிப்பவன் திருமால் ஒருவனே. அவன் இதயத்தில் நிலை கொண்டுள்ளான். பரமாத்துமாவான அவனையன்றி எவன் எவனுல் கற்பிக்கப்படுவான்.'' (விஷ்ணு 1-17-19-20 தமிழ் செய்தது) என்று பிரகலாதன் கூறினுன். தான் யோகம் செய்வது நல்லார்க்கெல்லாம் யோகம் செய்யும் நெறிமுறைகளைக் கற்பித்தற் பொருட்டாம். அவனுல் கற்பிக்கப்பட்ட கருவிலே திருவுடைய பிரகலாதாழ்வன் அவன் கற்பித்த பொய்தீர் நெறிநின்ற நல்லார்க்கு முதல்வனுய்த் திகழ்வானு யினன். அந்நெறி பொறிவாயிலைந்தவித்த தெள்ளிய சிங்கப்பிரான் காட்டித்தந்த மெய்ந்நெறி என்பது இக் குறட் பொருள்.

பரத்துவ நிலையில் பொறிவாயிலைந்தவித்தல் கூடாமையானும் அவதார நிலைக்கே அது ஏற்குமாத லாலும் தருமத்தைக் காட்டி நாட்டற்கே திருவவதாரம் செய்தருள்தலாலும் இறைவன் ஆளரித் திருவவதார நிலையில் செய்து காட்டியருளிய தெய்வத்திருச் செயலாம் பொறிவாயிலைந்தவித்தல் இக்குறளில் உணர்த்தப் பட்டது. பரத்துவம் சிறிதும் குன்ருது அஃதொன்றியே நிற்கும் அவதார நிலைக்கே ஏற்கும் பொறியவித்தலாம் நலம் திகழும் அரியதோர் யோகம் செய்தருளும் இறைவன் திருவருட்செயல் அது என்க. அந்நிலை வேளுக்கை ஆளரியாம் நிலை. ''மன்னு மதிட்கச்சி வேளுக்கை ஆளரியை'' பெரிய திருமடல். 68) என்பது திருமங்கையாழ்வார் மங்கலாசாஸநம். வேளுக்கை என் பது வேளிருக்கை என்பதன் இடைக்குறை. காமாஸிகா கேஸரி நிலை. இந்நிலையின் பெருமையை வேதாந்த தேசிகர் காமாஸிகாஷ்டகத்தில் தெளிய விளக்கி யருளினுர். காம என்பது வேள் ஆஸிகா என்பது

இருக்கை. வேளுக்கை ஆளரி எனினும் காமாஸிகா கேஸரி எனினும் ஒக்கும். சிங்கவேள் குன்றம் என்பதும் காண்க. அழகிய சிங்கர் என்னும் திருநாமமும் திரு வெழிலும் தனக்கே உற்றதும் உரியதுமாம்படி யோக ஸமாதியில் வேளுக்கை ஆளரியாய் வீற்றிருக்கும் ஆாருளும் பேரெழிலும் அவ்விருக்கையின் சிறப்பை மேலும் காட்டிநின்றது. வேதாந்த தேசிகர் தாபநீய ரகஸியங்களின் சாரப்பொருளாம் பரம்பொருள் வேளுக் கையாளரி (காமாஸிகாகேஸரி) என்று கூறிப் பின்னர் அவன் யோகஸமாதியின் சிறப்பை விளக்கியருளினர். அச்சிறப்பைக் கூறும் சுலோகம் அரியதொன்ருதலானும் அதன் பொருள் இங்கு வேண்டியிருத்தலாலும் அதை இங்கு எடுத்துக்காட்டி அதன் பொருளை விளக்கிக் கூறுவாம்.

ஸ்வஸ்தாநேஷு மருத்கணாந் நியமயந் ஸ்வாதீந ஸர்வேந்த்ரிய:
பர்யங்க ஸ்திர தாரணு ப்ரகடித ப்ரத்யங் முகாவஸ் திதி:
ப்ராயேண ப்ரணிபேதுஷாம் ப்ரபுரஸௌ யோகம் நிஜம் சிக்ஷயந்
காமா நாதநுதா தசேஷஜகதாம் காமாஸிகா கேஸரீ ||

என்பது அச்சுலோகம். இது பரத்துவ நிலை யோக (அவதார)நிலை இரண்டுக்கும் பொருந்தப் பாடியது.

மருத்கணாந்: பரத்துவ நிலையில்: தேவர்கள் திரளை. யோக நிலையில்: காற்றுக்கள் திரளை. ஆக்கையில் இயல்கின்ற ப்ராண அபாந முதலிய வளிகளை

ஸ்வஸ்தாநேஷு: பரத்துவநிலையில். அவ்வத் தேவர் களுக்கு வகுக்கப்பட்ட தானங்களில் (இடங் களில்) யோகநிலையில்: ஆக்கையில் அவ்வ வற்றின் தானங்களில் (இடங்களில்)

நியமயந் : பரத்துவநிலேயில். தேவர்களே அவர்கள் தானங்களில் அமர்த்தி அடக்கித் தன் ஆணேயில் நிறுத்தல்.

யோகநிலேயில். ஆக்கைக் காற்றுக்களே அடக்குதல். இது நியமம் என்னும் யோக அங்கங்களுள் ஒன்று.

ஸ்வாதீந ஸர்வேந்த்ரிய : பரத்துவநிலேயில். இந்திரியங்களே (பொறிகளே)ப் படைத்து அவைகளுக்குத் தொழில்களே வகுத்துத் தன் ஆணேவயத்தவாய்ச் செலச் செய்தலாம்.

இறைத்திறலோன் இறைவன் என்று உபநிடதங்கள் ஓதின. இவ்வுபநிடதப் பொருளே வியாசமுனிவர் பணித்த பிரமசூத்திர ப்ராணபாதத்துள் கண்டுகொள்க. **யோகநிலேயில் :** பொறிகளேத் தன்வயத்தவாய் அடக்கிச் செயற்படுத்தல். அது பொறியவித்தல் என்னப் படும், அதாவது பொறிகளே புலன்களில் மேயவிடாது அடக்கிச் செலுத்தலாம். அவித்தல் என்றது அழித்தலே யன்று. கட்பொறியை அவித்தான் என்ருல் அப்பொறியைத் தன்வயமாக நடத்தி நல்வழியிற் செலுத்துவாஞன் என்றதே பொருள். அவிந்தகண்ணன் ஆஞன் என்றது பொருளன்று. இதனுல் யமம் என்னும் யோகத்தின் அங்கம் கூறப்பட்டதாயிற்று. இச்சுலோகத்தில் ஸ்வாதீநஸர்வேந்த்ரியன் என்று கூறப்பட்டவன் குறளில் பொறிவாயிலேந்தவித்தான் என்று கூறப் பட்டான். அவன் ஆளரியப்பன் யோகநரசிங்கன்.

பொறியவித்தல் (ஸ்வாதீநஸர் வேந்த்ரியத்வம்) என்பது இறைவனுக்கே இயலும். இறைவன் அருளின்றிப் பிறர் எவர்க்கும் அது இயலாது. "பொறிகள் மிக்க வலிமையுடையன. மனத்தை இழுத்துவிடுகின்றன." (கீதை. 2-60. தமிழ் செய்தது) "எண்கண் வைத்த மனத்தனுக்கே அவைகள் வயப்படும்" அவனே

நிலைமதியனுவன். அவ்வாறின்றித் தன் முயற்சியால் மட்டிலுமே அவைகளை வெல்ல நினைப்பவனுக்கு பெருங்கேடு வரும்'' (ஷி. 2-61-63. தமிழ் செய்தது) என்று இறைவன் பாடியருளினுன். ''விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம் புலனிவை மண்ணு ளென்னைப் பெற்ருல் என் செய்யா'' (திருவாய். 7-1-6) ''ஒன்று சொல்லி ஒருத்தினில் நிற்கி லாத ஓர் ஐவரவன் கயவரை என்று யான் வெல்கிற்பன் உன் திருவருளில்லையேல்'' (திருவாய். 7-1-7) என்று திருமாலால் அருளப்பட்ட சடகோபர் கண்டு விளம்பிய உண்மை. இதுமேலே விரித்து உரைக்கப் பட்டுள்ளது. பொறிவாயிலைந்தவித்த தனது இறைமையையும் யோகத்தையும் கண்கொண்டு காணுஞ் சான்ருகத் தெள்ளிய சிங்கமாகிய தேவாயும் வேளுக்கை ஆளரியா யும் உலகத்தார்க்குக் காட்சியளித்து விளங்குதல் கண்டு இக்குறளில் பொறிவாயிலைந் தவித்தான் என்றதால் தெள்ளிய சிங்கப்பிரான் (யோக நரசிங்கப்பிரான்) உணர்த்தப்பட்டுள்ளது கண்கூடு என்னத் தட்டில்லை.

''செயிர்தீர் செங்கட் செல்வ நிற்புகழ்ப் புகைந்த நெஞ்சிற் புலர்ந்த சாந்திற் பிருங்கலாதன் பலபல பிணி பட வலந்துழி மலர்ந்த நோய் கூர் கூம்பிய நடுக்கத் தலர்ந்த புகழோன் ருதையாகலின் இகழ்வோன் இகழா நெஞ்சினனுக நீ யிகழா, நன்ரு நட்டவவனன் மார்பு முயங்கி ஒன்ரு நட்டவ னுறுவரை மார்பிற், படிமதஞ் சாம்ப வொதுங்கி இன்ன லின்னரொ டிடி முரசியம்ப வெடிபடா வொடி தூட்டடியொடு, தடிதடி பலபட வகிர் வாய்த்த வுகிரினை'' 'பரிபாடல். 4-10-21) என்பது காண்க—செயிர்தீர் செங்ட் (செய்ய தாமரைக்கட்) செல்வன் (தெள்ளிய சிங்கப்பிரான்) யோகம் அது. அது அருள் தரும் யோகம். பொய்தீர் நெறி நின்ற யோகம் பிரகலாதன் யோகம். அது அருள் பெறும் யோகம். அத்திறத் திருவருள் தரும் மெய்யனின் யோகச் சிறப்பை வேதாந்த தேசிகர் காட்டித்தந்தார். பொறிவாயிலைந்

தவித்தான் என்ற குறளின் சீரிய பொருளை இம்முறை யால் காண்க.

பர்யங்க ஸ்திர தாரணு: பரத்துவ நிலையில்: மாவீட்டில் ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருக் கும் திவ்விய யோக பரியங்கமாம் சிம்மாஸநம் (அரி யணை) அமிதௌஜஸ் என்பது அதன் பெயர். அதன் கண் பரமாத்துமா ஏழுலகும் காத்தருளும் திடசங்கற் பனுய் வீற்றிருக்கின்ருன். உபநிடதம் கூறிய பரியங்க வித்தையுள் இதன் விரிவைக் கண்டு கொள்க.

யோக நிலையில். யோகம் செய்தற்கு வகுத்த பரியங்கம் என்னும் ஆஸநத்தில் (இருக்கையில்) தியாநம் செய்ய பரமாத்துமாவை உள்ளத்தில் திடனுக நிறுத்தல். தாரணு என்பது யோகத்தின் அங்கங்களுள் ஒன்று.

ப்ரகடிதப்ரத்யங்முகாவஸ்திதி: பரத்துவ நிலையில், பரமாத்துமா ஞாஞநந்தசொருபனுதலாலும் அப்பிரா கிருத திவ்விய மங்கலத் திருமேனியனுதலாலும் பொறி யின்மையாலும் ஆதலின் பொறியுணர்வின்மை யாலும் உலகனைத்தும் அவன் பிரகாரங்களாத லாலும் தன்னிறையறிவால் அனைத்தையும் நேரே உடனே உள்ளவாறு அறியும் வண்ணனுய்த் திகழ்கின் ருன். அது பரமாத்துமாவின் இறையறிவு. ஆதலின் அவன் ப்ரத்யங்முக அவஸ்திதி நிலையன். யோக நிலை யில் : மூலப்பகுதியின் விகாரப் பாடுகளாகிய இந்திரியங் களை (பொறிகளை)ப் புறமுகத்தவாய்ச் சுயம்பு படைத் தான். புறமே அறியும் இயல்வின வாதலின் அவை புற வாம் புலன்களில் மேய்வன ஆயின. பிறப்பிறப்புக்கள் அம்மேய்தலால் வருவனவாம். பிறப் பிறப்புக்களை ஒழித்துப் பிறவாமை (வீடு) பெறவிரும்புபவன் அவற் றைப் புறம் மேய விடாது அடக்கி ஏகசிந்தையனுய்த் தியானத்தில் தீரன் நிலையுற்றுப் பிரத்தியகாத்துமாவைக் கண்டான் என்று உபநிடதம் ஓதிற்று. (கடோப. 2. 1)

யோகத்தில் பொறியவித்த தீரன் பிரத்தியகாத்து மாவைக் காணும் நிலை அது. அந்நிலை அவனுடைய பிரத்யங்முகாவஸ்திதி நிலை ''ஆகம் சேர் நரசிங்கமதாகி யோர் ஆகம் வள்ளுகிராற் பிளந்தானுறை, மாக வைகுந்தம்காண்பதற்கென்னெம் ஏகமமெண்ணு மிராப்பக லின்றியே'' (திருவாய் 9-3-7) என்ற நிலை.

•

ப்ராயேண ப்ரணிபேதுஷாம் ப்ரபுரஸௌ யோகம் நிஜம்சிக்ஷயந்:

பரத்துவநிலையில்: தன் சாயுச்சியத்தைப் பெறுவிக் கும் மதிநலம் அருள்வானாய் இருக்கை. யோக. நிலையில்; யோகியர்க்குக் கதியாவானாய்த் தான் புரியுமாற்றான் யோகியர்க்குத் தான் ஒருவனே இலக்காகிய யோகத்தை பயில்விப்பான் போல் திகழும் நிலை.

காமாநாதநுதாத் அசேஷ ஜகதாம் காமாஸிகா கேஸரீ. அத்திற இருக்கை பொலியா நின்ற அண்ணலாம் வேளுக்கை ஆளரி (காமாஸிகாகேஸரீ) உலகுக்கெல்லாம் கோரிய வரங்களைத் தருவானாய் விளங்குகின்றான் என்பது.

தெள்ளிய சிங்கப் பிரானால் அருளப்பட்ட பிரகலா தாழ்வான் பேரின்பவாழ்வுபெற்று நல்லார்க்கு முதல்வ னாய்த் திகழ்வானாயினன். ஆதலின் பொய்தீரொழுக்க மாம் சரணாகதியில் தெள்ளிய சிங்கப்பிரானைத் தாள் பற்றிப் பேரின்ப வாழ்வு பெற்று உய்ம்மின் என்பது இக் குறள் செய்யும் உபதேசம்.

———

## ஐம்பத்துநான்காமத்தியாயம்

### ஏழாங்குறள் விளக்கம்

தனக்குவமை யில்லாதான் தாள் சேர்ந்தார்க்
கல்லால்
மனக்கவலை மாற்றலரிது. குறள் 7

இறைவன் அருளிச்செய்த சரம சுலோகப் பொருள் இக்குறளில் கூறப்பட்டுள்ளது. என்னிற் பரமாயது யாதுமில. நூலில் மணித்திரள் போல் என்கண் இவையனைத்தும் கோக்கப்பட்டுள்ளன'' (கீதை 7-7 தமிழ் செய்தது) என்று கண்ணபிரான் அருச்சுனனுக்கு உபதேசம் செய்தருளினன். உபதேசம் செய்ததோடு தனக்குவமையில்லாமையைக் காட்டியுந்தந்தான். இறைவன் விசுவரூபத்தை அருச்சுனன் கண்டான். ''உன்னை யொத்தாரில்லை மிக்கார் என்பது ஏது? மூவுலகிலும் நிகரற்ற பெருமையோனே!'' (கீதை 11-43 தமிழ் செய்தது) என்று அருச்சுனன் கண்டமை கூறினன். தன்னைச் சரணம் அடைந்த அருச்சுனனுக்கு சரமசுலோகமாம் உத்தம சுலோகத்தை உபதேசம் செய்தருளினன். ''எல்லாத் தருமங்களையும் விட்டு என்னை ஒருவனையே சரணம் அடை: நான் உன்னை எல்லாப் பாவங்களினின்றும் விடுவிப்பேன். துயரப்படாதே'' (கீதை. 18. 66. தமிழ் செய்தது) என்று சோகம் தவீர்க்கும் சரணியன் அருளிச்செய்த அருள்மொழி (தயாகும்பம்). அவனையே சரணம் அடைவார்க்கே மனத்துயரம் தீரும், அடையார்க்குத் தீராது என்பது அதன் பொருள். ''ஒத்தார் மிக்காரை யிலையாய மாமாயர ஒத்தாய் எப்பொருட்கும் உயிராய்'' (திருவாய் 2-3-2) ''துயரறு சுடரடி தொழுதெழு என் மனனே'' (திருவாய் 1-1-1) துயர கெடும் கடி தடைந்து வந்து அடியவர்! தொழுமின்...தயரதன் பெற்ற மரதக மணித்தடத்தினையே'' (திருவாய் 10-1-8) ''நமன் தமர்க்கு அரு நஞ்சினை அச்சுதன் தன்னைத் தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே'' (திருவாய் 3-6-8). இராமபிரான் ஒருவனே தஞ்சமாவான்,

அவன் ஒருவனே சரணம் அடைவார் மனத்துயரத்தைத் தீர்த்தருள்பவன். அவனைச் சரணம் அடைதல் ஒன்றே தான் உய்வுபாயம் என்று முத்தமிழ்த் துறையின் முறைபோகிய உத்தமக் கவிகட்கு இறைவனாகிய வண்குருகூர்ச் சடகோபப் பெருமான் மொழிந்தருளிய மெய்ம்மைப் பெருவார்த்தை. ''மனத்துயர் வைத்திருந்து வாழ்த்தாதார்க் குண்டோ மனத்துயரை மாய்க்கும் வகை'' (பெரிய திருவந்தாதி 43), ''மருங்கோத மோதும் மணி நாகணையார், மருங்கே வர வரியரேலும்—ஒருங்கே; எமக்கவரைக் காணலாம் எப்பொழுதும் உள்ளால். மனக்கவலை தீர்ப்பார் வரவு'' (பெரிய திருவந்தாதி 5-5) என்றார் மேலும் சடகோபர். ''தனக் கிணையொன்றில்லாத் திருமால் பாதம் சாதநமும் பயனுமெனச் சலங்க டீர்ந்தோம், உனக்கிதமென் றொரு பாக னுரைத்த துற்றோம் உத்தமனு மவனுதவி யெல்லாம் கண்டோம் இனிக் கவருமவை கவர விகந்தோம் சோகம் இமையவரோ டொன்றினி நாமிருக்கும் நாளே'' (அமிர்த ரஞ்சனி 8)·'அறிவு மனைத்து மிலா வடியோமை யடைக் கலம் கொண்டு உறவென நின்ற வெலாமுறவே நின்ற தானெமக் காய் மறு பிறவித்துயர் வாராவகை மனம் கொண்டகலா, இறைவனின்னருளா லெங்கள் சோகம் தவிர்த்தனனே''. (சரம சுலோ. 11) என்றார் வேதாந்த தேகிகர்.

இங்குக் கூறிய பொருளே இக்குறட் பொருள். தனக்குவமை யில்லாதான் என்பது. மத்த: பரதரம் நாந்யத் (கீதை 7-7) நத்வத் ஸமோஸ்தி (கீதை 11-43) என்பதன் தமிழாயும் தாள் சேர்ந்தார் என்பது சரணம் வ்ரஜ (78-66) என்பதன் தமிழாயும் மனக்கவலை மாற்றல் என்பது மாசுச: (கீதை. 18-66) என்பதன் தமிழாயும் நிற்றல் கண்டு சரமசுலோகப் பொருளே இக்குறட் பொருள் என்பது காண்க.

———

## ஐம்பத்தைந்தாமத்தியாயம்

### எட்டாங்குறள் விளக்கம்

அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது குறள். 8

இக்குறளில் அறவன் ஆழியந்தணன் என்றதால் திருக்குறளப்பன் கூறப்பட்டான். அவன் அந்தணன் அற அந்தணன் ஆழி ஆந்தணன். அந்த அறவாழியந் தணனைத் தாள்பற்றலே ஸம்ஸார சக்கரத்தை (பவச் சுழலை)க்கடத்தற்கும் பேரின்ப மா வீ டு பெறுதற்கும் உபாயம். மற்றெவ்வுபாயமும் இல்லை என்பது இக்குறள் திடப்பொருள். இப்பொருளின் பிரசித்தியை நூல்கள் பன்னிப் பணித்துள்ளன. ''அ ற வ னை ஆழிப்படை அந்தணனை'' (திருவாய் 1.7.1) என்ருர் சடகோபர். இங்கு அந்தணன் என்றதை ''மாணி உருவாகிக் கொண்டு உலகம் நீரேற்ற சீரான்'' (பெரிய திருவந்தாதி 20) என்று சிறப்பித்தார் ''மதியினுற் குறள்மாணுய்'' (திருவாய் 1. 4. 3) ''மாண்குறள் கோலப் பிரான்'' (திருவாய் 5. 9, 6) என்று மாணியாய் (பிரமசாரி அந்த ணனுய்) வந்த திருக்குறளப்பன் என்ருர். ''அகலிடம் முற்றவும் ஈரடியே யாகும் ப ரி சு நிமிர்ந்த திருக்குற ளப்பன்'' (திருவாய் 7. 10. 2) என்று பிரமசாரி அந்த ணனுய் நீரேற்று உலகளந்து கொண்ட திருச்சரி தையைக் கூறினுர். நீரேற்று உலகளந்த திருவடியைப் ''பெருநிலங் கடந்த நல்லடிப்போது'' (திருவாய் 1.3-10) என்று போற்றினுர். சடகோபர் அருளிச்செய்த இத் திவ்விய மொழிகள் கண்டு அறமுதல்வனுகிய இறைவன் பிரமசாரி ஆழிப்படை அந்தணனுய் வந்து நீரேற்றருளிய திருக் குறளப்பன் என்பதே அறவாழியந்தணன் என்ற இக்குறளின் உரிய பொருள் என்று தெளிக. ''அறவன்'' (திருவாய் 1. 7. 1) என்ருர் சடகோபர். ''அறமுதல்வன்'' (பெரிய திருமொழி 7. 6. 10) என்ருர் திருமங்கையாழ் வார். ''அறவன் ஆழிப்படையந்தணன் (திருவாய் 1.7 1)

என்ருர் சடகோபர். "அறமுதல்வன்" (பெரிய திருமொழி 7-6-10) ''மாணுருவாய்... சக்கரப்படை யென்தலைவன் (பெரிய திருமொழி 7.8.6) என்ருர் திருமங்கையாழ் வார். அறமுதல்வன் ஆழிப்படையன் பிரமசாரி அந்த ணன் ஆம் திருக்குறளப்பன் என்பதே அறவாழி யந்த ணன் என்ற குறளின் உரிய மெய்ப்பொருள் என்பது இவற்ருல் தெளிய விளங்கவைக்கப்பட்டது. ''வாய் மொழிந்து வாமனனுய்மாவலிபால் மூவடி மண் நீயளந்து கொண்ட நெடுமாலே—தாவிய நின் எஞ்சா இணையடிக்கே ஏழ்பிறப்பும் ஆளாகி அஞ்சாதிருக்க அருள்.'' (மூன்ருந் திருவந்தாதி. 18) என்ருர் பேயாழ்வார். ''மூவடி நானி லம் வேண்டி முப்புரி நூலொடு மானுரி யிலங்கு மார்வி னன், இருபிறப்பு ஒருமாணுகி, ஒருமுறை யீரடி. மூவுல களந்தனை'' (திருவெழு கூற்றிருக்கை) என்ருர் திருமங் கையாழ்வார். முப்புரிநூல் மானுரி முதலிய இலங்கும் அந்தணப் பிரமசாரியாய்த் தன்னடியால் உலகளந்து கொண் டருளினுன் என்ருர். மாண்குறள் என்பதற்குப் பிரமசாரி வாமனன் என்பது பொருள் என்று காட்டப் பட்டது. அற ஆழி அந்தணன் என்பதற்கு அறமுதல் வனுகிய சக்கரப்படை அந்தணன் என்பதே உரிய பொருள் என்பதும் காட்டப்பட்டது. "அந்தண ரென் போர் அறவோர்'' (குறள். 30) என்ற குறளில் திருவாய் மொழிகூறும் பொருளே கூறப்பட்டது என்று அறிக.

இவ்வாற்ருல் அறவாழியந்தணன் என்பதற்கு அறமுதல்வ னுகிய சக்கரப்படையேந்திய முப்புரிநூல் மானுரி முதலிய இலங்கும் அந்தணப் பிரமசாரித் திருக் குறளன் என்றதே உரியபொருள் என்ற உண்மை கையிலங்கு கனிபோல காட்டப்பட்டது. ஆதலின் அறமாகிய கடல் என்று பொருள் கொள்ளுதல் தக்க தன்று. அறக்கடல் என்று வழக்குமில்லை பிரசித்தியு மில்லை. குணக்கடல் என்றுதான் வழக்கும் பிரசித்தியும் உள்ளது. தருமசக்கரம் என்று உருவகப்பொருள் கொண்டு வேறிடத்து உரைக்கப்பட்டது. இங்கு

உரைப்பது ஸமாநாதிகரணப் பொருள். இரண்டிடத்திலும் சக்கரம் என்பதே பொருள் கடல் அன்று. திருவாய் மொழி முதலிய பனுவல்கள் கூறும் பொருளே குறள் கூறும் பொருள். ''வானவர்தம் துயர்தீர வந்து தோன்றி மாணுருவாய், மூவடி மாவலியை வேண்டித் தானமர ஏழுலகம் அளந்த வென்றித் தனிமுதல் சக்கரப் படை என்தலைவன் காண்மின்'' (பெரிய திருமொழி 7.8. 6) ''உலகளப்பான் அடிநிமிர்ந்த அந்தணன்'' (ஷை 5.6. 7) ''மாண் குறளான அந்தணன் (ஷை 2.1.1) ''மாணுகி வைய மளந்தது (ஷை 8. 10. 8) ''நேமியங்கை நெடியோன்'' (ஷை 7.8.9) ''வெந்திறல் வாணன் வேள்வியிட மெய்தி அங்கோர் குறளாகி மெய்ம்மை யுணரச் செந் தொழில் நாவின் முனியாகி வைய மடிமூன்றிரந்து பெறினும் மந்திரமீது போகி மதிநின் றிறைஞ்ச மலரோன் வணங்க வளர்சேர், அந்தர மேழினூடு செலவுய்த்த பாதமது நம்மை யாளும் அரசே'' (ஷை 11. 4, 5) என்ருர் திருமங்கையாழ்வார். ஆழியந்தணன் என்ற விடத்து ஆழி என்பதற்குச் சக்கரப் படை நேமி என்பதே பொருள் என்றது கையிற்கனிபோல் காட்டித் தரப்பட்டது. அறமுதல்வனும் ஆழிப்படைக் கையன் அந்தணனுய் மாணியாய், பார்ப்பனப்பிரமசாரி வாமன னுய் மாவலி வேள்வியில் வந்து அடிமூன்றிரந்து பெற்று மூவுலகும் தன்னடியால் அளந்து கொண்டருளிய இறைவன் திருப்பாதமே நம்மை ஆளும் அரசு என்று இங்கு வேண்டிய உரிய மெய்ப்பொருள் ஐயமற விளங்க வைக்கப்பட்டது. இரத்தற்கு உரிய ஆச்சிரமம் பிரமசாரி ஆச்சிரமம். ஆதலின் அதை மேற்கொண்டு அதற்குத் தக்க முப்புரிநூலொடு மானுரி யிலங்கும் மாணியாய்த் தோன்றி அருளினன். ''பிச்சைக் கேற்ற முதலாச் சிரமத்தை மேற்கொண்டு மார்வுறை திருமகட்டு மானுரியை மறைவு திரையாக்கி வந்தான்'' (தேஹளீ சஸ்தவம் 11. தமிழ் செய்தது) என்ருர் வேதாந்ததேசிகர் ''அகலகில்லே னிறையுமென்று அலர்மேல் மங்கை உறை மார்பன்'' (திருவாய் 6. 10. 10) ஆதலால் மாணியாச்

சிரமம் அசம்பாவிதமாமாதலின் அஃதாகாமைக்கு அந்த ஆச்சிரமத்துக்கே உரிய மானுரியையே மார்வில் தரித்துத் திருமகளை மறைத்து மாணியுருவில் விளங்கினுன் என்று அழகுற இறைவன் உலகிரந்த கள்வத் திருவருட் சரிதையைக் கூறினுர். ''தாமரையினுள்'' (அலர்மேல்மங்கை) (குறள் 617) என்று வள்ளுவர் தாமே கூறியிருத்தலான் இக்குறளில் இக்குறிப்பும் காணலாகும். ''வையமளந்த அடிக்கீழ் அடைக்கலம் வைத்தருளே'' (அமிர்தாஸ்வதி. 11) என்று வேதாந்த தேசிகர் வேண்டினுர்.

''முப்புரி நூலினன் முஞ்சியன் விஞ்சை கற்பதோர் நாவ னனற்படு கையன், அற்புத னற்புத ரேயறியுந் தன், சிற்பத மொப்பதோர் மெய்க்கொடு சென்றுன்'' (பால. வேள்வி. 22) ''அன்றவன் வந்தத றிந்துல கெல்லாம் வென்றவன் முந்தி வியந் ததிர்கொண் டான், நின்றனின் அந்தணரில்லை நிறைந்தோய் என்றனினுய்ந்தவர்யாருள ரென்றுன்'' (ஷை 23) ''சிந்தையுவந்தெதிரென்செயவென்றுன், அந்தணன் மூவடி மண்ணருளுண்டேல், வெந்திறலாயிது வேண்டு மெனுமுன் தந்தென னென்றனன்.'' (ஷை. 25) என்ற கவிச்சக்கரவர்த்தி கம்பர் பாடல்கள் கண்டு அற வாழியந்தணன் என்ற குறள் பிரமசாரியாக வந்த திருக் குறளப்பன் வாமன மூர்த்தியைக் கூறித் திகழ்தல் கண் களில் தெரியக் காண்டற்காகும் வாமன மூர்த்தியை நிகர்த்த அந்தணர் (நீரேற்றற்குரியமாணி அந்தணர்) எவருமிலர் என்று மாவலி கண்டு கூறிய தேற்றம் கண்டு இக்குறள் உலகிரந்தளந்து கொண்ட திருக்குறளப் பனைக் கூறிய தேற்றம் தெளிக. ''நான்மறை யகப் பொருள் புறப்பொருளறிவார்களாகுவார் மெய்ப்பொருள் காலாற்புவிகொள் நாயகர்க் கடியவர்க் கடிமை (இரணியன்.32) என்று காலாற் புவிகொண்ட நாயக னடியவர்க் கடிமையே பெரும்பேறு என்று மேலும் கம்பர் கூறினுர். அஃதே திருவள்ளுவர் கூறியதும் என்று தேறுக.

ஆதலின் இக்குறளில் ஆழி என்றதால் சக்கரம் கூறப் பட்டது. ஆழி அந்தணன் என்றதால் சக்கரப்படை அந்தணன் கூறப்பட்டான். அற ஆழி அந்தணன் என்ற தால் அறமுதல்வனுகிய (சநாதநதருமமாகிய) சக்கரப் படை அந்தணன் கூறப்பட்டான். பிற ஆழி என்றதால் பவச் சக்கரம் (பவ ஆழி) கூறப்பட்டது. இது ஆரியத்தில் ஸம்ஸார சக்ரம் என்னப்படும். ஆழி எனினும் சக்கரம் எனினும் ஒக்கும். ''திகிரி நேமி ஆழி யெஃகம் வளை பரிதி யொளி வட்டம் சுதரிசனம் சக்கரம்'' (பிங்கல, 483) என்றது நிகண்டு. நீந்துவார் என்பதற்குக் கடப்பார் என்பது பொருள். நீரில் நீஞ்சுதல் என்பது இங்குப் பொருளன்று. பத்தாம் குறளிலும் கடத்தல் என்பதே பொருள்.

பவம் (ஸம்ஸாரம்) என்பது பெருஞ் சுழல். ஆதலின் அது சக்கரம் என்னப்பட்டது. சுழல்தலால் சக்கரம். தொடக்கமும் ஈறும் இலதாய் என்றும் சுழல்தலால் அது சக்கரம் என்னப்பட்டது. ''வாணனை ஆயிரந்தோளும் பொழிகுருதி பாயச் சுழற்றிய ஆழிவல்லான்'' (பெரி யாழ்வார் திருமொழி 1. 1. 7) என்ற பெரியாழ்வார் திருமொழியை நோக்குக. சக்கரவர்த்தி என்னும் சொல்லுக்குச் சக்கரத்தைச் சுழற்றுபவன், உருட்டுபவன் என்பது பொருள். ஆதலின் பிற ஆழி என்றதால் பவ ஆழி (பவச்சக்கரம், ஸம்ஸாரசக்கரம்) கூறப்பட்டது. ஆழி(சுழல்) ஆவர்த்தம் என்றும் கூறப்படும். சக்கரம் சுழல் ஆழி ஆவர்த்தம் என்பன் ஒருபொருண்மையவாம். ஸம்ஸார சக்ர பரிவர்த்தந பவச்சக்கரச்சுழல் (ஸ்ரீபாஷ்யம். காமாத்யதிகரணம்) என்ருர் எம்பெரு மானுர். ஸம்ஸாராவர்த்தவேக ''பவச்சுழல்வேகம்:) நியாஸவிம்சதி. 22) என்ருர் வேதாந்ததேசிகர். அச் சுழலினின்று விடுபடுதற்கு ஆழிப் படை அந்தணன் தாள் பற்றுதல் ஒன்றேதான் உபாயம். வேறு உபாயும் இல்லை. அச்சுழலைக் கடத்தற்கு அத்தாள்தான் துணை. ஆழிப்படை யந்தணன் தாள் துணையாலன்றி அச்

சுழல் கடத்தற்கொண்ணுது என்று கூறப்பட்டது. இக் குறளில் ஸம்ஸாரசக்ரம்(சுழல்) கூறப்பட்டது. சுழலா தலால் ஆழ்த்திவிடும். பத்தாம் குறளில் ஸம்ஸார ஸாகரம் (பிறவிப்பெருங்கடல்) கூறப்பட்டது. மிகப் பரந்துள்ளதால் கடத்தற் காகாதாயிற்று. இக்குறளில் ஆழியந்தணன்தாள் சுழலாநின்ற பவச்சக்கரத்தைக் கடத்தற்காம் துணையாமாறு உணர்த்தப்பட்டது. பத்தாம் குறளில் அத்தாள் சூழாநின்ற பவசாகரத்தைக் கடத் தற்காம் புணையாமாறு உணர்த்தப்பட்டது. இக்குறளில் பிறஎன்று பன்மையிற். கூறியது சுழல்களின் பன்மை யைக் குறித்தற்காம். கருமச்சுழல் அவிச்சைச்சுழல் காலச்சுழல் முதலிய சுழல்கள் பலவாம். ''கர்ம அவித் யாதி சக்ரே'' (கரும அவிச்சை முதலிய சுழல்களில். தமிழ்செய்தது. தத்த்வமுக்தா ஜீவஸரம். 25) கால ஆவர்த்தாந் (ரஹஸ்ய த்ரயஸாரம் காலச்சுழல்கள்) என்ருர் வேதாந்த தேசிகர். இவைகள் பவத்தில் ஆழ்த்திவிடும் பெருஞ்சுழல்கள் (ஆவர்த்தங்கள். பன்மை சக்கரப்பொருளின் (சுழற்பொருளின்) ஏற்பையும் நயத் தையும் திடப்படுத்தும். ஆழிப்படை அந்தணன் திரு வடியைச் சரணம் அடைந்தவர்க்கே பிற ஆழி (பிறசுழல்) கடத்தற்காகும். சரணம் அடையாதார்க்குக் கடத்தற் காகாது என்பது இக்குறள் கூறும் திடப்பொருள். இக்குறளில் ஆழி என்றதும் பத்தாம் குறளில் கடல் என்றதும் உருவகம் சக்கரக்கையனுய்ப் பிரமசாரி அந்தணுரய்த் தோன்றிய வாமனத்திருமூர்த்தியின் தாள்தான் சுழல் நீங்கத் துணையாம் கடல் நீந்தப் புணையாம் என்பதே இவ்விருகுறள்களின் உரிய சீரிய பொருள் என்று தெளிக.

இக்குறளில் அற ஆழி என்றவிடத்து ஆழி என் பதற்குக் கடல் என்று பொருள் உரைத்தல் பொருந்தாது. சிறவாது. அறக்கடல் என்னும் பிரசித்தியின்மையிள் அது பொருந்தாது என்க. அற அணை (தர்மஸேது) என்றுதான் பிரசித்தி. இது மேலே விரித்துக்

கூறப்பட்டுள்ளது. பத்தாம் குறளில் பிறவிப் பெருங் கடல் என்று கூறியிருத்தலால் இரண்டு குறள்களிலும் உருவகமாய்க் கடல் கூறப்பட்டது என்றும் அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க்கே அத்தாள் நீந்து புணையாகும் என்று உரைத்தல் எவ்விதச்சிறப்பும் பெரும் பயனுமின்றிக் கூறியது கூறலேயாகும். மேலும் பல வேறுவகைப்பட்ட அறங்கள் எல்லாவற்றையும் தனக்கு வடிவமாக உடையவன் ஆதலின் அற ஆழி அந்தணன் என்றார் என்று உரைத்தலால் ஆழி என்னும் சொல் பொருளற்றதோர் விழுக்காடேயாம். அறத்தை முன்னர்ப் பிரித்தமையின் ஏனைப்பொருளும் இன்பமும் பிற என்னப் பட்டன என்றதும் பொருந்தாது என்க. இங்கு இலக் கியங்கள் பல எடுத்துக்காட்டி மேற்கூறியதே உரிய பொருள் என்பது காண்க.

---

## ஐம்பத்தாருமத்தியாயம்

### ஒன்பதாங்குறள்

கோளில் பொறியின் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. குறள் 9

இக்குறள் எண்குணத்தான் தாளை வணங்காத் தலையின் பொறியின் குணமின்மையைக் கூறியது. இக்குறளில் கோள் என்னும் சொல் இடையூறு கேடு இடும்பை என்னும் பொருளை உணர்த்தி நின்றது. ''வலியுங் கொள்கையும் வல்லிடையூறும் பிசினமும் கோள் எனலாகும்'' பிங்கல. 10. 429) என்றது நிகண்டு. பொறி என்னும் சொல் எழுத்து என்ற பொருளை உணர்த்தி நின்றது. ''எழுத்துச் செல்வ மிலாஞ்சனை திருமகள் மரக்கலம் யந்திரம் இரேகை இந்திரியம் பொடித் தெழுநுண் சிறுகனலிவை பொறியே'' (பிங்கல. 10. 868) என்றது நிகண்டு. இறைவன் தாளை வணங்காத் தலைக்குக் கோளுடைப் பொறியின் கேடே உற்றது. கோளில்லாப் பொறியின் நலம் அற்றது என்பது இக்குறட்பொருள். சரணுகதனுய் வந்து அடிபணிந்து இறைஞ்சுபவனை இறைவன் அருள் கூர்ந்து பற்றிக்கொள்கின்ருன். பற்றிக்கொள்ளப்பட்ட சரணுகதன் ''வானுயரின்பம் மன்னி வீற்றிருந்தாய் அருளு நின்தாள்களை எனக்கே'' (திருவாய் 8. 1. 9) என்று வேண்டுகின்ருன். வேண்டி இறைஞ்சும் அவன் பால் இறைவன் இரங்கி வாசஞ்செய் பூங்குழலாளும் கந்தவதியுமான நாச்சிமார் கரதலங்களுக்கும் பரிமளம் கொடுக்கும் பொற்ருமரையடிகளாலே அவனைப் பூமுடி சூட்டித் திருவடிகளை அவன் தலைமேல் பொறித்தருள் கின்ருன். பொறிக்கப் பெற்ற அவன் ஈறிலின்பத் திரு வெள்ளத்து மூழ்கா நின்ருனுய்த் ''தாழ்ச்சி மற்றெங்குந் தவிர்த்து நின்தாளிணைக்கீழ் வாழ்ச்சி யான் சேரும் வகை அருள்'' (திருவாய் 3. 2. 4.) என்ற மநோரதம் தலைக்கட்டித் ''தன்னுருவா யென்னுருவில் நின்ற எந்தை தளிர்புரையும் திருவடியென் தலைமே லவே''

(திருநெடுந் தாண்டகம். 1) ''கூட்டரிய திருவடிக்கட் கூட்டினை நான் கண்டேனே'' (திருவாய் 4. 9. 9) "திருப் பொலிந்த சேவடிஎன் சென்னியின் மேற் பொறித்தாய்'' (பெரியாழ்வார். திருமொழி 5. 4. 7) என்று விண்ணப் பம் செய்வானுகின்ருன். இச்சென்னியின் மேற் பொறி தான் இக்குறள் கூறும் பொறி என்று அறிக. சரணு கதன் வணக்குடைத்தலையில் சரணியன் இட்டருளும் சேவடிப்பொறி அதுவாம். ''செம்மணிமகுடம் நீக்கித் திருவடி புனைந்த செல்வன்'' (விபீடணனடைக்கல. 138) என்றது சரணியன் பரதன் சென்னியில் இட்டருளிய திருவடிப் பொறி. ''இளையவற் கவித்த மோலி என்னையுங் கவித்தி என்ருன்'' (ஷை. 145) என்றது வீடணன் வணக்குடைத் தன்தலைமேல் சரணியன் பொற்ருட் பொறியிட்டருளுமாறு வேண்டி நின்ருன். கேடு அனைத்தையும் ஒழித்துப் பேரின்பப் பெருஞ்செல்வம் நல்கும் திருப்பொலிந்த பொன்னடியின் மாட்சியும் அஃதிட்டருளும் பொறியின் குணமும் இவற்ருல் உணர்த் தப்பட்டது. ''நின்னடி தலையுற வணங்கினேம்'' (பரிபாடல். 2.73) என்றதும் இப்பொருட்டே. இறைவன் திருப்பொலிந்த தாளால் இட்டருளிய பொறியுடைய தலை ஒன்றுக்கே தான் கோளில்லா (கேடில்லா) நற் பொறியின் குணமுடைமை உறும். அஃதிலார் தலைப் பொறி எல்லாம் விதி (நான்முகன்) பொறித்த தீப் பொறியே. இறைவன் தாட் பொறித் தலையர்க்கே விதி பொறித்த கோட்பொறி அற்று அழிந்து ஒழிந்து நல் வாழ்வு உறும். விதிபொறித்த தலைப்பொறி வினைப்பொறி யாம். இறைவன் இட்டருளும் தாட்பொறி கடுவினையர் இருவினையும் அறக்கடியும் அருட்பொறியாம். கோளை இலவாக்கும் குணப்பொறி அப்பொறி ஒன்றேதான் விதி யிட்ட தீப்பொறியை அழித்துப் பேரின்ப வாழ்ச்சி தரும் பொறி என்பது இக்குறட்பொருள்.

''மன்னனடி நிலையுனது பக்கமுடி வணங்குநலர் முன்னமவர் தலையில் விதி முடித்திட்ட தீவரியே, நன்னிற

னிற் சொன்னவரி மின்னமுது நன்னெறியில் துன்னறநீ யொருதாது வாதமிதெங் கோதினையோ'' (பாதுகா. 50. தமிழ் செய்தது) ''அணிமா மலரா ளளியின் களிகொள் மணிமா லடிமா ணிலேயே நினையே பணியா ரவர்தம் தலைநல் லிபியும் பிணியா யடுதுல் லிபியா யிடுமே.'' (ஷை. 84. தமிழ் செய்தது) என்ற வேதாந்த தேசிகர் பாடல்களில் இக்குறளின் உரிய பொருள் நன்கு தெரியக் காணலாம். முதற்பாடற் பொருள்:— அரங்கநாதன் பாதுகையே ! உன்னை வணங்குவார் தலையில் விதியால் இடப்பட்ட துர்வர்ணத்தை நீ சுவர்ணமாக்குகின்றாய். நன்னெறியில் நின்று ஒழுகும் நீ இந்த த் தாதுவாதத்தை எங்குப் பயின்றாய் என்பது. ஆரியத்தில் சுவர்ணம் என்பதற்குப் பொன் என்றும் நல்ல எழுத்து என்றும் பொருள். துர்வர்ணம் என்பதற்கு வெள்ளி என்றும் கெட்ட எழுத்து என்றும் பொருள். சிலேடையால் துர் வர்ணத்தை (வெள்ளியை) சுவர்ணம் (பொன்) ஆக்கும் தாதுவாதம் (ரஸவாதம்) தரும ஒழுக்கமுடைய உனக்கு எப்படித் தெரிந்தது என்று நாதன் பாதுகத்தைக் கேட் கிறார். தாதுவாத (ரஸவாத)க்கல்வியை அறநூல் விலக்கிற்று. தருமமூர்த்தியாகிய நீ தருமம் அன்று என்று அறநூல் விலக்கிய தாதுவாதத்தை எங்கிருந்து கற்றாய்? என்று கேட்கின்றார். தன்னை வணங்குவார் தலையில் விதியிட்ட தீப்பொறியை அழித்துப் பேரின்ப வாழ்வைத் தரும் நற்பொறியை இடும் நாதன் பாதுகை யின் அருந்திறலையும் ஆரருளையும் போற்றியவாறு. இரண்டாம் பாடற்பொருள்:- விதி தலையிற் பொறித்த பொறி நல்லதாயிருந்தாலும் அத்தலை உன்னை வணங்கா விடில் அப்பொறி கோட்பொறியாய் விடுகிறது என்பது. இக்குறட்பொருளும் இப்பொருளே என்க. இறைவனைச் சரணம் அடைந்து அவன் இட்டருளும் தாட்பொறியால் விதியிட்ட வினைப்பொறியை அழித்து நெடிதூழி நல் வாழ்வு பெறுவாராக என்று வள்ளுவர் செய்தருளிய நல்லுபதேசம்.

கோள் என்பதற்குக் கொள்கை என்றும் பொறி என்பதற்கு இந்திரியம் என்றும் உரைத்தல் பொருந்தாது. பயனில எனத் தலைமேல் வைத்துக் கூறினாரேனும் வாழ்த்தாத நாக்களும் அவ்வாறே பயனிலவாம் என்று உரைத்தல் இக்குறட்கு ஏற்காது. நாவிலும் (அவ்வாறே காணும் கண்களிலும் கேட்கும் செவிகளிலும்) பொறித்தற்காகாமையின் அது பொருளன்மையாம். இந்திரியம் என்றது பொருள்படுதற்கியலாமையின் அதுவும் பொருளன்மை என்க.

இக்குறளில் எண்குணத்தான் தாள் என்றதற்கு ''எண்பெருக் கந்நலத் தொண்பொரு ளீறில வண்புகழ் நாரணன் திண்கழல்'' (திருவாய் 1. 2. 10) என்று திருவாய்மொழி கூறுமதே பொருள். எண் பெருக்கால் உபநிடதம் ஆநந்தாதி மீமாஞ்சை (எண்ணுதல்) செய்து பரமாத்துமா ஈறிலின்ப நலத்தன் மனமொழிகளால் அளந்து எண்ணுதற் கொண்ணாத ஈறிலாநந்தாதி குணமயன் என்று ஆதந்தவல்லி ஒதிற்று. இது மேலே விரித்து உரைக்கப் பட்டுள்ளது. எண்பெருக் கந்நலத்தான் என்ற திருவாய் மொழிப் பொருளே எண்குணத்தான் என்ற திருக்குறட் பொருளும் எண்பெருக் கந்நலத் தொண் பொரு ளிறில வண்புகழ் நாரணன் திண்கழல் என்ற திருவாய்மொழிப் பொருளே எண்குணத்தான் தாள்என்ற திருக்குறட் பொருளுமாம். இக்குறளில் திருவாய்மொழி யிற்போல் எண் என்பதற்கு எண்ணுதல் (மீமாஞ்சித்தல்) என்பதே பொருள். எட்டு என்னும் எண்ணுப் பொருள் அன்று. எண்ணென்ப ஏனை யெழுத்தென்ப இவ்விரண்டும். கண்ணென்ப வாழு முயிர்க்கு'' (குறள். 392) என்ற குறளை நோக்குக. இக்குறளில் எண் என்று மீமாஞ்சையும் எழுத்து என்று வியாகரணமும் கூறப்பட்டன. வேதச் சொற்பொருளைக் காணும் கண் அக்ஷரஸமாம் நாயமாம் வியாகரணம். அது பாணிநீயம். வேத வாக்கியப் பொருளைக் காணும் (எண்ணித்துணியும்) கண் மீமாஞ்சை. அது ஜைமிநீயம். வியாகரணமாம்

கண்ணைக் கொண்டு வேத எழுத்து(பத)ப் பொருளையும் மீமாஞ்சையாம் கண்ணைக்கொண்டு வேதவாக்கியப் பொருளையும் காண்பாரே வாழுமுயிர் என்று விளம்பிய திருவள்ளுவரின் வைதிக வீறும் வைதிக வாய்மையும் எத்திறமாட்சித்து என்பதைக் கண்டுணர்க. ஆதலின் இக்குறளில் எண் என்பதற்கு எண்ணுதல் (மீமாஞ்சித்தல்) என்பதே உரிய பொருள் எட்டு என்பது அன்று என்று தெளிக. ''எண்பொருள் ஆகச் செலச் சொல்லித் தான் பிறர்வாய் நுண்பொருள் காண்பது அறிவு'' (குறள் 424) ''எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார் திண்ணியராகப் பெறின்'' (குறள். 666) என்ற குறள்களை யும் நோக்குக. இவ்வாற்ருல் எண்ணும் குணமுடையவன் அதாவது மீமாஞ்சை செய்யப்படும் தியாநம் செய்யப் படும் திருக்குணத்தான் எண் குணத்தான் என்னப் பட்டான் என்று அறிக. எட்டுகுணத்தான் என்ற உரை போலி என்க.

''எண்டகு குணத்தினை யெனக்கொடுயர் சென்னித் துண்டமதி வைத்தவனை யொத்தமுனி சொல்லும்'' (இராமாவ. ஆரணிய (அகத்தியப். 57) ''இருந்தவ மிழைத்தவென தில்லிடையின் வந்தென், அருந்தவ முடித்தனை யருட்கரச வென்ருன்'' (ஷை. ஷை. 49) என்ருர் கம்பர். எண்தகு குணம் என்பது எண் குணம். மேற்கூறிய அகத்தியப்படல இரண்டாம் பாடலில் ''அருட்கு அரச எனது இல்லிடையில் வந்து நான் புரியும் அரிய தவத்தை நிறைவேற்றியருளினாய்'' என்று முனிக்கரசு அருட்கரசை (இராமபிரானை)ப்போற்றினான். இவ்விருபாடல்களால் இராமபிரான் ஒருவனே அருட் கரசு என்று மறை முனிவர் கண்டு போற்றுதற்குத் தக அவனுடைய திருவருட்குணத்தை எண்பெருக்குமுறை யால் உபநிடதம் மீமாஞ்சித்துக் காட்டிய நலம் உணர்த்தப்பட்டது. ''கருணா காகுத்ஸ்த'' (தசாவதார. 12) ''ஸீமாதிலங்கிஸ்திரதரகருண: (எல்லையற்றமிகத் திடக்கருணையுடையவன். தமிழ் செய்தது. த்ரமிடோப

நிஷத்தாத்பர்ய. 117) என்று எண் பெருக்கத்திடநலக் கருணையுடையவன் இராமபிரான் என வேதாந்த தேசிகர் கூறிய பொருளை இப்பாடலில் முனிக்கரசு கூறினன். ஆதலின் எண்குணத்தான் என்ற இக்குறளில் எண்பெருக் கந்நலக்கருணைக்கடலான இராமபிரான் உணர்த்தப் பட்டுள்ளான் என்று தெளியக் காணலாம். எட்டுக் குணமுடையவன் என்பதன் பொருளன்மை நன்கு புலனாகும்.

அன்றியும் எட்டுக்குணங்கள் என்பன (குணாஷ்டகம்) உபநிடதத்துள் (பிரஜாபதி வாக்கியத்தில்) ஓதப்பட் டுள்ளன. அபஹதபாப்மத்துவம் (பாவமின்மை) விஜரத் துவம் (மூப்பின்மை) விம்ருத்யுத்வம் (இறப்பின்மை) விசோகத்துவம் (துயரின்மை) விஜிகத்ஸத்துவம் (பசி யின்மை) அபிபாஸத்துவம் (தாகமின்மை) சத்திய காமத்துவம், சத்தியசங்கல்பத்துவம் என்பன அவை. (சாந்தோக்கியம் 8 7). இந்த எட்டுக்குணங்களும் வீடு பெற்ற சீவாத்துமாக்களுக்கும் உறுவன என்று உபநிடதம் ஓதிற்று. ஆதலின் அப்பொருள் இங்குத் தக்கதன்று. ஈறிலின்ப ஆநந்தாதி எண்பெருக்கந்நலக் குணங்கள் பரமாத்துமாவுக்கே உற்ற சொரூப நிரூபக குணங்களும் நிரூபித சொரூப விசேடணங்களுமே இக்குறளில் எண்குணம் என்றும் அஃதுடையவன் (பரமாத்துமா) எண்குணத்தான் என்றும் கூறப்பட் டுள்ளது தெளிவு. அவ்வாறே அணிமா முதலிய எட்டு சித்திகளும் யோகசித்தரான சீவாத்துமாக்களுக்கும் உறுதலான் அப்பொருளும் தக்கதன்று. ஆதலின் குணாஷ்டகப்பொருளும் அஷ்டசித்திப்பொருளும் தக்க வையன்று. இங்குக் கூறியதே உரியதும் சீரியதுமான பொருள் என்று தெளிக.

———

## ஐம்பத்தேழாமத்தியாயம்

### பத்தாங்குறள்விளக்கம்

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடி சேராதார் குறள். 10

பவக்கடலை (வெள்ளங்களை) க்கடப்பதற்கும் மோக்கம் (வீடு)பெறுதற்கும் இறைவனே ஏது (ச்வேதாச்வதரம்.6) என்றும் பவக்கடலைக் கடப்பதற்கு இறைவனே புணை (ஷை, 2)என்றும் உபநிடதம் ஓதிற்று. அவ்வுபநிடதப் பொருளே இக்குறட்பொருள். உபநிடதம் ''கடப்பார்'' (ப்ரதரேத்) என்றதைக் குறள் ''நீந்துவார்'' என்றது. கடத்தல் என்பதே குறட்பொருள். நீரில் நீஞ்சுதல் பொருள் அன்று என்பது இதனால் காட்டப்பட்டது. புணை என்னும் உபநிடத உருவகம் இப்பொருளைத் திடப்படுத்தும். இறைவன் திருவடி பவத்தைக் கடத்தும் புணை என்ற உண்மையை ''நெடும்பவக் கடற்பட்டார்க்கு விட்டுணு புணையொன் றல்லால் கடப்பதற் கென்றுமில்லை யாதுமோ ரேது தானே'' (விஷ்ணு தர்மம் 1.59. தமிழ் செய்தது) என்று விஷ்ணு தர்மம் கூறியது. ஸம்ஸார அர்ணவம் என்பது அங்குள்ள ஆரியம். அர்ணவம் சாகரம் உததி அப்தி முதலியன கடலின் பெயர். மகார்ணவம் மகாப்தி மகோததி என்றும் கூறப்படும். பெருங்கடல் என்பது அதன் பொருள். குறள் பெருங்கடல் என்றது. அப்பெருங்கடலைக் கடத்தற்கு இறைவன் திருவடி ஏது என்றதால் இறைவன் ஒருவன் தான் உபாயம் என்று உணர்த்தப்பட்டது. ''கணை யொன்றால் ஏழ்மரமும் எய்தஎம் கார்முகிலைப், புணையென் றுய்யப் போகலல்லால் இல்லை கண்டீர் பொருளே'' (திருவாய் 2. 8. 1) என்றார் சடகோபர். இராமபிரான் திருவடியே புணை என்று திருவாய்மொழியும் திருக்குறளும் காட்டித் தரும் உண்மை என்று அறிக. ''துயர்கெடும் கடிதடைந்து வந்து அடியவர்! தொழுமின் தயரதன் பெற்ற மணித்தீடத்தினையே'' (திருவாய் 10. 1, 8) ''கற்பா

ரிராம பிரானை யல்லால் மற்றும் கற்பரோ'' (திருவாய் 7. 5. 1) என்ற திருவாய்மொழிகள் மேலே காட்டப் பட்டன. திருவாய்மொழித்திட்பமும் திருக்குறட் திட்பமும் ஒன்றே என்று மேலே கூறப்பட்டது. விற்பாகு வீரன் உற்பாதமோட்டிப் பொற்பாதுசூட்டி நற்பாலுக் குய்ப்பான், என்பது அத்திட்பம். அது மேலும் திடனுறு தலைக் காண்பாம்.

நிவாஸ: சரணம் (ஸுபாலோபநிஷத் 6.) என்று உபநிடதம் ஓதிற்று. ''நிவாஸ: சரணம் (கீதை 9. 18) என்று சரணியன் தானே பாடியருளினன். ''உன்னைச் சரணியனும் சரணமும் என்று திவ்வியப் பேரிருடிகள் கூறுகின்றார்கள்'' (இராமாய. யுத்த. 120. 19 தமிழ் செய்தது) ''ஸர்வலோக சரணியன்'' (ஷை. சுந்தர. 21. 20) "ஸர்வலோக சரணியன்'' (ஷை. யுத்த. 17. 15) என்று இராமாயணம் போற்றியது. ''சரணமாகும் தனதாள்'' (திருவாய் 9. 10. 5) என்றார் சடகோபர். ''எவர்கள் உன்னைச் சரணம் அடைகின்றார்களோ அவர்கள் பிறப்பிறப்பைக் கடந்து விட்டுணுபதத்தை அடைகின்றார்க்ள் (ப்ராஹ்ம 50 தமிழ் செய்தது) என்று புராணம் கூறியது. இறைவனும் இராமபிரான் திருவடி தான் பிறவிப் பெருங்கடலைக் கடத்தற்கு உபாயம் என்ற உண்மை எத்துணைப் பிரசித்தி உடையது என்பதை மேற் கூறிய மெய்ம்மைப் பெருஞ் சான்றுகளைக் கண்டு தேறுக. அவற்றுள்ளும் சரணாகதி வேதம் என்னும் தனிப்பெருஞ் சிறப்புடைய இராமாயணம் அனைத்துலக சரணியன் என்று பொங்குபுகழ்ச் சாற்றிப் போற்றிய இராமபிரான் திருவடிதான் பவத்தைக் கடத்தற்கு உபாயம் என்ற உண்மையைக் காட்டித்தரும் தனித்திடச் சான்றும். திருக்குறள் இராமாயணத்தை மூலமாகக் கொண்டுள்ளது. இராமாயண பாரதங்கள் கூறும் வரலாறுகளும் தத்துவம் தருமம் முதலியவைகளும் திருக் குறளில் அநுவதித்துக் கூறப்பட்டுள்ளன என்றது மேலே பரக்கக் காட்டப்பட்டுள்ளது. அவை திருக்குறட்கு மூலம்

என்ற உண்மை மறுத்தற்காகாது. அவற்றுள்ளும் சரணுகதித் திட்பத்தைக் கூறும் திருக்குறட்கு சரணுகதி வேதமாம் இராமாயணம் மூலம் என்பது கைமுதியமாம்.

சான்றின்றி இதிகாஸமின்றி இலக்கியமின்றிச் சான்ருேர் மேற்கோளின்றி ழுதத்திடப் பாடின்றி ஒழுக்க நிலைப்பாடின்றி பிரசித்தியின்றி அவைபோன்ற வேண்டும் நலம் பல யாதுமின்றி த்தாந்தோன்றியாய்த் தாமே கூறியதற்கு முரணுகப் பலதலையாகப் பொருள்படும்படி ஓடுவான் பாடுவது போல் ஏதோ சில பொதுப்படப் பாடிச் சென்ருர் திருவள்ளுவர் என்பது திருவள்ளு வருக்கும் திருக்குறளுக்கும் இழுக்கும் இழிவுமாம். குணசரிதைகளால் நாமங்களைக் கூறுதலும் நாமங்களால் குணசரிதைகளைக் கூறுதலும் சான்ருேர் முறையும் மரபுமாம். நாமாநி கௌணுநி (ஸஹஸ்ரநாமம்) என்று நாமங்களால் குணசரிதைகளைக் கூறுதலை வியாஸ முனிவரும், "தென்குருகூர்ச் சடகோபன் தெரிந்து ரைத்த நாமங்களாயிரம்" (திருவாய் 5. 9. 11) என்று குணசரிதைகளரல் நாமங்களைக் கூறுதலைத் தென்குரு கூர்ப்புனிதரும் தெரிந்துரைத்தார்கள். அவ்வாறே திருவள்ளுவரும் தாமரைக்கண்ணுன் அறவாழியந்தணன் ஆதிபகவன் முதலிய நாமங்களால் வாலறிவன் எண் குணத்தான் மலர்மிசையேகினுன் முதலிய குணசரிதை களையும் அக்குணசரிதைகளால் தாமரைக் கண்ணுன் அற வாழியந்தணன் ஆதிபகவன் முதலிய நாமங்களையும் தெரிந்துரைத்தார். நாமங்களும் குணசரிதைகளும் ஒன்றி நின்றே பொருள் உணர்த்தும் இயல்பினவாதலின் ஒன்றைக் கூற மற்றவை கூறப்பட்டவாம்.

"அடியளந்தான்தாஅயதெல்லாம்" (குறள் 610) என்று திருவள்ளுவர் கண்டமை காட்டித்தந்தபடி. இது இறைப்பொருளின் பெயரையும் குணசரிதைகளையும் ஒன்றக் கூறி இறைநிலைமெய்ம்மையை விளங்கவைத் ததாம். திருமால் ஒருவனே உலகளந்த உத்தமன்,

பிறரெவரும் உலகை அளக்கவில்லை. அந்த உலகளந்த உத்தமன் எதனுல் அளந்தான் என்று ஐயுருமைக்கு அடியால் அளந்தான் என்று ஐயப்பாடறுத்துக்காட்டி அந்த அவ்வடியின் இறைமையை மாணடியென்றும் அருண்மையை நற்ருளீ(நல்லடி) என்றும் போற்றி அவ்வடிப்பால் ஆதரம் பெருக வைத்து அவ்வடியைச் சரணம் அடைந்து உய்ம்மின் என்று திருவள்ளுவர் ஆர்வத்தால் உபதேசம் செய்தருளினுர். "நின்னிற் சிறந்த நின்தாளிணையவை, நின்னிற் சிறந்த நிறை கடவுளவை" (பரிபாடல் 4.62-63) என்ற பரிபாடல் துணிவே திருக்குறள்துணிவு. மாணடி என்றது அத் துணிவு. அளந்தவன்தன்னிலும் அளந்த அவன் அடி மாட்சித்து என்றவாறு. அந்த மாணடியறிவுதான் இறைநிலையறிவு என்ற உண்மை இதனுல் காட்டித் தரப்பட்டது. நற்ருள் என்றதால் அத்தாளின் அருண்மை காட்டித்தரப்பட்டது. இறைவன் அடி என்று பத்தாங் குறளில் கூறிய அடியை அளந்த அடி என்று அறுநூற்றுப் பத்தாங்குறளில் சிறப்பித்தார். அளந்த அடி என்று அறுநூற்றுப் பத்தாங்குறளில் கூறிய அடியை இறை வனடி என்று பத்தாங்குறளில் சிறப்பித்தார். அடியால் உலகளந்தவன் இறைவன் என்ற இறைநிலை உண்மை பெயராலும் குணசரிதைகளாலும் கூறித்துணியப் பட்டது. அடியளந்தான்தாஅயதெல்லாம் என்றதால் அனைத்தையும் அளந்தது கூறப்பட்டது. தாஅய என்றது தாவிய என்றதன் இடைக்குறை. "தாள்பரப்பிமண் தாவிய ஈசனை" (திருவாய் 3-3-11) என்ருர் சடகோபர், ஈசன் என்ருர் சடகோபர். இறைவன் என்ருர் வள்ளுவர். "நின்றுலகம் தாஅய நெடுமால்" (முதல் திருவந்தாதி. 98) என்ருர் பொய்கைப்பிரான். தாள்பரப்பி மண்தாவிய என்ற திருவாய்மொழி கண்டு தாவிய என்றதால் எல்லாம் அளந்தபரப்பு உணர்த்தப்பட்டது. இவ்விருகுறட்பாக் களின் மாணடி என்ற இறைநிலையை ஐயப்பாடறுத்துக் காட்டித்தரும் அழகும் நற்ருள் என்று அதன் அருண்மையைக் கூறி அதன்பால் ஆதரம் பெருக

வைக்கும் அழகும் ஒப்பற்றது. ஒன்று இறைமாட்சி ஒன்று அருள்நலம் என்று காட்டித்தரும் அழகு அது. அவன் தன்னிலும் அவன் அடியின் மாட்சியும் அருளும் சிறந்தது. அவ்வடியைத் தொழுமின் சேர்மின் வணங்குமின் என்று திருவள்ளுவர் பன்னிப்பணித்தது கண்டு அவ்வடிப்பால் திருவள்ளுவருக்குள்ள ஆர்வம் எத்திற மாட்சித்து எத்திறச் சீர்மைத்து என்பதை நன்கு ஓர்ந்து அறிக. உலகளந்த நெடியோன் பாற்கற்பினும் அவன் நற்ருட்பாற்கற்பை முழங்கும் திருப்பாக்கன் முதலதிகாரப்பின் ஒன்பது குறட்பாக்கள் என்பதை நோக்கிக் காண்க. "ஆனுயனதடியல்ல தொன்றடியேனறியேனே" (பெரிய திருமொழி 7-9-4) என்ருர் மங்கையர்கோன். அது மங்கையர் கோன் கற்பின் சிறப்பு. நெடுமாலினதடியல்லதொன்றடி யேனறியேனே என்பது திருவள்ளுவர் கற்பு என்று திருவள்ளுவர் நெஞ்சினுல் நோக்கிக் காண்க. அது திருவள்ளுவர் கற்பின் சிறப்பு. இது தானும் வேதம் கூறிய துய்ய பொருள். "விஷ்ணு: பரம:" (விட்டுணு பரமன். தமிழ் செய்தது) என்று கூறிய வேதம் தானே "விஷ்ணோ: பரமம்பதம்" (விட்டுணுவின் பரமமான பதம். தமிழ் செய்தது) "விஷ்ணோ: பதேபரமே" (விட்டுணுவின் பரமமான பதத்தில். தமிழ் செய்தது) என்று விட்டுணுவின் பரமத்துவத்தினும் (இறைமையினும்) அவன் பதத்தின் (அடியின்) பரமத்துவம் (இறைமை) சிறந்தது என்று கூறியதை அனுபவித்தவாறே திருவள்ளுவர் வேதத்தின் குருத்தின் பொருளைத் திருக்குறளாய் நூற்றருளினுர் என்ற உண்மைகண்களில் தெரியக்காணலாகும். இப்பொருளே நீத்தார் பெருமை என்னும் அதிகாரத்துக்கு அடியும் அதிகாரத்தின் சாரமுமாம். இது மேலே விரித்து விளக்கப்பட்டுள்ளது.

உலகளந்த உத்தமன் அடியே பரம்பொருள் அவ்வடி சேர்தலேபரம உய்வுபாயம் என்பது திருக்குறட்திட்பம் திருவள்ளுவருள்ளம். இந்நூல் அவ்வுள்ளத்தின் விளக்கம். "பூதாவியண்ணலடியாதி யோது

புகலென்றறைந்த புகழோன், மாதாநு பங்கியெனு நாமனேறு மதிநாறு வீறுபொலிவான்'' என்னும் இந் நூல்வாழ்த்துப்பா இப்பொருட்டு.

'மாலுங்குறளாய்' என்னும் வள்ளுவமாலைப் பாடலில் அடியளந்ததால் திருமாலுக்கும் திருவள்ளு வருக்கும் ஒப்புமை கூறியதென்றும் அது தொழிலொப் புமை (க்ரியாஸாம்யம்) என்றும், ஆதலின் திருவள்ளுவர் மாதாநு பங்கி என்னப்பட்டார் என்றும் அவ்வாறே ''உப்பக்கம் நோக்கி'' என்ற வள்ளுவமாலைப்பாடலில் ஸ்ரீவல்லபர் (திருவள்ளுவர்) என்னும் நாமத்தால் திருமாலுக்கும் திருவள்ளுவருக்கும் ஒப்புமை கூறிய தென்றும் அது பெயரொப்புமை (நாமஸாம்யம்) என்றும் ஆதலின் திருவள்ளுவர் என்று கூறப்பட்டார் என்றும் மேலே கூறியது இங்குக் கூறியதால் பின்னும் தெளியக் காணலாம். ஆதலால் திருவள்ளுவர் ஏதோ சில பொதுப்படக் கூறினர் என்பார் கூற்றுப் போலி என்க.

மேற்கூறிய விளக்கம் கண்டும் சான்றுகள் கொண்டும் அனைத்துலக சரணியனும் இராமபிரான் திருவடியாம் புணை ஒன்றால் தான் பிறவிப்பெருங்கடல் கடத்தற்காகும் என்பது இக்குறள் கூறும் திடப்பொருள் என்று அறிக. ''இணைவனும் எப்பொருட்கும் வீடுமுதலாம் புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே'' (திருவாய் 2. 8. 1.) ''கணையொன்றால் ஏழ்மரமுமெய்தஎம்கார்முகிலைப் புணை யென்றுய்யப் போகலல்லால் இல்லை கண்டீர் பொருளே'' (திருவாய் 2-8-1) என்ற திருவாய்மொழிப் பொருளே இக்குறட்பொருள் என்று தேறுக. ''என்னை யார் சரணம் அடைகின்றார்களோ அவர்கள் இந்த மாயையை (பவத்தை)க் கடக்கின்றார்கள்'' (கீதை 7-14 தமிழ்செய்தது) என்று இறைவன் பாடியருளினன். இராம பிரான் சருவலோக சரணியன் என்னும் இராமாயண

உண்மையைத் திருக்குறள் அடியாகக் கொண்டுள்ளது என்னும் உண்மை திருவள்ளுவர் நெஞ்சினுல் நோக்கிக் காண்பார்க்குக் கண் கூடாம்.

உண்மை இவ்வாறிருக்க இராமபிரானைப் பகைப் பதும் பழிப்பதுமே தொழிலாகக் கொண்டுள்ள இன் ெறுரு சிலர் தமது பகைமனக்கருத்தை நாடெங்கும் பரப்பி மக்களை மறுக்குவாராயினர். நாட்டாட்சி கைவந்ததும் பிறநாட்டார்தாமும் அவராட்சியில் விடு முறைநாட்கள் என்று விட்டுவந்த இறைவன் திருவவ தார நன்னுட்களாகிய ஸ்ரீராம நவமியையும், ஸ்ரீஜயந்தி யையும் விடுமுறை நாட்களிலிருந்து நீக்கிவிட்டார்கள். இந்திய சுதந்திரம் வந்தபின் இவர்கட்கு முன் நாட்டாட்சி செய்துவந்தவர்கள் எப்போழுதும் போல் இவ்விரு நாட்களையும் விடுமுறைநாட்களாகவே விட்டுவந்தனர். இந்திய அரசாங்கத்தார் என்றும்போல் இவ்விருநாட் களையும் ராமநவமி, ஜந்மாஷ்டமி (ஸ்ரீஜயந்தி) என்று கண்டு மற்றும் சில நாட்களோடு விடுமுறை நாட்களாக விட்டு விளம்பரம் செய்து வருகின்றுர்கள். இந்திய அரசாங்கத்தார் விளம்பரத்துக்கு முரணுகத் தமிழ்நாட்டர சாங்கத்தார்க்கு இவ்விருநாட்களையும் விடுமுறைநாட் களினின்று நீக்கும் உரிமை உண்டா என்னும் கேள்வியும் உயர்நீதிமன்றத்தார் (ஹைகோர்ட்டார்) இந்தியத் தாபனக்கோட்பாட்டில் விதிக்கப்பட்டுள்ளதற்குத்தக இந் திய அரசாங்கத்தார் விளம்பரத்தைப் பின்பற்றுமல் அதற்கு முரணுகத் தமிழ் நாட்டரசாங்கத்தார் செய் துள்ள விளம்பரத்தைப் பின்பற்றி இந்திய அரசாங்கத் தார் விளம்பரத்தில் கூறிய விடுமுறை நாட்களினின்று இவ்விரு நாட்களை நீக்குவதற்கு உரிமை உண்டா என்னும் கேள்வியும் இந்நூற்கு விஷயம் அன்று. ஆதலின் அவை இங்கண் எழுப்பப்படவில்லை.

பிறசமயத்தார்பால் இவர்கள் தங்கள் சேவகத்தைக் காட்டுவதில்லை. அவர்கள் விடுமுறை நாட்களில்

இவர்கள் கைவப்பதில்லை. இறைவன் திருவவதாரநாட்களில்தான் இவர்கள் கைவைத்தது. தொன்று தொட்டே நாட்டின் மக்களும் மதிநலமாண்பர்களும் செய்தவச்சுடர்களும் நன்னூல் வல்லார்களும் தொல்லற நல்லார்களும் தொழுதேத்திவரும் சருவலோக சரணியனாகிய இராமபிரானை இவர்கள் இகழ்கின்றார்கள். இது நல்லார் செயல் அன்று. ''பாலேய் தமிழ ரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம்'' (திருவாய் 1-5-11) பாடியருளிய முத்தமிழ்த் துறையின் முறை போகிய உத்தமக் கவிப் பெருமானாரும் அந்தாதித்தொடையில் உயர்வறவுயர் நலச் சந்தமிகு செந்தமிழுபநிடதம் ஆயிரம் பாடியருள வல்ல ஒப்பார் மிக்காரை யிலராய ஒரொருவராய்ப் பொலியா நின்ற வள்ளற்பெரும் புனித நாவலர் பெருமானாருமாகிய காரிமாறப் பிரானார் ''கற்பா ரிராம பிரானை யல்லால் மற்றும் கற்பரோ'' (திருவாய் 7-5-1) ''கேட்பார்கள் கேசவன் கீர்த்தி யல்லால் மற்றும் கேட்பரோ'' (திருவாய் 7-5-3) என்று பாடியருளியதும் அவ்வாறே செழுமறையின் குருத்தின் பொருளைக் கருத்திற்கொண்டு பேரார்வத்தால் மொழிபட்டோடும் கவியமுதூறப் பாடிமகிழ்ந்து பூரித்த செந்தமிழ் வள்ளற் பெரும் பாவலராகிய இளங்கோவடிகள் ''மூவுலகு மீரடியால் முறைதிறம்பா வகையன்று, தாவிய சேவடி சேப்பத் தம்பியொடுங்கான்போந்து சோவரணும் பொய் மடியத் தொல்லிலங்கை கட்டழித்த சேவகன் சீர் கேளாத செவி யென்ன செவியே திருமால் சீர் கேளாத செவி யென்ன செவியே (சிலப்பதி. மதுரை 17-35) ''மடந் தாழுநெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம் கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றத், தொடர்ந்தாரண முழங்கப் பஞ்சவர்க்குத் தூது நடந்தானை யேத்தாத நா வென்ன நாவே, நாராயணா வென்னா நா வென்ன நாவே'' (ஷை. ஷை. 17-37) என்று பாடியருளியதும் கண்டு இத்திறச் செயற்பட்டார் தமிழராகார் என்று அறிக. தெய்வ மிகழேல் என்ற முதுமொழியை மேற்கொண்டு ஒழுகலே நன்மக்கட்கு அழகு நாடு ஆள்வார் கடன்.

செந்தமிழ்க் கவியுலகுக்குப் பாற்கரனுய் விளங்கும் கம்பநாடுடையவள்ளலின் திவ்விய செந்தமிழ்த் தீங் கவியை இவர்கள் எரிக்கின்ருர்கள். இது நன்மக்கள் செயல் ஆகாது. பள்ளி முதலியவைகளில் பயின்றுவந்த எங்கும் என்றும் நிலவாநின்ற தெய்வமொழியாகிய ஆரி யத்தை ஒழித்துக் கட்டி விட்டார்கள். இது ஆரியப் புலமையுடையாரை வயிற்றில் அடித்ததாம்.

இத்திறச் செயற்படல் நாடு ஆள்வார்க்கு அழகு ஆகாது. நாட்டாட்சி கைவருமுன் இவர்கள் கருத்து எவ்வாறு இருந்திருப்பினும் நாட்டாட்சி கைவந்தபின் பெருமனத்தராயும் பெருந்தன்மையராயும் இருத்தல் வேண்டும். எவர் மனமும் புண்படாவாறு மொழிதலும் ஒழுகலும் வேண்டும். ஆட்சி கைவருமுன் தாங்கள் கொண்டிருந்த தீவிரக் கருத்துக்களை ஆட்சி கைவந்தபின் நாட்டில் திணிக்கும் தொழிலில் இழியக் கூடாது. சிறுமனமும் பகைமனமும் நாடு ஆள்வார்க்குத் தகாது. பெருமனத்தராயும் பெருந்தன்மையராயும் இருத்தல் வேண்டும் என்பது நூல் கூறும் உண்மை. அவ்வுண்மை கண்டு ஒழுகலே நாட்டுக்கு நலமும் நாடு ஆள்வார்க்கு அழகுமாம். நாடு ஆள்வார் எவராயிருப்பினும் அவர்கள் மக்கள் அனைவரிடத்தும் ஒக்கவே அன்பும் மதிப்பும் உடையராயும் தெய்வம் இகழாராயும் பெருமனமும் பெருந்தன்மையும் உடையராயும் தருமசிந்தையராயும் தருமம் காப்பாராயும் அனைவரும் கூடியிருந்து குளிர்ந்து வாழு மாறு முயன்று ஒழுகுவாராயும் இருத்தல் வேண்டும் என்பதுதான் மக்கட்பொது வேண்டுவது. ''மக்களை மகிழ்விப்பார் மன்னராவார்'' (விஷ்ணுபுரா 1-13-93 தமிழ்செய்தது) ராஜாபூத்ஜநரஞ்சநாத் என்பது அங்குள்ள ஆரியம்) என்று பராசரமுனிவர் கூறினர். அவ்வாறு முயன்று ஒழுகல் நாடாள்வார் கடன் என்பதை இங்கு யாப்புறுத்துவாம். இது தானும் ''அருமறை யந்தண ராங்குளர் வாழ்வோர் பெருநிலமன்ன! காத்தல் நின்கடன்'' (சிலப்பதி. வஞ்சி. கால் 102-103) என்று

அன்வயமுகத்தால் இளங்கோவும் ''அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய், நின்றது மன்னவன் கோல்'' (குறள். 543) ''ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல் மறப்பர், காவலன் காவானெனின்'' (குறள். 560) என்று அன்வய முகத்தாலும் வியதிரேக முகத்தாலும் வள்ளுவரும் விளம்பிய மன்னர் கடனின் வழிமொழியே.

இராமபிரான் தாமரைக் கண்ணன் ஆதிபகவன் சருவலோக சரண்ணியன் என்று கண்டு அவனைத் தாள் பற்றலாம் சரணுகதியே உயிர்கட்கு உய்வுபாயம் என்ற உபநிடத இராமாயணத் திடக் கோட்பாட்டை உச்சி மேற் கொண்டு ஒழுகி உய்ந்த வைதிகப் பெருந்தகை யாளர் திருவள்ளுவர். ஸ்ரீ வல்லபர் என்னும் தாமரையாள் கேள்வன் திருநாமம் பூண்டவர் திருவள்ளுவர். ஸ்ரீவல்லப என்று முகுந்தமாலை தொடங்குகிறது. ''வையமளந்தான் தன் மார்பில் திரு'' (சிலப்பதி. மதுரை 17-16) என்ருர் இளங்கோ. திருக்குறளப்பன் ஸ்ரீவல்லபன் என்பது எத்திறப் பிரசித்தி உடையது என்பது இதனுல் காணலாம். அத்திறப் பிரசித்தி உடைய திருநாமம் இடப்பெற்ற புண்ணியர் திருவள்ளுவர். அவர்மறைப்பொருள் தேறும் வீறுடைய தூமனப் பத்தர். திருக்குறளப்பனைத் தாள்பற்றி உய்ந்தவர். தாம் பணித்த நூலைத் திருக்குறளப்பன் பொற்ரு மரையடிப் பெயரிட்டு அத்தாமரையடிக்கு அர்ப்பணம் செய்த சாத்துவிகத் தியாக சீலர். அது காரணமாய் அதற்குத்தக மாதாநுபங்கி என்னும் பெயர்க்கு உரிமை சான்ற உத்தமராய் விளங்கா நின்ருர். அவர் பணித்த திருக்குறளின் மெய்ப்பொருள் மறைநூல்கள் கொண்டும் மாக்கவிஞர் பேரிலக்கியங்கள் கொண்டும் சான்ருேர் மேற்கோள்கள் கொண்டும் தான் நன்கு ஆழ்ந்து ஓர்ந்து அறிதற்காகும். அம்முறையை மேற்கொண்டு திரு வள்ளுவருள்ளம் இந்நூலில் விளக்கி உரைக்கப்பட் டுள்ளது. திருவள்ளுவர் திருக்குறளப்பன் தாள் சேர்ந்த

முதுமறைப் பேரறச்சிட்டர் என்பதை வலியுறுத்தி இந் நூலைத் தலைக்கட்டுவாம்.

வீறு வீறு விளங்கு திருக்குறள்
தேறு தேறு திடப்பொருள் தீட்டியே
வேறு வேறு பொருள் சில ரேற்றுதல்
பாறு பாறவை யாக்கிய வாறிதாம்.

போற்று திரு வல்லப னெனும்பெயர் புனைந்தோர்
தோற்றுகுற ளப்பனிலங் கொண்டவடி கண்டே
ஏற்றுயர் பதத்ததன் பெயர்க்கிடு குறட்பா
சாற்றுதமிழ் வள்ளலெனும் வள்ளுவன் வகுத்தான்.

வல்லர்வாய் விள்ளு மொண்பா வளர்திருத் தமிழ கத்துச்
சொல்லறச் செல்வ நல்லா ருத்தம ருள்ளா ரென்றே
பல்லருங் கலைகள் மல்கும் பசுந்தமிழ் மறை பயந்த
தொல்லருட் காரி மாறன் தொண்டிதொன் றென்று நூற்றேம்.

சுபம்



# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 13 | 23 | பகர்வர் | பகவர் |
| 22 | 1 | சொல்லுக்கும் | சொல்லுக்கு |
| 24 | 28 | என்றும் | என்னும் |
| 28 | 27 | வளந்திரண்டு | வளர்ந்திரண்டு |
| ,, | 28 | வாலறிவன் | வாலறிவின் |
| 36 | 18 | இத்நூல் | இந்நூல் |
| 37 | 21 | அளந்தானைக் | அளந்தானிக் |
| 49 | 13 | வேத : | வேத |
| 58 | 24 | அத்தன்வை | அத்தன்மை |
| 66 | 1 | என்றும் | என்னும் |
| 70 | 12 | மென்றில் | மொன்றில் |
| 86 | 5 | ளினைப் | வினைப் |
| 93 | 28 | சிவன் | சிவன் இல்லை |
| 94 | 19 | நிமிந்த | நிமித்த |
| 100 | 13 | என்றும் | என்னும் |
| 103 | 12 | லூலகு | லுலகு |
| ,, | 17 | என்தும் | என்னும் |
| 104 | 4 | முனிவசை | முனிவரைச் |
| 110 | 4 | பொயம் | பொய்ம் |
| 121 | 27 | இரணியணை | இரணியனை |
| 133 | 2 | ஆறு | நூறு |
| 137 | 7 | வாராய்ப்ச்சி | வாராய்ச்சி |
| 141 | 18 | உரைத்தி | உணர்த்தி |
| 143 | 25 | பொருத்த | பொறுத்த |
| 152 | 16 | பரமாத்தும் | பரமாத்தும |
| 176 | 29 | நிற்குல் | நிற்றல் |
| ,, | 31 | செவிற் | செவியிற் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 179 | 6 | வான்மீகு | வான்மீகி |
| 195 | 7 | ஒழுதல் | ஒழிதல் |
| 196 | 5 | தொழிலாத் | தொழிலாகத் |
| 199 | 9 | அடைக்கின் | அடைகின் |
| ,, | 13 | இராமயண | இராமாயண |
| 204 | 34 | பரமே | பரிமே |
| 211 | 31 | வதைிக | வைதிக |
| 212 | 4 | எறப்பர் | மறப்பர் |
| 217 | 12 | புறநானு | புறநானூ |
| 223 | 15 | உணவும் | உணவுப் |
| ,, | 16 | கொள்ளலாப் | கொள்ளலாம் |
| 228 | 27 | வலகம் | வுலகம் |
| 231 | 20 | குறுள் | குறள் |
| 235 | 13 | பிற்கால் | பிற்கால |
| ,, | 29 | இலக்கிங் | இலக்கியங் |
| 241 | 22 | என்றும் | என்று |
| ,, | 24 | பூதந்தா | பூதத்தா |
| 243 | 32 | என்பது | என்பன |
| 244 | 19 | என்றும் | என்னும் |
| 245 | 25 | பாணிநீட | பாணிநீய |
| 247 | 30 | த்யாயில் | த்யாயியில் |
| 253 | 28 | ளொந்திசை | ளொத்திசை |
| 262 | 30 | மிகுத்திரு | மிகுந்திரு |
| 265 | 32 | ஆத்திரேவ | ஆத்திரேய |
| 271 | 5 | உண்நுமை | உண்மை |
| 272 | 13 | சூத்திரங்களும் | சூத்திரங்களுள் |
| 275 | 15 | ஒழுகுவார்க்கும் | ஒழுகுவார்க்கு |
| 282 | 38 | நூல்கனுள் | நூல்களுள் |
| 283 | 34 | மெய்த்ததவ | மெய்த்தவ |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 284 | 32 | சரணுகதியாம் | பின்னதால் சரணுகதி யாம் |
| 288 | 3 | வீனங்களால் | வீனர்களால் |
| ,, | 14 | யணித்த | யணிந்த |
| 289 | 17 | இவ்பொருள் | இப்பொருள் |
| ,, | 31 | சாதியர் | சாதியா |
| 292 | 20 | பூவையுள் | பூவையுள |
| 300 | 25 | என்றும் | என்னும் |
| 301 | 2 | வேழம் | வேதம் |
| 304 | 1 | மாதாலன் | மாதலான் |
| 319 | 15 | பின்றும் | பின்னும் |
| 323 | 16 | நுட்பத்தைப் | நுட்பத்தைச் |
| 324 | 22 | துனி | துளி |
| 327 | 6 | நாச்சியர் | நாச்சியார் |
| 328 | 23 | கோள்கள் | கோல்கள் |
| 332 | 28 | வேண்டினுன். | வேண்டினுள் |
| 337 | 9 | வாகோட்டி | வாதகோட்டி |
| 339 | 2 | வள்ளவர் | வள்ளுவர் |
| 340 | 10 | எங்ஙனமே | எங்ஙனே |
| 341 | 25 | தண்ணீர் | கண்ணீர் |
| 342 | 4 | சுக்கிரருக்கும் | சுக்கிரருக்கு |
| 346 | 30 | மறைந்த | மறைத்த |
| 347 | 22 | யாந்தேப்ய | யார்த்தேப்ய |
| 350 | 16 | யகரிற் | யகரில் |
| ,, | 28 | பொருந்திற்ருமே | பொருந்திற்ருமோ |
| 354 | 3 | தொழநின்று | தொழாநின்று |
| ,, | 19 | லொழுத | லொழித |
| 358 | 16 | சிறம்பீ | சிறப்பீ |
| 366 | 14 | க்ரியவாகி | கரியவாகி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ,, | 15 | வரியோடு | வரியோடி |
| 367 | 19 | தனகு | தனது |
| 368 | 24 | ணெடியேன் | ணெடியோன் |
| 373 | 91 | என்றும் | என்னும் |
| 374 | 16 | தாமறை | தாமரை |
| 380 | 10 | தான் | தாள் |
| ,, | 28 | ஒறை | ஒன்றை |
| 385 | 30 | கருனே | கருணே |
| 386 | 7 | நயாவான் | தயாவான் |
| 388 | 3 | அழி | ஆழி |
| ,, | 18 | வெண்டி | வேண்டி |
| 389 | 6 | களேப்பியா | களேயா |
| 391 | 24 | மறு | மனு |
| 398 | 10 | பற்றுதற்கும் | பற்றுதற்கு |
| 404 | 10 | வலங்கினர் | வலங்கிளர் |
| ,, | 25 | ஸருதய | ஸஹ்ருதய |
| ,, | 28 | பதீக்ருத் | பதீக்ருத |
| 406 | 11 | என்றும் | என்னும் |
| 408 | 2 | மிடும்மை | மிடும்பை |
| 409 | 1 | ஐம்பதமத்தா | ஐம்பத்தொன்ருமத் |
| ,, | 3 | சிறப்பிறுக் | சிறப்பினுக் |
| 411 | 1 | ஐம்பதா | ஐம்பத்தொன்ரு |
| 412 | 12 | ஸக்தநம: | ஸக்தமநா: |
| 413 | 1 | ஐம்பதா | ஐம்பத்தொன்ரு |
| ,, | 13 | நம்பேதி | ந பிபேதி |
| 415 | 21 | பலக்ருதி | பலச்ருதி |
| 419 | 17 | மெய்த் | மெய்ந் |
| ,, | 33 | யேபவம் | யேவம் |
| 421 | 12 | பிரகலாதழ்வன், | பிரகலாதாழ்வான் |
| 444 | 28 | குறள்(630) | குறள்(610) |



